1/2



# கி.வா.ஜகந்நாதன்

தமிழ்த் தாத்தாவின் தலை மாணாக்க ராகத் திகழ்ந்து அல்லயன்ஸ் தாத்தா வின் குடும்பத்தில் ஒருவராகத் திகழ்ந்து; என்றென்றும் பழமைக் கும், புதுமைக்கும் பாலமாகத் திகழ்ந்து, பல தலைமுறைகளுக்கும் மேலாகப் பயன் தரக்கூடிய தமிழ்ப் பொக்கிஷத்தை வழங்கிச் சென்றவர்.

இவரது எழுத்தில் இருக்கும் ஆழம், கனம் - இரண்டும் இவரது புலமை யின் ஆற்றலையும், பரந்த சிந்தனை யின் வீச்சையும் காட்டும்.

இவரது பேச்சிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு வாக்கியத்திலும் 'சிலேடை' புலப்படும்.

(தமிழ்) தாய்க்கு இனிய மகனாகி, ஆசானுக்குச் சிறந்த மாணாக்கராகி, 'கலைமகளு'க்கே ஆசிரியராகத் திகழ்ந்த அபூர்வ மனிதர்.

*- பதிப்பகத்தார்*

1/2

# பெரிய புராண விளக்கம்

பகுதி-4

கி. வா. ஜகந்நாதன்





**கலா நிலையம்**

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.

1/2

# ஆசி கேட்கும் அன்பு தாசன்

**வ**யதாகிவிட்டால் என்ன! பழைய நினைவுகளும் மறந்தா போகும்! முதுமை என்பது உடலில் ஏற்படுமே ஒழிய உள்ளத்தில் அல்ல. பெரும்பாலான மக்கள் வயது ஏற ஏற, தன் இளமைக் கால பருவத்தை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து, அந்தக் காலம் மறுபடியும் வராதா என ஏங்குவர். பணக்காரர்கள், தனக்குச் செல்வம் வந்து சேரும் முன் இருந்த காலத்தை எண்ணி எண்ணி ஏங்கி, நாம் அன்றைய நிலையில் எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தோம், அந்த மகிழ்ச்சி இன்றைக்குக் கிடைக்காதா என்று ஏங்குபவர்கள்தான் அதிகம். ஆனால், முதியவருக்கு இளமையும் வராது; செல்வம் படைத்தவருக்கு தன் பழைய நிலைக்குப் போகவும் முடியாது. இதுதான் இயல்பு. நாம் ஏதோ ஒரு பெரிய தத்துவத்தை இங்கே உதிர்த்துவிட்டோம் என்று யாரும் தயவு செய்து எண்ணி ஏமாற வேண்டாம். இந்த இயல்புதான் வாழ்க்கை; இந்த வாழ்க்கைதான் இலக்கியம்.

கோவலன், கண்ணகி, மாதவி இவர்களின் வாழ்க்கை இலக்கியம்தான் சிலப்பதிகாரம்; ராமன், இலட்சுமணன், சீதை இவர்களது வாழ்க்கை இலக்கியம்தான் கம்பராமாயணம்; பொதுவாக மனிதர்களுடைய வீட்டினுள்ளும், வெளியேயும் நடக்கும் நிகழ்ச்சிகளை விளக்குவதுதான் அகநானூறு, புறநானூறு. 'ஒரு பெண் நடந்து வந்தாள்', 'ஒரு ஆண்மகன் நடந்து வந்தான்' என்பது போன்ற தொடர்களை எழுதுவது நிகழ்ச்சி. ஆனால், இதையே, 'அந்த மான் விழியாள் அன்னம் போல அழகுபட நடந்து வந்தாள்' என்றும், 'அந்தக் கட்டிளங்காளையைப் போன்ற ஆண்மகன் மதம்பிடித்த யானையைப் போல, வீறு கொண்டு நடந்து வந்தான்' என்று

உபமானம் உபமேயங்களுடன், இயற்கையின் அழகையும் சேர்த்துச் சொல்லும் போது, அது இலக்கியமாகிறது.

இயல்பான வாழ்க்கை நிகழ்ச்சியை, இலக்கியமாக மாற்றுவது ஒரு தனிக் கலை! இதற்கு ஆற்றலுடன் கூடிய சிந்தனை அவசியம். நம்மிடையே வாழ்ந்த பல மேதாவி களுக்கு இத்தகைய ஆற்றலும் அறிவும் மிகுந்திருந்தது. ஔவையார், கம்பர், இளங்கோவடிகள், ஒட்டக்கூத்தர் என்று செல்லும் இந்த முடிவிலா பட்டியலின் விவரம் நமக்குத் தேவையில்லை. ஆனால், இவர்கள் இது போலச் செய்த அரிய இலக்கியங்களைப் புரிந்து கொண்டு, அதற்குத் தெளிவான, ஆழமான, இலக்கியத் தரம் குறையாமல், அழகு தமிழில் விளக்கம் சொன்னவர்களும், சொல்பவர்களும் பலர் உண்டு. இவர்கள் இன்றைய சூழலில், மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் மொழி நடையில், காலத்திற்கேற்ற சொற்களைப் பயன்படுத்தி, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைந்தனர். இப்படிப்பட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் 'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.

தொல்காப்பியம் என்றாலே, புரிந்து கொள்வது மிகவும் கடினம் என்ற நிலையை மாற்றி, '**பயப்படாதீர்கள்**' என்ற தொடரை 'கலைமக'ளில் எழுதினார். கவிதை புனைவது கவிஞர்களின் வேலை என்ற கலக்கத்தை **கவி பாடலாம்** என்ற நூலின் மூலம் போக்கினார். கம்ப ராமாயணத்தில் இருக்கும் தமிழின் அழகையும், நடையின் நளினத்தையும் **அழியா அழகு** என்ற நூலின் மூலம் அழகுபட விளக்கியுள்ளார். திருமுருகாற்றுப்படை விளக்கத்தின் மூலம் மோட்சத்திற்கு '**வழிகாட்டி**'யுள்ளர். கந்தர் அநுபூதி என்னும் கடலில் மூழ்கி, அதிலுள்ள முத்துக்களை எடுத்துக் கோத்து **ஞான மாலையைத்** தந்த ஞானப்பிரகாசனார் அவர்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் நடையில் கடினம் இருக்காது; ஆனால், கன்னித் தமிழ் மிளிரும்படி ஒரு கலைஞன் தியாகம் இருக்கும். காவியத்தை ஓவியமாக்கி, சித்திர மேகலையுடன் இலங்கைக் காட்சிகளைக் காட்டி, தமிழுக்கு ஒரு புதுமெருகு ஊட்டி, தமிழை ஒரு அதிசயப் பெண்ணாக்கி, விளையும் பயிர் முதல் பெரிய புராணம் வரை பேசியிருக்கிறார், வாழும் தமிழாக எழுதியிருக்கிறார்.

இவரது முருகன் பெருமையையும், கந்தவேள் கதையமுதத்தையும் படிக்கும் தமிழ் அன்பர்களின் ஒரு சாண் வயிறு கண்டிப்பாக நிரம்பி விடும் தன்மை கொண்டது. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கூறும் போது, அது அறுந்த தந்தியாக இல்லாமல், பவழ மல்லியாக மணக்கும், நவக்கிரகம் போல நிரம்பி வழியும் ஆற்றல் படைத்தது. கிழவியின் தந்திரத்தை சகல கலா வல்லியாக மாற்றிய நாம் அறிந்த கி.வா.ஜ, சின்ன ராஜா அல்ல; ஒரு ஆத்ம ஜோதி. இவருடைய நாடோடிப் பாடல்களும், தமிழ்ப் பழமொழிகளும், வாழ்க்கைச் சுழலை கண்டறியாதன கண்டேன் என்று விளக்கி, நமக்கு அமுத மொழியினால் தமிழ் உதயத்தைக் காட்டிய அகஸ்தியர்.

அல்லயன்ஸ் நிறுவனர் குப்புஸ்வாமி ஐயர், கி.வா.ஜ. அவர்களைத் தன் குடும்பத்தில் ஒருவராகக் கருதிப் பழகிவந்தார். கி.வா.ஜ. அவர்களும், இவரைத் தன் தந்தையாகக் கருதி வந்தார். அந்தக் காலக் கட்டங்களில் ஒருவருக்கொருவர் கலந்தாலோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார்களாம். கி.வா.ஜ. வின் முதல் நூலான வழிகாட்டி குப்புஸ்வாமி ஐயரால் வெளியிடப்பட்டது. அதே போல் அல்லயன்ஸ் அச்சகம் ஆரம்பித்த போது, கி.வா.ஜ.வின் உதயம் என்ற நூல்தான் முதன் முதலாக அச்சிடப்பட்டது. இந்த நூல் இதற்கென்றே பிரத்தியேகமாக எழுதப்பட்டதாம்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் ஆற்றலைக் கண்டு வியந்தவர் அல்லயன்ஸ் ஐயர். அல்லயன்ஸ் ஐயர், கி.வா.ஜ., கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. குமாரசாமி, கு.ப.ரா., த.நா. சேனாபதி, தி.ஜ.ர என்ற குழுமத்தின் சேர்க்கைதான் 'அல்லயன்ஸ்'. கஷ்டப்பட்டு, நஷ்டப்பட்டு இருப்பினும் இஷ்டப்பட்டு பதிப்புப் பணியில் ஈடுபட்ட இவர்களெல்லாம் தமிழ் மொழியை வளர்த்தார்கள் என்று சொல்வதைவிட, தமிழ் மொழியின் அழகையும், அந்த அழகினுள் பொதிந்துள்ள இலக்கிய நயத்தையும் தொடர்ந்து தமிழ் மக்களுக்கு வழங்கி வந்தனர் என்று சொன்னால் பொருந்தும். தேச சேவையிலும், மொழி வளர்ச்சியிலும் ஈடுபட்ட இவர்கள், இலக்கிய அழகையும் படம் பிடித்துக் காட்டிய சாதனையாளர்கள்.

கி.வா.ஜ.வுடன் அல்லயன்ஸ் ஐயர் பாராட்டிய நெருக்கம், நம்பிக்கை எல்லாம் மற்ற எழுத்தாளர்களுக்கு சிறிது சஞ்சலத்தை ஏற்படுத்தாமல் இல்லை. இதை அவர்கள் ஐயரிடம் நேராகவே கேட்டும் விட்டனர். அதற்கு ஐயர் அமைதியாக, 'கி.வா.ஜ. எழுத்திலும், வாக்கிலும் சரஸ்வதி தேவி குடி கொண்டிருக்கிறாள். அவருடைய பெருமை யெல்லாம் இப்போது உங்களுக்குத் தெரியாது. ஆனால் தெரியும் போது நான் இருக்க மாட்டேன். அப்போது நீங்கள் எல்லாம் இதை உணர்வீர்கள்' என்று கூறிய வாக்கு, அப்படியே பலித்தது. 1940 களில் கி.வா.ஜ. அடிக்கடி வெளியூர்களுக்குச் சென்று இலக்கிய, ஆன்மிக சொற்பொழிவு ஆற்றி வந்தார். மக்களிடையே இவரது சொற்பொழிவு பெரிய வரவேற்பைப் பெற்றது. அந்தச் சமயங்களிலெல்லாம், அல்லயன்ஸ் ஐயர் கி.வா.ஜ.வைத் தமது காரில் ரயிலடிவரை விடச் சொல்வாராம். அதே போல, ஊரிலிருந்து திரும்பும் போது, அவரை அழைத்துவரத் தமது காரை அனுப்புவாராம். கி.வா.ஜ.வின் மீது தாம் கொண்ட அன்பையும்,

நம்பிக்கையையும் பல சமயங்களில் அல்லயன்ஸ் ஐயர் இது போன்ற செயல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் பேச்சிலும், எழுத்திலும், மொழியின் அழகு மட்டுமல்ல, சிலேடையும் உதிரும். சாதாரணமாக இந்தக் கலை எல்லோருக்கும் வந்து விடாது. தற்சமயம் இது, கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் இயல்பாய் அமைந்திருக்கின்றது. அல்லயன்ஸ் ஐயருக்கு நெருக்கமாக இருந்த பல எழுத்தாளர்கள் 'கலைமகள்' காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தனர். தினமும் அவர்கள் வேலை நேரம் முடிந்த பின்பு 'அல்லயன்ஸ்'ஸில் கூடுவது வழக்கம். ஒரு சமயம், அல்லயன்ஸ் ஐயரின் துணைவியார், இவர்களுக்கு 'உப்புமா' செய்து கொடுத்தார். அதைக் கையில் வாங்கிக் கொண்ட கி.வா.ஜ., ''உப்புமா என்றால் என்ன தெரியுமா?'' என்று கேள்வி கேட்டுவிட்டு, விளக்கமும் கொடுத்தாராம். 'உப்புமாவை சாப்பிட்டதும் தாகம் எடுக்கும். உடனே தண்ணீர் குடிப்போம். வயிற்றிலுள்ள உப்புமாவும், தண்ணீரும் சேர்ந்து வயிற்றை 'உப்ப'ச் செய்துவிடும். அதனால் 'உப்புமா' என்று பெயர் வந்தது' என்று சொன்னாராம். இப்படிப் பல தகவல்களை எனது தந்தையார் அவ்வப்போது சொன்னது உண்டு. அவற்றிலிருந்து சிலவற்றை நான் இந்தச் சமயத்தில் பகிர்ந்து கொள்கிறேன்.

கி.வா.ஜ. அவர்கள் திருவல்லிக்கேணியில் குடியிருந்த போது, அவரது குழந்தைக்கு உடல் நலம் சரியில்லாத நேரங்களில், கி.வா.ஜ.வின் துணைவியாரும், தமக்கையாரும் - நேராக மைலாப்பூரிலுள்ள அல்லயன்ஸ் ஐயர் வீட்டிற்கு வந்து விடுவார்களாம். குழந்தைக்கு மருத்துவ வசதிகளை ஏற்படுத்தித் தந்து, தனது வீட்டிலேயே பகல் பொழுது தங்கி ஓய்வெடுக்கச் சொல்லி, மாலையில் சூரிய வெப்பம் தணிந்த

பிறகு ரிக்ஷாவில் அனுப்பிவைப்பாராம் அல்லயன்ஸ் ஐயர். இந்தச் செய்தியை மதுகரம் அம்மையார் சொல்லும் போதெல்லாம், அவரது வாயிலிருந்து வந்த வார்த்தைகளை விட, கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்தான் அதிகம். அன்பினால் விளைந்த இந்தப் பண்பை கி.வா.ஜ. அவர்களே ஒரு முறை கடிதம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். 'ஸ்ரீ குப்புஸ்வாமி ஐயர் அவர்களுக்கு... நீங்கள் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகளே இல்லை... நான் அனுமான் அல்ல, என் மார்பைத் திறந்து காட்ட. இருந்தாலும் மனத்திலிருந்து சொல்கிறேன் நன்றி' என்று எழுதியுள்ளார்.

அல்லயன்ஸ் ஐயர் கடைசிவரை மிகவும் எளிமையாகவே வாழ்ந்து வந்தார். எங்கு சென்றாலும் 'டிராமி'ல்தான் செல்வார். அப்படி செல்லும் போதுகூட ஏதாவது 'புரூப்' படித்துக் கொண்டுதான் செல்வார். அப்போது ஏதாவது சந்தேகம் வந்துவிட்டால், 'காபியிங் பென்சி'லால் உள்ளங்கையில் குறித்து வைத்து, நேராக கி.வா.ஜ. அவர்கள் வீட்டிற்குச் சென்று 'துப்பு, துப்பு' அதாவது துப்பு கிடைத்துவிட்டது என்று கூறுவாராம். கி.வா.ஜ. அவர்களும் சிரித்துக் கொண்டே, இரண்டு கைகளையும் நீட்டி, 'துப்புங்கள், ஏந்திக் கொள்கிறேன்' என்று சிலேடையாகச் சொல்வாராம்.

''தமிழ்நாட்டின் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒன்றிரண்டு பேரைத் தவிர, மற்ற அத்தனைபேர் புத்தகங் களையும் ஐயர் போட்டிருக்கிறார். இதற்கென்ன காரணம்? பிரசுரத் தொழிலில் தமிழ் நாட்டில் உள்ள மற்றவர்களைவிட இவர் என்ன பெரிய நிபுணரா? பணம் பெருத்தவரா? இலக்கியச் சுவை நிறைந்தவரா? எப்படி அவரிடம் எல்லா எழுத்தாளர்களும் சிக்கினார்கள்?'' என்று வேறு சில பிரபல பிரசுரகர்த்தர்களே ஆச்சரியப்படுகிறார்கள். இதற்கு ஒரு

முக்கிய காரணம் உண்டு... ''அவர் எந்த எழுத்தாளரையும் - அவர் சிறந்தவரோ இல்லையோ - மிக மிகக் கண்ணியமாகவும் மதிப்போடும் வரவேற்று உபசரிக்கும் அருங்குணம் ஐயரிடம் இயல்பாய் அமைந்திருந்தது... ஒவ்வோர் எழுத்தாளருக்கும் தாம் ஒரு வள்ளலாக இருக்க வேண்டும் என்பதுதான் ஐயரின் உள்ளூற ஆசை'' என்று தி.ஜ.ர. அவர்கள் எழுதியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் கடைசி காலக் கட்டத்தில், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போதெல்லாம் அவர், என் பாட்டனாரைப் பற்றி மிகவும் உயர்வாகப் பேசுவார். அவர் வீட்டிற்கு விருந்தினர் எவரேனும் வந்தால், இன்னாருடைய பேரன் என்று பெருமையுடன் அறிமுகம் செய்து வைப்பார். அந்தச் சமயங்களில் அவருடைய முகத்தில் மகிழ்ச்சி பொங்கும். ஒரு நாள் 'புரூப்' எல்லாம் படித்து முடித்த பிறகு, அவர் என்னிடம், ''பேரன் என்றால் என்ன என்று சொல்?'' என்று கேட்டார். பெருங்கடல், காலி லோட்டாவைப் பார்த்து, 'உன்னிடம் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது?' என்று கேட்பது போல இருந்தது. அவரிடம் நான் கொண்ட நெருக்கத்தினால், அசடு வழிய சில பதில்களைக் கூறினேன். பிறகு, அவரே சொன்னார்: 'பெயரைச் சொல்பவன் பேரன். குப்புஸ்வாமி ஐயரின் பெயரைச் சொல்பவன் ஸ்ரீநிவாசன்' - என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டி அனுப்பி விட்டார். அதன் பிறகு சிறிது நாள்களிலேயே அவர் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

என் பாட்டனார் இறைவனடி சேர்ந்த போது, கி.வா.ஜ. அவர்கள் இரண்டு வெண்பாக்களை இயற்றினார். அவை:

அண்டும் விரோதியாண்டவணி ஈரேழில்
கொண்ட முருகன் திருத்தாள் கூடினன் - மாண்டுதமிழ்
நூலைக் குவித்து நுவல் குப்புஸ்வாமி பேர்

கேலு மந்தன ருளனாம் கோ.
அன்பில் உயர்ந்தோன் நன் காற்றுபகாரத்துயர்ந்தோன்
தன்புடையே நன்மை தனை ஒரான் - இன்சொல்லான்
மாநடராஜப் பேரான் வாய்த்த குப்புசாமியைய ரென்ற
பெயர் கொண்ட அவர்.

*இப்படி என் பாட்டனாரைப் பாராட்டிய கி.வா.ஜ., தன் கடைசி காலத்தில் என்னை என் பாட்டனாருடன் ஒப்பிட்டுப் பாராட்டிக் கூறிய போது, நன்றி சொல்ல அப்போது எனக்குத் தோன்றவில்லை; ஆனால், இப்போது சொல்ல நினைக்கும் போது அவர் உயிருடன் இல்லை. அவருடைய நூற்றாண்டில் அவர் எழுதிய நூல்களை வெளியிடுவதன் மூலம் அந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நன்றியின் மூலம் அந்த இருவரின் ஆத்மாக்களும் மகிழ்ந்து, நம் மீது ஆசி அருளட்டும்.*

- அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்.



# பதிப்புரை

எமது ஆத்ம குடும்ப நண்பரும், பிரபல எழுத்தாளரும் ஆன வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன் அவர்களுடைய முதல் நூலான 'வழிகாட்டி' என்ற நூல் எமது வெளியீடாக 50 ஆண்டுகளுக்கு முன் வந்தது. அப்போது தன் தாயாரிடம் ஆசி பெற்று எழுதத் தொடங்கி னார். ஆனால் நூல் வெளிவருவதற்குள் அவருடைய தாயார் முருகனடியை அடைந்தார். அதே போல் அவருடைய கடைசி நூலான இந்தப் ''பெரிய புராணம் விளக்கம்'' என்ற நூலை எழுதி முடித்து அச்சில் வெளிவருவதற்கு முன்பே அன்னார் அவர்கள் முருகனடி சேர்ந்தார்.

தமிழ் நாட்டில் கதாசிரியர் பலர்; சிறந்த கட்டுரை எழுதுகிறவர் சிலர்; தீவிர இலக்கிய விமர்சனம் செய்பவர் சிலர்; பழந்தமிழைப் போற்றி வானளாவும் குரலில் பேசுபவர் சிலர்; இலக்கணப் புலிகள் சிலர்; ஆனால், இவ்வளவு துறைகளிலும் வல்லவரான கி.வா.ஜ.வுக்கு நிகர் எவருமில்லை. பழமைக்கும் புதுமைக்கும் நீண்ட, செம்மையான பாலமாகக் கி.வா.ஜ. விளங்கினார். இவருடைய இலக்கியம் மிகப் பரந்தது; ஆழ்ந்தது.

அவர் எழுதிய இந்நூல் எவருக்கும் விளங்கும் வகையில் எளிமையான, ஆற்றோட்டமான நடையில் விளக்கப்பட்டுள்ளது. ஈடு இணையற்ற உரையாசிரியராக கி.வா.ஜ. பிரகாசிக்கிறார். வாழ்க. கி.வா.ஜ. வின் புகழ்! ஓங்குக அவருடைய தமிழ் இலக்கியங்கள்.

- பதிப்பகத்தார்

# பொருளடக்கம்





# ஏனாதி நாத நாயனார் புராணம்

பெரிய புராணத்தில் மூன்றாவதாக உள்ள இலை மலிந்த சருக்கத்தில் ஒன்பதாவதாக விளங்குவது ஏனாதி நாத நாயனார் புராணம். அதில் வரும் முதற் பாடலின் கருத்து வருமாறு:

'தங்களுடைய அடையாளப் பொறியாகிய புலியைத் தங்கம் உண்டாகும் இமய மலையின்மேல் பொறித்து இந்தப் பூமண்டலத்தைப் பாதுகாக்கும், குளிர்ச்சியைப் பெற்ற முத்து மாலைகளைத் தொங்க விட்டிருக்கும் வெண் கொற்றக் குடையையும் ஆத்தி மாலையையும் பெற்ற சோழ மன்னர்கள் ஆட்சி புரிந்த சோழவள நாட்டில் வண்டுகள் ரீங்காரம் செய்யும் மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும் பொழிலையும், வயல்களையும் பெற்ற மருத நிலத்தில் குளிர்ச்சியை உடைய வயல்கள் சுற்றி யிருந்து, கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென் கிழக்கு, தென் மேற்கு என்னும் எட்டுத் திக்குக்களிலும் உள்ள ஊர்களில் பரவியிருக்கும் சீர்த்தியை யும் திருமதிலையும் பெற்ற பழைய சிவத்தலம் எயினனூர் என்பதாகும்.' பாடல் வருமாறு:

''புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப்புவி அளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறைபூஞ் சோலைவயல் மருதத்தண் பணைசூழ்ந்
தெண்டிசையும் ஏறியசீர் எயில்மூதூர் எயினனூர்.''

புண்டரிகம் - தங்களுடைய அடையாள இலக்கினையாகிய புலியை. பொன் - தங்கம் உண்டாகும். வரைமேல் - இமய மலையின்மேல். ஏற்றி - பொறித்து. ப்: சந்தி. புவி - இந்தப் பூ மண்டலத்தை.. அளிக்கும் - பாதுகாக்கும். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. தரள - முத்து மாலைகளைத் தொங்க விட்டிருக்கும்; ஆகுபெயர். வெண் - வெள்ளை நிறத்தைக் கொண்ட. கவிகை - சந்திர வட்டக்குடையையும். த்: சந்தி. தார் - ஆத்தி மாலையையும் பெற்ற. வளவர் - சோழ மன்னர்கள் ஆட்சி புரிந்த; ஒருமை பன்மை மயக்கம். சோணாட்டில் - சோழவள நாட்டில். வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அறை - முரலும். பூம் - மலர்கள் ம்லர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மரங்களாவன: வேங்கை மரம், வாகை மரம், கடம்ப மரம், வாத நாராயண மரம், புளிய மரம், வில்வ மரம், விளாமரம், வேப்ப மரம், மருத மரம் முதலியவை. சோலை - பொழிலையும். வயல் - வயல்களையும் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். மருத - மருத நிலமாகிய. த்: சந்தி. தண் - குளிர்ச்சியைப் பெற்ற. பணை - வேறு வகையான வயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்து - சுற்றியிருந்து. எண்திசையும் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென் மேற்கு என்னும் எட்டுத் திசைகளிலும் உள்ள ஊர்களில்; ஆகுபெயர். திசை: ஒருமை பன்மை மயக்கம். ஏறிய - பரவிய. சீர் - சீர்த்தியையும். எயில் - திரு மதிலையும் பெற்ற. மூதூர் - பழைய சிலத்தலம். எயினனூர் - எயினனூர் ஆகும்.

அடுத்து வரும் 2-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'நாணற் கருப்பஞ் செடிகளோடு மென்மையான கருப்பஞ்செடிகளும் குளிர்ச்சியைக் கொண்ட வயல்களில்

தாழ்ந்து நிற்கக் கதிர்களை உடைய சாலி என்னும் உயர்ந்த வகையாகிய நெற்பயிர்கள் ஓங்கி வளரும் இயல்பை உடையதாகி இருக்க, வாழும் அந்தக் குடும்பங்கள் தழைத்து ஓங்கி நிலை பெற்று வாழ்வதும் ஆகிய அந்தத் தோற்றப் பொலிவை உடைய எயினனூர் என்னும் ஊரில் வாழும் ஈழக்குலத்தில் திருவவதாரம் செய்தருளிய சான்றோர் ஏனாதி நாத நாயனார்.' பாடல் வருமாறு:

"வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தானோங்கும் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியஅப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றோர் ஏனாதி நாதனார்."

வேழக் கரும்பினொடு - நாணற்கரும்புச் செடிக ளோடு; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையான. கரும்பு - கரும்புச் செடிகள்; ஒருமை பன்மை மயக்கம். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. வயலில் - வயல்களில்; ஒருமை பன்மை மயக்கம். தாழ - தாழ்ந்து நிற்க; வளைந்து நிற்க. க்: சந்தி. கதிர்- கதிர்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சாலி - சாலி என்னும் உயர்ந்த வகை நெற்பயிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தான்: அசை நிலை. ஓங்கும் - ஓங்கி வளரும். தன்மையதாய் - இயல்பை உடையதாகி இருக்க. வாழ் - அந்த ஊரில் வாழும். அக்குடி - அந்தக் குடும்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தழைத்து - தழைப்பை அடைந்து. மன்னிய - நிலை பெற்று வாழ்ந்த. அப்பொற் பகுதியில் - அந்தத் தோற்றப் பொலிவைக் கொண்ட ஊரில். ஈழக்குல - கள் இறக்குவோர் சாதியில் திரு அவதாரம் செய்த. ச்: சந்தி. சான்றோர் - சான்றாண்மையைப் பெற்றவர். ஏனாதி நாதனார் - ஏனாதி நாத நாயனார்.

பிறகு உள்ள 3-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பழமையாகிய விபூதியைப் பரப்பும் தொண்டிலும் சிவபெருமானை வழிபடுவதாகிய நல்ல செயலிலும் நிலை பெற்று நின்ற நல்ல பண்பு எந்தக் காலத்திலும் குறையாமல் இருப்பவர், அரசர்களுக்கு வெற்றியைத் தரும் வடித்த வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும் வித்தையைக் கற்பிக்கும் இயல்பாகிய வேலையிலும், அந்த வித்தை யிலும் தலைமையான நிலையை அடைந்திருக்கிறவர் ஏனாதி நாயனார்.' பாடல் வருமாறு:

''தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக் கண்நின்ற நலம்என்றும் குன்றாதார்,
மன்னர்க்கு வென்றிவடி வாட்படை பயிற்றும்
தன்மைத்தொழில் விஞ்சையில் தலைமைசார்ந் துள்ளார்.''

தொன்மை - பழமையாயன. த்: சந்தி. திருநீற்று - விபூதியைப் பரப்பும். த்: சந்தி. தொண்டின் - திருத் தொண்டிலும். வழிபாட்டின் - சிவபெருமானை வழி படுவதிலும். நன்மைக் கண் - அகிய நல்ல செயல்களில்; ஒருமை பன்மை மயக்கம். நின்ற - நிலை பெற்று நின்ற. நலம் - நல்ல பண்பு. என்றும் - எந்தக் காலத்திலும். குன்றாதார் - குறையாமல் இருப்பவர். மன்னர்க்கு - அரசிளங்குமரர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். வென்றி - வெற்றியைத் தரும். வடி - வடித்த. வாட்படை - வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும் முறையை; ஆகுபெயர். பயிற்றும் - கற்பிக்கும். தன்மை - இயல்பை உடைய. த்: சந்தி. தொழில் - வேலையாகிய. விஞ்சையில் - வித்தையில். தலைமை - தலைமையான நிலையை. சார்ந்துள்ளார் - அடைந்திருப்பவர் ஏனாதி நாயனார்; தோன்றா எழுவாய்.

அடுத்து வரும் 4-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வாள் என்னும் ஆயுதத்தைப் பிரயோகம் செய்யும் முறையைக் கற்பித்து, அதனால் தமக்குக் கிடைத்த செல்வம் எல்லாவற்றையும் ஒவ்வொரு நாளும் பெரிய விருப்பத்தோடு அமையும் கடமையில் தன்னுடைய திருவடிகளையும் விசாலமான திருமுடியையும் பன்றி உருவெடுத்தும் அன்னப் பறவை வடிவத்தை எடுத்தும் தேடிக் காணாதவர்களாகிய திருமாலையும் பிரம தேவனை யும் தொண்டர்களாக ஆட்கொள்ளும் சிவபெருமான் தன்னுடைய திருவடிகளின் திருத்தொண்டராகிய ஏனாதி நாயனாருக்கு உண்டாகச் செய்தருளினார்.' பாடல் வருமாறு:

"வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பால் நண்ணும் கடப்பாட்டில்
தாளும் தடமுடியும் காணாதார் தம்மையும்தொண்
டாளும் பெருமான் அடித்தொண்டர்க் காக்குவார்."

வாளின் - வாள் என்னும். படை - ஆயுதத்தைப் பிரயோகம் செய்யும் முறையை; ஆகுபெயர். பயிற்றி - அரசிளங்குமரர்களுக்குக் கற்பித்து. வந்த - அதனால் தமக்குக் கிடைத்த. வளம் - செல்வம். எல்லாம் - எல்லாவற்றையும். நாளும் - ஒவ்வொரு நாளும். பெரு - பெரிய. விருப்பால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். நண்ணும் - தமக்கு அமையும். கடப்பாட்டில் - கடமையில். தாளும் - தம்முடைய திருவடிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். தட - விசாலமான. முடியும் - திருமுடியையும். காணாதார் தம்மையும் - பன்றியின் உருவத்தை எடுத்தும் அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்தும் தேடிக் காணாதவர் களாகிய திருமாலையும் பிரமதேவனையும். காணாதார்: ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. தொண்டு - தொண்டர்களாக; திணை மயக்கம். ஆளும் - ஆட்கொள்ளும். பெருமான் - சிவபெருமானார்; ஒருமை

பன்மை மயக்கம். அடி - தம்முடைய திருவடிகளின்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொண்டர்க்கு - திருத்தொண்டராகிய ஏனாதி நாயனாருக்கு. ஆக்குவார் - உண்டாகச் செய்தருளுவார். 'கடப்பாட்டில் ஆக்குவார்' எனக் கூட்டுக.

பிறகு வரும் 5-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பகைவர்களும் வாழ்த்தும் நன்மையைப் பெற்ற வாட்படையைக் கற்பிக்கும் துறையில் இகழாத செயலின் தன்மையோடு ஏனாதி நாயனார் நடந்து வரும் காலத்தில், ஒதுக்கித் தள்ள முடியாத தங்களுடைய படைப் பயிற்சியைக் கற்பிக்கும் தொழிலில் உரிமையைப் பெற்ற தாயாதிகளில் ஒருவனாக அதிசூரன் என்னும் பெயரை உடையவன் இருப்பவன் ஆனான்.' பாடல் வருமாறு:

> "நள்ளார் களும்போற்றும் நன்மைத் துறையின்கண்
> எள்ளாத செய்கை இயல்பின் ஒழுகுநாள்
> தள்ளாத தங்கள் தொழிலுரிமைத் தாயத்தின்
> உள்ளான் அதிசூரன் என்பான் உளனானான்."

நள்ளார்களும் - பகைவர்களும். போற்றும் - வாழ்த்தும். நன்மை - நன்மையைப் பெற்ற. த்: சந்தி. துறையின்கண் - வாளைப் பிரயோகம் செய்யும் முறையைக் கற்பிக்கும் துறையில். எள்ளாத - பிறர் இகழாத. செய்கை - செயலின். இயல்பின் - தன்மையோடு. ஒழுகு - ஏனாதி நாயனார் நடந்து வரும். நாள் - காலத்தில். தள்ளாத - ஒதுக்கித் தள்ள முடியாத. தங்கள் - தங்களுடைய. தொழில் - தொழிலில். உரிமை - உரிமையைப் பெற்ற. த்: சந்தி. தாயத்தின் - தாயாதிகளில் ஒருவனாக; திணை மயக்கம். உள்ளான் - இருப்பவன். அதிசூரன் என்பான் - அதிசூரன் என்று சொல்லப்படும் பெயரைப் பெற்ற ஒருவன். உளன் - இருப்பவன். ஆனான் - ஆயினான்.

*பிறகு வரும் 6-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'அந்த அதிசூரன் என்பவனும் வெற்றியைத் தருவதும் வடிக்கப் பெற்றதும் ஆகிய வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும் வேலைகளைக் கற்றுத் தெரிந்து கொண்டவர் களுக்குள் தன்னை வென்றவர்கள் யாரும் இல்லை என்று எண்ணிக் கொண்டிருக்கும் பான்மையால் இந்தச் செந்தமிழ் மாநிலத்தில் மிகுதியாகக் கர்வம் வந்த சேர்ந்து இந்தப் பூமண்டலத்தில் தன்னையே மிகவும் மதித்துக் கொண்டிருப்பவன்.' பாடல் வருமாறு:*

"மற்றவனும் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான்."

*மற்று: அசை நிலை. அவனும் - அந்த அதிசூரன் என்பவனும். கொற்ற - வெற்றியைத் தருவதும்; வினையாலணையும் பெயர். வடி - வடிக்கப் பெற்றதும்; வினையாலணையும் பெயர். வாட்படை - ஆகிய வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும். த்: சந்தி. தொழில்கள் - வேலைகளை. கற்றவர்கள் - கற்றுத் தெரிந்து கொண்டவர்களுக்குள். தன்னில் - தன்னை; உருபு மயக்கம். கடந்துள்ளார் - வென்றிருப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இல்லை - யாரும் இல்லை. எனும் - என்று எண்ணிக் கொண்டிருக்கும்; இடைக்குறை. பெற்றிமை யான் - பான்மையால்; 'பான்மையைப் பெற்றவன்' எனலும் ஆம். மாநிலத்து - இந்தச் செந்தமிழ் மாநிலத்தில். மிக்க - மிகுதியாக. பெருமிதம் - கர்வம். வந்து உற்று - வந்து சேர்ந்து. உலகில் - இந்தப் பூமண்டலத்தில். தன்னையே சால - தன்னையே மிகவும். மதித்துள்ளான் - மதித்துக் கொண்டிருப்பவன். 'அதிசூரன் மதித்துக் கொண்டிருப்பவன்' என்று கூட்டுக.*

அடுத்து வரும் 7-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தான் அனுபவிக்கும் ஜீவனோபாயம் கெட்டுப் போக, தங்களுடைய சாதியில் உள்ள உரிமையாகிய குறையாததும் தான் புரிவதும் ஆகிய தொழிலாகும் ஆசிரியனாக உள்ள இயல்பில் கிடைக்கும் செல்வம் ஒவ்வொரு நாளும் குறைந்து அந்த ஏனாதி நாத நாயனா ருக்கே மேம்பட்டு இருப்பதால் அந்த நாயனாரிடத்தில் தகாத பகைமையை மேற் கொண்டான்.' பாடல் வருமாறு:

"தான்ஆள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனாத செய்தொழிலாம் ஆசிரியத் தன்மைவளம்
மேனாளும் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனாதி நாதர்திறத் தேலா இகல்புரிந்தான்."

தான் ஆள் - தான் அனுபவித்து வரும். விருத்தி - ஜீவனோபாயம். கெட - கெட்டுப் போக. த்: சந்தி. தங்கள் - தங்களுடைய. குல - சாதியில் உள்ள. த்: சந்தி. தாயத்தின் - உரிமையாகிய. ஆனாத - குறையாததும்; வினையாலணை யும் பெயர். செய் - தான் புரிவதும் ஆகிய; வினையாலணையும் பெயர். தொழிலாம் - வேலையாகும். ஆசிரியத் தன்மை - வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும் முறையைக் கற்பிக்கும் தொழிலைப் பெற்ற ஆசிரியனாக உள்ள இயல்பினால். வளம் - கிடைக்கும் செல்வம். மேல் நாளும் - அப்பால் ஒவ்வொரு நாளும். தான்: அசைநிலை. குறைந்து - குறைவை அடைந்து. மற்று: அசை நிலை. அவர்க்கே - அந்த ஏனாதி நாயனாருக்கே. மேம்படலால் - மேலாக உண்டாவதால். ஏனாதி நாதர் திறத்து - ஏனாதி நாயனாரிடத்தில். ஏலா - தகாத. இகல் -. பகைமையை. புரிந்தான் - அதிசூரன் மேற் கொண்டான்.

பின்பு வரும் 8-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'சூரியன் உதயமாகத் தன்னுடைய ஒளி மங்கி மாலை நேரத்தில் தோன்றும் சந்திரனைப் போலத் தன்னுடைய உள்ளத்தில் வருத்தத்தை அடைந்து ஏனாதி நாயனார் மேம்பட்டு விளங்குவதைச் சகிக்காத அந்த அதிசூரன் என்பவனும் தன்னுடைய ஊரில் வாழும் உறவினர்களோடு கூடப் போருக்குரிய கோலத்தைப் புனைந்து கொண்டு ஏனாதி நாயனாரோடு போர் செய்வதற்காக அவர்பாற் போய் எதிர்க்கின்ற யுத்தத்தை விளையும் வண்ணம் செய்வதற்கு நினைத்துத் துணிவைப் பெற்று எழுந்து சென்றான்.' பாடல் வருமாறு:

"கதிரோன் எழமழுங்கிக் கால்சாயும் காலை
மதிபோல் அழிந்துபொறா மற்றவனும் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணி அமர்மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே எண்ணித்துணிந் தெழுந்தான்."

கதிரோன் - சூரியன். கதிர் - சூரிய கிரணம். எழ - உதயமாக. மழுங்கி - தன்னுடைய ஒளி மங்கி. க்: சந்தி. கால் சாயும் காலை - மாலை நேரத்தில் தோன்றும். மதிபோல் - சந்திரனைப் போல. அழிந்து - தன்னுடைய உள்ளத்தில் வருத்தத்தை அடைந்து. பொறா - ஏனாதி நாயனார் மேம்பட்டு விளங்குவதைக் கண்டு சகிக்காத. மற்று: அசை நிலை. அவனும் - அந்த அதிசூரனும். சுற்றப் பதியோருடன் - தன்னுடைய ஊரில் வாழும் உறவினர்களோடு. கூடப் பண்ணி - கூடப் போருக்குரிய கோலத்தைப் புனைந்து கொண்டு. அமர் - ஏனாதி நாயனாரோடு போர் செய்வதற்காக. மேற்சென்று - அந்த நாயனாரிடம் போய். எதிர் - எதிர்க்கும். போர் - யுத்தம். விளைப்பதற்கு - விளையுமாறு செய்வதற்கு. ஏ: அசைநிலை. எண்ணி - நினைத்து. த்: சந்தி. துணிந்து - துணிவை அடைந்து. எழுந்தான் - எழுந்து சென்றான்.

*பிறகு உள்ள 9-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'தங்களுடைய தோள்களில் கொண்டுள்ள வலிமையையும் வீரத்தையும் பெற்ற உறவினர்களோடும் தனக்குத் துணையாக வரும் மேற்கொள்ளுவதைக் கொண்ட யுத்தம் செய்யும் வீரர்களுடைய கூட்டத்தோடும் போய், ''வாளா யுதத்தால் பெற்றுக் கொண்ட தாய பாகத்தை வலிமையைப் பெற்றவரே அடைவது'' என்று மூண்டு எழுகின்ற கோபத்தை உடையவனாகிய அதிசூரன் ஏனாதி நாயனாருடைய திருமாளிகையின் முன்னால் உள்ள வாசலில் நின்று கொண்டு அந்த நாயனாரைப் போர் செய்ய அழைத்தான்.' பாடல் வருமாறு:*

**''தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத்தொடும் துணையாம்**
**கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத்தொடும் சென்று**
**'வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வ'தென**
**மூள்கின்ற செற்றத்தான் முன்கடையில் நின்றழைத்தான்.''**

தோள் - தங்களுடைய தோள்களில்; ஒருமை பன்மை மயக்கம். கொண்ட - மேற்கொண்டுள்ள. வல் - வலிமையையும். ஆண்மை - வீரத்தையும் பெற்ற. ச்: சந்தி. சுற்றத்தொடும் - உறவினர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். துணை ஆம் - துணையாக வருபவர்களாகும். கோள் கொண்ட - மேற்கொள்ளுவதைக் கொண்ட. போர் - யுத்தம் செய்யும். மள்ளர் - வீரர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். கூட்டத்தொடும் - கூட்டத்தினோடும். சென்று - போய். வாள் - வாளென்னும் ஆயுதத்தால். கொண்ட - பெற்றுக் கொண்ட. தாயம் - தாயபாகத்தை. வலியாரே - வலிமையைப் பெற்றவரே. கொள்வது - அடைவது. என - என்று; இடைக்குறை. மூள்கின்ற - மூண்டு எழுகின்ற. செற்றத்தான் - கோபத்தை உடையவனாகி; முற்றெச்சம். முன் கடையில் - ஏனாதி நாயனாருடைய திருமாளிகையின்

முன்னால் உள்ள வாசலில். நின்று - அதிசூரன் நின்று கொண்டு. அழைத்தான் - அந்த நாயனாரைப் போர் செய்ய அழைத்தான்.

*பிறகு வரும் 10-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

'கொடுமையான கண்களைப் பெற்ற புலி படுத்திருந்த கொடிய மலைக்குகைக்குப் போய்ப் போர் செய்வதற்கு அழைக்கும் பசுமையான கண்களைக் கொண்ட சிறு நரியைப் போல் இருப்பவனாகிய அதிசூரன் ஆயுதத்தைத் தன்னுடைய கைகளில் எடுத்துக் கொண்டு சினம் பொங்கி எழுந்து வெளியில் சுற்றி வந்து யுத்தம் செய்வதை எண்ணி நேரில் நின்று கொண்டே அழகிய இடத்தை உடைய ஏனாதி நாயனாருடைய திருமாளிகையின் வாசலில் நின்று கொண்டு போருக்கு அழைத்த அந்த அதிசூரனுடைய சத்தத்தைக் கேட்டு.' பாடல் வருமாறு:

"வெங்கட் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிப் புறம்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
அங்கட் கடைநின் றழைத்தான் ஒலிகேளா."

இந்தப் பாடல் குளகம். வெம் - கொடிய. கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். புலி கிடந்த - புலி படுத்துக் கொண்டிருந்த. வெம் - கொடிய. முழையில் - மலைக் குகைக்கு; உருபு மயக்கம். சென்று - போய். அழைக்கும் - போர் செய்வதற்கு அழைக்கும். பைம் - பசுமையான. கண் - கண்களைக் கொண்ட. குறுநரி - குள்ளநரியை. ஏ: அசைநிலை. போல்வான் - போல உள்ளவனாகிய அதிசூரன். படை - ஆயுதத்தை. கொண்டு - தன்னுடைய கைகளில் எடுத்துக் கொண்டு. பொங்கி - சினம் பொங்கி எழுந்து. ப்: சந்தி. புறம் - ஏனாதி நாயனாருடைய

திருமாளிகைக்கு வெளியில். சூழ்ந்து - சுற்றி வந்து. போர் - யுத்தம் செய்வதை; ஆகுபெயர். குறித்து - எண்ணி. நேர் - நேரில். நின்றே - நின்று கொண்டே. அம் - அழகிய. கண் - இடத்தைப் பெற்ற. கடை - ஏனாதி நாயனாருடைய திருமாளிகையின் வாசலில். நின்று - நின்று கொண்டு. அழைத்தான் - போருக்கு அழைத்த அந்த அதிசூரனுடைய. ஒலி - அவ்வாறு அழைத்த சத்தத்தை. கேளா - ஏனாதி நாத நாயனார் கேட்டு.

பின்பு வரும் 11-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'"யார் போர் செய்வதற்கு என்னை அழைத்தார்?" என்று எண்ணி ஆண் சிங்கத்தைப் போலக் கிளர்ச்சியை அடைந்து சேர்தல் பெறுமாறு கச்சோடு செறிவாக அமைந்த ஆடையை இடுப்பின்மேல் இறுகக் கட்டிக் கொண்டு, நீண்ட வீரக் கழலையும் தம்முடைய காலில் கட்டிக் கொண்டு, வடித்த வாளாயுதத்தையும் கேடகத்தையும் எடுத்துக் கொண்டு போர்க்களத்திற்குச் செல்ல ஏனாதி நாத நாயனார் தம்முடைய திருமாளிகையிலிருந்து வெளியில் வந்தார்.' பாடல் வருமாறு:

" 'ஆர்கொல் பொரஅழைத்தார்' என்றரியேற் றிற்கிளர்ந்து
சேர்வுபெறக் கச்சில்செ றிந்தஉடை மேல்வீக்கி
வார்கழலும் கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையில் ஏனாதி நாதர் புறப்பட்டார்."

ஆர் - யார். கொல்: அசை நிலை. பொர - போர் செய்வதற்கு. அழைத்தார் - என்னை அழைத்தார். என்று - என்று எண்ணி. அரி ஏற்றின் - ஆண் சிங்கத்தைப் போல. கிளர்ந்து - கிளர்ச்சியை அடைந்து. சேர்வு - சேர்தலை. பெற - பெறுமாறு. க்: சந்தி. கச்சில் - கச்சோடு; உருபு மயக்கம். செறிந்த - செறிவாக அமைந்த. உடை - ஆடையை. மேல் -

தம்முடைய இடுப்பின்மேல். வீக்கி - இறுகக் கட்டிக் கொண்டு. வார் - நீண்ட. கழலும் - வீரக்கழலையும். கட்டி - தம்முடைய காலில் கட்டிக் கொண்டு. வடி - வடித்துச் செய்த. வாள் - வாளாயுதத்தையும். பலகை - கேடயத்தையும். கொடு - தம்முடைய கைகளில் எடுத்துக் கொண்டு. போர் முனையில் - போர்க்களத்திற்கு; உருபு மயக்கம். ஏனாதி நாதர் - ஏனாதி நாத நாயனார். புறப்பட்டார் - செல்வதற்காகத் தம்முடைய திருமாளிகையிலிருந்து வெளிப்பட்டு வந்தார்.

பின்பு வரும் 12-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு ஏனாதி நாத நாயனார் தம்முடைய திருமாளிகையிலிருந்து புறப்பட்ட சமயத்தில் போருக்குரிய வேலைகளைக் கற்றுக் கொள்ளும் வீரத்தையும் பெருமையையும் சீர்த்தியையும் பெற்ற காளை மாடுகளைப் போன்ற ஆடவர்களும், வேறு இடங்களில் நின்று கொண்டிருந்த மக்களும், வீரத்தைக் கொண்ட சேனையில் உள்ள வாளாயுதங்களை ஏந்திய உறவினர்களும் கேள்விப் பட்டு ஓட்டமாக ஓடி வந்து கொலை செய்வதற்கு அருமையான யுத்த வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு இரண்டு பக்கங்களிலும் சேர்ந்தார்கள்.' பாடல் வருமாறு:

"புறப்பட்ட போதின்கட் போர்த்தொழில்கள் கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து நின்றார்
மறப்படைவாட் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்கும் சேர்ந்தார்கள்."

புறப்பட்ட - அவ்வாறு ஏனாதி நாத நாயனார் தம்முடைய திருமாளிகையிலிருந்து வெளியில் புறப்பட்ட. போதின்கட் - சமயத்தில். போர் - யுத்தத்துக்குரிய. த் : சந்தி. தொழில்கள் - வேலைகளை. கற்கும் - கற்றுக் கொள்ளும்.

விறல் - வீரத்தையும். பெரும் - பெருமையையும். சீர் - சீர்த்தியையும் பெற்ற. க்: சந்தி. காளையர்கள் - காளை மாட்டைப் போன்ற ஆடவர்களும். வேறு இடத்து - வேறு இடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். நின்றார் - நின்று கொண்டிருந்த மக்களும்; ஒருமை பன்மை மயக்கம். மற - வீரத்தைப் பெற்ற ப்: சந்தி. படை - சேனையில் உள்ள. வாள் - வாளாயுதங்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். சுற்றத்தார் - ஏனாதி நாத நாயனாருடைய உறவினர்களும்; ஒருமை பன்மை மயக்கம். கேட்டு - அதிசூரன் ஏனாதி நாயனாரைப் போருக்கு அழைத்தான் என்ற செய்தியைக் கேள்விப்பட்டு. ஓடி வந்து - ஓட்டமாக ஓடி வந்து. செறற்கு - கொலை செய்வதற்கு. அரும் - அருமையாக இருக்கும். போர் வீரர்க்கு - யுத்த வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு. இரு - இரண்டு. மருங்கும் - பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். சேர்ந்தார்கள் - அடைந்தார்கள்.

பிறகு உள்ள 13-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'ஏனாதி நாத நாயனாருடைய திருமாளிகையின் வாசலுக்கு வந்து அந்த நாயனாரைப் போர் செய்ய அழைத்த பகைவனாகிய அதிசூரன் வலிமையைப் பெற்ற ஆண் புலியைப் போன்றவராகிய அந்த நாயனாருக்கு முன்னால், ''நம்முடைய வாளாயுதத்தைப் பிரயோகம செய்யும் முறையைக் கற்றுக் கொடுக்கும் நல்ல தாய பாகத்தைப் பெற்றுக் கொள்ளுமிடத்தில் இந்தத் திறந்த வெளியில் இரண்டு பேர்களும் பக்கங்களை வகுத்துக் கொண்டு, நம் இருவருடைய போர் செய்யும் சேனைகளும் சந்தித்து யுத்தத்தை விளையுமாறு செய்தால், தோல்வியை அடையாதவர் அடைவது'' என்று கூற.' பாடல் வருமாறு:

"வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்முன்
'நந்தமது வாட்பயிற்றும் நற்றாயம் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கை வகுத்திருவேம் பொருபடையும்
சந்தித் தமர்விளைத்தால் சாயாதார் கொள்வ'தென."

இந்தப் பாடல் குளகம். *வந்து* - ஏனாதி நாத நாயனாருடைய திருமாளிகையின் வாசலுக்கு வந்து. *அழைத்த* - அந்த நாயனாரைப் போர் செய்வதற்கு அழைத்த. *மாற்றான்* - பகைவனாகிய அதிசூரன். *வய* - வலிமையைப் பெற்ற. ப்: சந்தி. *புலிப்போத்து* - ஆண் புலியை. *அன்னார்* - போன்றவராகிய அந்த நாயனாருக்கு. *முன்* - முன்னால். *நந்தமது* - நம்முடைய. *வாள்* - வாளாயுதத்தைப் பிரயோகம் செய்யும் முறையை; ஆகுபெயர். *பயிற்றும்* - கற்றுக் கொடுக்கும். *நல்* - நல்ல. *தாயம்* - தாயபாகத்தை; தங்களுக்குரிய இறையிலி நிலம் முதலியவற்றை. *கொள்ளுங்கால்* - பெற்றுக் கொள்ளுமிடத்தில். *இந்த வெளி மேல்* - இந்தத் திறந்த வெளியில். *கை* - பக்கங்களை; ஒருமை பன்மை மயக்கம். *வகுத்து* - வகுத்துக் கொண்ட. *இருவேம்* - நம் இரண்டு கட்சியினரும். *பொரு* - போர் செய்யும். *படையும்* - நம் இருவருடைய சேனைகளும்; ஒருமை பன்மை மயக்கம். *சந்தித்து* - ஒரு கட்சியினர் மற்றொரு கட்சியினரைச் சந்தித்து. *அமர்* - போரை. *விளைத்தால்* - மூளுமாறு செய்தால். *சாயாதார்* - தோல்வியை அடையாதவர். *கொள்வது* - தாயபாகத்தைப் பெறுவது. *என* - என்று கூற; இடைக்குறை.

*வீரருக்குப் புலி உவமை:* "தானையோர் போர்முகப் புலிக்கடல் புகுந்த தொத்ததே." *(சீவக சிந்தாமணி, 2218)* என்று திருத்தக்க தேவரும், "ஒலியுலாம் சேனையை உவந்து கூவினான், வலியுலாம் உலகினில் வாழும் வள்ளுகிர்ப் புலியெலாம் ஒருவழிப் புகுந்த போலவே." (குகப் படலம்,

10), ''புலிதானே புறத்ததாக் குட்டிகோட் படாதென்ன, ஒலியாழி உலகுரைக்கும் உரைபொய்யோ ஊழியினும், சலியாத மூவருக்கும் வானவர்க்கும் தானவர்க்கும், வலியானே.'' (சூர்ப்பணகைப் படலம், 102), ''வல்லியக் குழாங்களோ... படைக்கை வீரரே.'' (கரன்வதைப் படலம், 30), ''வல்லியம் மருங்கு கண்ட மானென மறுக்க முற்று.'', ''வல்லியம் முனிந்தா லன்னான்.'' (இந்திரசித்து வதைப் படலம், 12) என்று கம்பர் பாடியவற்றையும், ''புலியைப் புல்லாய் தொடர்ந்ததெனத் தானைக் கடலைக் கலக்கி.'' (திக்கு விசயப் படலம், 125) என்று உத்தர காண்டத்தில் வருவதையும், ''சிறப்புலியார் மறப்புலியார்.'' என்று உமாபதி சிவம் பாடியருளியதையும் காண்க.

பிறகு வரும் 14-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'என்று இவ்வாறு பகைத்தவனாகிய அதிசூரன் கூற ஏனாதி நாத நாயனார், ''அவ்வாறு செய்வது நல்லது; உனக்கு வேண்டுமானால் நான் போர் செய்வதற்கு வருவேன்'' எனத் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து அந்த அதிசூரன் முன்பு கூறிய போர்க்களத்துக்குச் சென்று யுத்தம் செய்ய எண்ணிய தம்முடைய எண்ணத்தைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, கோபம் மூண்டு இரண்டு பேர்களினுடைய படை வீரர்களும் அணி வகுத்துக் கொண்டு நேருக்கு நேராக நின்று போரிடுவாராயினார்கள்.' பாடல் வருமாறு:

''என்றுபகைத் தோன்உரைப்ப ஏனாதி நாதர்,'அது
நன்றுனக்கு வேண்டுமேல் நண்ணுவன்'என் றுள்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்னசெருக் களத்துப்போர் குறிப்பக்
கன்றி இருபடையும் கைவகுத்து நேர்மலைவார்.''

என்று - என இவ்வாறு. பகைத்தோன் - தம்மைப் பகைத்துக் கொண்டவனாகிய அதிசூரன். உரைப்ப - கூற. ஏனாதி நாதர்

- ஏனாதி நாத நாயனார். அது - அவ்வாறு போர் செய்தல். நன்று - நல்லது. உனக்கு - நினக்கு. வேண்டுமேல் - வேண்டுமானால். நண்ணுவன் - நான் போர் புரிய வருவேன். என்று - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து. உள் - தம்முடைய திருவுள்ளத்தில். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. சென்று - போய். அவன் - அந்த அதிசூரன். முன் - முன்பு. சொன்ன - கூறிய. செருக்களத்து - போர்க்களத்துக்குச் சென்று. ப்: சந்தி. போர் - யுத்தத்தைச் செய்யும். குறிப்ப - தம்முடைய எண்ணத்தைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. க்: சந்தி. கன்றி - சினம் மூண்டு. இரு - இரண்டு. படையும் - சேனை வீரர்களும்; திணை மயக்கம். கைவகுத்து - இரண்டு கட்சிகளாக அணிவகுத்துக் கொண்டு. நேர் - நேருக்கு நேராக நின்று கொண்டு. மலைவார் - போரிடுவாராயினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 15-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மேகங்களின் வரிசைகளை முன்னால் கொண்டு, மின்னல்களின் வரிசையைத் தங்களுக்கு நடுவில் கொண்டு, வானத்தின் பக்கத்திலும் தரையிலும் வலிமையுள்ள இடிகள் எதிருக்கு எதிரில் போவனவாக இருக்க, நீண்ட கேடயங்களின் தொகுதி ஆளுகின்ற போர்த் தொழிலைப் புரியும் வாளாயுதங்களை உடைய வீரர்கள், காகங்கள் நெருங்கிப் பறந்த போர்க்களத்தில் இரண்டு பக்கங்களிலும் வந்து கலந்து கொண்டார்கள்.' பாடல் வருமாறு:

"மேக ஒழுங்குகள் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினும் மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குலம் ஆள்வினை வாளுடை ஆடவர்
காகம் மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர்."

மேக - மேகங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஒழுங்குகள் - வரிசைகளை. முன் - முன்னால்.

கொடு - கொண்ட. மின் - மின்னல்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரை - வரிசையை. தம் - தங்களுக்கு. இடை - நடுவில். ஏ: அசை நிலை. கொடு - கொண்டு. மாக - வானத்தின். மருங்கினும் - பக்கத்திலும். மண்ணினும் - தரையிலும். வல் - வல்லமையான. உருமேறு - இடிகள்; ஒருமை பன்மை மயக்கம். எதிர் - எதிருக்கு எதிரில். செல்வன ஆக - போவனவாக இருக்க. நெடும் - நீளமான. பலகை - கேடயங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குலம் - தொகுதி. ஆள் - ஆள்கின்ற. வினை - போர்த் தொழிலைப் புரியும். வாள் - வாளாயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். உடை - உடைய. ஆடவர் - வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். காகம் - காக்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். மிடைந்த - நெருங்கிப் பறந்த. களத்து - போர்க்களத்தில். இரு கைகளின் - இரண்டு பக்கங்களிலும்; கை: ஒருமை பன்மை மயக்கம். வந்து கலந்தனர் - வந்து கலந்து கொண்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 16-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தங்களுடைய கால்களில் வீரக்கழல்களைக் கட்டிக் கொண்ட வீரர்களினுடைய பக்கங்களில் தங்களுடைய உடம்புகளுக்குள் அடக்கி வைத்த வாளாயுதங்கள் வீசும் ஒளி வட்டம் முன்பு ஒளிர வந்து இரண்டு பக்கங்களிலும் வந்து முந்திக் கொண்டார்கள்; வேலாயுதத்தோடு வேலாயுதம் எதிருக்கு எதிரில் நீண்டு மோதியது; இந்தக் காட்சி தாங்கள் இருந்த பாதாள உலகத்தை விட்டுவிட்டு உயரமாக உள்ள மண்ணுலகத்துக்கு வந்து சேரும் நாகலோக வீரர்களினுடைய நாக்குக்கள் நிமிர்ந்து விளங்குவன போலத் தோன்றின.' பாடல் வருமாறு:

"கால்கழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்கள் அடக்கிய
வாளொளி வட்டம் முனைத்திட வந்திரு கைகளின் முந்தினர்;
வேலொடு வேலெதிர் நீள்வன; மேவிய பாதலம் விட்டுயர்
ஞாலமு றும்பணி வீரர்கள் நாநிமிர் கின்றன ஒத்தன."

*கால் - தங்களுடைய கால்களில்; ஒருமை பன்மை மயக்கம். கழல் - வீரக்கழல்களை; ஒருமை பன்மை மயக்கம்; வெற்றிக் கழல்கள் என்பனவும் இவை. கட்டிய - கட்டிக் கொண்ட. மள்ளர்கள் - வீரர்களினுடைய. கைகளின் - பக்கங்களில். மெய்கள் - தங்களுடைய உடம்புகளுக்குள். அடக்கிய - அடக்கி மறைத்து வைத்த. வாள் - வாளாயுதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒளி வட்டம் - வீசும் பிரகாசத்தின் வட்டம். முனைத்திட - முன்னால் ஒளிர. வந்து - போர்க்களத்துக்கு வந்து. இரு - இரண்டு. கைகளின் - பக்கங்களிலும். முந்தினர் - முந்திக் கொண்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வேலொடு - வேலாயுதத்தோடு. வேல் - வேலாயுதம். எதிர் - எதிருக்கு எதிரில். நீள்வன - நீண்டு மோதியது; 'நீள்வது' என்பது 'நீள்வன' என என்றது; விகாரம். மேவிய - இந்தக் காட்சி தாங்கள் இருந்த. பாதலம் - பாதாள உலகத்தை. விட்டு - விட்டு விட்டு. உயர் - மேலே உள்ள. ஞாலம் - மண்ணுலகத்துக்கு. உறும் - வந்து சேரும். பணி வீரர்கள் - நாகலோகத்தில் வாழும் வீரர்களினுடைய; இவர்கள் பாம்பின் வடிவத்தைப் பெற்றவர்கள். நா - நாக்குக்கள்; ஒருமை பன்மை மயக்கம். நிமிர்கின்றன - மேல் நோக்கி நிமிர்ந்து விளங்குபவை. ஒத்தன - போலத் தோன்றின.*

*அடுத்து வரும் 17-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'கொடுமையான கண்களையும் வெற்றியைத் தரும் வில்லாயுதங்களையும் பெற்ற வீரர்கள் வேறு வேறாக இரண்டு பக்கங்களிலும் சந்திப்பவர்கள் தங்களுடைய*

வில்லாயுதங்களினுடைய தொகுதி எய்தக் கேடு இல்லாத அம்புகள் நெருங்கி இருப்பவை, பொங்கி எழுந்த கோபமாகிய நெருப்பிலிருந்து புகையைப் போன்ற கொடிகளை வளைத்துக் கொண்டு எதிரில் சிவந்த கண்களில் உள்ள கருமணிகள் நெருப்பைச் சிந்தின காட்சி, சீறுகின்ற பொறிகள் போவதை ஒத்து விளங்கின.' பாடல் வருமாறு:

"வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையிலும் நேர்பவர்
தங்கள் சிலைக்குலம் உந்தின தாவில் சரங்கள் நெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போக கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன."

வெம் - கொடுமையான. கண் - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். விறல் - வெற்றியைத் தரும். சிலை - வில்லாயுதங்களையும் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வீரர்கள் - போர் வீரர்கள். வேறு - வேறு வேறாக. இரு - இரண்டு. கையிலும் - பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நேர்பவர் - சந்திப்பவர்கள்; மோதுகிறவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தங்கள் - தங்களுடைய. சிலை - வில்லாயுதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குலம் - தொகுதி. உந்தின - செலுத்திய. தா - கேடு. இல் இல்லாத; கடைக்குறை. சரங்கள் - அம்புகள். நெருங்குவ - நெருங்கி இருப்பவை. பொங்கு - பொங்கி எழுந்த. சினத்து - கோபமாகிய. எரியில் - நெருப்பிலிருந்து; உருபு மயக்கம். புகை - எழும் புகை. போக - செல்கின்ற. கொடிக்கள் - கொடிகளை. வளைத்து - வளைத்துக் கொண்டு. எதிர் - எதிரில். செம் - சிவந்த. கண் - கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். விழி - கருமணிகள்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கனல் - நெருப்பை. சிந்திய - கக்கின காட்சி. சீறு - சீறி எழுகின்ற. பொறி - நெருப்புப் பொறிகள்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செலவு - போவதை. ஒத்தன - ஒத்து விளங்கின.

*பிறகு வரும் 18-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:*

*'வாளாயுதங்களோடு நீண்ட வீரர்களின் கைகள் துடித்தன; அவர்களுடைய மார்புகளோடு வேலாயுதங்கள் பதிந்தன; அவர்களுடைய தோள்களோடு அவற்றிற் பதிந்திருந்த அம்புகள் தரையில் விழுந்தன; அவர் களுடைய தோள்களோடு தோள்கள் மோதிக் கொண்டன; பல வீரர்களுடைய கால்களோடு அவற்றில் பூண்டிருந்த நீண்ட வீரக் கழல்கள் முறிந்து விழுந்தன; மாலைகளோடு அவற்றைச் சுற்றியிருந்த தலைகள் உடம்புகளிலிருந்து அற்று விழுந்தன; இவ்வாறு குறித்த நாளில் சீறிக்கொண்டு போர் புரியும் வீரர்கள் நாடி வந்து யுத்தம் புரிந்த போர்க்களத்தில் நிகழ்ந்தன.' பாடல் வருமாறு:*

"வாளொடு நீள்கை துடித்தன; மார்பொடு வேல்கள் குளித்தன;
தோளொடு வாளி நிலத்தன; தோளொடு தோள்கள் தகைத்தன;
தாளொடு வார்கழல் இற்றன; தாரொடு சூழ்சிரம் அற்றன;
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில்."

*இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள் கோள் அமைந்திருக்கிறது. நாளொடு - குறித்த நாளில்; உருபு மயக்கம். சீறி - சீறிக் கொண்டு. மலைப்பவர் - போர் புரியும் வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நாடிய - நாடி வந்த. போர் - யுத்தத்தை. செய் - புரிந்த. களத்தினில் - போர்க்களத்தில். வாளொடு - வாளாயுதங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். நீள் - நீண்ட. கை - வீரர்களின் கைகள்; ஒருமை பன்மை மயக்கம். துடித்தன - துடிப்பை அடைந்தன. மார்பொடு - ஒரு கட்சியில் இருந்த வீரர்களின் மார்புகளில்; உருபு மயக்கம்; ஒருமை பன்மை மயக்கம். வேல்கள் - மறு கட்சியில் இருந்த வீரர்கள் ஏந்தி யிருந்த வேலாயுதங்கள். குளித்தன - பதிந்து மறைந்தன. தோளொடு*

- ஒரு கட்சியில் இருந்த வீரர்களினுடைய தோள்களோடு; ஒருமை பன்மை மயக்கம். வாளி - மற்றக் கட்சியில் இருந்த வீரர்கள் எய்த அம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். நிலத்தன - தரையில் விழுந்தன. தோளொடு - ஒரு கட்சியில் இருந்த வீரர்களினுடைய தோள்களோடு; ஒருமை பன்மை மயக்கம். தோள்கள் - எதிர்க்கட்சியில் இருந்த வீரர்களினுடைய தோள்கள். தகைத்தன - ஒன்றனோடு ஒன்று மோதிக் கொண்டன. தாளொடு - வீரர்களினுடைய கால்களோடு; ஒருமை பன்மை மயக்கம். வார் - நீளமான. கழல் - வீரக்கழல்கள்; ஒருமை பன்மை மயக்கம். இற்றன - முறிந்து விழுந்தன. தாரொடு - மாலைகளோடு; ஒருமை பன்மை மயக்கம். சூழ் - அவற்றைச் சுற்றியிருந்த. சிரம் - ஒரு கட்சியில் உள்ள வீரர்களினுடைய தலைகள்; ஒருமை பன்மை மயக்கம். அற்றன - எதிர்க்கட்சியில் இருந்த வீரர்கள் எய்த அம்புகளால் உடம்புகளிலிருந்து அற்று விழுந்தன.

அடுத்து வரும் 19-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இரண்டு சேனைகளிலும் எதிர்த்து நின்ற வீரர்கள் எதிருக்கு எதிரில் போர் புரிந்த போர்க்களத்தில், வெட்டுப் பட்ட . வீரர்களுடைய உடம்புகளிலிருந்து வழிந்த இரத்தத்தின் ஆறுகள் போர்க்களம் முழுவதும் பரவி ஓடின; தலைகள் வெட்டுப்பட்ட வீரர்களின் குறைந்த உடம்பு களாகிய முண்டங்கள் ஓடி அலைந்து கொண்டிருந்தன; போர் செய்த ஆயுதங்கள் அற்ற துண்டங்கள் தரையில் சிந்தி விழுந்தன; பக்கத்தில் சொரிந்த குடல்களோடு வெட்டுப் பட்ட வீரர்களினுடைய உடம்புகள் எங்கும் பரவி விழுந்திருந்தன; அச்சம் உண்டாகும் வண்ணம் பிணந் தின்னிக் கழுகுகள் போர்க்களத்தில் நெருங்கிப் பறந்து கொண்டிருந்தன; கட்டுக்கள் அற்ற உடுக்குக்கள் தரையில் புரண்டு கொண்டிருந்தன.' பாடல் வருமாறு:

"குருதியின் நதிகள் பரந்தன; குறைஉடல் ஓடி அலைந்தன;
பொருபடை அறுதுணி சிந்தின; புடைசொரி குடர்உடல் பம்பின;
வெருவர எருவை நெருங்கின; விசியறு துடிகள் புரண்டன;
இருபடை தனினும் எதிர்ந்தவர் எதிரெதிர் அமர்செய் பறந்தலை."

இந்தப் பாடலிலும் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்திருக்கிறது. இரு படைதனினும் - இரண்டு சேனைகளிலும்; தன்: அசைநிலை. எதிர்ந்தவர் - எதிர்த்து நின்ற வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எதிர் எதிர் - எதிருக்கு எதிரில். அமர் - போர். செய் - புரிந்த. பறந்தலை - போர்க்களத்தில். குருதியின் - வெட்டுப்பட்ட வீரர்களினுடைய உடம்புகளிலிருந்து வழிந்த இரத்தத்தின். நதிகள் - ஆறுகள். பரந்தன - போர்க்களம் முழுவதும் பரவி ஓடின. இரத்தம் மிகுதியாக இருந்தமையினால் ஆற்றைப் போல ஓடின. குறை - தலைகள் வெட்டுப்பட்ட வீரர்களினுடைய குறைந்த. உடல் - உடம்புகளாகிய முண்டங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஓடி - போர்க்களத்தில் ஓடி. அலைந்தன - அலைந்து கொண்டிருந்தன. பொரு - போர் செய்த. படை - ஆயுதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அறு - அற்ற. துணி - துண்டங்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிந்தின - தரையில் சிந்தி விழுந்தன. புடை - பக்கத்தில். சொரி - சொரிந்த. குடர் - குடல்களோடு; ஒருமை பன்மை மயக்கம். உடல் - வெட்டுப்பட்ட வீரர்களுடைய உடம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். பம்பின - எங்கும் பரவி விழுந்திருந்தன. வெரு - அச்சம். வர - உண்டாகு மாறு. எருவை - பிணந்தின்னிக் கழுகுகள்; ஒருமை பன்மை மயக்கம். நெருங்கின - போர்க்களத்தில் நெருங்கிப் பறந்து கொண்டிருந்தன. விசி - கட்டுதல். அறு - அற்ற. துடிகள் - உடுக்குக்கள். புரண்டன - தரையில் புரண்டு கொண்டிருந்தன.

பிறகு உள்ள 20-அம் பாடலின் கருத்து வருமாறு:

'போர்க்களத்தில் நீளமான இடத்தில் வேகமாக நடந்து எதிர்ப்பட்ட இரண்டு வீரர்களில் ஒரு வீரனுடைய தொடர்ந்து சென்ற கால்களும், இரண்டு தொடைகளும் வெட்டுப்பட்டு அற்றுப் போக, முன்னால் நடக்கும் இடசாரி வலசாரியாக நடந்து முறைப்படி வெட்டி விட்டான்; வெட்டுப்பட்ட ஒரு வீரனுடைய வாளோடு தரையில் விழும் உடம்பு, வென்ற வீரனுடைய மார்பில் அறும்படி முன்னால் வாளை எறியச் சிங்கத்தைப்போல அந்த வீரனும் இறந்து போனான். இவ்வாறு அந்தப் போர்க்களத்தில் எந்த இடங்களிலும் பல வீரர்கள் இருப்பவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்தொடர்
தாளிரு தொடைஅற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்;
வாளொடு விழும்உடல் வென்றவன் மார்பிடை அறமுன் எறிந்திட
ஆளியின் அவனும் மறிந்தனன்; ஆயினர் பலருளர் எங்கணும்."

நீள் - அந்தப் போர்க்களத்தில் உள்ள நீளமான. இடை - இடத்தில். முடுகி - வேகமாக. நடந்து எதிர் - நடந்து எதிர்ப்பட்ட; எதிரில் வந்த. நேர் - நேரில் சந்தித்து. இருவரில் - இரண்டு வீரர்களுக்குள். ஒருவன் - ஒரு வீரன். தொடர் - தொடர்ந்து சென்ற. தாள் - கால்களும்; ஒருமை பன்மை மயக்கம். இரு - இரண்டு. தொடை - தொடைகளும்; ஒருமை பன்மை மயக்கம். அற - வெட்டுப்பட்டு அற்றுப் போக. முன் - முன்னால். பெயர் - நடக்கும். சாரிகை - இடசாரி வலசாரியாக நடந்து. முறைமை - முறைப்படி. தடிந்தனன் - வெட்டி விட்டான். வாளொடு - தான் கையில் பிடித்திருந்த வாளாயுதத்தோடு. விழும் - தரையில் விழும். உடல் - ஒரு வீரனுடைய உடம்பு. வென்றவன் - வென்ற வீரனுடைய. மார்பிடை - மார்பில். அற - அறும்படி. முன்னால் - மன்ல். எறிந்திட - வாளை வீச. ஆளியின் -

சிங்கத்தைப் போல. அவனும் - வாளால் வெட்டுப்பட்ட அந்த வீரனும். மறிந்தனன் - இறந்து தரையில் விழுந்தான். எங்கணும் - போர்க்களத்தில் எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். கணும்: இடைக்குறை. பலர் - பல வீரர்கள். உளர் - இருப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம்; இடைக்குறை. ஆயினர் - ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 21-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'கூர்மையான நுனியைக் கொண்ட வேல்களை எடுத்துக் கொண்டு ஒரு வீரரோடு மற்றொரு வீரர் மோதிக் கொண்டார்; சேர்ந்து முன்னால் உருவி எடுத்த கேடயங்களோடு சந்திக்கும் வீரர்களுடைய மார்புகளினூடு உருவிச் செல்லும் வண்ணம் பலத்தோடு நேரில் படுமாறு எதிருக்கு எதிரில் ஈட்டிகளால் குத்தினார்கள்; பல வீரர் களுடைய அருமையான உயிர்கள் போகவும், அவ்வாறு தங்களுடைய உயிர்கள் போகாமல் நின்று கொண்டிருந்த வீரர்கள் வீரத்தில் இரண்டு கட்சிக்காரர்களும் ஒத்து இருந்த பான்மையால் போரில் கொலை புரியும் ஆயுதங்களைக் கொண்டு அளப்பவர்களைப் போல் இருந்த அவர்கள் அளவு இல்லாதவர்கள் இறந்து விழுந்தார்கள்.' பாடல் வருமாறு:

"கூர்முனை அயில்கொடு முட்டினர்; கூடிமுன் உருவிய தட்டுடன்
நேருரம் உருவ உரப்புடன் நேர்பட எதிரெதிர் குத்தினர்;
ஆருயிர் கழியவும் நிற்பவர் ஆண்மையில் இருவரும் ஒத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவர் அளவிலர் பட்டனர்."

கூர் - கூர்மையான, முனை - நுனிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அயில் - வேலாயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். கொடு - தங்களுடைய கைகளில் எடுத்துக் கொண்டு. முட்டினர் - ஒரு கட்சியில் உள்ள

வீரர்கள் எதிர்க் கட்சியில் இருந்த வீரர்களை மோதினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூடி - அந்தப் போர்க்களத்துக்கு வந்து சேர்ந்து. முன் - முன்பு. உருவிய - உருவி எடுத்த. தட்டுடன் - கேடயங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். நேர் - எதிர்ப்பட்ட. உரம் - எதிர்க் கட்சியில் உள்ள வீரர்களுடைய மார்புகளை; ஒருமை பன்மை மயக்கம். உருவ - ஊடுருவிச் செல்லுமாறு. உரப்புடன் - பலத்தோடு. நேர்பட - நேரில் படுமாறு. எதிர் எதிர் - எதிருக்கு எதிரில். குத்தினர் - ஈட்டிகளால் குத்தினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர் உயிர் - சில வீரர்களுடைய அருமையான உயிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கழியவும் - போகவும். நிற்பவர் - அவ்வாறு தங்களுடைய உயிர்கள் போகாமல் நின்று கொண்டிருந்த வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆண்மையில் - வீரத்தில். இருவரும் - இரண்டு கட்சிக்காரர்களும். ஒத்தமை - ஒத்து இருந்தமையால். போர் - யுத்தத்தில். அடு - கொலை புரியும். படை - ஆயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். கொடு - கொண்டு. அளப்பவர் - எதிர்க்கட்சி வீரர்களுடைய ஆற்றலை அளந்து பார்ப்பவர்களை; ஒருமை பன்மை மயக்கம். போல்பவர் - போல இருந்த வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அளவு இலர் - அளவு இல்லாத பேர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இலர்: இடைக்குறை. பட்டனர் - இறந்து விழுந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 22-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தோற்றப் பொலிவைப் பெற்ற தங்களுடைய வில்லாயுதங்கள் வளையும் வண்ணம் எதிர்த்துப் போரிட்ட வீரர்கள் புற்றில் வாழும் பாம்புகளைப் போன்ற அம்புகள் தங்கள்மேற் படவும், தாங்கள் கைகளில் ஏந்தியிருந்த வில் என்னும் ஆயுதங்கள் துண்டு படவும் அவர்கள் நின்று

கொண்டிருக்கவில்லை; வெற்றியைக் கொள்ளும் உடை வாட்களை வீசினார்கள்; நிறைவுபெற அமைந்த பெரிய செல்வம் இல்லாமலும் தாங்கள் புரிய முற்பட்ட கொடை நிலையாக நிற்க, தங்களுக்கு உள்ள பண்டங்களை இரவலர்களுக்கு வழங்கிய நற்பண்பை உடைய வள்ளல்களை, முட்களைப் போன்ற கொடிய வீரர்கள் சிலர் ஒத்து விளங்கினார்கள்.' பாடல் வருமாறு:

"பொற்சிலை வளைய எதிர்ந்தவர் புற்றர வனைய சரம்பட
விற்படை துணியவும் நின்றிலர், வெற்றிகொள் சுரிகை வழங்கினர்;
முற்றிய பெருவளன் இன்றியும் முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன உதவிய பண்பினர் ஒத்தனர் உளர்சில கண்டகர்."

பொன் - தோற்றப் பொலிவைப் பெற்ற. சிலை - தங்களுடைய வில்லாயுதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வளைய - வளையும் வண்ணம். எதிர்ந்தவர் - எதிர்த்துப் போரிட்ட வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். புற்று - புற்றில் வாழும். அரவு - பாம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். அனைய - போன்ற. சரம் - அம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். பட - தங்கள்மேற் படவும். வில்படை - தாங்கள் கைகளில் ஏந்திக் கொண்டிருந்த வில் என்னும் ஆயுதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். துணியவும் - துண்டுகளாகப் போகவும். நின்றிலர் - அவர்கள் நின்று கொண்டிருக்கவில்லை. வெற்றி கொள் - வெற்றியைக் கொள்ளும். சுரிகை - தங்களுடைய உடை வாட்களை; ஒருமை பன்மை மயக்கம். வழங்கினர் - வீசினார்கள்; ஒருமை பன்மை மயக்கம். முற்றிய - நிறைவுபெற அமைந்த. பெரு - பெரிய. வளன் - செல்வம். இன்றியும் - இல்லாமலும். முற்படு - தாங்கள் புரிய முற்பட்ட. கொடை - ஈகை. நிலை நின்றிட - நிலையாக நிற்க. உற்றன - தங்களிடம் உள்ள பண்டங்களை. உதவிய - இரவலர் களுக்கு

வழங்கிய. பண்பினர் - நற்பண்பை உடைய வள்ளல்களை; ஒருமை பன்மை மயக்கம். சில கண்டகர் - சில முட்களைப் போன்ற கொடிய வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒத்தனர் - ஒத்து இருப்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். உளர் - இருக்கிறார்கள்; இடைக்குறை. வள்ளல்களை ஒத்தனர் என்க.

பிறகு வரும் 23-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொலை செய்வதை உடைய போர்க்களத்தில் வீரர்கள் இறந்து போனார்கள்; அவர்களுடைய முகங்கள் உயிரோடு இருக்கின்றன என்று எண்ணித் தங்களிடம் உள்ள பறப்பதற்குரிய சிறகுகள் அமைந்த கரிய காக்கைகள் பரவிப் பறந்தன; சுழல் அலையாக இருந்தன; அவை அவ்வாறு சேர்ந்ததனால் ஒளியை வீசும் கண்களில் உள்ள கரிய மணிகள் இரும்பு வேலையைப் புரியும் தொழிலாளர் களாகிய கொல்லர்களினுடைய உலைக் கூடத்தில் முகங்களிற் பொதிந்து பக்கத்தில் நெருங்கிய கரிகளினிடை யில் தங்கியுள்ள புகையை வெளிவிடுகின்ற நெருப்பை ஒத்து விளங்கின.' பாடல் வருமாறு:

"அடல்முனை மறவர் மடிந்தவர் அவர்முகம் உயிருள என்றுறு
பட்சிறை சுலவு கருங்கொடி பிடர்வன சுழல்வன துன்றலில்
விடுசுடர் விழிகள் இரும்புசெய் வினைஞர்தம் உலையின்
முகம்பொதி
புடைமிடை கரியிடை தங்கிய புகைவிடு தழலை நிகர்த்தன."

அடல் - கொலை செய்வதைப் பெற்ற, முனை - போர்க்களத்தில். மறவர் - வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மடிந்தவர் - இறந்தவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவர் - அவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். முகம் - முகங்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

உயிர் - உயிர்களை; ஒருமை பன்மை மயக்கம். உள - பெற்றவை; இடைக்குறை. என்று - என எண்ணி. உறு - தங்களிடம் இருக்கும். படர் - பறப்பதற்குரிய. சிறை - சிறகுகள்; ஒருமை பன்மை மயக்கம். சுலவு - அமைந்த. கரும் - கருமையான. கொடி - காக்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். படர்வன - பரவிப் பறந்தன. சுழல்வன - சுழன்று கொண்டு இருந்தன. துன்றலில் - அந்தக் காக்கைகள் அவ்வாறு சேர்ந்ததனால். விடுசுடர் - ஒளியை வீசும். விழிகள் - கண்களில் உள்ள கரிய மணிகள். இரும்பு - இரும்பு வேலையை; ஆகு பெயர். செய் - புரியும். வினைஞர்தம் - தொழிலாளர்களாகிய கொல்லர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. உலையின் - உலைக்கூடத்தில். முகம் - முன்னிடத்தில். பொதி - பொதிந்த. புடை - பக்கத்தில். மிடை - நெருங்கிய. கரியிடை - கரிகளின் நடுவில்; ஒருமை பன்மை மயக்கம். கரி - அடுப்புக்கரி. தங்கிய - தங்கி உள்ள. புகை - புகையை. விடு - வெளிவிடுகின்ற. தழலை - நெருப்பை. நிகர்த்தன - ஒத்து விளங்கின. காக்கைகளின் விழிமணிகள் நெருப்பைப் போல விளங்கின என்றபடி.

அடுத்து வரும் 24-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு;

'உறுதியான ஆயுதங்களை ஏந்திய வலிமையைப் பெற்ற வீரர்களினுடைய பிணங்கள் விழுந்து கிடக்கும் சிவந்த போர்க்களத்தில் முன்னால் சில வீரர்களுடைய உடம்புகளில் புண்கள் உண்டானபோது விழுகின்ற குடல்களைப் பொங்கி எழுந்த கழுகுகள் பருந்துகளோடு கவ்விக் கொண்டு எழுகின்ற சமயத்திலும் முன்னால் தாங்கள் புரியும் செயல்களிலிருந்து குறைதல் இல்லாதவர் களாகி அவர்கள் தலை சிறந்து நின்று கொண்டிருந்தார்கள்; அவர்கள் ஆகாயத்தில் பறந்து செல்கின்ற துவசங்களைப்

பறக்க விடுகின்றவர்களும் பண்களைப் பாடுகின்றவர் களும் ஆகிய வித்தியாதரர்களினுடைய புதல்வர்களை வென்று விட்டார்கள்.' பாடல் வருமாறு:

"திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன்சிலர்
புண்படு வழிசொரி யும்குடர் பொங்கிய கழுகு பருந்தொடு
கொண்டெழு பொழுதினும் முன்செயல் குன்றுதல் இலர்தலை நின்றனர்
விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சையர் குமரரை வென்றனர்."

திண் - உறுதியான. படை - வாள், வேல், கேடயம் முதலிய ஆயுதங்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வயவர் - வலிமையைப் பெற்ற வீரர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிணம் - பிணங்கள்; ஒருமை பன்மை மயக்கம். படு - விழுந்து கிடக்கும். செம் - இரத்தத்தால் சிவந்த. களமதனிடை - போர்க்களத்தில். அது: பகுதிப் பொருள் விகுதி. முன் - முன்னால். சிலர் - சில வீரர்களினுடைய. புண் - உடம்புகளில் புண்கள்; ஒருமை பன்மை மயக்கம். படுவழி - உண்டானபோது. சொரியும் - தரையில் விழுகின்ற. குடர் - அவர்களுடைய குடல்களை; ஒருமை பன்மை மயக்கம். பொங்கிய - பொங்கி எழுந்த. கழுகு - பிணந்தின்னிக் கழுகுகள்; ஒருமை பன்மை மயக்கம். பருந்தொடு - பருந்துகளோடு; ஒருமை பன்மை மயக்கம். கொண்டு - தங்கள் அலகுகளால் கவ்விக் கொண்டு. எழு - மேலே எழுந்து பறக்கும். பொழுதினும் - சமயத்திலும். முன் - முன்னால். செயல் - தாங்கள் புரிந்த செயல்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். குன்றுதல் - குறைதல். இலர் - இல்லாதவர்களாகி; முற்றெச்சம். தலை நின்றனர் - தலை சிறந்து நின்று கொண்டிருந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். விண் - அவர்கள் ஆகாயத்தில். படர் - பறந்து செல்கின்ற. கொடி விடு - துவசத்தைப் பறக்கவிடும். பண் -

இராகங்களோடு கூடிய பாடல்களின்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். பயில் - பாடுகின்ற. விஞ்சையர் - வித்தியாதரர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குமரரை - புதல்வர்களை; ஒருமை பன்மை மயக்கம். வென்றனர் - வென்று விட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். தங்களுடைய குடல்களைக் கழுகுகளும் பருந்துகளும் கவ்விக் கொண்டு பறந்தபோதும் அந்த வீரர்கள் மகிழ்ச்சியோடே இருந்தார்கள் என்றபடி.

அடுத்து வரும் 25-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இத்தகைய போர்க்களத்தில் நடந்த கொடிய யுத்தத்தில் இரண்டு கட்சிகளையும் சார்ந்த சேனையில் இருந்த வாளாயுதங்களை ஏந்திய வீரர்கள் கொடிய போர்க்களத்தில் இறந்து போன பிறகு, இறந்து போகாமல் எஞ்சி உயிரோடு இருந்த, தம்முடைய மற்றப் பல சேனை வீரர்கள் பின்னால் வரத் தாம் முன்னால் பகைவர்கள் உள்ள போர்க்களத்தில் ஏனாதி நாத நாயனார் சினம் மூண்டு எழுந்தார்.' பாடல் வருமாறு:

"இம்முனைய வெம்போரில் இருபடையின் வாள்வீரர்
வெம்முனையில் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாம்முன்பு
தெம்முனையில் ஏனாதி நாதர்செயிர்த் தெழுந்தார்."

இம்முனைய - இத்தகைய போர்க்களத்தில் நடந்த. வெம் - கொடிய. போரில் - யுத்தத்தில். இரு - படையின் - ஏனாதி நாத நாயனாருடைய சேனையிலும் அதிசூரனுடைய சேனையிலும் போர் புரிந்த. படை: ஒருமை பன்மை மயக்கம். வாள் - வாளாயுதங்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வீரர் - வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெம் - கொடிய. முனையில் - போர்க்களத்தில். வீடிய - இறந்து

போன. பின் - பிறகு. வீடாது - இறந்து போகாமல். மிக்கு - எஞ்சி. ஒழிந்த - நின்றிருந்த. 'தம்முடைய' என்றது 'ஏனாதி நாயனாருடைய' என்பதை. பல் - பல. படைஞர் - சேனை வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பின் ஆக - தமக்குப் பின்னால் வர. த்: சந்தி. 'தாம்' என்றது ஏனாதி நாத நாயனாரை. முன்பு - அவர்களுக்கு முன்னால். தெம் - பகைவர்கள் உள்ள. முனையில் - போர்க்களத்தில். ஏனாதி நாதர் - ஏனாதி நாத நாயனார். செயிர்த்து எழுந்தார் - சினம் மூண்டு எழுந்தார்.

அடுத்து வரும் 26-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொடிய கோபம் கொண்ட வீரர்கள் ஏந்திய வாளாயுதங்கள் நெருப்பைக் கக்க, வீரத்துக்கு அடையாளமாக வீரர்கள் தங்களுடைய கால்களில் பூண்ட வெற்றிக் கழல்கள் முழங்க, ஆலகாலவிடத்தை அணிந்த திருக்கழுத்தைப் பெற்றவராகிய சிவபெருமானாருக்குப் பக்தராகிய ஏனாதி நாத நானார் தாம் பகைவர்களை எதிர்த்துப் போர் புரிந்த போர்க்களத்தில் இறந்து போகாமல் மிஞ்சித் தமக்கு எதிரில் நின்று கொண்டிருந்த பகைவர்கள் போரிடும் போர்க்களத்தில் வேலாயுதங்களையே ஏர்களாகக் கொண்டு போரிடுதலாகிய உழவைப் புரியும் வீரர்களினுடைய தலைகளையும், தோள்களினுடைய வலிமையையும், கால்களினுடைய வலிமையையும் தாம் வெட்டிப் போக்கினார்.' பாடல் வருமாறு:

"வெஞ்சினவாள் தீஉமிழ வீரக் கழல்கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாம்எதிர்ந்த நாட்பின்கண்
எஞ்சிஎதிர் நின்ற இகல்முனையில் வேலுழவர்
தஞ்சிரமும் தோளுரமும் தாளுரமும் தாம்துணித்தார்."

வெம் - கொடிய. சின் - கோபம் மூண்ட வீரர்கள் ஏந்திய. வாள் - வாளாயுதங்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

தீ - நெருப்பை. உமிழ் - கக்க. வீர - வீரத்தைக் காட்டும் அடையாளமாகிய. க்: சந்தி. கழல் - வீரர்கள் தங்களுடைய கால்களில் பூண்ட வெற்றிக் கழல்கள்; ஒருமை பன்மை மயக்கம். கலிப்ப - முழங்க. நஞ்சு - ஆலகால விடத்தை. அணி - அணிந்த. கண்டர்க்கு - திருக்கழுத்தைப் பெற்ற சிவபெருமானாருக்கு. அன்பர் தாம் - பக்தராகிய ஏனாதி நாத நாயனார். தாம்: அசைநிலை. எதிர்ந்த - பகைவர்களை எதிர்த்துப் போர் புரிந்த. நாட்பின்கண் - போர்க்களத்தில். எஞ்சி - இறந்து போகாமல் மிஞ்சி. எதிர் - தமக்கு எதிரில். நின்ற - நின்று கொண்டிருந்த. இகல் - பகைமையை வெளிப்படுத்தும். முனையில் - போர்க்களத்தில். வேல் - வேலாயுதங்களையே ஏராகக் கொண்டு; ஒருமை பன்மை மயக்கம். உழவர் - போரிடுதலாகிய உழவைச் செய்யும் வீரர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. சிரமும் - தலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். தோள் - தோள்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். உரமும் - வலிமையையும். தாள் - கால்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். உரமும் - வலிமையையும். 'தாம்' என்றது ஏனாதி நாத நாயனாரை. துணித்தார் - வெட்டிப் போக்கினார்.

பிறகு வரும் 27-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'போரிடுவதில் ஈடுபட்டவர்கள் யாவரும் எதிர்க் கட்சியில் உள்ள ஒப்பற்ற வீரர்கள் ஓச்சிய வாளாயுதங்களால் கொலை செய்யப்பட்டார்கள்; பகைவர்களோடு மோதாத வீரர்கள் கொலை செய்யும் போர்க்களத்தை விட்டு அகன்று நிலையாக உண்டான உண்மையான உணர்ச்சியாகிய ஞானம் உண்டான சமயத்தில் அலைத்தலை உடைய ஆசை முதலிய குற்றங்களைப் போல ஆனார்கள்.' பாடல் வருமாறு:

''தலைப்பட்டார் எல்லாரும் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார்; முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வம்முதற் குற்றம்போல் ஆயினார்.''

தலைப்பட்டார் - போரிடுவதில் ஈடுபட்ட வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாரும் - யாவரும். தனி - எதிர்க் கட்சியில் உள்ள ஒப்பற்ற. வீரர் - வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாளில் - ஒச்சிய வாளாயுதங்களால்; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். கொலைப்பட்டார் - கொலை செய்யப் பட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். முட்டாதார் - பகைவர்களோடு மோதாத வீரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கொல் - கொலை செய்யும். களத்தை - போர்க்களத்தை. விட்டு - விட்டு அகன்று. நிலைப்பட்ட - நிலையாக உண்டான. மெய் - உண்மையான; 'உண்மைப் பொருளை உணர்ந்த' எனலும் ஆம். உணர்வு - உணர்ச்சியாகிய ஞானம். நேர்பட்ட - உண்டான. போதில் - சமயத்தில். அலைப்பட்ட - அலைத்தலை உடைய. ஆர்வம் - ஆசை. முதல் - முதலாகிய. குற்றம்போல் - குற்றங்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: காமம், வெகுளி, மயக்கம் என்பன. ஆயினார் - ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம். போர்க்களத்தை விட்டு ஓடிப்போன வீரர்கள் காமம் முதலிய குற்றங்களைப் போலப் பழிக்கு ஆளானார்கள் என்பது கருத்து.

பிறகு உள்ள 28-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இத்தகைய நிலையைப் பெற்ற கொடிய போர்க்களத்தில் பகைவர்களை எதிர்த்துத் தோற்றுப் போனதால் உண்டான அவமானத்தினால் தன்னுடைய பல சேனை வீரர்கள் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த

*வீரர்களை அழைத்துக் கொண்டு, மின்னலைப் போல ஒளியை வீசும் வாளாயுதங்களை வீசிக்கொண்டு, வெற்றியை உடைய வீரரும் கொடிய ஆண் புலியைப் போன்றவருமாகிய ஏனாதி நாத நாயனாருக்கு முன்னால் போய் அதிசூரன் நேரில் போர் புரிந்தான்.' பாடல் வருமாறு:*

"இந்நிலைய வெங்களத்தில் ஏற்றழிந்த மானத்தால்
தன்னுடைய பல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளி வாள்வீசி விறல்வீரர் வெம்புலியே
றன்னவர்தம் முன்சென் றதிசூரன் நேரடர்ந்தான்."

*இந்நிலைய - இத்தகைய நிலையைப் பெற்ற. வெம் - கொடிய. களத்தில் - போர்க்களத்தில். ஏற்று - பகைவர்களை எதிர்த்து. அழிந்த - தோற்றுப் போனதால் உண்டான. மானத்தால் - அவமானத்தால். 'தன்னுடைய' என்றது 'அதிசூரனுடைய' என்பதை. பல் - பல. படைஞர் - சேனை வீரர்களில்; ஒருமை பன்மை மயக்கம். மீண்டார் தமை - போர்க்களத்திலிருந்து திரும்பி வந்தவர்களை; ஒருமை பன்மை மயக்கம். தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. க்: சந்தி. கொண்டு - அழைத்துக் கொண்டு. மின் - மின்னிலைப் போல. ஒளி - ஒளியை வீசும். வாள் - வாளாயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். வீசி - வீசிக் கொண்டு. விறல் - வெற்றியைப் பெறும். வீரர் - வீரரும். வெம் - கொடிய. புலி ஏறு - ஆண் புலியை. அன்னவர்தம் - போன்றவரும் ஆகிய ஏனாதி நாத நாயனாருக்கு. தம்: அசைநிலை. முன் - முன்னால். சென்று - போய். அதிசூரன் - அதிசூரன் என்பவன். நேர் - நேரில். அடர்ந்தான் - போர் புரிந்தான்.*

*அடுத்து உள்ள 29-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

'அந்த ஏனாதி நாத நாயனாருடைய செயலுக்குரிய வடித்த வாளாயுதத்தின் பிரகாசத்தைப் பார்க்கும் பொருட்டுச் சுற்றி வரும் வட்டத்தில் காண முடியாத வகையில் கலந்துகொண்டு வாளாயுதத்தைப் பிடித்துக் கொண்டு போரிடும் சமயத்தில் அதிசூரன் தானும் தன்னுடைய சேனை வீரர்களும் உயிர்கள் போகாமல் பிழைத்துத் தோற்றப் பொலிவை உடைய விசாலமான தோள்களைப் பெற்ற வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்குத் தோல்வியடைந்து முதுகு காட்டி ஓடினான்.' பாடல் வருமாறு:

"மற்றவர்தம் செய்கை வடிவாள் ஒளிகாணச்
சுற்றிவரும் வட்டணையில் தோன்றா வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதில் தானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க் குடைந்து புறகிட்டான்."

மற்று: அசை நிலை. அவர்தம் - அந்த ஏனாதி நாத நாயனாருடைய. தம்: அசைநிலை. செய்கை - போர் செய்யும் செயலுக்குரிய. வடி - வடிக்கப் பெற்ற. வாள் - வாளாயுதத்தினுடைய. ஒளி - பிரகாசத்தை. காண - பார்க்கும் பொருட்டு. ச்: சந்தி. சுற்றிவரும் - போர்க்களத்தைச் சுற்றிக்கொண்டு வரும். வட்டணையில் - வட்டமான போக்கில். தோன்றா - பார்க்க முடியாத. வகை - விதத்தில். கலந்து - கலந்துகொண்டு. பற்றி வாளாயுதத்தைப் பிடித்துக் கொண்டு. அடர்க்கும் - போரிடும். பொழுதில் - சமயத்தில். 'தானும்' என்றது அதிசூரனை. படை - சேனை வீரர்களும்; ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம். பிழைத்து - உயிர்கள் போகாமல் தப்பிப் பிழைத்து. ப்: சந்தி. பொன் - தோற்றப் பொலிவைப் பெற்ற. தடம் - விசாலமான. தோள் - தோள்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வீரர்க்கு - வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு. உடைந்து - தோல்வியை அடைந்து. புறகிட்டான் - முதுகு காட்டி ஓடிப் போனான்.

அடுத்து வரும் 30-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு முதுகு காட்டி ஓடிப்போன அதிசூரன் யுத்தத்தில் அந்த ஏனாதி நாத நாயனாருக்குத் தோல்வியை அடைந்த அவமானம் மிகுதியாக மேலெழுந்து உண்டாகத் தரையில் படுப்பவன் கண்கள் மூடித் துயில் கொள்ளாத வனாகி தன்னால் ஆகவேண்டிய செயலை அந்த ஓர் இராத்திரி முழுதும் எண்ணிப் பார்த்து மனம் சுழன்று, ''இழிவுமிக்க வஞ்சகச் செயலால் அந்த ஏனாதி நாத நாயனாரை வென்று விடுவேன்'' என்று நினைத்தான்.' பாடல் வருமாறு:

''போன அதிசூரன் போரில் அவர்க்கழிந்த
மானம் மிகமீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெயல் ஓரிரவும் சிந்தித் தலமந்தே
'ஈனம்மிகு வஞ்சனையால் வெல்வன்.'என எண்ணினான்.''

போன - அவ்வாறு முதுகு காட்டி ஓடிப்போன. அதிசூரன் - அதிசூரன் என்பவன். போரில் - யுத்தத்தில். அவர்க்கு - அந்த ஏனாதி நாத நானாருக்கு. அழிந்த - தோல்வியை அடைந்த. மானம் - அவமானம். மிக - மிகுதியாக. மீது ஊர - மேலெழுந்து உண்டாக. மண் - தரையில். படுவான் - படுப்பவன். கண்படான் - தன்னுடைய கண்கள் மூடித் துயில் கொள்ளாதவனாகி; முற்றெச்சம். கண்: ஒருமை பன்மை மயக்கம். ஆன - செய்வதற்குரியதான. செயல் - செயலை. ஓர் இரவும் - அந்த ஓர் இராத்திரி முழுவதும். சிந்தித்து - எண்ணிப் பார்த்து. அலமந்து - தன்னுடைய மனம் சுழன்று. ஏ: அசைநிலை. ஈனம் - இழிவு. மிகு - மிக்க. வஞ்சனையால் - ஒரு வஞ்சகமான செயலால். வெல்வன் - ஏனாதி நாத நாயனாரை வென்று விடுவேன். என - என்று; இடைக்குறை. எண்ணினான் - நினைத்தான்.

அடுத்து வரும் 31-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நீண்டதாக அமையும் இரவு நேரம் விடியும் காலத்தில் கெட்டவனாகிய அதிசூரனும், "நாட்டில் வாழும் மக்களைக் கொலை செய்யாமல் நாம் இரண்டு பேர்களும் வேறான ஓரிடத்தில் வாளாயுதத்தால் பெறும் தாயபாகத்தைக் கொள்ளும் யுத்தத்தைப் புரிந்து எதிர்ப்பதற்கு வருவாயாக" என்று இதழ்கள் நிரம்பிய மலர்களைக் கட்டிய மாலையை அணிந்த ஏனாதி நாத நாயனாருக்கு ஓர் ஆள்மூலம் கூறிப் போகுமாறு அனுப்பினான்.' பாடல் வருமாறு:

"சேட்டாரும் கங்குல் புலர்காலைத் தீயோனும்
'நாட்டாரைக் கொல்லாதே நாம்இருவேம் வேறிடத்து
வாட்டாயம் கொள்போர் மலைக்க வருக.'எனத்
தோட்டார்பூம் தாரார்க்குச் சொல்லிச் செலவிட்டான்."

சேட்டாரும் - நீண்டதாக அமையும். கங்குல் - இரவு நேரம். புலர் - விடியும். காலை - காலத்தில். த்: சந்தி. தீயோனும் - கெட்டவனாகிய அதிசூரனும். நாட்டாரை - இந்தச் சோழ நாட்டில் வாழும் மக்களை; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொல்லாது - கொலை செய்யாமல். ஏ: அசைநிலை. நாம் - யாம். இருவேம் - இரண்டு பேர்களும். வேறு - வேறான. இடத்து - ஓர் இடத்தில். வாள் - வாளாயுதத்தால் பெறும். தாயம் - தாயபாகத்தை. என்றது இறையிலி நிலம் முதலியவற்றை. கொள் - பெறும். போர் - யுத்தத்தை. மலைக்க - புரிந்து எதிர்ப்பதற்கு. வருக - வருவாயாக. என - என்று; இடைக்குறை. த்: சந்தி. தோட்டார் - இதழ்கள் நிரம்பிய. தோடு: ஒருமை பன்மை மயக்கம். பூம் - மலர்களைக் கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். தாரார்க்கு - மாலையை அணிந்திருக்கும் ஏனாதி நாத நாயனாருக்கு. ச்: சந்தி. சொல்லி - ஓர் ஆள் மூலம் கூறி.

ச்: சந்தி. செல - அந்த ஆளைப் போகுமாறு; இடைக்குறை. விட்டான் - அனுப்பினான்.

அடுத்து வரும் 32-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இவ்வண்ணம் அதிசூரன் ஓர் ஆள் மூலம் சொல்லி அனுப்பிய செய்தியைக் கேட்டவுடன் ஏனாதி நாத நாயனார், ''அவ்வண்ணம் புரிதல் அழகை உடையதே!'' என்று எண்ணி அதற்குச் சம்மதித்து, ''கையில் ஏந்திய வாளாயுதத்தினால் போர் விளையுமாறு செய்வதற்குத் தான் ஏற்றதென்று எண்ணும் அந்தப் போர்க்களத்திற்கு வெற்றியை அடையும் பொருட்டு வலிமையைப் பெற்ற அதிசூரன் வருவானாக.'' என்று எண்ணி அந்த ஏற்பாட்டை மேற்கொள்பவர் ஆனார் அந்த நாயனார்.' பாடல் வருமாறு:

''இவ்வாறு கேட்டலுமே ஏனாதி நாதனார்
'அவ்வாறு செய்தல் அழகி'தென அமைந்து
'கைவாள் அமர்விளைக்கத் தான்கருதும் அக்களத்தில்
வெல்வான் உரவோன் வருக'என மேற்கொள்வார்.''

இவ்வாறு - இவ்வண்ணம். கேட்டலும் - அதிசூரன் ஓர் ஆள் மூலம் சொல்லி அனுப்பிய செய்தியைக் கேட்டவுடன். ஏ: அசைநிலை. ஏனாதி நாதனார் - ஏனாதி நாத நாயனார். அவ்வாறு - அவ்வண்ணம். செய்தல் - புரிதல். அழகிது - அழகை உடையதே. என - என்று எண்ணி; இடைக்குறை. அமைந்து - அதற்குச் சம்மதித்து. கை - கையில் ஏந்திய. வாள் - வாளாயுதத்தினால். அமர் - போர். விளைக்க - விளையுமாறு செய்வதற்கு. த்: சந்தி. 'தான்' என்றது அதிசூரனை. கருதும் - ஏற்ற தென்று எண்ணும். அக்களத்தில் - அந்தப் போர்க் களத்திற்கு; உருபு மயக்கம். வெல்வான் - வெற்றியை அடையும் பொருட்டு. உரவோன் - வலிமையைப் பெற்ற. வருக - அதிசூரன் வருவானாக. என

- என்று எண்ணி; இடைக்குறை. மேற்கொள்வார் - ஏனாதி நாத நாயனார் அந்த ஏற்பாட்டை மேற்கொள்வார் ஆனார்.

பிறகு வரும் 33-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'ஏனாதி நாத நாயனார் தம்முடைய உறவினர்களில யாரும் தெரிந்து கொள்ளாத விதத்தில் ஒளியை வீசும் வாளாயுதத்தையும் தோற்றப் பொலிவையுடைய கேடகத்தையும் தாமே எடுத்துக் கொண்டு தம்முடைய திருமாளிகைக்கு வெளியில் வந்து அந்த அதிசூரன் கூறி வருமாறு குறிப்பிட்ட அந்தப் போர்க்களத்திற்குச் சென்று பகைவனாகிய அதிசூரன் வருகையை முன்னால் எதிர்பார்த்துக் கொண்டு தனியாக நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"சுற்றத்தார் யாரும் அறியா வகைசுடர்வாள்
பொற்பலகை யும்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த அக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார்."

சுற்றத்தார் - ஏனாதி நாத நாயனார் தம்முடைய உறவினர்களில்; ஒருமை பன்மை மயக்கம். யாரும் - ஆரும். அறியா - தெரிந்து கொள்ளாத. வகை - விதத்தில். சுடர் - ஒளியை வீசும். வாள் - வாளாயுதத்தையும். பொன் - தோற்றப் பொலிவைக் கொண்ட; 'தங்கத்தைப் பதித்த' எனலும் ஆம். பலகையும் - கேடகத்தையும். 'தாம்' என்றது ஏனாதி நாத நாயனாரை. ஏ: அசை நிலை. கொண்டு - தம்முடைய கைகளில் எடுத்துக் கொண்டு. புறம் - தம்முடைய திருமாளிகைக்கு வெளியில். போந்து - வந்து. மற்று: அசைநிலை. அவன் - அந்த அதிசூரன். முன் - முன்னால். சொல்லி - கூறி. வர - வருமாறு. க்: சந்தி. குறித்த - குறிப்பிட்ட. அக்களத்து - அந்தப் போர்க்களத்திற்கு. ஏ:

அசைநிலை. பற்றலனை - பகைவனாகிய அதிசூரனுடைய. முன் - முன்னால். வரவு - வருகையை. பார்த்து - எதிர்பார்த்துக் கொண்டு. த்: சந்தி. தனி - தனியாக. நின்றார் - நின்று கொண்டிருந்தார்.

அடுத்து உள்ள 34-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தீங்கான செயலைச் செய்வதற்கு எண்ணி ஏனாதி நாத நாயனாரைப் போர் செய்வதற்கு அழைத்த கெட்டவன், "விபூதியை இட்டுக் கொண்ட நெற்றிகளை உடைய மக்களை எந்த இடத்தில் கண்டாலும் அந்த இடத்தில் அந்த ஏனாதி நாத நாயனாரும் தீங்கான செயலைப் புரியமாட்டார்" என்ற செய்தியைத் தெரிந்து கொண்டவனாகிப் பக்குவமாக விபூதியைப் பூசிக் கொள்வதை முன்பு செய்து பழகாதவனாகிய அதிசூரன்.' பாடல் வருமாறு:

"தீங்கு குறித்தழைத்த தீயோன், 'திருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே எவ்விடத்தும்
ஆங்கவரும் தீங்கிழையார்' எனபதறிந் தானாய்ப்
பாங்கில் திருநீறு பண்டு பயிலாதான்."

இந்தப் பாடல் குளகம். தீங்கு - தீங்கான செயலை; என்றது கொலை செய்வதை. குறித்து - செய்வதற்கு எண்ணி. அழைத்த - ஏனாதி நாத நாயனாரைப் போர் செய்வதற்கு அழைத்த. தீயோன் - கெட்டவனாகிய அதிசூரன். திருநீறு - விபூதியை. தாங்கிய - இட்டுக் கொண்ட. நெற்றியினார் தங்களை - நெற்றிகளை உடைய பக்தர்களை. தம்: அசைநிலை. நெற்றி: ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை. எவ்விடத்தும் - எந்த இடத்தில் கண்டாலும். ஆங்கு - அந்த இடத்தில். அவரும் - அந்த ஏனாதி நாத நாயனாரும். தீங்கு - ஒரு துன்பத்தையும். இழையார் - புரிய மாட்டார். என்பது - என்ற செய்தியை. அறிந்தானாய் -

தெரிந்து கொண்டவனாகி. ப்: சந்தி. பாங்கில் - பக்குவத்தோடு; உருபு மயக்கம். திருநீறு - விபூதியை இட்டுக் கொள்வதை. பண்டு - முன்பு. பயிலாதான் - செய்து பழகாதவனாகிய அதிசூரன்.

அடுத்து வரும் 35-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வெண்மையான விபூதியைத் தன்னுடைய நெற்றியில் விளங்குமாறு வெளியில் இட்டுக்கொண்டு, உள் மனத்தில் வஞ்சகச் செயலாகிய இருட்டையும் தன்னோடு வைத்துக் கொண்டு, வெள்ளை நிறத்தைக் கொண்ட ஒளியை வீசும் வாளாயுதத்தையும், அழகிய கேடகத்தையும் தன்னுடைய கைகளில் எடுத்துக் கொண்டு, புண்ணியச் செயல்களைச் செய்திருக்கும் போர் வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்குத் தான் குறிப்பிட்டுக் கூறிய இடமாகிய போர்க்களத்துக்குள் அதிசூரன் நுழைந்தான்.' பாடல் வருமாறு:

''வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
வண்ணச் சுடர்வாள் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்னஇடம் புகுந்தான்.''

வெண் - வெண்மையான. நீறு - விபூதியை. நெற்றி - தன்னுடைய நெற்றியில். விரவ - விளங்குமாறு. ப்: சந்தி. புறம் - வெளியில். பூசி - இட்டுக்கொண்டு. உண்ணெஞ்சில் - தன்னுடைய மனத்துக்குள். வஞ்ச - வஞ்சகச் செயலாகிய; என்றது ஏனாதி நாத நாயனாரைக் கொலை செய்வதை. க்: சந்தி. கறுப்பும் - இருட்டையும். ''மனத்தினுட் கறுப்பு வைத்து.'' (மெய்ப்பொருள் நாயனார் புராணம், 7) என்று முன்பு வந்ததைக் காண்க. உடன் கொண்டு - தன்னோடு வைத்துக் கொண்டு. வண்ண - வெள்ளை நிறத்தைப் பெற்று. ச்: சந்தி. சுடர் - ஒளியை வீசும். வாள் - வாளாயுதத்தையும்.

மணி - அழகைப் பெற்ற. ப்: சந்தி. பலகை - கேடகத்தையும். கை - தன்னுடைய கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொண்டு - எடுத்துக் கொண்டு. புண்ணிய - புண்ணியச் செயல்களைச் செய்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. போர் வீரர்க்கு - யுத்த வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு. ச்: சந்தி. சொன்ன - தான் குறிப்பிட்டுக் கூறிய. இடம் - இடமாகிய போர்க்களத்துக்குள். புகுந்தான் - அதிசூரன் நுழைந்தான்.

பின்பு உள்ள 36-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வெற்றியைப் பெறும் சிங்கம் மாமிசத்தை உடைய விலங்கு வருவதை முன்னால் எதிர்பார்த்துக் கொண்டு நின்றாற் போல் நின்று கொண்டிருந்த ஏனாதி நாத நாயனாருடைய நிலையைப் பார்த்துத் தன்னுடைய நெற்றியில் போய் அணுகி எதிர்க்கும் வரைக்கும் உறுதியான கேடகத்தால் மறைத்துக் கொண்டு தன் முன்னால் நின்று கொண்டிருந்த ஒப்பற்ற வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு எதிரில் பாவத்தை ஆபரணமாகப் பூண்டிருந்த அதிசூரன் சென்று சேர்ந்தான்.' பாடல் வருமாறு:

"வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற் போல்நின்ற நிலைகண்டு தன்நெற்றி
சென்று கிடைப்பளவும் திண்பலகை யால்மறைத்தே
முன்தனிவீ ரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான்."

வென்றி - வெற்றியைப் பெறும். மடங்கல் - சிங்கம். விடக்கு - மாமிசத்தை உடைய விலங்கு; ஆகுபெயர். வர- வருவதை; வினையாலணையும் பெயர். முன் - முன்னால். பார்த்து - எதிர்பார்த்துக்கொண்டு. நின்றாற் போல் - நின்று கொண்டிருந்தாற்போல. நின்ற - நின்று கொண்டிருந்த. நிலை - ஏனாதி நாத நாயனாருடைய நிலையை. கண்டு -

பார்த்து. தன் - தன்னுடைய. நெற்றி - நெற்றியில். சென்று - போய். கிடைப்பளவும் - அணுகி எதிர்க்கும் வரைக்கும். திண் - உறுதியான. பலகையால் - கேடகத்தால். மறைத்து - மறைத்துக் கொண்டு. ஏ: அசைநிலை. முன் - முன்னால் நின்று கொண்டிருந்த. தனி - ஒப்பற்ற. வீரர்க்கு - வீரராகிய ஏனாதி நாத நாயனாருக்கு. எதிர் - எதிரில். ஏ: அசைநிலை. மறம் - பாவச் செயலையே. பூண்டான் - தனக்கு ஆபரணத்தைப் போலப் புனைந்து கொண்டிருந்த அதிசூரன். மூண்டான் - சென்று சேர்ந்தான்.

அடுத்து வரும் 37-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொலை செய்தலை உடைய இடபத்தையும் ஆண் சிங்கத்தையும் போல வந்து எதிர்த்த அதிசூரனைக் கொலை புரியும் சந்தர்ப்பத்தை அறிந்துகொண்டு தம்முடைய திருவடிகளைப் பெயர்த்து வைத்து நடக்கும் ஏனாதி நாத நாயனார் தம்முடைய பக்கத்தில் வந்த பகைவனாகிய அதிசூரன் தன்னுடைய நெற்றியை மறைத்துக் கொண்டிருந்த கேடகத்தை நெற்றியிலிருந்து வெளியே எடுக்க, இழிந்த வனாகிய அதிசூரனுடைய நெற்றியின்மேல் வெண்மை யான விபூதியைத் தாம் பார்த்தார்.' பாடல் வருமாறு:

"அடல்விடையே றென்ன அடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கும் ஏனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகைபுறம் போக்கக்
கடையவன்தன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாம்கண்டார்."

அடல் - கொலை செய்தலைப் பெற்ற. விடை - இடபத்தையும்; காளை மாட்டையும். ஏறு - ஆண் சிங்கத்தையும். என்ன - போல வந்து. அடர்த்தவனை - எதிர்த்த அதிசூரனை. க்: சந்தி. கொல்லும் - கொலை புரியும். இடை - சந்தர்ப்பத்தை. தெரிந்து - அறிந்து கொண்டு. தாள் -

தம்முடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பெயர்க்கும் - பெயர்த்து வைத்து நடக்கும். ஏனாதி நாதர் - ஏனாதி நாத நாயனார். புடை - தம்முடைய பக்கத்தில். பெயர்ந்த - தன்னுடைய கால்களைப் பெயர்த்து வைத்து நடந்து வந்த. மாற்றான் - பகைவனாகிய அதிசூரன். பலகை - தன்னுடைய நெற்றியை மறைத்துக் கொண்டிருந்த கேடகத்தை. புறம் - நெற்றியிலிருந்து வெளியில். போக்க - எடுக்க. க்: சந்தி. கடையவன்தன் - இழிந்தவனாகிய அதிசூரனுடைய. தன்: அசைநிலை. நெற்றியின்மேல் - நெற்றியின்மேல் இட்டுக் கொண்டிருக் கும். வெண் - வெண்மையான. நீறு - விபூதியை. 'தாம்' என்றது ஏனாதி நாத நாயனாரை. கண்டார் - பார்த்தார்.

பிறகு உள்ள 38-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அதிசூரனுடைய நெற்றியில் விபூதியை ஏனாதி நாத நாயனார் பார்த்த சமயத்தில், "ஐயோ! முன் நாட்களில் இவருடைய நெற்றியின்மேல் பாராத வெண்மையான விபூதியினுடைய தோற்றப் பொலிவை இவருடைய நெற்றியின்மேல் இப்போது பார்த்தேன்; வேறு இனிமேல் அடியேன் செய்வதற்கு என்ன இருக்கிறது? இவர் தேவர்களினுடைய தலைவனாகிய சிவபெருமானுடைய சீர்த்தியைப் பெற்ற அடியவர் ஆகிவிட்டார்" எனத் தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணிக் கொண்டு, "இவருடைய கொள்கையாகிய குறித்த எண்ணத்தின்படி அடியேன் நின்று கொண்டிருப்பேன்." என எண்ணி.' பாடல் வருமாறு:

"கண்டபொழு தே,'கெட்டேன்! முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன்; வேறினிஎன்?
அண்டர்பிரான் சீரடியார் ஆயினார்' என்றுமனம்
கொண்'டிவர்தம் கொள்கைக்குறி வழிநிற்பேன்.' என்று."

இந்தப் பாடல் குளகம். கண்ட - அவ்வாறு அதிசூரனுடைய நெற்றியில் விபூதியை ஏனாதி நாத நாயனார் பார்த்த. பொழுது - சமயத்தில். ஏ: அசைநிலை. கெட்டேன் - ஐயோ! முன்பு - முன் நாட்களில். இவர்மேல் - இவருடைய நெற்றியின்மேல். காணாத - அடியேன் பாராத. வெண் - வெண்மையான. திருநீற்றின் - விபூதியினுடைய. பொலிவு - தோற்றப் பொலிவை. மேல் - இவருடைய நெற்றியின்மேல். கண்டேன் - இப்போது பார்த்தேன். வேறு - வேறாக. இனி - இனிமேல். என் - அடியேன் செய்வதற்கு என்ன இருக்கிறது. அண்டர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவனாகிய சிவபெருமானுடைய. சீர் - சீர்த்தியைப் பெற்ற. அடியார் - அடியவர். ஆயினார் - ஆகிவிட்டார். என்று - என. மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். கொண்டு - எண்ணிக்கொண்டு. இவர்தம் - இவருடைய. தம்: அசைநிலை. கொள்கை - கொள்கையாகிய. க்: சந்தி. குறிவழி - குறித்த எண்ணத்தின்படி. நிற்பேன் - அடியேன் நின்று கொண்டிருப்பேன். என்று - என எண்ணி.

பிறகு வரும் 39-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஏனாதி நாத நாயனார் தம்முடைய கைகளில் ஏந்திக் கொண்டிருந்த வாளாயுதத்தோடு கேடகத்தையும் போக்கிவிட முதலில் எண்ணிப் பிறகு அவ்வாறு அந்தச் செயலைப் புரியாதவராகி, ''ஆயுதம் இல்லாதவரைக் கொலை செய்து விட்டார் என்று பிறர் கூறும் தீமையாகிய பழி இவருக்கு வராமல் இருக்க வேண்டும்'' என்று எண்ணிக் கருமையான கேடகத்தை எண்ணெயைத் தடவிய வாளாயுதத்தோடு நின்று எதிர்த்து, நேரில் நிற்பவரைப் போல அதிசூரனுக்கு நேரில் நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"கைவாளுடன் பலகை நீக்கக் கருதிஅது
செய்யார், 'நிராயுதரைக் கொன்றார் எனும்தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்' கென் றிரும்பலகை
நெய்வா ளுடன்அடர்த்து நேர்வார்போல் நேர்நின்றார்."

*கை - ஏனாதி நாத நாயனார் தம்முடைய கைகளில் ஏந்திக் கொண்டிருந்த; ஒருமை பன்மை மயக்கம். வாளுடன் - வாளாயுதத்தோடு. பலகை - கேடகத்தையும். நீக்க - போக்கிவிட. க்: சந்தி. கருதி - முதலில் எண்ணி. அது - பிறகு அவ்வாறு அந்தச் செயலை. செய்யார் - புரியாதவராகி; முற்றெச்சம். நிராயுதரை - ஓர் ஆயுதமும் இல்லாதவரை. க்: சந்தி. கொன்றார் - கொலை செய்து விட்டார். எனும் - என்று பிறர் கூறும்; இடைக்குறை. தீமை - தீமையாகிய பழி. இவர்க்கு - இந்த அதிசூரருக்கு. எய்தாமை வேண்டும் - வராமல் இருக்கவேண்டும். என்று - என எண்ணி. இரும் - கருமையான. பலகை - கேடகத்தை. நெய் - எண்ணெயைத் தடவிய. வாளுடன் - வாளாயுதத்தோடு. அடர்த்து - நின்று எதிர்த்து. நேர்வார் போல் - நேரில் நிற்பவரைப் போல. நேர் - அதிசூரனுக்கு நேரில். நின்றார் - நின்று கொண்டிருந்தார்.*

*பிறகு வரும் 40-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'அவ்வாறு அந்த இடத்தில் நின்று கொண்டிருந்த திருத்தொண்டராகிய ஏனாதி நாத நாயனாருடைய திருவுள்ளக் கருத்தை யார் தெரிந்து கொள்வார்? அவருக்கு முன்பு நின்று கொண்டிருந்த பாதகனாகிய அதிசூரனும் தன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றிக் கொண்டான். இவ்வாறு நின்று கொண்டிருந்த அந்த நாயனாருடைய இயல்பை அறிபவராகி, அந்த நாயனாருக்குத் தம்முடைய திருவருளை வழங்க, மின்னலைப் போல இருந்த சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையில் பெற்றவராகிய*

சிவபெருமானார் தாமே வெளிப்பட்டு நின்றருளினார்.' பாடல் வருமாறு:

> "அந்நின்ற தொண்டர் திருவுள்ளம் ஆர்அறிவார்?
> முன்நின்ற பாதகனும் தன்கருத்தே முற்றுவித்தான்;
> இந்நின்ற தன்மை அறிவார் அவர்க்கருள
> மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார்."

அந்நின்ற - அவ்வாறு அந்த இடத்தில் நின்று கொண்டிருந்த. தொண்டர் - திருத் தொண்டராகிய ஏனாதி நாத நாயனாருடைய. திருவுள்ளம் - திருவுள்ளக் கருத்தை; ஆகு பெயர். ஆர் - யார். அறிவார் - தெரிந்து கொள்வார்; யாராலும் தெரிந்து கொள்ள முடியாது என்பது கருத்து. முன் - அந்த நாயனாருக்கு முன்னால். நின்ற - நின்று கொண்டிருந்த. பாதகனும் - பாவச் செயல்களைப் புரிபவனாகிய அதிசூரனும். தன் - தன்னுடைய. கருத்து - எண்ணத்தை. ஏ: அசைநிலை. முற்றுவித்தான் - நிறைவேற்றிக் கொண்டான்; ஏனாதி நாத நாயனாரைக் கொலை செய்து விட்டான் என்பதைத் தம்முடைய வாயால் சொல்ல விரும்பாமல் சேக்கிழார் இவ்வாறு கூறினார். இவ்வாறே மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில், "பத்திரம் வாங்கித் தான் முன் நினைந்த அப்பரிசே செய்ய" என்று பாடியிருக்கிறார். இந்நின்ற - இவ்வாறு நின்று கொண்டிருந்த. தன்மை - அந்த நாயனாருடைய இயல்பை. அறிவார் - அறிபவராகி; முற்றெச்சம். அவர்க்கு - அந்த நாயனாருக்கு. அருள - தம்முடைய திருவருளை வழங்க. மின் - மின்னலைப் போல. நின்ற - நிலைத்து நின்றிருக்கும்; காலமயக்கம். செம் - சிவந்த. சடையார்தாமே - சடாபாரத்தைத் தம்முடைய தலையில் பெற்றவராகிய நடராஜப் பெருமானாரே. தாம்: அசை நிலை. வெளிநின்றார் - வெளிப்பட்டு நின்றருளினார்.

*பிறகு வரும் 41-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

*'இதற்குப்பின் இனிமேல் யாம் வாழ்த்துவதற்கு என்ன இருக்கிறது? தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய தலைவனாகிய நடராஜப் பெருமான் வழங்கிய திருவருளைப் பகைவர்களுடைய கைகளில் ஏந்திய வாளாயுதங்களால் பந்தபாசத்தை அறுத்தருளி இருப்பவராகிய ஏனாதி நாத நாயனாரை என்றைக்கும் தம்முடன் பிரியாமல் இருக்கும் அன்பை வழங்கியருளி, பொன்னால் ஆகிய வளையல்களைத் தன்னுடைய திருக்கரங்களில் அணிந்து கொண்டிருக்கும் சிவகாம சுந்தரியைத் தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்திருக்கும் நடராஜப் பெருமானார் பொன்னம்பலத்தை அடைந்தருளினார்.'' பாடல் வருமாறு:*

"மற்றினிநாம் போற்றுவதென்? வானோர்பிரான் அருளைப்
பற்றலர்தம் கைவாளால் பாசம்அறுத் தருளி
உற்றவரை என்றும்உடன் பிரியா அன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலம்அணைந்தார்."

*மற்று: அசைநிலை. இனி - இதற்குப் பின் இனிமேல். நாம் - யாம்; இது சேக்கிழார் கூற்று. போற்றுவது - வாழ்த்துவதற்கு. என் - என்ன இருக்கிறது. வானோர் - தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவனாகிய நடராஜப் பெருமான். அருளை - வழங்கிய திருவருளை. ப்: சந்தி. பற்றலர்தம் - பகைவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. கை - கைகளில் ஏந்தியிருந்த; ஒருமை பன்மை மயக்கம். வாளால் - வாளாயுதங்களால்; ஒருமை பன்மை மயக்கம். பாசம் அறுத்தருளி - பந்தபாசத்தை அறுத்தருளி. உற்ற வரை - இருப்பவராகிய ஏனாதி நாத நாயனாரை. என்றும் - என்றைக்கும். உடன் பிரியா -*

தம்மோடு பிரியாமல் இருக்கும். அன்பு - பக்தியை. அருளி - வழங்கியருளி. ப்: சந்தி. பொன் - தங்கத்தாற் செய்த. தொடியாள் - வளையல்களைத் தன்னுடைய திருக்கரங்களில் அணிந்த சிவகாம வல்லியை. தொடி: ஒருமை பன்மை மயக்கம். பாகனார் - தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்த நடராஜப் பெருமானார். பொன்னம்பலம் - சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் தங்கத்தை வேய்ந்த திருச்சிற்றம்பலத்தை. அணைந்தார் - அடைந்தருளினார்.

இந்தப் புராணத்தில் இறுதியில் உள்ள 42-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய தலைவனாகிய நடராஜப் பெருமான் அணிந்து கொள்ளும் விபூதியினுடைய சார்பைப் பெற்ற அடியேங்களுடைய தலைவராகிய ஏனாதி நாத நாயனாருடைய வீரக்கழலைப் பூண்ட திருவடிகளை வணங்கி, தேவர்களின் தலைவனாகிய திருக்காளத்தியில் கோயில் கொண்டிருளிய உத்தமராகிய காளஹஸ்தி ஈசுவரருக்குத் தம்முடைய கண்ணைப் பறித்து அப்பும் நம்முடைய தலைவராகிய கண்ணப்ப நாயனார் புரிந்தருளிய பணியை யாம் தெரிந்து கொண்டபடி இனிமேல் பாடத் தொடங்குவோம்.' பாடல் வருமாறு:

"தம்பெருமான் சாத்தும் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமான் ஏனாதி நாதர் கழல்இறைஞ்சி
உம்பர்பிரான் காளத்தி உத்தமர்க்குக் கண்அப்பும்
நம்பெருமான் செய்தபணி நாம்தெரிந்த வாறுரைப்பாம்."

இந்தப் பாடல் அடுத்து வரும் கண்ணப்ப நாயனார் புராணத்திற்குத் தோற்றுவாயாகச் சேக்கிழார் பாடியது. தம் - தம்முடைய. பெருமான் - தலைவனாகிய நடராஜப்

பெருமான். சாத்தும் - அணியும். திருநீற்று - விபூதியினுடைய. ச்: சந்தி. சார்புடைய - சார்பைப் பெற்ற. எம்பெருமான் - அடியேனுடைய தலைவனாகிய. ஏனாதி நாதர் - ஏனாதி நாத நாயனாருடைய. கழல் - வீரக்கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். இறைஞ்சி - வணங்கி. உம்பர் - தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவனாகிய. காளத்தி - சீகாளத்தியில் கோயில் கொண்டருளியிருக்கும். உத்தமர்க்கு - உத்தமராகிய காளஹஸ்தீசுவரருக்கு. க்: சந்தி. கண் - தம்முடைய கண்ணை. அப்பும் - பறித்து அப்பும். நம் - நம்முடைய. பெருமான் - தலைவனாகிய கண்ணப்பன். செய்த - புரிந்த. பணி - திருப்பணியை. நாம் - யாம். தெரிந்தவாறு - அறிந்தபடி. உரைப்பாம் - இனிமேல் பாடுவோம்.

உத்தமர்: ''ஒற்றி யூருறை உத்தமனே.'', ''எனக் கொன்றும் இரங்காத உத்தமனே.'', ''கடவூருறை உத்தமனே.'', ''உரைப்பனவே செய்தியால் எங்கள் உத்தமனே.'', ''உத்தமராய் நின்ற ஒருவனார்.'', ''உலகானானை உத்தமனை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''உத்தமன் அத்தன் உடையன்.'' என்று மாணிக்க வாசகரும், ''உத்தம சித்தன்.'', ''உத்தமன் சோதி.'' என்று திருமூலரும் பாடியருளியவற்றைக் காண்க.



# கண்ணப்ப நாயனார் புராணம்

பெரிய புராணத்தில் இலைமலிந்த சருக்கத்தில் 10-ஆவதாக வருவது கண்ணப்ப நாயனார் புராணம். அதில் உள்ள முதற்பாடலின் கருத்து வருமாறு:

'பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்குரிய பறக்கும் கோட்டைகள் ஆகிய மூன்று புரங்களை அழித்த, இடப வாகனத்தை ஓட்டுபவரும், வேதங்களின் உண்மையைப் பாதுகாப்பவரும் ஆகிய காளஹஸ்தீசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சீகாளத்தியில் இறைவனை வழிபட்ட கண்ணப்ப நாயனாருடைய அழகிய நாடு நாவலர்களாகிய கவிஞர்கள் புகழ்களை எடுத்துக் கூறி வாழ்த்தும் நல்ல வளங்கள் பெருகி நிலைத்து நின்ற நீர்ப்பூக்கள் மலர்கின்ற வாவியும், பூம்பொழிலும் சுற்றி விளங்கும் பொத்தப்பி நாடு என்று சான்றோர் கூறுவர்.' பாடல் வருமாறு:

"மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்பர்
நாவலர் புகழ்ந்து போற்றும் நல்வளம் பெருகி நின்ற
பூவலர் வாவி சோலை சூழ்ந்தபொத் தப்பி நாடு."

மேவலர் - பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன் மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய; ஒருமை பன்மை மயக்கம். புரங்கள் - பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை. செற்ற - அழித்த. விடையவர் - இடபவாகனத்தை ஓட்டுபவரும். வேத - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். வாய்மை - உண்மையை. க்: சந்தி. காவலர் - பாதுகாப்பவருமாகிய காளஹஸ்தீசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். திருக்காளத்தி - அழகிய காளஹஸ்தியில் இறைவனை வழிபட்ட. க்: சந்தி. கண்ணப்பர் - கண்ணப்ப நாயனார். திருநாடு - திருவவதாரம் செய்த அழகிய நாடு. நாவலர் - நாவலர்களாகிய கவிஞர்கள்; ஒருமை பன்மை மயக்கம். புகழ்ந்து - புகழ்களை வைத்துப் பாடி. போற்றும் - வாழ்த்தும். நல் - நல்ல. வளம் - செல்வ வளம், நன்மக்கள் வளம் முதலிய வளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பெருகி - பெருகி அமைந்து. நின்ற - நிலைத்து நின்ற. பூ - நீர்ப்பூக்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், குமுத மலர், செங்கழு நீர்ப்பூ, நீலோற்பல மலர் முதலியவை. அலர் - மலரும். வாவி - வாவியும். சோலை - பூம்பொழிலும். சூழ்ந்த - சுற்றி அமைந்த. பொத்தப்பி நாடு என்பர் - பொத்தப்பி நாடு என்று சான்றோர் கூறுவர்.

திருக்காளத்தி: இது ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள சிவத்தலம். இங்கே திருக்கோயில் கொண்டிருப்ப வருடைய திருநாமங்கள் காளத்தி நாதர், காளஹஸ்தீசுவரர், கணநாதர் என்பவை. அம்பிகை ஞானப்பூங்கோதை. தீர்த்தம் பொன் முகலியாறு. இதற்குச் சுவர்ணமுகி என்பது வட மொழித் திருநாமம். இந்தத் தலம் ரேணிகுண்டாவி லிருந்து

வடகிழக்கில் 15 மைல் தூரத்தில் உள்ளது. திருக்கோயில் பொன் முகலியாற்றின் கீழ்க்கரையில் காளத்தி மலையின் அடிவாரத்தில் உள்ளது. இது பஞ்ச பூதத்தலங்களில் ஒன்றாகிய வாயுத்தலம். காளத்தி நாதருடைய சந்நிதியில் எரியும் திருவிளக்குக்களில் ஒன்று காற்றினால் அலைக்கப்பட்டதைப் போல எப்போதும் அசைந்து கொண்டே இருக்கிறது. ஸ்ரீ காளஹஸ்தி என்பது சிலந்தி (ஸ்ரீ), பாம்பு (காளம்), யானை (ஹஸ்தி) என்னும் மூன்றும் வழிபட்டுப் பேறு பெற்றன என்பதைக் குறிக்கும். திருக்காளத்திமலையில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானை வழிபட்டுத் தம் கண்ணை இடந்து அப்பிய கண்ணப்ப நாயனார் ஆறு தினங்களில் முக்தியை அடைந்தார். காளத்திநாதரைப் பூசித்து வந்த சிவகோசரியார் என்னும் அந்தணர் இந்தத் தலத்தில் வழிபட்டு முக்தியை அடைந்தார். நக்கீரரும் வழிபட்டுப் பேறு பெற்றார்; அவர் பாடிய கயிலை பாதி காளத்தி பாதி அந்தாதி என்ற நூலில் இந்தத் தலத்தின் பெருமையைக் காணலாம். இந்தத் தலத்தைத் தட்சிண கைலாசம் என்பர்.

"சிலந்தி மாசுணம் மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டும்சிலை வேட்டுவன், கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினாற் பாட்டினாற் பானைக்
கலந்து முத்திசேர் தென்பெரும் கயிலையும் கண்டான்."

என்ற கந்தபுராணப் பாடல் இந்தத் தலத்தில் வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் இன்னார் என்பதைக் கூறுகிறது. இந்தத் தலத்தைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை ஏறுசடை மேற்
றூயமதி சூடிசுடு காடில்நடம் ஆடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
காய்கணையி னாவிடந் தீசனடி கூடுகாளத்தி மலையே."

*இது சாதாரிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய திருப்பதிகத்தில் வரும் 4-ஆம் பாசுரம். அவர் கொல்லிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:*

"முத்துமா மணிகளும் முழுமலர்த் திரள்களும்
எத்துமா முகலியின் கரையினில் எழில்பெறக்
கத்திட அரக்கனைக் கால்விரல் ஊன்றிய
அத்தன்றன் காளத்தி அணைவது கருமமே."

*இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய திருத்தாண்டகம் ஒன்று வருமாறு:*

"மனத்தகத்தான் தலைமேவான் வாக்கின் உள்ளான்
வாயாரத் தன்அடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாவான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினன் உள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றின் உள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி உள்ளான்
காளத்தி யான்அவன்என் கண்உ ளானே."

*இந்தத் தலத்தைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:*

"பொய்யவன் நாயடியேன் புகலேநெறி ஒன்றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிடர்ஆனவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்கும் திருக்காளத்திஎன்
ஐயநுன் றன்னைஅல்லால் அறிந்தேத்த மாட்டேனே."

*பிறகு உள்ள 2-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'இந்த அழகிய பொத்தப்பி நாட்டில் இந்தக் கண்ணப்ப நாயனார் வாழ்ந்த திருப்பதி எது என்று கேட்டால்,*

முத்துக்களைக் கொழிக்கும் அருவி குதிக்கின்ற சாரல் உயரமாக உள்ள மலை சூழ்ந்துள்ள பக்கத்தில், கன்ன மதம், கபோல மதம், பீஜ மதம் என்னும் மூன்று மதங்களை ஒழுகவிடும் ஆண் யானைகளினுடைய தந்தங்களினால் வலிமையான தொடர்ந்துள்ள வேலியைக் கட்டி அதனோடு ஒத்திருக்கும் பெரிய திருமதில் சுற்றி விளங்கும் பழைய ஊர் உடுப்பூர் என்பது ஆகும்.' பாடல் வருமாறு:

"இத்திரு நாடு தன்னில் இவர்திருப் பதியா தென்னில்
நித்தில அருவிச் சாரல் நீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெம் களிற்றுக் கோட்டு வன்றொடர் வேலி கோலி
ஒத்தபேர் அரணம் சூழ்ந்த முதுபதி உடுப்பூர் ஆகும்."

இத்திரு - இந்த அழகிய. நாடு தன்னில் - பொத்தப்பி நாட்டில். தன்: அசைநிலை. இவர் - இந்தக் கண்ணப்ப நாயனார். திருப்பதி - வாழ்ந்த அழகிய ஊர். யாது - எது. என்னில் - என்று கேட்டால், அது வருமாறு. நித்தில - முத்துக்களைக் கொழிக்கும்; ஒருமை பன்மை மயக்கம். அருவி - குதிக்கும் அருவி உள்ள. ச்: சந்தி. சாரல் - பக்கங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். நீள் - உயரமான. வரை - மலை. சூழ்ந்த - சுற்றி அமைந்த. பாங்கர் - பக்கத்தில். மத்த - கன்ன மதம், கபோல மதம், பீஜமதம் என்னும் மூன்று மதங்களை ஒழுகவிடும்; ஒருமை பன்மை மயக்கம். வெம் - கொடிய. களிற்று - ஆண் யானைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கோட்டு - தந்தங்களினால்; ஒருமை பன்மை மயக்கம். வன் - வலிமையான. தொடர் - தொடர்ந்திருக்கும். வேலி - வேலியை. கோலி - சுற்றிக் கட்டி. ஒத்த - அந்த வேலியோடு ஒத்துள்ள. பேர் - பெரிய. அரணம் - திருமதில். சூழ்ந்த - சுற்றி அமைந்த. முது - பழைய. பதி - ஊர். உடுப்பூர் ஆகும் - உடுப்பூர் என்பது ஆகும்.

*பிறகு உள்ள 3-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

*'அந்த உடுப்பூரில் வாழ்பவர்கள் மலைவாசிகளாகிய வேடர்கள்; வளைந்த காதுகளைப் பெற்ற நாயைக் கட்டிய வலிமையைக் கொண்ட திரண்ட விளா மரத்தின் கிளையில் நீண்ட வலை பக்கத்தில் தொங்கிக் கொண்டிருக்கக் காட்டுப் பன்றியும் புலியும் கரடியும் கடமை என்னும் பார்வை மிருகமும் திரிந்து கொண்டிருப்பதல்லாமலும் கருங்கற் பாறையாகிய முற்றத்தின்மேல் மலைநெற்கள் எந்த இடத்திலும் உலர்ந்து கொண்டிருக்கும்.' பாடல் வருமாறு:*

"குன்றவர் அதனில் வாழ்வார்; கொடுஞ்செவி ஞமலி ஆர்த்த
வன்றிரள் விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றில் ஐவனம் உணங்கும் எங்கும்."

*அதனில் - அந்த உடுப்பூரில். வாழ்வார் - வாழ்பவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். குன்றவர் - மலை வாசிகளாகிய வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கொடும் - வளைந்திருக்கும். செவி - காதுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஞமலி - நாயை. ஆர்த்த - கட்டிய. வன் - வலிமையான. திரள் - பருத்த அடியைக் கொண்ட. விளவின் - விளாமரத்தினுடைய. கோட்டு - கிளையில். வார் - நீளமான. வலை மருங்கு - வலையின் பக்கத்தில். தூங்க - தொங்கிக் கொண்டிருக்க. ப்: சந்தி. பன்றியும் - காட்டுப் பன்றியும். புலியும் - புலி என்னும் காட்டு விலங்கும். எண்கும் - கரடியும். கடமையும் - காட்டுப் பசுவும். மானின் பார்வை - பார்வை மானும்; இது மற்ற மான்களைப் பிடிக்க உதவுவது. அன்றியும் - இந்த விலங்குகள் திரிந்து கொண்டிருப்பது அல்லாமலும். பாறை முன்றில் - கருங்கற் பாறையாகிய முற்றத்தில். முன்றில் - இல் முன்; முன் பின்னாகத் தொக்க தொகை. ஐவனம் - மலை நெற்கள்;*

ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடத்திலும். உணங்கும் - உலர்ந்து கொண்டிருக்கும்.

பிறகு வரும் 4-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வலிமையாகிய புலிக் குட்டியோடும், வலிமையைப் பெற்ற யானைக் கன்றினோடும் சிவந்த மயிர்களை உடைய தலைகளைப் பெற்ற சிறிய குழந்தைகள் விரும்பிக் கூடி விளையாட்டைப் புரிவதை அல்லாமல், அன்புமிக்க விருப்பம் மிகுதியாக உண்டாக அடைகின்ற பெண்மான் களோடும் இன்பம் உண்டாகுமாறு சேர்ந்து விளையாடும் வேடிச்சிகளுடைய பெண்கள் எவ்விடத்திலும் காணப் படுவார்கள்.' பாடல் வருமாறு:

"வான்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துடன் ஆட லன்றி
அன்புறு காதல் கூர அணையும்மான் பிணைக ளோடும்
இன்புற மருவி ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும்."

வன் - வலிமையாகிய. புலிக் குருளையோடும் - புலிக்குட்டியுடனும். வய - வலிமையைப் பெற்ற. க்: சந்தி. கரிக்கன்றினோடு - யானைக் கன்றினுடனும். புன் - சிவந்த. தலை - மயிர்களைக் கொண்ட தலைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்:சந்தி. சிறு - சிறிய. மகார்கள் - குழந்தைகள். புரிந்து - விரும்பி. உடன் - கூடி. ஆடல் - விளையாட்டைப் புரிவதை. அன்றி - அல்லாமல். அன்பு உறு - அன்பு மிக்க. காதல் - விருப்பம். கூர - மிகுதியாக உண்டாகும் வண்ணம். அணையும் - வந்து சேரும். மான்பிணைகளோடும் - பெண்மான்களுடனும். இன்பு உற - இன்பம் உண்டாகுமாறு. மருவி - சேர்ந்து. ஆடும் - விளையாடும். எயிற்றியர் - வேடிச்சிகளினுடைய. மகளிர் - புதல்விகள். எங்கும் - எந்த இடத்திலும் காணப்படுவார்கள்.

அடுத்து வரும் 5-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வெற்றியைக் கொள்ளும் ஆயுதங்களையும், கொடுமையையும், கொடிய வார்த்தைகளையும் உடைய வேடர்களினுடைய கூட்டம் ஒவ்வொன்றிலும், ''கொலைசெய், வாளினால் வீசிக்கொல், ஈட்டியினால் குத்து'' என முழங்கிக் கூடிய ஒலியே அல்லாமல் சில அரித்து எழும் ஓசையைப் பெற்ற உடுக்குக்களும், ஊது கொம்புகளும், சிறிய அடிக்கும் பக்கத்தைக் கொண்ட சிறு பறைகளும் சேர்ந்து கல் என்று முழங்கும் முழக்கத்திற்கு மேலாகவும் மலையிலிருந்து குதிக்கும் அருவி ஒலிக்கும் பேரொலி எவ்விடத்திலும் கேட்கும்.' பாடல் வருமாறு:

"வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டம் தோறும்
கொல், எறி, குத்தென் றார்த்துக் குழுமிய ஓசை அன்றிச்
சில்லரித் துடியும் கொம்பும் சிறுகண்ஆ குளியும் கூடிக்
கல்லெனும் ஒலியின் மேலும் கறங்கிசை அருவி எங்கும்."

வெல் - வெற்றியைக் கொள்ளும். படை - வில், அம்பு, வாள், ஈட்டி முதலிய ஆயுதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தறுகண் - கொடுமையையும். வெம் - கொடுமையாக இருக்கும். சொல் - வார்த்தைகளையும் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வேட்டுவர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூட்டம் - கூடிய கூட்டம். தோறும் - ஒவ்வொன்றிலும். கொல் - கொலை செய். எறி - வாளை வீசி வெட்டு. குத்து - ஈட்டியால் குத்து. என்று - என. அர்த்து - முழங்கிய. க்: சந்தி. குழுமிய - சேர்ந்த. ஓசை - சத்தங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அன்றி - அல்லாமல். ச்: சந்தி. சில் - சில. அரி - விட்டு விட்டு எழுப்பும் ஓசையை உடைய. த்: சந்தி. துடியும் - உடுக்குக்களும்; ஒருமை பன்மை மயக்கம். கொம்பும் - ஊது கொம்புகளும்; ஒருமை பன்மை

மயக்கம். சிறு - சிறிய. கண் - அடிக்கும் பக்கத்தைப் பெற்ற. ஆகுளியும் - சிறு பறைகளும்; ஒருமை பன்மை மயக்கம். கூடி - சேர்ந்து கொண்டு. க்: சந்தி. கல் எனும் - கல் என்று ஒலியை எழுப்பும். எனும்: இடைக்குறை. ஒலியின் மேலும் - சத்தத்திற்கு மேற்படவும். கறங்கு - ஒலிக்கும். இசை - ஒலியை எழுப்பும். அருவி - மலையிலிருந்து குதிக்கும் அருவிகள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடத்திலும் காணப்படும்.

அடுத்து உள்ள 6-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'வழிப் போவார்களைத் துன்புறுத்தி அவர்களிடம் உள்ள பொருள்களைப் பறித்துக் கொண்டு அவற்றை வைத்துக் கொண்டு உணவை உண்ணும் வேடர்கள் வேறு இடங்களிலிருந்து கொள்ளையடித்துக் கொண்டு வந்த வேறு வேறான பல நிறங்களோடு மிகுதியாக இருந்து வந்து சேரும் பசுமாடுகளின் வரிசைகளை அல்லாமல் இடி யேற்றைப் பெற்ற ஆகாயத்தில் இடிக்கும் இடியினுடைய சத்தம் மேகங்கள் முழங்கும் முழக்கத்தோடு மாறுபட்ட முழக்கத்தைக் காண்பிக்கும் கன்ன மதம், கபோல மதம், பீஜ மதம் என்னும் மூன்று மதங்களையும், துதிக்கை களையும் பெற்ற யானைகளின் வரிசைகள் எந்த இடத்திலும் காட்சி அளிக்கும்.' பாடல் வருமாறு:

''ஆறலைத் துண்ணும் வேடர் அயற்புலம் கவர்ந்து கொண்ட
வேறுபல் உருவின் மிக்கு விரவும்ஆன் நிரைகள் அன்றி
ஏறுடை வானந் தன்னில் இடிக்குரல் எழிலி யோடு
மாறுகொள் முழக்கம் காட்டும் மதக்கைமா நிரைகள் எங்கும்.''

ஆறு அலைத்து - வழிப்போகும் மக்களைத் துன்புறுத்தி அவர்களிடம் உள்ள பொருள்களைப் பறித்துக் கொண்டு அவற்றை வைத்துக் கொண்டு. உண்ணும் -

உணவைப் பெற்று உண்ணும். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அயல் - வேறு. புலம் - இடங்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். கவர்ந்து - கொள்ளையடித்து. கொண்ட - கொண்டு வந்த. வேறு - வேறு வேறாகிய. பல் - பல. உருவின் - நிறங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். மிக்கு - மிகுதியாக இருந்து. விரவும் - வந்து சேரும். ஆன் - பசுமாடுகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரைகள் - வரிசைகளை. அன்றி - அல்லாமல். ஏறுடை - இடியேற்றைப் பெற்ற. வானந்தன்னில் - ஆகாயத்தில். தன்: அசைநிலை. இடிக்குரல் - இடிக்கும் இடியினுடைய சத்தம். எழிலியோடு - மேகங்கள் முழங்கும் முழக்கத்தோடு; ஆகுபெயர். எழிலி: ஒருமை பன்மை மயக்கம். மாறுகொள் - மாறுபட்ட; 'எதிரில் முழங்கும்' எனலும் ஆம். முழக்கம் - முழக்கத்தை. காட்டும் - காண்பிக்கும். மத - கன்ன மதம், கபோல மதம், பீஜ மதம் என்னும் மூன்று மதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கை - துதிக்கைகளையும் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மா - யானைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரைகள் - வரிசைகள். எங்கும் - எந்த இடத்திலும் காட்சி அளிக்கும்.

பின்பு வரும் 7-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'மை சேர்ந்ததைப் போன்ற கருமையான உடம்புகளையும், கொடுமையான வேலைகளையும் கொண்ட வேடர்கள் தங்களிடம் பயத்தையும் கருணையையும் எந்தக் காலத்திலும் அடைதல் இல்லாதவர்கள்; தாங்கள் உடுக்கும் உடைகள் வலிமையான தோல்களாகப் பெற்றவர்கள்; மலையிலிருந்து கொண்டு வந்த தேனையும், புழுக்கிய மாமிசத்தையும் தாங்கள் உண்ணும் உணவுகளாகக் கொண்டிருக்கும், விடத்தையும் நெருப்பையும் போலக்

கொடியவையாக இருக்கும் அம்புகளை உடைய வேடர்களுக்குத் தலைவன் நாகன் என்ற பெயரை உடையவன்.' பாடல் வருமாறு:

"மைச்செறிந் தனைய மேனி வன்றொழில் மறவர் தம்பால்
அச்சமும் அருளும் என்றும் அடைவிலார், உடைவன் தோலார்,
பொச்சையின் நறவும் ஊனின் புழுக்கலும் உணவு கொள்ளும்
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாகன் என்பான்."

மைச் செறிந்தனைய - மை சேர்ந்ததைப் போன்ற. மேனி - கருமையான உடம்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். வன் - கொடுமையான. தொழில் - வேலைகளையும் கொண்டு; ஒருமை பன்மை மயக்கம். தம்பால் - தங்களிடத்தில். அச்சமும் - பயத்தையும். அருளும் - கருணையையும். என்றும் - எந்தக் காலத்திலும். அடைவு - சேர்தல். இலார் - இல்லாதவர்கள்; ஒருமை பன்மை மயக்கம்; இடைக்குறை. உடை - தாங்கள் உடுக்கும் உடைகளாக; ஒருமை பன்மை மயக்கம். வன் - தடித்த. தோலார் - தோல்களைப் பெற்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொச்சையின் - மலையிலிருந்து கொண்டு வந்த. நறவும் - தேனையும். ஊனின் புழுக்கலும் - புழுக்கிய மாமிசங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். உணவு - தாங்கள் உண்ணும் உணவுகளாக; ஒருமை பன்மை மயக்கம். கொள்ளும் - கொண்டிருக்கும். நச்சு - விடத்தையும். அழல் - நெருப்பையும் போலக் கொடிய. பகழி - அம்புகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வேடர்க்கு - வேடர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அதிபதி - தலைவன். நாகன் என்பான் - நாகன் என்ற பெயரை உடையவன்.

பின்பு உள்ள 8-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'இயல்பினால் தவத்தை முன்பிறப்பில் புரிந்தவன் ஆனாலும் அந்த நாகன் என்பவன் வேடர்களின் சாதியில் பிறந்த பிறப்பினுடைய சார்பினால் குற்றத்தையே நல்ல குணமாகக் கொண்டு வாழ்பவன்; கொடிய தன்மையி லேயே தலை சிறந்து நின்றிருப்பவன்; வில்லைப் பயன்படுத்தும் தொழிலில் அமையும் வீரத்தில் மிக்க சிறப்பைப் பெற்றவன்; கொடிய கோபத்தைக் கொண்ட சிங்கத்தைப் போல விளங்குபவன்; அவனுடைய குறிஞ்சி நிலத்து ஊராகிய உடுப்பூரில் வாழும் வாழ்க்கைக்குத் துணைவியாகிய இல்லாளும் தத்தை என்னும் பெயரைப் பெற்றவள்.' பாடல் வருமாறு:

"பெற்றியால் தவம்முன் செய்தா னாயினும் பிறப்பின் சார்பால்
குற்றமே குணமா வாழ்வான்; கொடுமையே தலைநின் றுள்ளான்;
விற்றொழில் விறலின் மிக்கான்; வெஞ்சின மடங்கல் போல்வான்;
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியும் தத்தை என்பாள்."

பெற்றியால் - இயல்பினால். தவம் - தவத்தை. முன் - முன் பிறப்பில். செய்தான் - புரிந்தவன். ஆயினும் - ஆனாலும். பிறப்பின் - வேடனாகப் பிறந்த பிறப்பி னுடைய. சார்பால் - சார்பினால். குற்றமே - குற்றத்தையே. குணமா - நல்ல குணமாகக் கொண்டு. வாழ்வான் - தன்னுடைய வாழ்க்கையை நடத்துபவன். கொடுமையே - கொடிய செயல்களிலேயே; ஆகுபெயர். தலை நின்று - தலை சிறந்த நின்று. உள்ளான் - இருப்பவன். வில் - வில்லைப் பயன்படுத்தும். தொழில் - தொழிலில் அமையும். விறலின் - வீரத்தில். மிக்கான் - மிக்க சிறப்பைப் பெற்றவன். வெம் - கொடிய. சின - கோபம் மூண்ட. மடங்கல் - சிங்கத்தை. போல்வான் - போல விளங்குபவன். மற்று: அசைநிலை. அவன் - அந்த நாகனுடைய. குறிச்சி - குறிஞ்சி நிலத்து ஊராகிய உடுப்பூரில். வாழ்க்கை - வாழும் வாழ்க்கைக்குத்

துணைவியாகிய. மனைவியும் - இல்லாளும். தத்தை என்பாள் - தத்தை என்னும் பெயரைப் பெற்றவள்.

அடுத்து வரும் 9-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் தத்தை என்னும் பெண்மணி அருமையாகப் பெறுவதற்குரிய வேடர்களுக்குரிய தாயபாகம் அமைந்த பழைய குடும்பத்தில் பிறந்தவள்; கருமை நிறம் கொண்ட புலியினுடைய பற்களால் செய்த தாலிக்கு நடு நடுவில் சங்கு மணிகளைக் கோவையாகக் கோத்து அந்தக் கோவை தன்னுடைய பெருமையைப் பெற்ற முதுகில் கிடந்து புரளுமாறு அணிந்திருப்பவள்; மயிற் பீலியும் குழைகளும் முதுகின் பக்கம் மோத, வண்டுகள் மொய்க்கும் தழைகளையும் மலர்களையும் சேர்த்துக் கட்டிய மாலையைத் தன்னுடைய முன்னுச்சி மயிரில் அணிந்துகொண்ட, அச்சத்தை உண்டாக்கும் பெண் சிங்கத்தைப் போல விளங்குபவள்.' பாடல் வருமாறு:

"அரும்பெறல் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள்;
இரும்புலி எயிற்றுத் தாலி இடையிடை மணவு கோத்துப்
பெரும்புறம் அலையப் பூண்டாள்; பீலியும் குழையும் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூர்அரிப் பிணவு போல்வாள்."

அரும்பெறல் - அந்தத் தத்தை என்னும் பெண்மணி அருமையாகப் பெறுவதற்குரிய. மறவர் - வேடர்களுக்கு உரிமையாகிய; ஒருமை பன்மை மயக்கம். தாயத்து - தாயபாகம் அமைந்த. ஆன்ற - அமைந்த. தொல் - பழைய. குடியில் - குடும்பத்தில். வந்தாள் - பிறந்தவள். இரும் - கரிய நிறத்தைக் கொண்டிருக்கும். புலி - புலியினுடைய. எயிற்று - பற்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாலி - தாலிக்கு. இடை இடை - நடு நடுவில். மணவு - சங்கு மணிகளை; ஒருமை பன்மை மயக்கம். கோத்து -

கோவையாகக் கட்டி. ப்: சந்தி. பெரும் - அந்தக் கோவை தன்னுடைய பெருமையைப் பெற்றிருக்கும். புறம் - முதுகில் கிடந்து. அலைய - புரளுமாறு. ப்: சந்தி. பூண்டாள் - அணிந்திருப்பவள். பீலியும் - மயிற் பீலியும். குழையும் - காதுகளில் அணிந்த குழைகளும்; ஒருமை பன்மை மயக்கம். தட்ட - முதுகில் வந்து மோத. ச்: சந்தி. சுரும்பு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். உறு - மொய்க்கும். படலை - தழைகளையும் மலர்களையும் சேர்த்துக் கட்டிய மாலையை. முச்சி - முன்னுச்சி மயிரில் அணிந்து கொண்ட. ச்: சந்தி. சூர் - அச்சத்தை உண்டாக்கும். அரிப்பிணவு - பெண் சிங்கத்தை. போல்வாள் - போல விளங்குபவள்.

அடுத்து வரும் 10-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'ஒப்புக் கூறுவதற்கு அருமையாகிய சிறப்பில் மிகுதியாக இருப்பவர்களாகிய இந்த நாகனுக்கும் தத்தைக்கும் இனி மேல் புதல்வர்களைப் பெறுதலே அருமையானது என்று யாரும் சொல்ல, அந்தப் புதல்வரைப் பெறுவதில் உண்டான விருப்பத்தால் மணம் பரவிய மாலையை அணிந்த, சிவந்த வேலாயுதத்தை ஏந்திய முருகவேளுடைய திருக்கோயிலின் முற்றத்துக்குப் போய் அவனை வாழ்த்துவதைப் புரிந்து ஒவ்வொரு நாளும் இவ்வாறு வழிபடும் கடமையாகிய வழியில் நிற்பவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"பொருவரும் சிறப்பின் மிக்கார் இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல் முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நிற்பார்."

பொரு - ஒப்புக் கூறுவதற்கு. அரும் - அருமையாக இருக்கும். சிறப்பின் - சிறப்பில். மிக்கார் - மிகுதியாக இருப்பவர்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். இவர்க்கு -

இந்த நாகனுக்கும் தத்தைக்கும்; ஒருமை பன்மை மயக்கம். இனி - இனி மேல். ப்: சந்தி. புதல்வர் - புதல்வர்களை; ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பேறே - பெறுதலே. அரியது - அருமையானது. என்று - என. எவரும் - யாரும். கூற - சொல்ல. அதற்படு - புதல்வரைப் பெறுவதாகிய அந்த எண்ணத்தில் உண்டான. காதலால் - விருப்பத்தால். ஏ: அசைநிலை. முருகு - நறுமணம். அலர் - பரவும். அலங்கல் - மலர் மாலையை அணிந்த. செவ் - சிவந்த. வேல் - வேலாயுதத்தை ஏந்திய. முருகவேள் - முருகப் பெருமான் திருக்கோயிலின். முன்றில் - முற்றத்துக்கு. சென்று - போய். பரவுதல் - அவனை வாழ்த்துதலை. செய்து - புரிந்து. நாளும் - ஒவ்வொரு நாளும். பராய்க்கடன் - வழிபடும் கடமையாகிய. நெறியில் - வழியில். நிற்பார் - நிற்பவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 11-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சேவற் கோழியுடன் கோடுகளைப் பெற்ற மயிற் கூட்டங்களைத் திருக்கோயிலுக்கு அர்ப்பணமாக விட்டு, தோரணத்தையும் மாணிக்கங்களையும் தொங்கவிட்டு, வண்டுகள் மொய்க்கும் அழகிய கதம்ப மாலைகளையும் தொங்கவிட்டு, யுத்தத்தைச் செய்வதையே தனக்கு அலங்காரமாகக் கொண்ட நீண்ட வேலாயுதத்தை ஏந்திய முருகக் கடவுளுக்கு அவனுடைய புகழை விரும்பிப் பாடும் குரவைக் கூத்தை ஆட, பெருமையை உடைய தெய்வப் பெண்ணாகிய பூசாரிச்சி நடனம் செய்யப் பெரிய திருவிழாவைப் நடத்திய பிறகு.' பாடல் வருமாறு:

"வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்பம் நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா எடுத்த பின்றை."

இந்தப் பாடல் குளகம். வாரணச் சேவலோடும் - சேவற் கோழியுடனும். வரி - கோடுகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். மயிற்குலங்கள் - மயிற் கூட்டங்களை. விட்டு - திருக்கோயிலுக்கு அர்ப்பணமாக விட்டு. த்: சந்தி. தோரணம் - மாவிலை, தென்னங் குருத்தோலை, மலர்கள் முதலியவற்றைக் கட்டி அமைத்த தோரணத்தையும். மணிகள் - மாணிக்கங்களையும். தூக்கி - தொங்க விட்டு. ச்: சந்தி. சுரும்பு - வண்டுகள் மொய்க்கும்; ஒருமை பன்மை மயக்கம். அணி - அழகிய. கதம்பம் - பல மலர்களைக் கட்டிய கதம்ப மாலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். நாற்றி - தொங்கவிட்டு. ப்: சந்தி. போர் அணி - போர் புரிதலையே தனக்கு அலங்காரமாகக் கொண்ட. நெடு - நீண்ட. வேலோற்கு - வேலை ஏந்திய முருகனுக்கு. ப்: சந்தி. புகழ் - அவனுடைய புகழை. புரி - விரும்பிப் பாடும். குரவை - குரவைக் கூத்தை; கைகளைக் கோத்துக் கொண்டு ஆடும் கூத்தை. தூங்க - ஆட. ப்: சந்தி. பேர் - பெருமையைப் பெற்ற. அணங்கு - தெய்வப் பெண்ணாகிய பூசாரிச்சி. ஆடல் - நடனத்தை. செய்து - புரிய; எச்சத்திரிபு. பெரு - பெரிய. விழா - திருவிழாவை. எடுத்த - கொண்டாடிய. பின்றை - பிறகு.

பின்பு உள்ள 12-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'போர் செய்து பழகியதால் உண்டாகிய தழும்புகள் விளங்கிய உடம்புகளைப் பெற்ற வேடர்களுடைய தலைவனாகிய நாகன் என்பவனுக்கு மதில்களை உடையவையும், தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளும் ஆகிய மூன்று புரங்களையும் அழித்தவரும், அடியேங்களுடைய தந்தையைப் போன்ற வருமாகிய காளஹஸ்தீசுவரருடைய புதல்வராக விளங்குப

வரும், மயிலாகிய வெற்றியைப் பெறும் வாகனத்தை ஓட்டுபவரும், கிரௌஞ்ச மலையின் நடு இடத்தை வேலாயுதத்தினால் கிழியுமாறு செய்தருளியவரும், உறுதியான வேலாயுதத்தை உடைய விசாலமான வலக்கையைப் பெற்றவரும், போரில் சூரபதுமனை வென்ற வெற்றியை உடைய தலைவருமாகிய முருகப் பெருமானார் வழங்கிய திருவருளினால்.' பாடல் வருமாறு:

"பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியாம் நாகற்
கெயிலுடைப் புரங்கள் செற்ற எந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற ஊர்தி வரையுரம் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார் அருளி னாலே."

இந்தப் பாடல் குளகம். பயில் - போர் செய்து பழங்கியதால் உண்டாகிய. வடு - தழும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொலிந்த - விளங்கிய. யாக்கை - உடம்புகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வேடர் தம் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. பதியாம் - தலைவனாக விளங்கும். நாகற்கு - நாகன் என்பவனுக்கு. எயில் - மதில்களை; ஒருமை பன்மை மயக்கம். உடை - பெற்ற. ப்: சந்தி. புரங்கள் - வித்யுன்மாலி, தாரகாட்சன், வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை. செற்ற - அழித்த. எந்தையார் - அடியேங் களுடைய தந்தையாரைப் போன்ற காளஹஸ்தீசு வரருடைய. 'அடியேங்கள்' என்றது சேக்கிழார் தம்மையும் மற்றச் சிவபெருமானுடைய அடியவர்களையும் சேர்த்துக் கூறியது. மைந்தரான - இளைய புதல்வரான. மயில் - மயிலை. உடை - தம்முடைய. க்: சந்தி. கொற்ற - வெற்றியைத் தரும். ஊர்தி - வாகனமாகப் பெற்றவரும்; திணை மயக்கம். வரை - கிரௌஞ்ச மலையினுடைய. உரம் - நடுவிடத்தை. கிழித்த - கிழிப்பதைப் போலப் பொடியாக அழித்த; "கிழியும்படி

அடற்குண்றெறிந்தோன்.'' என்று கந்தர் அலங்காரத்தில் வருவதைக் காண்க. திண்மை - உறுதியைப் பெற்ற. அயில் - வேலாயுதத்தை. உடை - பெற்ற. த்: சந்தி. தட - விசாலமான. க்: சந்தி. கை - வலத்திருக்கையையும். வென்றி - சூரபதுமனை வென்ற வெற்றியையும் பெற்ற. அண்ணலார் - தலைவராகிய முருகப் பெருமானார். அருளினால் - வழங்கிய திருவருளினால். ஏ: ஈற்றசை நிலை.

அடுத்து வரும் 13-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'காட்டில் வாழும் வேடர்களினுடைய சாதி விளக்கத்தை அடையும் வண்ணம் நாகனுடைய மனைவியாகிய தத்தையினிடம் கருப்பம் உண்டாக, குறைவு இல்லாத பூசைக்குரிய செயல்களை மிகுதியாகப் புரிந்து, செய்ய வேண்டிய கடமைகளை ஆட்டைப் பலிகொடுக்கும் வெறியாட்டினோடும் நடத்தி, உரியவையான அந்தப் பத்து மாதங்கள் கழிய, அளவு இல்லாமல் முன் பிறவியில் நாகனும் தத்தையும் புரிந்த தவத்தின் பயனால் பாலைப் போன்ற வெண்மையான சந்திரனைப் பாற்கடல் பெற்றாற் போல அந்தத் தத்தை ஓர் ஆண் குழந்தையைப் பெற்ற சமயத்தில்.' பாடல் வருமாறு:

"கானவர் குலம்வி ளங்கத் தத்தைபால் கருப்பம் நீட
ஊனமில் பலிகள் போக்கி உறுகடன் வெறியாட் டோடும்
ஆனஅத் திங்கள் செல்ல அளவில்செய் தவத்தி னாலே
பான்மதி உவரி ஈன்றா லெனமகப் பயந்த போது."

இந்தப் பாடலும் குளகம். கானவர் - காட்டில் வாழும் வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலம் - சாதி. விளங்க - விளக்கத்தை அடையும் வண்ணம். த்: சந்தி. தத்தை பால் - நாகனுடைய மனைவியாகிய தத்தையிடம். கருப்பம் நீட - கருப்பம் உண்டாக. ஊனம் - குறை. இல் - இல்லாத; கடைக்குறை. பலிகள் - பூசைக்குரிய செயல்களை.

போக்கி - விரிவாகச் செய்து. உறு - செய்ய வேண்டிய. கடன் - கடமைகளை; ஒருமை பன்மை மயக்கம். வெறியாட்டோடும் - ஆட்டைப் பலிகொடுக்கும் வெறியாட்டினோடும். வெறியாட்டு - பூசாரி ஆட்டைப் பலிகொடுத்து ஆடும் ஆட்டம். ஆன - உரியவை ஆன. அத்திங்கள் - அந்தப் பத்து மாதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். செல்ல - கழிய. அளவு இல் - அளவு இல்லாத. இல் : கடைக்குறை. செய் - முன் பிறவியில் நாகனும் தத்தையும் புரிந்த. தவத்தினால் - தவத்தின் பயனால்; ஆகுபெயர். ஏ: அசைநிலை. பால் - பாலைப் போல வெண்மையான. மதி - சந்திரனை. உவரி - பாற்கடல். ஈன்றாலென - பெற்றாற் போல. என: இடைக்குறை. மக - ஓர் ஆண் குழந்தையை. ப்: சந்தி. பயந்த - தத்தை ஈன்றெடுத்த. போது - சமயத்தில்.

பின்பு உள்ள 14-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'யானையினுடைய பருத்த தந்தங்களில் உண்டான முத்துக்களையும், மூங்கிலில் உண்டாகிய செழுமையான இயல்பைப் பெற்ற முத்துக்களையும், மலையிலிருந்து பெற்ற மாணிக்கங்களையும் வேடர்கள் சொரிந்த மாரியே அல்லாமல், கோடுகளைப் பெற்ற வண்டுகள் அலைந்து மொய்க்கும் வண்ணம் ஆகாயத்திலிருந்து தேவர்கள் கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களை மழையைப் போல எல்லா இடங்களிலும் சொரிந்தார்கள்; விட்டு விட்டு ஒலிக்கும் சத்தத்தைப் பெற்ற சிறிய உடுக்குக்களே அல்லாமல் தேவர்கள் வாசிக்கும் துந்துபி என்னும் இசைக்கருவிகளும் முழங்கின.' பாடல் வருமாறு:

"கரிப்பரு மருப்பின் முத்தும், கழைவிளை செழுநீர் முத்தும்
பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே அன்றி
வரிச்சுரும் பலைய வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்;
அரிக்குறும் துடியே அன்றி அமரர்துந் துபியும் ஆர்த்த."

இது தந்தைக்கு ஆண் குழந்தை பிறந்த மகிழ்ச்சியினால் நிகழ்ந்தவற்றைக் கூறும் பாடல். கரி - யானையினுடைய. ப்:சந்தி. பரு - பருத்த. மருப்பின் - தந்தங்களில் உண்டான; ஒருமை பன்மை மயக்கம். முத்தும் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கழை - மூங்கிலில். விளை - உண்டாகிய. செழு - செழிப்பான. நீர் - இயல்பைப் பெற்ற. முத்தும் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பொருப்பினில் - மலையிலிருந்து கொண்டு வந்த. மணியும் - மாணிக்கங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொழிதரு - சொரிந்த. மழையே - மாரியே. அன்றி - அல்லாமல். வரி - கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சுரும்பு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அலைய - திரிந்து வந்து மொய்க்கும் வண்ணம். வானின் - ஆகாயத்திலிருந்து. மலர் - கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். மழை - தேவர்கள் மாரியைப் போல. எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். பொழிந்தது - சொரிந்தார்கள்; திணை மயக்கம். அரி - விட்டு விட்டு ஒலிக்கும் சத்தத்தை உடைய. க்: சந்தி. குறும் - சிறிய. துடியே - உடுக்குக்களே; ஒருமை பன்மை மயக்கம். அன்றி - அல்லாமல். அமரர் - தேவர்கள் வாசிக்கும்; ஒருமை பன்மை மயக்கம். துந்துபியும் - தும் தும் என்று முழங்கும் துந்துபி என்னும் இசைக் கருவிகளும்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்த்த - முழங்கின.

அடுத்து வரும் 15-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஏறுவதற்கு அருமையான மலையில் வாழும் குறவர்களினுடைய பரவிய குடும்பங்கள் வாழும் சிறிய ஊர்களில் அந்தக் குறவர்களின் கூட்டம் பெரிய திருவிழாவைக் கொண்டாடி, மிகுதியாக உள்ள பெரிய

மகிழ்ச்சி அதிகமாக அடையும் சமயத்தில், அருமையான ஒரு மலை கருமையான ஒரு மேகத்தைத் தன் கைகளில் ஏந்திக் கொண்டது என்று சொல்லும் வண்ணம் அந்த ஆண் குழந்தையினுடைய தந்தையாகிய நாகன் போர் புரியும் மலைகளைப் போன்ற தோள்கள் திருப்தி அடையுமாறு தன்னுடைய மகனை எடுத்துத் தழுவிக் கொண்டான்.' பாடல் வருமாறு:

"அருவரைக் குறவர் தங்கள் அகன்குடிச் சீறூர் ஆயம்
பெருவிழா எடுத்து மிக்க பெருங்களி கூரும் காலை
கருவரை காள மேகம் ஏந்திய தென்னத் தாதை
பொருவரைத் தோள்கள் ஆரப் புதல்வனை எடுத்துக் கொண்டான்."

அரு - ஏறுவதற்கு அருமையான. வரை - மலை அடிவாரத்தில் வாழும்; ஆகுபெயர். க்: சந்தி. குறவர்தங்கள் - குறவர்களினுடைய. தம்: அசைநிலை. அகன் - விரிவான. குடி - குடும்பங்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சீறூர் - சிறிய ஊர்களில்; ஒருமை பன்மை மயக்கம். ஆயம் - அந்தக் குறவர்கள் கூடியுள்ள கூட்டம். பெரு - பெரிய. விழா - திருவிழாவை. எடுத்துக் - கொண்டாடி. மிக்க - மிகுதியாக உள்ள. பெரும் - பெரிய. களி - மகிழ்ச்சியை. கூரும் - மிகுதியாக அடையும். காலை - சமயத்தில். கரு - கருமையான. வரை - ஒரு மலையை. காள - கருமையான. மேகம் - ஒரு மேகம். ஏந்தியது - தன்னுடைய கைகளில் எடுத்துக் கொண்டது. என்ன - என்று கூறுமாறு. த்: சந்தி. தாதை - அந்த ஆண் குழந்தைக்குத் தந்தையாகிய நாகன். பொரு - போர் புரியும். வரை - மலைகளைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தோள்கள் - தன்னுடைய தோள்கள். ஆர - திருப்தியை அடையுமாறு. ப்: சந்தி. புதல்வனை - தன்னுடைய மகனை. எடுத்துக் கொண்டான் - எடுத்துத் தழுவிக் கொண்டான்.

*அடுத்து வரும் 16-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'கருமையான ஒளியைப் பரப்பும் திருமேனியைக் கொண்ட விருப்பம் மருவிய அந்த ஆண் குழந்தையும் கருமையான நிறத்தைப் பெற்ற புலிக்குட்டியைப் போல ஓங்கி வளர்ந்து வேடர்களுடைய அளவில் அல்லாமல் அருமையாகப் பெறுவதற்குரிய உலகத்தில் வாழும் மக்கள் எல்லோரும் அளப்பதற்கு அருமையான பெருமையைத் தோன்றச் செய்து, அதற்கு ஏற்றவையாக உண்டாகும் அடையாளங்கள் பலவற்றையும் பாராட்டிக் கூறும் பான்மையோடு விளங்கித் தோற்றப் பொலிவைக் கொள்ள.' பாடல் வருமாறு:*

"கருங்கதிர் விரிக்கும் மேனிக் காமரு குழவி தானும்
இரும்புலிப் பறழின் ஓங்கி இறவுளர் அளவே அன்றி
அரும்பெறல் உலகம் எல்லாம் அளப்பரும் பெருமை காட்டித்
தரும்குறி பலவும் சாற்றும் தன்மையிற் பொலிந்து தோன்ற."

*இந்தப் பாடல் குளகம். கரும் - கருமையான. கதிர் - ஒளியை. விரிக்கும் - பரப்பும். மேனி - திருமேனியைக் கொண்ட. க்: சந்தி. காமரு - பலரும் எடுத்து கொள்ள வேண்டும். என்று விரும்பும் விருப்பம் மருவிய. குழவிதானும் - அந்த ஆண் குழந்தையும். தான்: அசைநிலை. இரும் - கருமை நிறத்தைப் பெற்ற. புலிப்பறழின் - புலிக்குட்டியைப் பால ஓங்கி - ஓங்கி வளர்ந்து. இறவுளர் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். அளவே - அளவிலே. அன்றி - அல்லாமல். அரும் - பெறல் - அருமையாகப் பெறுவதற்குரிய. உலகம் - இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். எல்லாம் - எல்லாரும். அளப்பரும் - அளப்பதற்கு அருமையாகிய. பெருமை - பெருமையை. காட்டி - தோன்றச் செய்து. த்: சந்தி. தரும் - உண்டாகும். குறி - அந்தப் பெருமைக்கு*

ஏற்றவையாகிய அடையாளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பலவும் - பலவற்றையும். சாற்றும் - பாராட்டிக் கூறும். தன்மையில் - பான்மையோடு; உருபு மயக்கம். பொலிந்து - விளங்கி. தோன்ற - தோற்றப் பொலிவைக் கொள்ள.

பிறகு உள்ள 17-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த ஆண் குழந்தையாகிய பெருமையைப் பெற்றவனைத் தங்களுடைய கைகளில் எடுத்துக் கொள்வதற்கு அருமையாக இருந்தமையால், "இவனுக்கு உரிமையாகிய திருநாமமும் திண்ணன் என்று இனிமேல் சொல்லுங்கள்." என்று நாகன் கூற, உறுதியான வில்லாயுதங்களை ஏந்திய வேடர்கள் மகிழ்ச்சியினால் முழங்கினார்கள்; புண்ணியச் செயல்களின் அர்த்தமாக இருக்கிற ஒப்பு இல்லாத கீர்த்தியைப் பெற்ற திருவுருவம் உள்ள அவனுக்குக் கண்களால் பார்ப்பதற்கு அழகாக இருக்கும் சாதிக்கு ஏற்ற ஆபரணங்கள் பலவற்றை அணிந்தார்கள்.' பாடல் வருமாறு:

"அண்ணலைக் கையில் ஏந்தற் கருமையால், 'உரிமைப் பேரும்
திண்ணனென் றியம்பும்' என்னத் திண்சிலை வேடர் ஆர்த்தார்;
புண்ணியப் பொருளாய் உள்ள பொருவில்சீர் உருவி னானைக்
கண்ணினுக் கணியாம் தங்கள் கலன்பல அணிந்தார் அன்றே."

அண்ணலை - பெருமையைப் பெற்றவனாகிய அந்த ஆண் குழந்தையை. க்: சந்தி. கையில் - தங்களுடைய கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். ஏந்தற்கு - எடுத்துக் கொள்வதற்கு. அருமையால் - கனம் மிக்கவனாக இருந்த காரணத்தால் அருமையாக இருந்தமையால். உரிமை - உரிமையாகிய. ப்: சந்தி. பேரும் - இவனுடைய திருநாமமும். திண்ணன் என்று - திண்ணன் என. இயம்பும் - சொல்லி அழையுங்கள். என்ன - என்று நாகன் கூற. த்: சந்தி. திண் - உறுதியாகிய. சிலை வில்லாயுதங்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை

பன்மை மயக்கம். ஆர்த்தார் - மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். புண்ணிய - புண்ணியச் செயல்களின்; ஒருமை பன்மை மயக்கம். என்றது நாகனும் தத்தையும் முன் பிறவியில் செய்த புண்ணியச் செயல்களை. ப்: சந்தி. பொருளாய் - பயனாகி. உள்ள - இருக்கிற. பொரு - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. உருவினானை - திருவுருவத்தைப் பெற்றவனுக்கு; உருபு மயக்கம். க்: சந்தி. கண்ணினுக்கு - கண்களால் பார்ப்பதற்கு; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். அணியாம் - அழகாக இருக்கும். தங்கள் - தங்களுடைய வேட்டுவச் சாதிக்கு உரிய. கலன் - ஆபரணங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பல - பலவற்றை. அணிந்தார் - அணிந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

பிறகு உள்ள 18-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'மலையில் எழுந்தருளியிருக்கும் தெய்வத்திற்கு உரிய காப்பை வேடர்களின் சாதிக்கு உரிய வழக்கப்படி தங்களுடைய குற்றம் இல்லாத பழைய முறைக்கு ஏற்றவாறு பொருத்தமாக உள்ள காரியங்களை அந்தத் தெய்வத்தை வாழ்த்திப் புரிந்து, நறுமணம் வீசும் இளமையான தளிர்களையும் அந்த ஆண் குழந்தை யினுடைய தலையில் அணிந்து வேப்பந்தழையைக் கட்டி நடுவில் கோத்த பாசி மணிகளையும் சோழிகளையும் இடுப்பில் கட்டி அழகு பெறும் வண்ணம் அவனை வளர்த்து வரும் காலத்தில்.' வருமாறு:

"வரையுறை கடவுட் காப்பு மறக்குடி மரபில் தங்கள்
புரையில்தொல் முறைமைக் கேற்பப் பொருந்துவ போற்றிச் செய்து
விரையிளம் தளிரும் சூட்டி வேம்பிழைத் திடையே கோத்த
அரைமணிக் கவடி கட்டி அழகுற வளர்க்கும் நாளில்."

இந்தப் பாடல் குளகம். வரை - மலையில். உறை - எழுந்தருளித் தங்கும். கடவுள் - தெய்வத்திற்கு உரிய. காப்பு - காப்பை. மறக்குடி - வேடர்களின் சாதிக்குரிய. மரபில் - வழக்கப்படி. தங்கள் - தங்களுடைய. புரை - குற்றம். இல் - இல்லாத; கடைக்குறை. முறைமைக்கு - முறைக்கு. ஏற்ப - ஏற்றவாறு. ப்: சந்தி. பொருந்துவ - பொருத்தமான காரியங்களை. போற்றி - அந்தத் தெய்வத்தை வாழ்த்தி. ச்: சந்தி. செய்து - புரிந்து. விரை - நறுமணம் கமழும். இளம் - இளமையான. தளிரும் - தளிர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். சூட்டி - அந்தக் குழந்தையினுடைய தலையில் அணிந்து. வேம்பு - வேப்பத் தழைகளை; ஒருமை பன்மை மயக்கம். 'வேப்பம் வித்துக்களை' எனலும் ஆம். இழைத்து - கட்டி. இடை - நடுவில். ஏ: அசைநிலை. கோத்த மணி - கோவையாகக் கோத்த பாசிமணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கவடி - சோழிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். அரை - அந்தக் குழந்தையின் இடுப்பில். கட்டி - கட்டிவிட்டு. அழகு உற - அழகு பெறும் வண்ணம். வளர்க்கும் - வளர்த்து வரும். நாளில் - காலத்தில்.

பிறகு வரும் 19-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு வளர்ந்து வரும் முறையான ஒவ்வொரு பருவத்திலும் வளப்பம் மிக்க சிறப்போடு தங்களுடைய குலதெய்வத்திற்குப் பெரிய நிவேதனங்களை வழங்கிக் கூடியுள்ள பெரிய வீரத்தைக் கொண்ட வேடர்கள் எல்லோருக்கும் செல்வம் மிகுதியாக உள்ள ஆரவாரம் பொங்கி எழச் செழிப்பான களிப்பும் மகிழ்ச்சியும் உண்டாகுமாறு செய்து அருமையோடு அந்த ஆண் குழந்தையைப் பெற்றதனால் உண்டான பேரன்பும் தோன்றுமாறு அவனை வளர்த்து வந்தார்கள்.' பாடல் வருமாறு:

"வருமுறைப் பருவம் தோறும் வளமிகு சிறப்பில் தெய்வப்
பெருமடை கொடுத்துத் தொக்க பெருவிறல் வேடர்க் கெல்லாம்
திருமலி துழனி பொங்கச் செழுங்களி மகிழ்ச்சி செய்தே
அருமையிற் புதல்வர்ப் பெற்ற ஆர்வமும் தோன்ற உய்த்தார்."

வரு - இவ்வாறு வளர்ந்து வரும். முறை - முறையான. ப்: சந்தி. பருவம் தோறும் - ஒவ்வொரு பருவத்திலும். வளம் - வளப்பம்; செல்வ வளம். மிகு - மிக்க. சிறப்பில் - சிறப்போடு; உருபு மயக்கம். தெய்வ - தங்களுடைய குலதெய்வத்திற்கு. ப்: சந்தி. பெரு - பெரிய. நிவேதனங்களை; ஒருமை பன்மை மயக்கம். கொடுத்து - வழங்கி. த்: சந்தி. தொக்க - கூடியுள்ள. பெரு - பெரிய. விறல் - வீரத்தைக் கொண்ட. வேடர்க்கு எல்லாம் - வேடர்கள் எல்லோருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். திரு - செல்வம். மலி - மிகுதியாக உள்ள. துழனி - ஆரவாரம். பொங்க - பொங்கி எழ. ச்: சந்தி. செழும் - செழிப்பான. களி - கள்ளை உண்ணும் களிப்பையும். மகிழ்ச்சி விருந்து உணவை உண்ணும் மகிழ்ச்சியையும். செய்து - அவர்கள் அடையுமாறு புரிந்து. ஏ: அசைநிலை. அருமையின் - அருமையாக. புதல்வர் - குமாரரை. ப்: சந்தி. பெற்ற - ஈன்றெடுத்த. ஆர்வமும் - பேரன்பும். தோன்ற - தோன்றுமாறு. உய்த்தார் - அவரை வளர்த்து வந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து உள்ள 20-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தப் புதல்வருக்கு ஒவ்வொரு வருடமும் தங்களுக்கு எதிரில் அடைந்து கழிய அவர் நடக்கும் கால்களின் தளர்ச்சி அகன்று அணிகலனாக, சிறிய சிவந்த தலை மயிரில் புலிநகங்களால் செய்த சுட்டியை அணிந்து, மூண்டு எழுகின்ற கோபத்தையும் சிவந்த கண்களையும்

பெற்ற முள்ளம் பன்றியின் முட்களை வெட்டிக் கோவை யாகக் கோத்த கயிற்றால் கட்டிய புலியின் பற்களாகிய தாலியை அழகு கிளர்ந்து எழும் அவருடைய மார்பில் தொங்கச் செய்து.' பாடல் வருமாறு:

"ஆண்டெதிர் அணைந்து செல்ல விடும் அடித் தளர்வு நீங்கிப்
பூண்டிகழ் சிறுபுன் குஞ்சி புலியுகிர்ச் சுட்டி சாத்தி
மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் அரிந்து கோத்த
நாண்டரும் எயிற்றுத் தாலி நலம்கிளர் மார்பில் தூங்க."

இந்தப் பாடல் குளகம். ஆண்டு - அந்தப் புதல்வருக்கு ஒவ்வொரு வருடமும். எதிர் - தங்களுக்கு எதிரில். 'தங்கள் என்றது நாகனையும் தத்தையையும். அணைந்து - அடைந்து. செல்ல - கழிய. விடும் - நடக்கும். அடி - திருவடிகளில்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தளர்வு - தளர்ச்சி. நீங்கி - அகன்று; தளர் நடைப்பருவம் அகன்று என்றவாறு. ப்: சந்தி. பூண் - அணிகலனாக. திகழ் - விளங்கும். சிறு - சிறிய. புன் - சிவந்த. குஞ்சி - தலைமயிரில். புலி - புலியினுடைய. உகிர் - நகங்களால் செய்த; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சுட்டி - சுட்டியை. சாத்தி - அணிந்து. மூண்டு எழு - மூண்டு எழுந்து. சினத்து - கோபத்தையும். ச்: சந்தி. செம் - சிவந்த. கண் - கண்களையும் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். முளவு - முள்ளம் பன்றியினுடைய. முள் - முட்களை; ஒருமை பன்மை மயக்கம். அரிந்து - வெட்டி.' கோத்த - கோவையாகக் கோத்தச் செய்த. நாண் தரும் - கயிற்றோடு சேர்ந்து விளங்கும். எயிற்று - புலியினுடைய பற்களால் செய்த; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாலி - தாலியை. நலம் - அழகு. கிளர் - கிளர்ந்து விளங்கும். மார்பில் அவருடைய மார்பில். தூங்க - தொங்கச் செய்து.

பின்பு வரும் 21-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'பச்சை நிறத்தைப் பெற்ற ஒளியை வீசும் பாசிமணிகளோடு கட்டிய பல மணிகளைக் கொண்ட சலங்கை இடுப்பில் ஒலிக்கத் தங்கக் காசுகளோடு தொடுத்து அமைத்த காப்புக்களாகிய ஆபரணங்களை அணிந்து அரை நாணையும் கட்டிவிட்டு ஒளியைப் பெற்ற யானைத் தந்தத்தினால் செய்த தண்டைகளைத் திருவடிகளில் அணிந்து, நெருங்கிய மாணிக்கங்களால் ஆகிய காதணிகள் செவிகளில் மின்னலைப் போல ஒளியை வீச, குற்றமற்ற தம்முடைய திருக்கோலத்தைக் காண்பித்துத் தெருவில் அந்தத் திண்ணனார் விளையாடும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"பாசொளி மணியோ டார்த்த பன்மணிச் சதங்கை ஏங்கக்
காசொடு தொடுத்த காப்புக் கலன்புனை அரைஞாண் சேர்த்தித்
தேசுடை மருப்பில் தண்டை செறிமணிக் குதம்பை மின்ன
மாசறு கோலம் காட்டி மறுகிடை ஆடும் நாளில்."

இந்தப் பாடலும் குளகம். பாசொளி - பச்சையான பிரகாசத்தை வீசும். மணியோடு - பாசிமணிகளோடு; ஒருமை பன்மை மயக்கம். ஆர்த்த - கட்டிய. பல் - பல. மணி - மாணிக்கங்களால் செய்த; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சதங்கை - சலங்கை. ஏங்க - இடுப்பில் ஒலிக்க. க்: சந்தி. காசொடு - தங்கக் காசுகளோடு; ஒருமை பன்மை மயக்கம். தொடுத்த - கட்டிய. காப்பு - காப்புக்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். கலன் - ஆபரணங்களை அணிந்து; ஒருமை பன்மை மயக்கம். புனை - இடுப்பில் அணிவதற்குரிய. அரைஞாண் - அரை நாணையும். சேர்த்தி - கட்டிவிட்டு. த்: சந்தி. தேசு - உடை - ஒளியைப் பெற்ற. மருப்பில் - யானைத் தந்தத்தினால் செய்த. தண்டை - தண்டைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். இவை திருவடிகளில் அணிபவை. இவற்றை அணிந்து கொண்டு. செறி - நெருங்கிய. மணி - மாணிக்கங்களாற் செய்த; ஒருமை

பன்மை மயக்கம். க்: சந்தி. குதம்பை - காதணிகள்; ஒருமை பன்மை மயக்கம். மின்ன - செவிகளில் மின்னலைப் போல ஒளியை வீச. மாசு - ஒரு குற்றமும். அறு - அற்ற. கோலம் - தம்முடைய திருக் கோலத்தை. காட்டி - யாவரும் காணுமாறு காண்பித்து. மறுகிடை - வீதியில். ஆடும் - விளையாடும். நாளில் - காலத்தில்.

பிறகு உள்ள 22-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'குளிர்ச்சியை உடைய மலர் மாலையை அணிந்த தம்முடைய தந்தையாகிய நாகனும், அன்னையாகிய தத்தையும் உள்ளங்கள் மகிழ்ச்சியை அடையும் வண்ணம் அவர்களிடம் வந்து புண்ணியமான கங்கையாற்றில் ஓடம் புனலைவிடத் தூயதாகும் தம்முடைய அழகிய வாயிலுள்ள எச்சில் நீரினால் உள்ளே நனைந்து அமுதத்தைப் போல ஊறி ஒழுகி வந்த மழலையாகிய இனிய வார்த்தைகளைப் பேசும் சிவந்த நிறத்தைக் கெண்ட மென்மையான பவளத்தைப் போன்ற சிவந்த அதரங்களைப் பெற்ற வாய் குதப்பிக் கொண்டே அந்தப் புதல்வர் வளர்கிறவர் ஆனார்.' பாடல் வருமாறு:

"தண்மலர் அலங்கல் தாதை தாய்மனம் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாம் திருவாய் நீரில்
உண்ணனைந் தமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்
வண்ணமென் பவளச் செவ்வாய் குதட்டியே வளரா நின்றார்."

தண் - குளிர்ச்சியை உடைய. மலர் அலங்கல் - மலர் மாலையை அணிந்த. தாதை - தம்முடைய தந்தையாகிய நாகனும் - தாய் - தம்முடைய அன்னையாகிய தத்தையும். மனம் - தங்களுடைய உள்ளங்கள்; ஒருமை பன்மை மயக்கம். களிப்ப - மகிழ்ச்சியை அடையும் வண்ணம். வந்து - அவர்களிடம் வந்து. புண்ணிய - புண்ணியமாகிய. க்: சந்தி.

கங்கை - கங்கையாற்றில் ஓடும். நீரில் - புனலைவிட. புனிதம் ஆம் - தூயதாக இருக்கும். திரு - அகிய. வாய் - தம்முடைய வாயில் சுரக்கும். நீரில் - எச்சில் நீரினால்; உருபு மயக்கம். உள் நனைந்து - உள்ளே நனைந்து. அமுதம் - அமுதத்தைப் போல. ஊறி ஒழுகிய - ஊற்றைப் போல ஊறி வெளிவந்த. மழலை - மழலையாகிய. த்: சந்தி. தீம் - இனிமையைக் கொண்ட. சொல் - வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். வண்ண - சிவந்த நிறத்தை உடைய. மென் - மென்மையாகிய. பவள - பவளத்தைப் போன்ற. ச்: சந்தி. செவ் - சிவந்த. வாய் - அதரங்களைப் பெற்ற தம்முடைய வாயை. குதட்டியே - குதப்பிக் கொண்டே. வளரா நின்றார் - வளர்கிறவர் ஆனார். ''கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சம் சொல்லால்'' என வருவதைக் காண்க.

பவள வாய்: ''பவளத்துவர் வாயினாள்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''வனபவள வாய் திறந்து.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பவளக் கனி வாய்ப் பாவை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''பவளத் திருவாயால் அஞ்சேன் என்ன ஆசைப் பட்டேன்.' என்று மாணிக்க வாசகரும், ''அணிமணி முறுவற் பவள வாய்.'' என்று திருமாளிகைத் தேவரும், ''பவளமே திரு வாய்.'', ''பவளவாய் மணியே.'', ''பன்னகா பரணா பவள வாய் மணியே.'', ''பவள வாயவர் பணைமுலையும்.'' என்று கருவூர்த் தேவரும், ''பவளம் செவ்வாய்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''பாலறா மதுர மொழிப் பவளவாயார்.'' ''நாசியும் பவள வாயும் நணிய பேரொளியில் தோன்றும் நலத்தினை.'', ''ப்வளவாய் மடவார்.'', ''என்று சேக்கிழாரும், ''பவளவாயீர் வந்து காணீரே.'' என்று பெரியாழ்வாரும், ''திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ.'' என்று ஆண்டாளும்,

''பவளவாய் கமலச் செங்கண் அச்சுதா.'', ''பவளவாய் அரங்க னார்க்கு.'' என்று தொண்டர் அடிப்பொடி ஆழ்வாரும், ''பவளச் செவ்வாய்ப் பணை நெடுந்தோள்.'', ''பவளவாயாள் என்மடந்தை.'' என்று வேறு ஆழ்வாரும், ''பவளச் செவ்வாயன் என்கோ.'' என்று நம்மாழ்வாரும், ''பவழக் கடிகை பழித்த செவ்வாய்.'' (பெருங்கதை, 2.15:81) என்று கொங்கும் வேளிரும், ''இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திலன்.'', ''பவள வாயார் அமுதன்னார்.'' (சீவகசிந்தாமணி, 658, 1656) என்று திருத்தக்க தேவரும், ''பாகு பொதிபவளம் திறந்து.'', ''பவள வாய்ச்சி தவளவா ணகைச்சி.'' (சிலப்பதிகாரம், 8: 80.12:50) என்று இளங்கோவடிகளும், ''பாலுள பவளச் செவ்வாய் பணைமுலை... மெல்லியல்.'' (உண்டாட்டும் படலம், 60), ''துப்புறழ் துவர்வாயின் தூமொழி மயிலோடும்.'' (வனம் புகு படலம், 26), ''பவளமும் கிடையும்... தவளமென்றுரைக்கும் வண்ணம்... வாய்.'' (நாடவிட்ட படலம், 49) என்று கம்பரும் பாடியருளியவற்றையும், ''பவளச் செவ்வாயோ'' (சம்புவன் வதைப் படலம், 5) என்று உத்தர காண்டத்தில் வருவதையும் காண்க.

அடுத்து வரும் 23-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனார் போர் புரிவதும் கொடுமையான பார்வையைப் பெற்றதும் ஆகிய புலியினுடைய ஆழமான வாயைப் பார்த்து அது மலைக்குகை என்று எண்ணித் தம்முடைய தோற்றப் பொலிவைக் கொண்ட திருக்கரத்தை அந்த வாய்க்கு உள்ளே நீட்ட, அன்புடைய அவருடைய தந்தையாகிய நாகன் அதைப் பார்த்துப் பசுமையான தழைகளைத் தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டு அந்தப் புலியை ஓட்ட, காளஹஸ்தீசுவரருடைய சூரிய சந்திரர்களென்னும் இரண்டு சுடர்களாகிய கண்களுக்கு

உண்டாகம் துன்பத்தை தீர்க்கப் போகும் தம்முடைய அழகு வளரும் கண்களிலிருந்து நீர் பெருகி வருகின்ற துளிகளாகிய முத்துக்களை அவருடைய அன்னையாகிய அந்தத் தத்தை தன்னுடைய வாயால் அவருக்கு முத்தங்களைக் கொடுக்க, அவற்றைப் பெற்றுக் கொண்டு அவர் தம் கண்ணீரைப் போக்கிக் கொண்டு.' பாடல் வருமாறு:

"பொருபுலிப் பார்வைப் பேழ்வாய் முழைஎனப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு பைந்தழை கைக்கொண்டு டோச்ச
இருசுடர்க் குறுக்கண் தீர்க்கும் எழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்தம் அத்தாய் வாய்முத்தம் கொள்ள மாற்றி."

இந்தப் பால் குளகம். பொரு - திண்ணனார் போர் புரிவதும்; வினையாலணையும் பெயர். பார்வை - கொடுமையான பார்வையைப் பெற்றதும்; ஆகுபெயர். ப்: சந்தி. புலி - ஆகிய ஒரு புலியினுடைய. ப்: சந்தி. பேழ் வாய் - ஆழ மான வாயை. முழை - மலைக்குகை. என - என்று எண்ணி; இடைக்குறை. ப்: சந்தி. பொான் - தம்முடைய பொலிவைப் பெற்ற. கை - திருக்கரத்தை. நீட்ட - அந்தப் புலியினுடைய வாய்க்கு உள்ளே நீட்ட. ப்: சந்தி. பரிவு உடை - அவரிடம் அன்பைப் பெற்ற. த்: சந்தி. தந்தை - அவருடைய தகப்பனாகிய நாகன். கண்டு - அதைப் பார்த்து. பைம் பசுமையான. தழை - தழைகளை; ஒருமை பன்மை மயக்கம் கை - தன்னுடைய கையில். க்: சந்தி. கொண்டு - எடுத்துக் கொண்டு. ஓச்ச - அந்தப் புலியை ஓட்ட. இரு சுடர்க்கு காளஹஸ்தீசுவருடைய சூரிய சந்திரர்கள் என்னும் இரண்டு சுடர்களாகிய கண்களுக்கு. சுடர்: ஒருமை பன்மை மயக்கம். உறுகண் - துன்பத்தை. தீர்க்கு - போக்கப் போகும். எழில் - அழகு. வளர் - வளரும். கண் - அவருடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். நீர் மல்கி - நீர் பெருகி. வரு துளி - வருகின்ற துளிகளாகிய; ஒருமை

பன்மை மயக்கம். அத்தாய் - அவருடைய அன்னையாகிய அந்தத் தத்தை. வாய் - தன்னுடைய வாயால். முத்தம் - அவருக்கு முத்தங்களைக் கொடுக்க; ஒருமை பன்மை மயக்கம். கொள்ள - அவற்றைப் பெற்றுக் கொண்டு; எச்சத்திரிபு. மாற்றி - அவர் தம்முடைய கண்ணீரைப் போக்கிக் கொண்டு.

பின்பு உள்ள 24-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனார் உடுக்கினுடைய வடிவத்தில்ட செய்யப் பெற்ற கட்டையை உருட்டிக் கொண்டு அதன் பின்னால் ஓடிக் கட்டிய வேட்டை நாய்களின் கயிறுகளைத் தம்முடைய கையைச் சுற்றிப் பிடித்து அறுத்துவிட்டு வேட்டுவச்சாதி ஆண் குழந்தைகளும் பேதைப் பருவத்தில் உள்ள பெண் குழந்தைகளும் கட்டிய விளையாட்டுச் சிற்றில்களைத் தம்முடைய திருவடிகளாகிய சிறிய தளிர்களால் அழித்துவிட்டுப் பக்கத்தில் வந்து சேர்ந்த சிறுவர்களோடும் குடியிருத்தலை உடைய நெருங்கிய குடிசைகள் உள்ள எல்லா இடங்களிலும் குறுகத் தம்முடைய திருவடிகளை வைத்து நடக்கும் நடையோடு குறும்புகளைப் புரிந்து.' பாடல் வருமாறு:

"துடிக்குற டுருட்டி ஓடித் தொடக்கு நாய்ப் பாசம் சுற்றிப்
பிடித்தறுத் தெயினப் பிள்ளைப் பேதையர் இழைத்த வண்ணடல்
அடிச்சிறு தளிராற் சிந்தி அருகுறு சிறுவ ரோடும்
குடிச்செறி குரம்பை எங்கும் குறுநடைக் குறும்பு செய்து."

இந்தப் பாடலும் குளகம். துடி - திண்ணனார் உடுக்கினுடைய வடிவத்தில் செய்யப் பெற்ற. குறடு - கட்டையை. உருட்டி - உருட்டிக் கொண்டு. ஓடி - அதன் பின்னால் ஓடி. த்: சந்தி. தொடக்கு - கட்டிய. நாய் - வேட்டை நாய்களின்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி.

பாசம் - கயிறுகளை; ஒருமை பன்மை மயக்கம். சுற்றி - தம்முடைய கையைச் சுற்றி. ப்: சந்தி. பிடித்து அறுத்து - பற்றி அறுத்துவிட்டு. எயினப்பிள்ளை - வேட்டுவச்சாதி ஆண் குழந்தைகளும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பேதையர் - அந்தச் சாதியிற் பிறந்த பேதைப் பருவப் பெண் குழந்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். இழைத்த - மணலால் கட்டிய. வண்டல் - விளையாட்டுச் சிற்றில்களை; ஆகுபெயர். அடி - தம்முடைய திருவடிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சிறு - சிறிய. தளிரால் - தளிர்களால்; ஒருமை பன்மை மயக்கம். தளிர் - முற்றாத இலை. சிந்தி - அழித்துவிட்டு. அருகு உறு - தம்முடைய பக்கத்தில் வந்து. சிறுவரோடும் - வேட்டுவச்சாதிச் சிறுவர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். குடி - குடும்பங்கள்; ஒருமை பன்மை மயக்க்ம். ச்: சந்தி. செறி - நெருங்கி வர்ழும். குரம்பை - குடிசைகள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். குறுநடை - தம்முடைய திருவடிகளைக் குறுக வைத்து நடக்கும் நடையோடு க்: சந்தி. குறும்பு - குறும்புகளை; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து.

பிறகு உள்ள 25-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அத்தகைய குறும்புகள் பலவற்றையும் திண்ணனார் புரிந்து, ஐந்து பிராயத்துக்குமேல் உண்டான ஆறாம் பிராயத்தில் புனைந்த அழகைப் பெற்ற கண்ணிகளைத் தங்களுடை தலைகளில் அணிந்து கொண்டிருந்த வேட்டுவச் சாதியிற் பிறந்த சிறிய வலிமையைப் பெற்ற சிறுவர்களோடும் மரக்கிளைகளில் மலர்கள் மலர்ந்திருக்கும் பூஞ்சோலை களுக்குச் சென்று அங்கே விளையாடி நெருங்கி அமைந்த குடும்பங்கள் வாழும் குறிஞ்சி நிலத்து ஊராகிய குறிச்சியைச் சுற்றியுள்ள புனைந்த யானைத் தந்தங்களினாற் செய்த

உழலை மரத்தைப் பெற்ற - வேலிக்கு வெளியில் உள்ள சிறிய காட்டிற்குச் சென்று.' பாடல் வருமாறு:

"அனையன பலவும் செய்தே ஐந்தின்மேல் ஆனஆண்டின்
வனைதரு வடிவார் கண்ணி மறச்சிறு மைந்தரோடும்
சினைமலர்க் காவுள் ஆடிச் செறிகுடிக் குறிச்சி சூழ்ந்த
புனைமருப் புழலை வேலிப் புறச்சிற கானிற் போகி."

இந்தப் பாடலும் குளகம். அனையன - அத்தகைய குறும்புகள். பலவும் - பலவற்றையும். செய்து - திண்ணனார் - புரிந்து. ஏ: அசைநிலை. ஐந்தின்மேல் - ஐந்து பிராயத்தில். வனைதரு - தலையில் அணிகின்ற. வடிவு ஆர் - அழகிய வடிவம் நிரம்பிய. கண்ணி - கண்ணிகளைத் தங்களுடைய. தலைகளில் அணிந்திருந்த; ஒருமை பன்மை மயக்கம். மற - வேட்டுவச் சாதியிற் பிறந்த. ச்: சந்தி சிறு - சிறிய. மைந்த ரோடும் - வலிமையைப் பெற்ற ஆண் பிள்ளைகளோடும்; ஒருமை பன்மை மயக்கம். சினை - மரங்களில் உள்ள கிளைகளில் மலர்ந்த. அந்த மரங்களாவன: வேங்கை மரம், வாகை மரம், புளிய மரம், கடப்ப மரம், மாமரம், பூவரச மரம், பவள மல்லிகை மரம், வில்வ மரம், வாத நாராயண மரம். வேப்ப மரம் முதலியவை. சினை: ஒருமை பன்மை மயக்கம். மலர் - மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. காவுள் - சோலைக்குள் சென்று. ஆடி - அங்கே விளையாடி விட்டு. ச்: சந்தி. செறி - நெருங்கி அமைந்த. குடி - வேடர்களினுடைய குடும்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குறிச்சி - வாழும் குறிஞ்சில் நிலத்து ஊராகிய உடுப்பூரை. சூழ்ந்த - சுற்றியுள்ள. புனை - பூணைக் கட்டிய. மருப்பு - யானைத் தந்தங்களாற் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். உழலை - உழலை மரம் உள்ள; இது போகிறவர்கள் சுழலச் செய்து போன பிறகு மீட்டும் தன் நிலையில் வந்து நிற்கும் மரம். வேலி -

வேலியினுடைய. ப்: சந்தி. புற - வெளியில் உள்ள. ச்: சந்தி. சிறு - சிறிய. கானில் - காட்டுக்கு; உருபு மயக்கம். போகி - சென்று.

பிறகு உள்ள 26-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வேகமாக ஓடம் முயற்குட்டியோடும், காட்டுப் பன்றியின் குட்டி, வளைந்த கோடுகளைக் கொண்ட புலிக்குட்டி, சிவந்த ஓநாயினுடைய வளைந்த காதுகளைப் பெற்ற குட்டி ஆகியவற்றை முடுக்கிய வேகத்தோடு ஓடி அவற்றைத் தொடர்ந்து சென்று, அவை எல்லாவற்றையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு வந்த வீடுகளினுடைய முற்றங்களில் வைத்து வளர்த்த மரங்களினுடைய கூட்டத்தில் கட்டி வளர்க்கின்ற விலங்குகள் கணக்கு இல்லாதன ஆகும்.' பாடல் வருமாறு:

"கடுமுயற் பறழி னோடும் கானஏ னத்தினன் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய் கொடுஞ்செவிச் சாபமான
முடுகிய விசையில் ஓடித் தொடர்ந்துடன் பற்றி முற்றத்
தடுமரத் திரளிற் கட்டி வளர்ப்பன எண்ணிலாத."

கடு - வேகமாக ஓடும். முயற் பறழினோடும் - முயற்குட்டி யோடும். கான ஏனத்தின் - காட்டுப் பன்றியினுடைய. குட்டி - குட்டியை. கொடு - வளைந்த. வரி - கோடுகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குருளை - புலிக்குட்டியையும். செந்நாய் - சிவந்த ஓநாயினுடைய. கொடும் - வளைந்திருக்கும். செவி - காதுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சாபம் - குட்டி. ஆன - ஆகிய விலங்குகளை. முடுகிய - முடுகியுள்ள. விசையில் - வேகத்தோடு; உருபு மயக்கம். ஓடி - அவற்றின் பின்னால் ஓடிச்சென்று. த்: சந்தி. தொடர்ந்து - அவற்றைப் பின் கொண்டு வந்து. முற்றத்து - வீடுகளின் முன் உள்ள

முற்றங்களில்; ஒருமை பன்மை மயக்கம். இடும் - வைத்து வளர்க்கும். மரத்திரள்ில் - மரக்கூட்டங்களில். கட்டி - கட்டிவிட்டு. வளர்ப்பன - வேடர்கள் வளர்க்கும் விலங்குகள். எண் - கணக்கு. இலாத - இல்லாதவை ஆகும்; இடைக்குறை.

அடுத்து வரும் 27-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'மலர்ந்த பகல் நேரம் போன மாலை நேரத்தில் வெண்சிறு கடுகுகளை நெருப்பில் இட்டு உண்டாக்கிய புகையையும் திண்ணனாருடைய திருமேனியில் படச்செய்து, அந்த வேட்டுவச் சாதியிற் பிறந்த முதுமைப் பருவத்தை உடைய குறத்தியாகிய தத்தை அவருக்கு உணவை உண்ணும் வண்ணம் செய்து, பிறகு அவரை எடுத்துக் கொண்டு சென்று கண்களை மூடித் துயிலச் செய்து, இரவு நேரம் விடிந்த பிறகு, மாமிசமாகிய உணவை வழங்கி அவர் செய்யம் விளையாட்டுக்குப் போகுமாறு அனுப்பிவிட்டு, இவ்வாறு சில முறைப்படி வரும் பிராயங்கள் நீங்க, வில்வித்தையைப் பழகும் பருவத்தை அந்தத் திண்ணனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அலர்பகல் கழிந்த அந்தி ஐயவிப் புகையும் ஆட்டிக்
குலமுது குறத்தி ஊட்டிக் கொண்டுகண் துயிற்றிக் கங்குல்
புலரஊன் உணவு நல்கிப் புரிவினை யாட்டின் விட்டுச்
சிலமுறை ஆண்டு செல்லச் சிலைபயில பருவம் சேர்ந்தார்."

அலர் - மலர்ந்த. பகல் - பகல் நேரம். கழிந்த - போன. அந்தி - அந்தியாகிய மாலை நேரத்தில். ஐயவி - வெண் சிறு கடுகுகளை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. புகையும் - நெருப்பில் இட்டு உண்டாக்கிய புகையையும். ஆட்டி - திண்ணனாருடைய திருமேனி முழுதும்படச் செய்து. க்: சந்தி. குல - அந்தக் குடும்பத்தில் பிறந்த. முது - முதுமைப் பருவத்தை அடைந்திருக்கும். குறத்தி - திண்ணனாருடைய

அன்னையாகிய தத்தை என்னும் குறமகள். ஊட்டி - அவருக்கு உணவை வழங்கி உண்ணச் செய்து. க்: சந்தி. கொண்டு - பிறகு அவரை எடுத்துக் கொண்டு சென்று. கண் - கண்களை; ஒருமை பன்மை மயக்கம். துயிற்றி - மூடி உறங்கச் செய்து. க்: சந்தி. கங்குல் - இராத்திரி. புலர விடிய. ஊன் - அந்தக் காலையில் மாமிசமாகிய. உணவு - உணவை. நல்கி - வழங்கி. ப்: சந்தி. புரி - அவர் செய்யும். விளையாட்டின் - விளையாட்டுக்கு. விட்டு - அனுப்பி விட்டு. ச்: சந்தி. சில முறை - இவ்வாறு முறையாகச் சில. ஆண்டு - பிராயங்கள்; ஒருமை பன்மை மயக்கம். செல்ல - கழிய. ச்: சந்தி. சிலை - வில் வித்தையை; ஆகுபெயர். பயில் - பழகும். பருவம் - பருவத்தை. சேர்ந்தார் - அந்தத் திண்ணனார் அடைந்தார்.

பின்பு உள்ள 28-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனாருடைய தகப்பனாகிய நாகனும் தன்னுடைய வலிமையைப் பெற்ற புதல்வராகிய அந்தத் திண்ணனாரைப் பார்த்துத் தன்னுடைய பருத்த தோள்களால் தன்னுடைய உள்ளம் உள்ளே மகிழ்ச்சியை அடையும் வண்ணம் அவரைத் தழுவிக் கொண்டு, அவருக்கு வில் வித்தையாகிய வேலையைப் பழக்க விரும்பி, முன்பு அந்தத் துறையில் தேர்ச்சி மிகுதியாக உள்ள முதியவராகிய ஒருவரை அழைத்துக் கொண்டு வந்து சேர்த்து, அந்த முதியவருக்குத் தெரிய வந்து நாளைக் குறிப்பிட்டது முதலிய எல்லாவற்றையும் வேடர்களுக்கு ஆள்மூலம் கூறி அனுப்பினான்.' பாடல் வருமாறு:

''தந்தையும் மைந்தனாரை நோக்கித்தன் தடித்த தோளால்
சிந்தையுள் மகிழப் புல்லிச் சிலைத்தொழில் பயிற்ற வேண்டி
முந்தைஅத் துறையில் மிக்க முதியரை அழைத்துக் கூட்டி
வந்தநாட் குறித்த தெல்லாம் மறவர்க்குச் சொல்லி விட்டான்.'

தந்தையும் - திண்ணனாருடைய தகப்பனாகிய நாகனும். மைந்தனாரை - வலிமையைப் பெற்ற தன்னுடைய புதல்வராகிய அந்தத் திண்ணனாரை. நோக்கி - பார்த்து. த்: சந்தி. தன் - தன்னுடைய. தடித்த - பருத்த. தோளால் - தோள்களால்; ஒருமை பன்மை மயக்கம். சிந்தை - தன்னுடைய உள்ளம். உள் - உள்ளே. மகிழ - மகிழ்ச்சியை அடையுமாறு. ப்: சந்தி. புல்லி - அவரைத் தழுவிக் கொண்டு. ச்: சந்தி. சிலைத் தொழில் - வில்வித்தையாகிய வேலையை. பயிற்ற - கற்பிக்க. வேண்டி - விரும்பி. முந்தை - முன்பே. அத்துறையில் - அந்த வில்வித்தை என்னும் துறையில். மிக்க - மிக்க தேர்ச்சியைப் பெற்ற. முதியரை - ஒரு கிழவரை. அழைத்து - அழைத்துக் கொண்டு வந்து. க்: சந்தி. கூட்டி - சேர்த்து. வந்த - அந்த முதியவருக்குத் தெரிய வந்த. நாள் - நல்ல நாளை. குறித்தது - குறிப்பிட்ட முதலிய. எல்லாம் - எல்லாவற்றையும். மறவர்க்கு - வேடர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சொல்லி - ஆள் மூலம் கூறி. விட்டான் - அனுப்பினான்.

பின்பு உள்ள 29-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'வேடர்களுடைய அரசனாகிய நாகன் தங்கள் தலைவனும் குலதெய்வமும் ஆகிய வெற்றியைப் பெற்ற முருகப் பெருமான் வழங்கிய திருவருளால் தான் பெற்றெடுத்தவனும் அறிஞர்களைப் போல மிகுதியான சிறப்பை உடைய செயல்களைச் செய்யும் அந்தத் திண்ணன் வில்லாயுதத்தைப் பிடிப்பதைக் கற்கின்றான் என்று அறிந்து அசைகின்ற இயல்பை உடைய உடுக்கை அடித்து அந்தச் செய்தியை அறிவித்து முழக்கிய பெரிய சத்தத்தைக் கேட்டு, உடுப்பூருக்குப் பக்கத்தில் உயரமாக உள்ள மலைகளை ஆட்சி புரியும் வேட்டுவச் சாதியிற் பிறந்த தலைவர்கள் எல்லோரும்.' பாடல் வருமாறு:

''வேடர்தம் கோமான் நாதன் வென்றிவேள் அருளாற் பெற்ற
சேடரின் மிக்க செய்கைத் திண்ணன்விற் பிடிக்கின் றான்என்
றாடியல் துடியும் சாற்றி அறைந்தபே ரோசை கேட்டு
மாடுயர் மலைகள் ஆளும் மறக்குலத் தலைவர் எல்லாம்.''

இந்தப் பாடல் குளகம். வேடர் தம் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. கோமான் - அரசனாகிய நாகன். நாதன் - தங்கள் தலைவனும் குலதெய்வமுமாகிய. வென்றி - பகைவர்களை வெல்லும் வெற்றியைப் பெற்ற. வேள் - முருகப் பெருமான்; செவ்வேள். அருளால் - வழங்கிய திருவருளினால். பெற்ற - பெற்றெடுத்த. சேடரின் - அறிஞர்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். மிக்க - அறிவு மிகுதியாக அமைந்த. செய்கை - செயல்களைச் செய்யும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. திண்ணன் - திண்ணன் என்னும் சிறுவன். வில் பிடிக்கின்றான் - வில்லைப் பிடித்துப் பயன்படுத்தும் வித்தையைக் கற்றுக் கொள்கிறான். என்று - என. ஆடு - அசையும். இயல் - இயல்பைப் பெற்ற. துடியும் - உடுக்கையும் அடித்து. சாற்றி - அந்தச் செய்தியை அறிவித்து. அறைந்த - முழக்கிய. பேரோசை கேட்டு - பெரிய சத்தத்தைக் கேட்டு. மாடு - உடுப்பூருக்குப் பக்கத்தில். உயர் - உயரமாக உள்ள. மலைகள் - மலைகளை. ஆளும் - ஆட்சி புரியும். மறக்குல - வேட்டுச் சாதியிற் பிறந்த. த்: சந்தி. தலைவர் - தலைவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாரும்.

பிறகு வரும் 30-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'மலையில் தோன்றும் மாணிக்கங்களும், தங்கமும், முத்துக்களும், புலியினுடைய தோலும், கொலையைச் செய்யும் ஆண் யானையின் தந்தங்களும், மயிற் பீலிகளினுடைய குவியலும், தேனும், தொலைதல்

இல்லாத பல வகையான கள்ளும், மாமிசமும், பல வகையான பழங்களும், கிழங்குகளும் சேர வில்லைப் பிரயோகம் செய்து பழகிய வேடர்கள் எடுத்துக் கொண்டு ஒவ்வொரு திசையிலும் நெருக்கமாக இருக்குமாறு வந்து சேர்ந்தார்கள்.' பாடல் வருமாறு:

"மலைபடு மணியும் பொன்னும் தரளமும் வரியின் தோலும்
கொலைபுரி களிற்றுக் கோடும் பீலியின் குவையும் தேனும்
தொலைவில்பல் நறவும் ஊனும் பலங்களும் கிழங்கும் துன்றச்
சிலைபயில் வேடர் கொண்டு திசைதொறும் நெருங்க வந்தார்."

மலை - மலையில். படு - தோன்றும். மணியும் - மாணிக்கங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்னும் - தங்கத்தையும். தரளமும் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வரியின் - புலியினுடைய. தோலும் - தோலையும். கொலைபுரி - கொலையைச் செய்யும். களிற்று - ஆண் யானையினுடைய. க்: சந்தி. கோடும் - தந்தங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பீலியின் - மயிற் பீலிகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குவையும் - குவியலையும். தேனும் - தேனையும். தொலைவு - முடிதல். இல் - இல்லாத; கடைக்குறை. பல் - பல வகையான. நறவும் - கள்ளுக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், அரிசியால் உண்டாக்கிய கள் முதலியவை. ஊனும் - பலவகை மிருகங்களினுடைய மாமிசங்களும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த விலங்குகளாவன: மான், காட்டுப் பன்றி, முயல், காட்டுப் பசு முதலியவை. பலங்களும் - பலவகையான பழங்களையும்; அவையாவன: பூவன் வாழைப்பழம், ரஸ்தாளி வாழைப்பழம், பேயன் வாழைப்பழம், செவ்வாழைப்பழம், கருவாழைப்பழம், மொந்தன் வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம்,

முந்திரிப்பழம், இலந்தைப்பழம் முதலியவை. கிழங்கும் - பலவகையான கிழங்குகளையும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: வள்ளிக் கிழங்கு, மரவள்ளிக் கிழங்கு, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, கூவைக் கிழங்கு முதலியவை. துன்ற - ஒன்றாகச் சேர்ந்து இருக்க. ச்: சந்தி. சிலை - வில்லாயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். பயில் - பயன்படுத்திப் பழகிய. வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கொண்டு - மேலே கூறியவற்றை எடுத்துக் கொண்டு. திசைதொறும் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வட கிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் திசைகள் ஒவ்வொன்றிலும். திசை: ஒருமை பன்மை மயக்கம். நெருங்க - நெருங்கியிருக்கும் வண்ணம். வந்தார் - வந்து சேர்ந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

*அடுத்து வரும் 31-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'மிகுதியாகத் தாங்கள் கொண்டு வந்த மாணிக்கங்கள் முதலிய வளங்கள் யாவும் நிரம்பியிருக்க, ஒப்பு இல்லாத சிறிய ஊராகிய உடுப்பூரினுடைய எல்லைக்குள் அடங்காதவாறு கூட்டமாகக் கூடிக்கொண்டு அந்த வேடர்கள் கொண்டு வந்து சேர்த்தார்கள்; ''எல்லா இடங்களிலும் வாழும் பல பெரிய உறவினர்களும் வாழ்த்துமாறு தங்கள் குலதெய்வத்திற்கு வழிபடுவதற் குரிய கடமைகள் பலவற்றையும் புரிந்து, வில்விழாவைக் கொண்டாடுவீர்களாக.'' என்று வேடர்களின் அரசனும் திண்ணனாருடைய தந்தையும் ஆகிய நாகன் வேடர்களிடம் கூறினான்.' பாடல் வருமாறு:*

''மல்கிய வளங்கள் எல்லாம் நிறைந்திட மாறில் சீறூர்
எல்லையில் அடங்கா வண்ணம் ஈண்டினர் கொணர்ந்தார்; எங்கும்,
'பல்பெருங் கிளைஞர் போற்றப் பராய்க்கடன் பலவும் செய்து
வில்விழா எடுக்க.' என்று விளம்பினான் வேடர் கோமான்.''

மல்கிய - மிகுதியாகத் தாங்கள் கொண்டு வந்து சேர்த்த. வளங்கள் - மாணிக்கங்கள் முதலிய வளங்கள். (இவை இன்ன என்பதுமுன் பாடலில் சொல்லப்பட்டன) எல்லாம் - யாவும். நிறைந்திட - நிரம்பியிருக்க. மாறு - தனக்கு ஒப்பு. இல் - வேறு இல்லாத; கடைக்குறை. சீறூர் - சிறிய ஊராகிய உடுப்பூரினுடைய. எல்லையில் - எல்லைக்குள். அடங்கா வண்ணம் - அடங்காதவாறு. ஈண்டினர் - கூட்டமாகக் கூடியவர்களாய்; முற்றெச்சம்; ஒருமை பன்மை மயக்கம். கொணர்ந்தார் - அந்த வேடர்கள் கொண்டு வந்து சேர்த்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். பல் - பல. பெரும் - பெரிய. கிளைஞர் - உறவினர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்ற - வாழ்த்துமாறு. ப்: சந்தி. பராய்க் கடன் - தங்கள் குலதெய்வத்தை வழிபடுவதற்குரிய கடமைகள்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: பிரப்பரிசி வைத்தல், அடிக்கும் மணியை வைத்தல், தினை முதலிய நிவேதனப் பொருள்களை வைத்தல், சாம்பிராணியை வைத்தல், கற்பூரத்தை வைத்தல், வெற்றிலை பாக்குக்களை வைத்தல் முதலியவை.. பலவும் - பலவற்றையும். செய்து - புரிந்து. வில்விழா - வில் விழாவை. எடுக்க - கொண்டாடு வீர்களாக. என்று - என. வேடர் - வேடர்களினுடைய. கோமான் - அரசனும் திண்ணனாருடைய தந்தையுமாகிய நாகன். விளம்பினான் - வேடர்களிடம் கூறினான்.

அடுத்து வரும் 32-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு பல பொருள்களைத் தக்க முறையில் சேர்த்து வைத்துக் கொண்டு பலவகை ஆயுதங்களைத் தொழிலாளர்கள் தங்கள் கைகளில் எடுத்துக் கொள்ள, தேன் மலரும் கொன்றை மலர் மாலையை அணிந்தவராகிய

காளஹஸ்தி ஈசுவரர் ஏந்தியிருக்கும் அழகிய வில் ஆகிய சிவந்த தங்கத்தால் அமைந்த மேரு என்னும் மலையானது பாற்கடலில் புகுந்து கடைந்தபோது ஆலகால விடத்தை உண்டாக்க அந்தக் காளஹஸ்தி ஈசுவரருக்கே பின்பும் காட்டில் வாழும் பன்றியின் மாமிசத்தைத் திரு அமுதாகச் செய்யப் போகும் திண்ணனாருடைய வில்லுக்குக் காப்புக் கட்டி வேடர்கள் வைத்தார்கள்.' பாடல் வருமாறு:

"பான்மையிற் சமைத்துக் கொண்டு படைக்கலம் வினைஞர் ஏந்தத்
தேனலர் கொன்றை யார்தம் திருச்சிலைச் செம்பொன் மேரு
வானது கடலின் நஞ்சம் ஆக்கிட அவர்க்கே பின்னும்
கானஊன் அமுதம் ஆக்கும் சிலையினைக் காப்புச் சேர்த்தார்."

பான்மையில் - இவ்வாறு பல பொருள்களைத் தக்க முறையில். சமைத்துக் கொண்டு - சேர்த்து வைத்துக் கொண்டு. படைக்கலம் - பல வகையான ஆயுதங்களை; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: வாள், ஈட்டி, வில், அம்பு, கோடரி முதலியவை. வினைஞர் - தொழிலாளர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஏந்த - தங்களுடைய கைகளில் எடுத்துக் கொள்ள. த்: சந்தி. தேன் அலர் - தேன் மலரும். கொன்றையார்தம் - கொன்றை மலர் மாலையை அணிந்தவராகிய காளஹஸ்தி ஈசுவரருடைய; தம்: அசைநிலை. திரு - அழகிய. ச்: சந்தி. சிலை - வில் ஆகிய. செம் - சிவந்த. பொன் - தங்கத்தால் அமைந்த. மேருவானது - மேரு என்னும் மலையானது. கடலின் - பாற்கடலில் தேவர்களும் அசுரர்களும் நட்டுக் கடைந்த போது. நஞ்சம் - ஆலகால விடத்தை. ஆக்கிட - எழும்படியாகச் செய்ய; உண்டாக்க. அவர்க்கே - அந்தக் காளஹஸ்தி ஈசுவரருக்கே. பின்னும் - பின்பும். கான - காட்டில் வாழும். ஊன் - பன்றியின் மாமிசத்தை. அமுதம் - திருவமுதாக. ஆக்கும் - செய்யப் போகும். சிலையினை -

திண்ணனாருடைய வில்லுக்கு; உருபு மயக்கம். க்: சந்தி. காப்பு - காப்புக் கட்டி. ச்: சந்தி. சேர்த்தார் - வேடர்கள் வைத்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 33-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனாருடைய வில்லுக்குக் காப்புக் கட்டும் உறுதியான புலியின் நரம்புகளால் அமைத்த அழகு மிக்க காப்பாகிய நல்ல கயிற்றை நாகனார் பெற்றெடுத்த தேவர்களினுடைய சாதியும் விளங்குவதற்கு அருமையான குணக் குன்றாகிய திண்ணனாருடைய அழகைப் பெற்ற முன் கையில் கட்டி மலையில் வாழும் மக்கள் ஆகிய குறவர்கள் எல்லோரும் வாழ்த்துக்களை எடுத்துக் கூறினார்கள்.' பாடல் வருமாறு:

"சிலையினைக் காப்புக் கட்டும் திண்புலி நரம்பிற் செய்த
நலம்மிகு காப்பு நன்னாண் நாகனார் பயந்த நாகர்
குலம்விளங் கரிய குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி
மலையுறை மாக்கள் எல்லாம் வாழ்த்தெடுத் தியம்பி னார்கள்."

சிலையினை - திண்ணனாருடைய வில்லுக்கு; உருபு மயக்கம். க்: சந்தி. காப்புக்கட்டும் - காப்பைக் கட்டும். திண் - உறுதியான. புலி - புலியினுடைய. நரம்பின் - நரம்புகளால்; ஒருமை பன்மை மயக்கம். செய்த - அமைத்த. நலம் - அழகு. மிகு - மிக்க. காப்பு - காப்பாகிய. நல் - நல்ல. நாண் - கயிற்றை. நாகனார் - நாகனார் என்னும் வேடர். பயந்த - பெற்றெடுத்த. நாகர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலம் - சாதியும். விளங்கரிய - விளங்குவதற்கு அருமையான. விளங்கரிய - விளங்க அரிய; தொகுத்தல் விகாரம். குன்றின் - குணக்குன்றாகிய திண்ணனாருடைய. கோலம் - அழகைப் பெற்ற. முன்கையில் சேர்த்தி - முன்கையில் கட்டி. மலை உறை -

மலையில் தங்கி வாழும். மாக்கள் - மக்களாகிய குறவர்கள். எல்லாம் - எல்லோரும். வாழ்த்து - வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்து இயம்பினார்கள் - எடுத்துக் கூறினார்கள்.

வீரருக்குக் குன்று உவமை: ''வலஞ்சுழியின் மாமலையை.'', ''கருவரை அனைய மேனி.'', ''வரைகள் ஒத்தே உயர்ந்த மணிமுடி அரக்கர் கோனை.'', ''பவளக் குன்றே.'', ''வெள்ளிக் குன்றதுபோலப் பொலிந்து.'', ''முக்கண் பொன்னெடும் குன்றம்.'', ''மலை ஒப்பானை.'', ''மண்ணாகி விண்ணாகி மலையுமாகி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''திருமேற்றளி உறையும் மலையே.'', ''கடம்பூர் மலையே.'', ''மாணிக்கத்தின் மலைபோல வருவார்.'', ''குறைவிலா நிறைவே குணக்குன்றே.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி.'', ''மன்னிய திருவருள் மலையே போற்றி.'', ''மருவிய கருணை மலையே போற்றி.'', ''ஆடகச்சீர் மணிக்குன்றே.'', ''மாலமுதப் பெருங்கடலே மலையே.'', ''மாலறியா நான்முகனும் காணா மலையினை.'', ''அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே.'', ''ஈறிலாக் கொழுஞ் சுடர்க் குன்றே.'', ''தீதிலா நன்மைத் திருவருட் குன்றே.'', ''சுடர்பொற் குன்றை.'', ''குன்றே அனையாய்.'' என்று மாணிக்க வாசகரும், ''தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே.'', ''நீறணி பவளக் குன்றமே.'', ''குணக்குன்றே என்னும்.'' என்று திருமாளிகைத் தேவரும், ''மற்றவர் அறியா மாணிக்க மலையை.'', ''அடியார்க் கெளியதோர் பவளமால் வரையை.'', ''கனகக் குன்றென வரும் கள்வன்.'' என்று சேந்தனாரும், ''முக்கண் வளரொளி மணிநெடுங் குன்றே.'', ''கனகமே வெள்ளிக் குன்றமே.'', ''செம்பொனே பவளக்

குன்றமே.'' என்று கருவூர்த் தேவரும், ''பொன்னார் குன்றம் ஒன்று வந்து நின்றது போலும்.'' என்று கண்டராதித்தரும், ''பவளமால் வரையை.'', ''வளர்பொன் மலையுள் வயிர மடைபோல் வலக்கை கவித்து நின்றளவில் பெருமை அமரர் போற்ற அழகன் ஆடுமே.'' என்று திருவாவியமுதனாரும், ''தானே தடவரை தண்கடலாமே.'', ''அருவரையாய் நின்றருள் புரிந்தானே.'', ''மலையாய் நிற்கும்.'', ''மன்று மலைபோல் மதவாரணத்தின்மேல்... இருந்தவர்.'' என்று திருமூலரும், ''மாலோடு மீண்டிசைந்தால், என்போலும் காண்பார்கட் கென்றிரேல் - தன் போலும், பொற்குன்றும் நீலமணிக் குன்றும், தாமுடனே, நிற்கின்ற போலும் நெடிது.'' என்று காரைக்கால் அம்மையாரும், ''மால்வரை நீயே.'' என்று நக்கீர தேவநாயனாரும், ''திருவளர் பவளப் பெருவரை மணந்த, மரகத வல்லி போல ஒரு கூறிமையச் செல்வி பிரியாது விளங்க.'', ''பவள மால்வரைப் பணைக்கை போந்தனைய தழைசெவி எண்டோள் தலைவன்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''நாரையூர் மன்னும் பொருப்பை.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''குன்றொன்று பேருருவம் கொண்டாற் போலும் குஞ்சரத்தோன்.'' என்று உமாபதி சிவமும், ''கருவரை ஒருதனுவொடு விசைகடுகி யதென.'', ''வீரட்டானத் திருந்த செம்பவளக் குன்றை.'' என்று சேக்கிழாரும், ''இருமலை போல் எதிர்ந்த மல்வர்.'' என்று பெரியாழ்வாரும், ''தடவரையின் மீதே சரற்கால சந்திரன், இடவரவில் வந்தெழுந்தாலே போல நீயும், வடமதுரை யார் மன்னன் வாசுதேவன் கையில், குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ்சங்கே.'' என்று ஆண்டாளும், ''பச்சை மாமலை போல் மேனி.'' என்று தொண்டரடிப் பொடி ஆழ்வாரும், ''புனிர்மருதம் இறநடந்த பொற்குன்றினை.'', ''நீலத்தரை மாமணி நிகழக்கிடந்து போல், அரவணை, வேலைத்

தலைக்கிடந்தாய்.'', ''குன்றமும் வானும் மண்ணும்... ஆய எந்தை.'', ''மலைகளும் விசும்பும்... தானாய் நின்ற எம்பெருமான்.'', ''மலைகளுமாய் ஏர் கெழும் உலகமும் ஆகி... நான்மறை ஆனவனே.'', ''விண்ணும் மலையும் வேதமும் வேள்வியும் ஆயினான்.'', ''நின்ற வரையும் கிடந்த கடலும்... நின்ற அம்மானார்.'', ''இமையோர் தொழும் பொன் செய்மால் வரையை மணிக்குன்றினை.'', ''தென்னழுந்தை மன்னி நின்ற அஞ்சனக் குன்றம்.'', ''பெருமால் வரை உருவா.'', ''குருமா மணிக்குன்றினை.'', ''மண்ணினை மலையை.'', ''கருவரைபோல் நின்றானை.'', ''நீள் வரையே ஒக்குமால்.'', ''சேயிருங் குன்றம் திகழ்ந்த தொப்பச் செவ்விய வாகி மலர்ந்த சோதி.'', ''அஞ்சன மாலையும் யேயும் ஒப்பர்.'', ''கொண்டல்நன் மால்வரையேயும் ஒப்பர்.'', ''ஏழு மலை கடலேழும் ஆய எம் அடிகள்.'', ''குன்றுபோல ஆடுகின்றோம்.'', ''குன்றம் அன்னார் ஆடி உயந்த.'' என்று திருமங்கையாழ்வாரும், ''வெற்பும்... திருமால்.'' என்று பொய்கை ஆழ்வாரும், ''கருவரை மண்... ஆவானும் சென்று.'' என்று பூதத்தாழ்வாரும், ''மால்வரையும் எண்டிசையும்... ஆய இறை.'', ''மைபோல் நெடுவரைவாயத், தாழும் அருவி போல் தார்கிடப்ப.'', ''இமம் சூழ்மலையும் இருவிசும்பும் காற்றும், அமம் சூழ்ந்தற விளங்கித் தோன்றும்.'' என்று பேயாழ்வாரும், ''நீயே எரிசுடரும் மால்வரையும்.'' என்று திருமழிசை ஆழ்வாரும், ''நீலத் தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள் போலப் பொலிந்து.'', ''வண்ணம் கரியதோர் மால்வரை.'', ''திருமால் உருவொக்கும் மேரு.'', ''திகழ்பசும் சோதி மரகதக் குன்றம்.'' என்று நம்மாழ்வாரும், ''பொன்மலை போல் நின்றவன்.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''மலையே திருவுடம்பு.'', ''குன்றங்கள் அனைத்து மென்கோ.'', ''நின்ற குன்றத்தினை நோக்கி

நெடுமாலே வாவென்று கூவும்.'', ''எரியே பவளக் குன்றே.'', ''சேண் சுடர்க் குன்றன்ன செஞ்சுடர் மூர்த்திக்கு.'', ''திகழும் மணிக்குன்றம் ஒன்றே ஒத்து நின்றான்.'', ''கருமாணிக்க மலை.'', ''என்று நம்மாழ்வாரும், ''குன்றன்னார்.'' (திருக்குறள், 898) என்று திருவள்ளுவரும், ''மலை பொறுத்தன்ன மகனையும் தாங்கி.'' (பெருங்கதை, 5.1: 201) என்று கொங்கு வேளிரும், ''கார்கெழு குன்றனையான்.'', ''குன்றனையான் பதம் கூற வலித்தான்.'', ''குன்றனான் உரைப்பக்கேட்டே.'', ''குன்றனான் சிந்திக்கின்றான்.'', ''மாமணிக் குன்றனான்.'', ''மல்லல் மலையனைய மாதவரை.'', (சீவகசிந்தாமணி, 224, 244, 1437, 1625, 1994, 2789) என்று திருத்தக்க தேவரும், ''மலையனைய நிலையுடைய மாதவர்கள்.'' (மேருமந்தர புராணம், சமவ சரணச் சருக்கம், 60) என்று அதன் ஆசிரியரும், ''மலையென விழிதுயில் வளரும் மாமுகில்.'', ''தெய்வவான் மரகத மலையினை வழுத்தி.'', ''பொன்வரை இழிவதோர் புயலின் பொற்புற.'', ''மாதவக் குன்றினை எறிந்தனன்.'' (திருவவதாரப் படலம், 6, 12, 16, 19), ''குன்றுபோற் குணத்தான்.'' (வேள்விப் படலம், 58), ''நீலமா ல்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை போல் வேயிரு புடையினும் சாமரை புரள.'' (அகலிகைப் படலம், 11), ''அஞ்சனக் குன்றம் அன்ன அழகனும்.'' (தைல மாட்டு படலம், 52), ''குன்றெழுந்து சென்றதெனு.'' (குகப் படலம், 28), ''மலை எடுத்த தனிமலையே.'' (சூர்ப்பணகைப் படலம், 101), ''மலை மிசை மலையினம் வருவலே மலைத்தலை மிசைத்தலை மிசைத் தாவிச் சென்றனர்.'' (கரன் வதைப் படலம், 55), ''குன்றினடி வந்துபடி கொண்டலென மன்னன் பொன்றிணி கருங்குழல் விழுந்தனள் புரண்டாள்.'' (மாரீசன் வதைப் படலம், 45), ''மாருதி குன்று போல நின்றிருகை கூப்பினான்.'' (மராமரப்

படலம், 74), ''மாமலையின்மேல் உரும் இடித்தென்ன வான் மண்ணொடும் குலைய மாதிசைகளும் செவிடுறக் குத்தினான்.'' (துந்துபிப் படலம், 50), ''குன்றோடு குன்றொத்தனர்.'' (வாலிவதைப் படலம், 37), ''குன்றுறழ் நெடும்படை அடைந்த கூறுலாம்.'' (கிட்கிந்தைப் படலம், 140), ''குன்றனைய தாயதொரு பேருவகை கொண்டான்.'' (பிலம் நீங்கு படலம், 54), ''மலையே போல்வான்.'' (ஆறுசெல் படலம், 2), ''குன்றென நடந்தவர் குறுகல் மேயினான்.'' (சம்பாதிப் படலம், 22), ''மேருகிரிக்கும் மீதுற நிற்கும் பெருமெய்யீர்.'' (மகேந்திரப் படலம், 12), ''அனைவரும் மலையென நின்றார்.'' (கிங்கரர் வதைப் படலம், 15), ''குன்றுபோல் நெடுமாருதி.'' (அட்சகுமாரன் வதைப் படலம், 50), ''மைந்நாகம் என்ன நின்ற குன்றையும் மரபின் எய்தி.'', ''குன்றெனப் பணிந்தனன்.'' (திருவடி தொழுத படலம், 2, 3, 6), ''மலைகளிற் புரண்டு வீழ.'' (இரணியன் வதைப் படலம், 141), ''மொய்தவழ் கிரிகள் மற்றும் பலவுடன் முடுகிச் செல்ல, மைதவழ் கிரியும் மேருக் குன்றமும் வருவ தென்னச், செய்தவம் பயந்த வீரர் திரள் மரம் ஏழும் தீய, எய்தவன் இருந்த சூழல் இருவரும் எய்தச் செய்றார்.'', ''அங்கதன் மருங்கு காப்ப... விற்கை வடவரை பாங்கு நிற்பக், கார்க்கடல் கமலம் பூத்த தெனப்பொலிவானைக் கண்டான்.'', ''செங்கண் அஞ்சன மலை.'', ''அரு வரை என்ன நின்ற அரக்கர்தம் அரசை.'' (விபீடணன் அடைக்கலப் படலம், 131, 132, 137, 148), ''குன்றுறழ் நெடியவர்.'', ''குன்றினும் வலியவர் கோடி கோடியால்.'' (இலங்கை கேள்விப் படலம், 23, 31), ''பொருப்பை ஒப்பவர் தாம் இன்று பொன்றினார்.'' (முதற் போர்ப் படலம், 92), ''மலையுறப் பெரிய ராய வாளெயிற் றரக்கர்.'', ''கும்ப கருணன்ஓர் மலை கிடந்தது போல வணங்கினான்.'', ''வன்றுணைப் பெருந்தம்பி வணங்கலும், தன்

திரண்ட தோள் ஆரத் தழுவினான், நின்ற குன்றொன்று நீ ணெடும் காலொடும், சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்.'' (கும்பகருணன் வதைப் படலம், 18, 71, 72), ''குன்று நின்றனைய தம்பி.'', ''குன்றென நீண்ட கும்பகருணனை.'' (மாயாசனகப் படலம், 23, 73), ''குன்றினும் உயர்ந்த தீயோன்.'' (அதிகாயன் வதைப்படலம், 206), ''குன்று நின்றனைய வீர மாருதி.'', ''குன்று கால்குடைய மேலுயர்ந்திடை குலுங்குகின்றனைய கொள்கையான.'', ''மேருவினும் மும்மடங்கு வலிதிண்மை சால் ஆகம்.'', ''வரையுண்ட மதுகை மேனி.'', ''மலைலென எழுவர்.'' (நாக பாசப் படலம், 78, 82, 84, 168, 193), ''குன்றினம் என்ன நடந்தனர்.'', ''மலையிற் பெரியான்.'' (படைத் தலைவர் வதைப் படலம், 22, 27), ''கற்பகம் அனைய வள்ளல் கருங்கழற் கமலக் கால்மேல், வெற்பினம் என்ன வீழ்ந்தார் வாரை வீரர் எல்லாம்.'' (மாயாசனகப் படலம், 59), ''மலையின்மேல் மயில் வீழ்ந்தென்ன மைந்தன்மேல் மறுகி வீழ்ந்தான்.'' (இராவணன் சோகப் படலம், 4 5), ''குன்றுசூழ் வளைந்த போல் தொடர்ந்த சேனை.'' (மூலபல வதைப் படலம், 78), ''பூதரம் அனைய மேனிப் புகைநிறப் புருவச் செந்தீ, மோதரன்.'', ''அருவி அஞ்சனக் குன்றிடை ஆயிரம் அருக்கர், உருமினோடும் வந் துதித்தனராமென ஒளிரக், கருவி நான் முகன் வேள்வியிற் படைத்ததும் கட்டி.'' (தேரேறு படலம், 1,4), ''குன்றன தோற்றத்தான்.'', ''ஆடகக் குன்றம் அன்னவனும்.'', ''மேருவின் கொடுமுடி வீசு காலெறி, போரிடை ஒடிந்துபோய்ப் புணர்புக்கென, சூரியன் சரம்பட அரக்கன் வன்றலை, நீரிடை விழுந்தது.'', ''கார்க்குன்றம் அனையான்.'' (இராவணன் வதைப் படலம், 12, 26, 150, 199), ''கரிய குன்று கதிரினைச் சூடியோர், எரிமணித் தவிசிற் பொலிந்த தென்னவே, விரியும் வெற்றி இலங்கையர்

வேந்தனீ, டரியணைப் பொலிந்தான்.'', ''குன்றுபோல் நெடு மாருதி கூடினான்.'', ''குணக்குன்று தோன்றளவும்.'' (மீட்சிப்படலம், 7, 239), ''மரகத சயிலம்... இருந்த தேய்ப்ப.'' (திருமுடி சூட்டு படலம், 36), ''மரகத சயில மீது வானிவாப்பார் தென்ன.'' (விடை கொடுத்த படலம், 30) என்று கம்பரும் பாடியருளிய வற்றையும், ''திண்கார் வரை போல் திருமேனி.'', ''செம்பொன் மௌலி காரார் வரை மேல் கதிரோன் எழும் காட்சிகாட்ட.'' (திருவோலக்கப் படலம், 2, 3), ''கருவரை சூழ்ந்து நின்ற பின்னொளியைக் கட்டிய பீதக ஆடை.'' (தோத்திரப் படலம், 14), ''மறிந்தார் சிலர் மலைபோல்.'' (இலங்கை அழித்த படலம், 43), ''விலங்கல் மேல் இடி வீழ்ந்தென வீழ்ந்தனன்.'', ''மலை விழுந்தென வீழ்ந்தனள் மண்ணின்மேல்.'', ''குன்று சென்றதெனவுட் கொதித்து மண்டி மேல்விழா.'' (வரை எடுத்த படலம், 40, 48, 58), ''அரக்கர்கோன் கரிய மேனி அணிதிகழ் முருக்குப் பூத்த, பொருப்பெனக் குருதி பொங்க.'', ''மைவரை போல் மெய்யரக்கன்.'', ''மலைமேலே வந்ததொரு மலை வீழ்ந்ததென வீழ்ந்தான்.'', ''விலங்கல் வந்து விழுவது போல்.'', ''விலங்கல் மேல்மின் பரந்ததென வீரபட்டம் நுதல்விசித்து.'', ''குன்றின்வீழ் அசனி என்ன அவன் வென்பு மேனி, ஒன்றிய அங்கமெல்லாம் உருத்தெரிவுறாத வண்ணம் கன்றிய குருதி நீராய்க் கரைத்தது கதையாம் கூற்றம்.'', ''ஒரு தடங்கிரி நடந்து வருகின்ற தெனவும், கும்பகருணன் குருதி கண்கள் வழி சிந்த ஒரு குன்றென நடந்து தம்படை தன்கை ஒரு தண்டுகொ டறைந்தனன்.'' (திக்கு விசயப் படலம், 61, 85, 96, 110, 133, 197, 217), ''மேருவை ஒக்கும் மேனியன்.'', ''மலை விழுவதுபோல் வீழ்ந்தனன்.'' (வாலி வாலாற் கட்டுண்ட படலம், 7, 20), ''அக்குன்றனையோன் உயிர் அலைப்ப.'', ''குன்றனைய வாளவுணன்.'' (இலவணன்

வதைப் படலம், 92, 110) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

பிறகு வரும் 34-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மலை நெற்களைக் குத்தின அரிசிகளால் சமைத்த சோறு வேறு வேறாக அமைந்தவை, புற்களோடு சேர்த்துச் செய்த பாற்சோறு, அழகு மிக்க மலையில் விளைந்த திணையரிசியால் சமைத்த மென்மையான சோறு, மூங்கிலரிசிகளால் சமைத்த வன்மையான சோறுகள் ஆகிய இவற்றையும் வேறு உணவுகளையும் சமைக்கும் தொழிலில் வல்ல வேடர்கள் சமைத்து அவற்றோடு கலந்த விலங்குகளினுடைய மாமிசங்களும் பல வகையான கிழங்குகளை வேக வைத்த உணவும் சேர்ந்து அமையச் செய்த குன்றைப் போல உயரமாகக் குவிக்கக் கோபத்தையும் வில்லாயுதங்களையும் கொண்ட வேடர்கள் எல்லா இடங்களிலும் கலந்து கொண்டார்கள்.' பாடல் வருமாறு:

"ஐவன அடிசில் வெவ்வே றமைந்தன புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கள் மற்றும்
கைவினை எயினர் ஆக்கிக் கலந்தஊன் கிழங்கு துன்றச்
செய்வரை உயர்ப்ப எங்கும் கலந்தனர் சினவில் வேடர்."

ஐவன - மலை நெற்களைக் குத்திய அரிசிகளால் சமைக்கப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். அடிசில் - சோற்றை. வெவ்வேறு - வேறு வேறாக. அமைந்தன - அமைந்தவற்றையும். புல் - நரந்தம் புல் முதலிய நறுமணப் புற்களைச் சேர்த்துச் சமைத்த; ஒருமை பன்மை மயக்கம். பாற்சொன்றி - பாற்சோற்றையும். மொய் - அழகு மிக்க. வரை - மலையில் விளைந்த. த்: சந்தி. தினை - தினையரிசிகளாற் சமைத்த; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையாகிய. சோறு - சோற்றையும். மூங்கில் -

மூங்கில் நெற்களைக் குத்திய அரிசிகளால் சமைத்த; ஆகுபெயர். வன் - வன்மையாகிய. பதங்கள் - சோறுகளை யும். மற்றும் - வேறு வேறு வகையான உணவுகளையும். கைவினை - சமைக்கும் தொழிலில் வல்லவர்களாகிய. எயினர் - வேட்டுவச் சாதிச் சமையற்காரர்கள்; ஒருமை பன்மை மய்கம். ஆக்கி - சமைத்து. க்: சந்தி. கலந்த - அவற்றோடு கலந்த. ஊன் - மான் முதலிய விலங்குகளின் மாமிசங்களும்; ஒருமை பன்மை மயக்கம். கிழங்கு - மரவள்ளிக் கிழங்கு, சர்க்கரை வள்ளிக் கிழங்கு, கூவைக் கிழக்கு முதலிய கிழங்குகளும்; ஒருமை பன்மை மயக்கம். துன்ற - சேர்ந்து அமைய. ச்: சந்தி. செய்வரை - செய்குன்றைப் போல. செய் குன்று - கட்டுமலை. உயர்ப்ப - உயரமாகக் குவித்து வைக்க. எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். சின - கோபத்தையும். வில் - வில்லாயுதங்களையும் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கலந்தனர் - கலந்து கொண்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 35-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சிவந்த தினைகளைக் குத்திய அரிசிகளை இடித்த மாவையும் அதனோடு தேனையும் கலந்து அந்த வேடர்கள் உண்பார்கள். தேனில் தோய்த்து நெருப்பில் வேக வைத்த மான் முதலியவற்றின் மாமிசங்களை உண்பார்கள்; தேனோடு கலந்து விளாம்பழமாகிய கவளத்தை நுகர்வார்கள்; மிகுதியாக உள்ள ஈசல்களைப் பொரித்து அந்த உணவை விருப்பத்தோடு சாப்பிடுவார்கள்; இவ்வாறு கணக்கு இல்லாம வேடர்கள் வேறு வேறாகவும், முடிவு இல்லாதவையாகவும் உள்ள உணவுகளை உண்டு தேவர்களைப் போல மகிழ்ச்சியை அடைந்தவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"செந்தினை இடியும் தேனும் அருந்துவார்; தேனில் தோய்த்து
வெந்தஊன் அயில்வார்; வேரி விளங்கனிக் கவளம் கொள்வார்;
நந்திய ஈயல் உண்டி நசையொடு மிசைவார்; வெவ்வே
றந்தமில் உணவின் மேலோர் ஆயினர் அளவி லார்கள்."

செம் - சிவந்த. தினை - தினை நெற்களைக் குத்திய அரிசிகளை இடித்த; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். இடியும் - மாவையும். தேனும் - தேனையும். அருந்துவார் - கலந்து அந்த வேடர்கள் உண்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். தோனில் தோய்த்து - தேனில் தோய்த்துக் கொ்ண்டு. வெந்த - நெருப்பில் வெந்த. ஊன் - மான் முதலியவற்றின் மாமிசங்களை; ஒருமை பன்மை மயக்கம். அயில்வார் - நுகர்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வேரி - தேனோடு கலந்த. விளங்கனி - விளாம் பழமாகிய. க்: சந்தி. கவளம் - கவளத்தை. கொள்வார் - உட்கொள்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். நந்திய - பெருகி உள்ள. ஈயல் - ஈசல்களை; ஒருமை பன்மை மயக்கம். உண்டி - பொரித்த உணவை. நசையொடு - விருப்பத்தோடு. மிசைவார் - சாப்பிடுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெவ்வேறு - இவ்வாறு வேறு வேறாக உள்ள. அந்தம் - முடிவு. இல் - இல்லாத; கடைக்குறை. உணவின் - உணவுகளை உண்டதனால்; ஆகு பெயர். அளவு - கணக்கு. இலார்கள் - இல்லாதவர்களாகிய வேடர்கள்; இடைக்குறை. மேலோர் - மேலுலகத்தில் வாழும் தேவர்களை போல; ஒருமை பன்மை மயக்கம். ஆயினர் - ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம். இந்தப் பாடலில், 'அருந்துவார், அயில்வார், கொள்வார், மிசைவார்' என ஒரே பொருள் உடைய நான்கு சொற்கள் வந்தன. இது ஒரு பொருட் பல சொல் அணி.

அடுத்து வரும் 36-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'உடுப்பூருக்குப் பக்கத்தில் உள்ள மலை மேல் உள்ள ஊர்களிலிருந்து வந்த வேடர்களும், அருமையான குடியிருப்புக்களில் இருந்து வாழ்கிற வேட்டுவர்களும், இயல்பான பல வகை உணவுகளை உண்டதனால் திருப்தியை அடைந்த வேடர் சாதிப் பெண்களும், வேடர்கள் ஆகிய எல்லோரும் உயரமான வானத்தில் உலவும் சூரியன் உச்சியிலிருந்து அகன்று போக அந்தப் பிற்பகல் நேரத்தில் ஒழிதல் இல்லாத பல வகையான கள்ளுக்களைக் குடித்து மயக்கத்தை அடைகின்ற களிப்பில் நெடுநேரம் இருந்து வரிந்த வில்விழாவைக் கொண்டாடுபவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"அயல்வரைப் புலத்தின் வந்தார், அருங்குடி இருப்பின் உள்ளார்,
இயல்வகை உணவில் ஆர்ந்த எயிற்றியர் எயினர் எல்லாம்
உயர்கதிர் உச்சி நீங்க ஒழிவில்பல் நறவு மாந்தி
மயலுறு களிப்பின் நீடி வரிசிலை விழவு கொள்வார்."

அயல் - உடுப்பூருக்குப் பக்கத்தில் உள்ள. வரை - மலையின் மேல் உள்ள. ப்: சந்தி. புலத்தின் - ஊர்களி லிருந்து; ஒருமை பன்மை மயக்கம். வந்தார் - உடுப்பூருக்கு வந்த வேடர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அரும் - அருமையான. குடி இருப்பின் - குடியிருப்புக்களில்; ஒருமை பன்மை மயக்கம். உள்ளார் - இருந்து வாழ்கிற வேட்டுவர் களும்; ஒருமை பன்மை மயக்கம். இயல் - தங்களுக்கு இயல்பாக உள்ள. வகை - பல வகையாகிய. உணவில் - உணவுகளை உண்டமையால்; ஆகுபெயர். ஆர்ந்த - திருப்தியை அடைந்த. எயிற்றியர் - வேடர்சாதிப் பெண்கள்; ஒருமை பன்மை மயக்கம். இவர்கள் உடுப்பூரில் வாழ்கிறவர்கள். எயினர் - உடுப்பூரில் வாழும் வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - ஆகிய எல்லோரும். உயர் - உயரமான வானத்தில் உலவும். கதிர் - சூரியன். உச்சி

- உச்சியை. நீங்க - அகன்று போக அந்தப் பிற்பகல் நேரத்தில். ஒழிவு - ஒழிதல்; குறைதல். இல் - இல்லாத; கடைக்குறை. பல் - பல வகையான. நறவு - தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், அரிசியாலாகிய கள் முதலிய கள்ளுக்களை; ஒருமை பன்மை மயக்கம். மாந்தி - குடித்துவிட்டு. மயல் - மயக்கத்தை. உறு - அடையும். களிப்பின் - கள்ளை உண்டதனால் ஏற்பட்ட அந்த மயக்கத்தில். நீடி - நெடுநேரம் இருந்து. வரி - வரிந்து செய்யப்பெற்ற. சிலை விழவு - வில் விழாவை. கொள்வார் - கொண்டாடுபவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 37-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பச்சை இலைகளைக் கட்டிய தழை மாலையைத் தங்களுடைய தலைமயிரில் சுற்றிக்கொண்டு, பலவகை யான மலர்களைக் கட்டிய கதம்ப மாலையைத் தங்களுடைய தலைகளில் அணிந்துகொண்டு தங்கக் காசுகளை உடைய மாலையையும் தோல்வடத்தையும் கட்டிக்கொண்டு, தங்களுடைய உடம்புகளில் சோழிகளாகிய அணிகலன்களை அந்த வேடர்களும் வேடர்சாதிப் பெண்மணிகளும் அணிந்து கொண்டார்கள். குற்றம் இல்லாத சீர்த்தியைப் பெற்ற வெட்சி முதலாகிய வீரத்துக்குரியவையாக வரும் துறைகளுக்குரிய கண்ணிகளைத் தங்களுடைய தலைகளில் அணிந்துகொண்டு குற்றம் இல்லாத தங்கள் குலகுரு தன்னுடைய கையில் எடுத்துக் கொண்டிருக்கும் வலிமையைப் பெற்ற வில்லின் பக்கத்தை அவர்கள் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.' பாடல் வருமாறு:

"பாசிலைப் படலை சுற்றிப் பன்மலர்த் தொடையல் சூடிக்
காசுடை வடத்தோல் கட்டிக் கவடிமெய்க் கலன்கள் பூண்டார்;
மாசில்சீர் வெட்சி முன்னா வருதுறைக் கண்ணி சூடி
ஆசில் ஆசிரியன் ஏந்தும் அடற்சிலை மருங்கு சூழ்ந்தார்."

பாசிலை - பச்சை இலைகளைக் கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. படலை - தழை மாலையை. சுற்றி - தங்களுடைய தலைமயிரில் சுற்றிக்கொண்டு. ப்: சந்தி. பல் - பல வகையாகிய. மலர் - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொடையல் - தொடுத்துக் கட்டிய மாலையை. சூடி - தங்களுடைய தலைகளில் அணிந்து கொண்டு. க்: சந்தி. காசு - தங்கக் காசுகளை; 'இரத்தினங்களை' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். உடை - பெற்ற. வடத்தோல் - தோல்வடத்தை. கட்டி - இடுப்புக்களில் கட்டிக்கொண்டு. க்: சந்தி. மெய் - தங்களுடைய உடம்புகளில்; ஒருமை பன்மை மயக்கம். கவடி - சோழிகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கலன்கள் - ஆபரணங்களை. பூண்டார் - அந்த வேடர்களும் வேடர்சாதிப் பெண்மணிகளும் அணிந்து கொண்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மாசு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. வெட்சி - வெட்சிப் பூ. முன்னா - முதலாகிய. வரு - வீரத்துக்கு உரியவையாக வரும். துறை - துறைகளுக்குரிய; ஒருமை பன்மை மயக்கம். அந்தத் துறைகளாவன: வெட்சி, கரந்தை, வஞ்சி, தும்பை, வாகை முதலியவை. க்: சந்தி. கண்ணி - கண்ணிகளை; ஒருமை பன்மை மயக்கம். சூடி - தங்களுடைய தலைகளில் அணிந்து கொண்டு. ஆசு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. ஆசிரியன் - தங்களுடைய குலகுரு. ஏந்தும் - தன்னுடைய கையில் எடுத்துக் கொள்ளும். அடல் - வலிமையைக் கொண்ட. சிலை - வில்லினுடைய. மருங்கு - பக்கத்தில். சூழ்ந்தார் - அந்த வேடர்களும் வேடர்சாதிப் பெண்மணிகளும் வந்து சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.

அடுத்து உள்ள 38-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தொண்டகப் பறையும், முரசமும், ஊதுகொம்பும், உடுக்குக்களும், துளைகளைக் கொண்ட புல்லாங்குழலும் கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளிலும் நிரம்பி முழங்க, அவ்வாறு எழும்பிய பெரிய சத்தத்தோடும் உறுதியான ஆற்றலைப் பெற்ற வேடர்களினுடைய ஆரவாரமும் மேலே உள்ள ஆகாயத்தை இடித்துக்கொண்டு போக, வேடர்கள் தாங்கள் கொண்டாட மேற்கொண்ட சீர்த்தியைப் பெற்ற வில்விழா பொங்கி எழும் வண்ணம் அந்தக் குறிஞ்சி நிலத்து ஊராகிய உடுப்பூரை வலமாக வந்தார்கள்.' பாடல் வருமாறு:

"தொண்டகம் முரசும் கொம்பும் துடிகளும் துளைகொள் வேயும்
எண்டிசை நிறைந்து விம்ம எழுந்தபே ரொலியி னோடும்
திண்டிறல் மறவர் ஆர்ப்புச் சேண்விசும் பிடித்துச் செல்லக்
கொண்டசீர் விழவு பொங்கக் குறிச்சியை வலங்கொண் டார்கள்."

தொண்டகம் - தொண்டகப் பறையும். முரசும் - முரசமும். கொம்பும் - ஊதுகொம்பும். துடிகளும் - உடுக்குக்களும். துளை - துளைகளை; ஒருமை பன்மை மயக்கம். கொள் - கொண்ட. வேயும் - மூங்கிலாலான புல்லாங்குழலும். எண் திசை - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்னும் எட்டுத் திசைகளிலும்; திசை: ஒருமை பன்மை மயக்கம். நிறைந்து - நிரம்பி. விம்ம - முழங்க. எழுந்த - அவ்வாறு எழும்பிய. பேரொலி யினோடும் - பெரிய சத்தத்தோடும். திண் - உறுதியான. திறல் - ஆற்றலைப் பெற்ற. மறவர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்ப்பு - செய்யும் ஆரவாரமும். ச்: சந்தி. சேண் - மேலே உள்ள. விசும்பு - ஆகாயத்தை. இடித்து - இடித்துக் கொண்டு. ச்: சந்தி. செல்ல - போக. க்: சந்தி. கொண்ட -

வேடர்கள் கொண்டாட மேற்கொண்ட. சீர் - சீர்த்தியைப் பெற்ற. விழவு - வில்விழா. பொங்க - பொங்கி எழும் வண்ணம். க்: சந்தி. குறிச்சியை - அந்தக் குறிஞ்சி நிலத்து ஊராகிய உடுப்பூரை. வலம்கொண்டார்கள் - வலமாக வந்தார்கள்.

*பின்பு உள்ள 39-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'மலைப் பக்கத்தில் வாழும் வேடர்கள் இவ்வாறு மகிழ்ச்சியோடு வில்விழாவைக் கொண்டாட, வேடர்சாதிப் பெண்மணிகள் துணங்கைக் கூத்தை ஆட, சேர்ந்த ஆனந்தத்தோடும் அச்சத்தைத் தரும் தெய்வப் பெண்கள் நடனம் புரிய, வெற்றியைத் தரும் வில்விழாவோடும் விருப்பத்தைப் பெற்ற இறுதி நாளாகிய ஏழாவது தினமாகிய அன்றைக்கு இரண்டு மடங்கு தங்களுடைய கொண்டாட்டமாகிய செயலை அழகு பெறுமாறு நடத்திய பிறகு.' பாடல் வருமாறு:

"குன்றவர் களிகொண் டாடக் கொடிச்சியர் துணங்கை ஆடத்
துன்றிய மகிழ்ச்சி யோடும் சூர்அர மகளிர் ஆட
வென்றிவில் விழவி னோடும் விருப்புடை ஏழாம் நாளாம்
அன்றிரு மடங்கு செய்கை அழகுற அமைத்த பின்னர்."

இந்தப் பாடல் குளகம். குன்றவர் - மலைப் பக்கத்தில் வாழும் வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். களி - இவ்வாறு மகிழ்ச்சியோடு. கொண்டாட - வில்விழாவைக் கொண்டாட. க்: சந்தி. கொடிச்சியர் - வேடர்சாதிப் பெண் மணிகள். துணங்கை - தங்கள் கைகளைக் கோத்துக் கொண்டு ஆடும் துணங்கைக் கூத்தை. ஆட - ஆடிக் கொண்டிருக்க. த்: சந்தி. துன்றிய - சேர்ந்த. மகிழ்ச்சியோடும் - ஆனந்தத்தோடும். சூர் - அச்சத்தை உண்டாக்கும். அரமகளிர் - தேவலோகத்துப் பெண்கள். ஆட - நடனம்

புரிய. வென்றி - வெற்றியைத் தரும். வில்விழவினோடும் - வில்விழாவோடும். விருப்புடை - விருப்பத்தைப் பெற்ற. ஏழாம் நாளாம் - இறுதி நாளாகிய ஏழாம் நாளாகும். அன்று - அன்றைக்கு. இரு மடங்கு - இரண்ட மடங்காக. செய்கை - தங்களுடைய கொண்டாட்டமாகிய செயலை. அழகு உற - அழகு பெறுமாறு. அமைத்த - நடத்திய. பின்னர் - பிறகு.

பிறகு வரும் 40-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'கொடுமையான கிரணங்களை வீசும் சூரியன் ஆகாயத்தின் உச்சியை அடைந்த நண்பகல் நேரத்தில் எல்லா இடங்களிலும் மங்கல வாழ்த்துக்கள் மிகுதியாக இருக்க, பக்கங்களில் பல வாத்தியங்கள் முழங்க, வேடர்கள் தங்களுடைய பழைய வழக்கத்தின்படி வில்வித்தையாகிய வேலையில் வல்லமை பெற்றவர் களிடம் பொங்கி எழும் கரிய திருமேனிப் பிரகாசத்தைப் பெற்ற போர் செய்யும் ஆண் சிங்கத்தைப் போன்ற திண்ணனாரை யுத்தம் புரிவதற்குரிய வில்லைப் பிடிக்குமாறு செய்தார்கள்.' பாடல் வருமாறு:

"வெங்கதிர் விசும்பின் உச்சி மேவிய பொழுதில் எங்கும்
மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் இயங்கள் ஆர்ப்பத்
தங்கள்தொல் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வலவர் தம்பால்
பொங்கொளிக் கரும்போர் ஏற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள்."

வெம் - கொடுமையான கிரணங்களை வீசும். கதிர் - சூரியன். விசும்பின் - ஆகாயத்தினுடைய. உச்சி - உச்சியை. மேவிய - அடைந்த. பொழுதில் - நண்பகல் நேரத்தில். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மங்கல வாழ்த்து - மங்கல வாழ்த்துக்கள்; ஒருமை பன்மை மயக்கம். மல்க - மிகுதியாக இருக்க. மருங்கு - பக்கங் களில்; ஒருமை பன்மை மயக்கம். பல் - பல. இயங்கள் - வாத்தியங்கள். ஆர்ப்ப - முழங்க. த்: சந்தி. தங்கள் - வேடர்கள் தங்களுடைய. தொல் - பழைய. மரபின் -

வழக்கத்தின்படி. விஞ்சைத்தனு - வில்வித்தையாகிய. த்: சந்தி. தொழில் - கலையில். வலவர்தம்பால் - வல்லமை பெற்றவர்களிடம்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. பொங்கு - பொங்கி எழும். ஒளிக்கரும் - கரிய திருமேனிப் பிரகாசத்தைப் பெற்ற. போர் - போர் செய்யும். ஏற்றை - ஆண்சிங்கத்தைப் போன்ற திண்ணனாரை; உவம ஆகுபெயர். ப்: சந்தி. பொரு - போர் புரிவதற்குரிய. சிலை - வில்லை. பிடிப்பித்தார்கள் - பிடிக்குமாறு செய்தார்கள்.

பிறகு உள்ள 41-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தங்கம் உண்டாகும் விசாலமான அந்த மலையின் பக்கத்தில் செய்ய வேண்டிய தங்கள் குலதெய்வத்தை வழிபடும் கடமையை முன்பு புரிந்து நிறைவேற்றிய வில்லாயுதத்தைப் பயன்படுத்தும் வேலையைப் புரியும் போர்க்களத்தை அடைந்து விதித்த முறைப்படி அந்தத் தெய்வத்தைப் பணிந்து இருக்கும் அன்றைத் தினத்தில் ஆரம்பித்து ஒவ்வொரு நாளும் வலிமையைப் பெற்ற வில்லை ஆளும் திறமை முழுவதையும் அடியேனை ஆளாகக் கொள்ளும் வேடர்களுக்குள் அருமையாக விளங்கிய ஆண்சிங்கத்தைப் போன்ற திண்ணனார் கற்றுக்கொண்டார்.' பாடல் வருமாறு:

"பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தில் நண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநாள் தொடங்கி நாளும் அடற்சிலை ஆண்மை முற்றக்
கற்றனர் என்னை ஆளும் கானவர்க் கரிய சிங்கம்."

பொன் - தங்கம் உண்டாகும். தட - விசாலமான. வரையின் - அந்த மலையினுடைய. பாங்கர் - பக்கத்தில். ப்: சந்தி. புரிவுறு - தாங்கள் செய்ய வேண்டிய. கடன் - தங்களுடைய குலதெய்வத்தை வழிபடும் கடமையை; பராய்க்கடனை. முன் - முன்பு. செய்த - புரிந்து

நிறைவேற்றிய. வில் - வில்லாயுதத்தைப் பயன்படுத்தும். தொழில் - வேலையைப் புரியும். களத்தில் - போர்க்களத்தை; உருபு மயக்கம். நண்ணி - அடைந்து. விதிமறை - விதித்த முறைப்படி. வணங்கி - அந்தக் குலதெய்வத்தைப் பணிந்து. மேவும் - இருக்கும். அற்றை நாள் - அன்றைத் தினத்தில். தொடங்கி - ஆரம்பித்து. நாளும் - ஒவ்வொரு நாளும். அடல் - வலிமையைப் பெற்ற. சிலை - வில்லை. ஆண்மை - ஆளும் திறமை. முற்ற - முழுவதையும். க்: சந்தி. என்னை - அடியேனை; இது சேக்கிழார் தம்மைக் கூறிக்கொண்டது. ஆளும் - ஆளாகக் கொள்ளும். கானவர்க்கு - வேடர்களுக்குள்; ஒருமை பன்மை மயக்கம். அரிய - அருமையாக விளங்கிய. சிங்கம் - ஆண்சிங்கத்தைப் போன்றவராகிய திண்ணனார்; உவம ஆகுபெயர். கற்றனர் - கற்றுக் கொண்டார்.

அடுத்து வரும் 42-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அழகிய நிறத்தைப் பெற்ற கொடிய வில்வித்தையையும், வேறு ஆயுதங்களைப் பிரயோகம் செய்யும் வித்தையையும் மலர்ச்சி பெறும் வண்ணம் கற்றுக்கொண்டு கண்களுக்கு அகலமாகத் தோன்றும் சாயல் பொங்கி எழ, கலைகள் வளரும் சந்திரனைப் போலப் பதினாறு பிராயமாகிய பருவத்தை வரம்பு இல்லாத முன்பிறவியில் செய்த புண்ணியம் தோற்றத்தை அளித்து மேலும் மேலும் வளர்ந்து வருவதனுடைய விளக்கத்தைப் போலத் திகழ்பவராகிய திண்ணனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"வண்ணவெஞ் சிலையும் மற்றப் படைகளும் மலரக் கற்றுக்
கண்ணகல் சாயல் பொங்கக் கலைவளர் திங்க ளேபோல்
எண்ணிரண் டாண்டின் செவ்வி எய்தினார் எல்லை இல்லாப்
புண்ணியம் தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார்."

வண்ண - அழகிய நிறத்தைக் கொண்ட. வெம் - கொடிய. சிலையும் - வில்வித்தையையும்; ஆகுபெயர். மற்ற - வேறாக உள்ள. ப்: சந்தி. படைகளும் - ஆயுதங்களைப் பிரயோகம் செய்யும் வித்தைகளையும்; ஆகுபெயர். மலர - மலர்ச்சியைப் பெறும் வண்ணம். க்: சந்தி. கற்று - திண்ணனார் கற்றுக் கொண்டு. க்: சந்தி. கண் - கண்கள்; ஒருமை பன்மை மயக்கம். அகல் - அகலமாகத் திறந்து பார்க்குமாறு உள்ள. சாயல் - தம்முடைய திருமேனிச் சாயல். பொங்க - பொங்கி எழ. க்: சந்தி. கலை - கலைகள்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளரும். திங்கள் - சந்திரனை. ஏ: அசைநிலை. போல் - போல. எண் இரண்டு - பதினாறு. ஆண்டின் - பிராயமாகிய. செவ்வி - பருவத்தை. எல்லை - வரம்பு. இல்லா - இல்லாத. ப்: சந்தி. புண்ணியம் - முன்பிறவியிற் செய்த புண்ணியச் செயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். தோன்றி - பயனை அளிக்கத் தோற்றத்தைக் காட்டி. மேன்மேல் - மேலும் மேலும். வளர்வதன் - வளர்ச்சி அடைவதனுடைய. பொலிவு - விளக்கத்தை. போல்வார் - போல் விளங்குபவராகிய அந்தத் திண்ணனார். எய்தினார் - அடைந்தார்.

பின்பு உள்ள 43-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு அந்தத் திண்ணனார் வளர்ச்சியை அடைந்து நிரம்பி வந்த காலத்தில் கரிய நிறத்தைப் பெற்ற குறவர்கள் வாழும் பெரிய குறிஞ்சி நிலத்தில் உள்ள ஊராகிய உடுப்பூருக்கு அரசனும், மையைப் போன்ற திருமேனி நிறத்தைப் பெற்றவனும், மலைகளைப் போன்ற தோள்களைப் பெற்றவனும் ஆகிய நாகனும் மலைப் பக்கங்கள் எல்லாவற்றிலும் காடுகள் எல்லாவற்றிலும் எல்லை இல்லாத காலம் தன்னுடைய கையில் பிடித்த அழகிய நிறத்தைக் கொண்ட வில்லால் விலங்குகளை

வேட்டையாடி, பகைவர்களுடைய கூட்டமாகிய பசுமாடு களினுடைய வரிசைகள் பலவற்றைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்து, காட்டைப் பாதுகாத்துத் தன்னுடைய உடம்பின் இயல்பு தளர்ச்சியை அடையும் முதுமையாகிய கிழப் பருவத்தை அடைந்து வில்லையே ஏராகக் கொண்டு போராகிய உழவைச் செய்யும் பெரிய முயற்சியில் மெலிவை உடையவன் ஆனான்.' பாடல் வருமாறு:

"இவ்வண்ணம் திண்ணனார் நிரம்பும் நாளில்
இருங்குறவர் பெருங்குறிச்சிக் கிறைவன் ஆய
மைவண்ண வரைநெடுந்தோள் நாகன் தானும்
மலைஎங்கும் வனம்எங்கும் வரம்பில் காலம்
கைவண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர்
கணநிரைகள் பலகவர்ந்து கானம் காத்து
மெய்வண்ணம் தளர்மூப்பின் பருவம் எய்தி
வில்லுழவின் பெருமுயற்சி மெலிவான் ஆனான்."

இவ்வண்ணம் - இவ்வாறு. திண்ணனார் - அந்தத் திண்ணனார். நிரம்பும் - வளர்ச்சியை அடைந்து நிரம்பி வரும். நாளில் - காலத்தில். இரும் - கரிய நிறத்தைப் பெற்ற. குறவர் - குறவர்கள் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். பெரும் - பெரிய. குறிச்சிக்கு - குறிஞ்சி நிலத்தில் உள்ள ஊராகிய உடுப்பூருக்கு. இறைவன் - அரசன். ஆய - ஆக விளங்கிய. மை - மையைப் போன்ற. வண்ண - கரிய உடம்பின் நிறத்தையும். வரை - மலைகளைப்போன்ற; ஒருமை பன்மை மயக்கம். நெடும் - உயரமாக விளங்கும். தோள் - தோள்களையும் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். நாகன் தானும் - நாகனும். தான்: அசைநிலை. மலை எங்கும் - மலைப் பக்கங்கள் எல்லாவற்றிலும்; ஒருமை பன்மை மயக்கம். வனம் எங்கும் - காடுகள் எல்லா வற்றிலும்; ஒருமை பன்மை மயக்கம். வரம்பு - எல்லை. இல் -

இல்லாத; கடைக்குறை. காலம் - காலமாக. கை - தன்னுடைய கையில் பிடித்த. வண்ண - அழகிய நிறத்தைக் கொண்ட. ச்: சந்தி. சிலை - வில்லால். வேட்டையாடி - பல விலங்குகளை வேட்டையாடிக் கொன்று. த்: சந்தி. தெவ்வர் - பகைவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். கண - கூட்டமாகிய. நிரைகள் - பசுமாடுகளின் வரிசைகள். பல - பலவற்றை. கவர்ந்து - கொள்ளை யடித்துக் கொண்டு வந்து. கானம் - காட்டை. காத்து - பாதுகாத்து. மெய் - தன்னுடைய உடம்பினுடைய. வண்ணம் - இயல்பு. தளர் - தளர்ச்சியை அடையும். மூப்பின் - முதுமையாகிய. பருவம் - கிழப் பருவத்தை. எய்தி - அடைந்து. வில்உழவின் - வில்லையே ஏராகக் கொண்டு போராகிய உழவைச் செய்யும்; ''வில்லே ருழவர் பகைகொள்ளும்.'' என்று திருக்குறளில் வருவதைக் காண்க. பெரு - பெரிய. முயற்சி - முயற்சியில். மெலிவான் - மெலிவை அடைபவன். ஆனான் - ஆயினான்.

அடுத்து வரும் 44-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த இடத்தில் உள்ள விசாலமான மலைப்பக்கங் களிலும், தினைக்கொல்லைகள் எல்லாவற்றிலும் வலிமையைப் பெற்ற காட்டுப்பன்றி, புலி, கரடி, கடமை மான், காட்டுப் பசுமாடு, கொடுமையான கண்களையுடைய மரை என்னும் மான், கலைமானோடு மான் முதலாக இருக்கிற விலங்குகள் மிகுதியாக நெருங்கி வந்து மேலும் மேலும் வரும் காலத்தில், ''ஒவ்வொரு மாதமும் முறையாகச் செய்யும் வேட்டையாகிய தொழில் சரியாக நடவாமல் தாமதம் ஆயிற்று'' என்று விற்களைப் பிடித்த வேடர்கள் எல்லோரும் கூட்டமாகக் கூடிப் போய்த் தங்கள் சாதியினுடைய முதன்மையைப் பெற்ற தலைவனாகி யிருக்கிற குளிர்ச்சியைக் கொண்ட மலர்மாலையை அணிந்த நாகனிடத்தை அடைந்து கூறினார்கள்.' பாடல் வருமாறு:

"அங்கண்மலைத் தடஞ்சாரல் புனங்கள் எங்கும்
அடலேனம் புலிகரடி கடமை ஆமா
வெங்கண்மரை கலையொடுமான் முதலா யுள்ள
மிருகங்கள் மிகநெருங்கி மீதூர் காலைத்
'திங்கள்முறை வேட்டைவினை தாழ்த்த' தென்று
சிலைவேடர் தாமெல்லாம் திரண்டு சென்று
தங்கள்குல முதற்றலைவன் ஆகி உள்ள
தண்தெரியல் நாகன்பால் சார்ந்து சொன்னார்."

அங்கண் - அந்த இடத்தில் உள்ள; 'அழகிய இடத்தைப் பெற்ற' எனலும் ஆம். தடம் - விசாலமான. மலை சாரல் - மலைப்பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. புன்ங்கள் - தினைக்கொல்லைகள். எங்கும் - ஆகிய எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். அடல் - வலிமையைப் பெற்ற. ஏனம் - காட்டுப்பன்றியும். புலி - புலியும். கரடி - கரடியும். கடமை - கடமை மானும். ஆமா - காட்டுப்பசு மாடும். வெம் - கொடியவையாக இருக்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மரை - மரை என்னும் வகை மானும். கலையொடு - கலைமானோடும். மான் - புள்ளி மானும். முதலாய் - முதலாகி. உள்ள - இருக்கிற. மிருகங்கள் - விலங்குகள். மிக - மிகுதியாக. நெருங்கி - நெருங்கி வந்து. மீது - மேலும் மேலும். ஊர் - வரும். காலை - காலத்தில். த்: சந்தி. திங்கள் - ஒவ்வொரு மாதமும். முறை - முறையாகச் செய்யும். வேட்டை - வேட்டையாகிய. வினை - தொழில். தாழ்த்தது - சரியாக நடைபெறாமல் தாமதம் ஆயிற்று. என்று - என. சிலை - விற்களைப் பிடித்த; ஒருமை பன்மை மயக்கம். வேடர் தாம் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தாம்: அசைநிலை. எல்லாம் - எல்லாரும். திரண்டு - கூட்டமாகக் கூடி. சென்று - போய். தங்கள் - தங்களுடைய. குல - சாதியினுடைய. முதல் - முதன்மையைப் பெற்ற.

தலைவன் ஆகி உள்ள - தலைவனாய் இருக்கிற. தண் - குளிர்ச்சியைப் பெற்ற. தெரியல் - மலர்மாலையை அணிந்த. நாகன்பால் - நாகனிடத்தை. சார்ந்து - அடைந்து. சொன்னார் - கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 45-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்த வேடர்கள் கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன் நாகனும் மேவி வருகின்ற தன்னுடைய முதுமைப் பருவத்தின் சார்பைப் பார்த்து முன்னால் நின்று கொண்டிருந்த அந்த வேடர்களுக்குக் கூறுவானாகி, ''முதுமைப் பிராயத்தினால் யான் முன்பு செய்ததைப் போல விலங்குகளை வேட்டையாடுவதில் முயற்சியைச் செய்யவில்லை; என்னுடைய புதல்வனாகிய திண்ணனை உங்களுக்குத் தலைவனாக நீங்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்று கூறிய சமயத்தில், அந்த வேடர்களும் முதலில் நாகன் வேட்டையாட முடியாமல் இருப்பதற்கு வருத்தத்தை அடைந்து, பிறகு திண்ணன் தலைவனாக வருவதை எண்ணி மகிழ்ச்சி அடைந்த தங்களுடைய அரசனாகிய அந்த நாகனுடைய திருவடிகளைப் பணிந்து பின்வரும் இந்த வார்த்தைகளைக் கூறுகிறவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

''சொன்னஉரை கேட்டலுமே நாகன் தானும்
சூழ்ந்துவரும் தன்மூப்பின் தொடர்வு நோக்கி
முன்னவர்கட் குரைசெய்வான், 'மூப்பி னாலே
முன்புபோல் வேட்டையினில் முயல் கில்லேன்;
என்மகனை உங்களுக்கு நாத னாக
எல்லீரும் கைக்கொண்மின்' என்ற போதின்
அன்னவரும் இரங்கிப்பின் மகிழ்ந்து தம்கோன்
அடிவணங்கி இம்மாற்றம் அறைகின் றார்கள்.''

சொன்ன - அவ்வாறு அந்த வேடர்கள் கூறிய. உரை - வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்டலும் - கேட்டவுடன். ஏ: அசைநிலை. நாகன் தானும் - நாகனும். தான்: அசைநிலை. சூழ்ந்து - தன்னை மேவி. வரும் - வருகின்ற. தன் - தன்னுடைய. மூப்பின் - முதுமைப் பருவத்தினுடைய. தொடர்வு - சார்பை. நோக்கி - பார்த்து. முன் - தன் முன்னால் நின்று கொண்டிருந்த. அவர்கட்கு - அந்த வேடர்களுக்கு. உரை செய்வான் - கூறுபவனாகி; முற்றெச்சம். மூப்பினால் - எனக்கு உண்டான முதுமைப் பிராயத்தினால். ஏ: அசைநிலை. முன்பு போல் - முன்பு செய்ததைப் போல. வேட்டையினில் - விலங்குகளை வேட்டையாடுவதில். முயல்கில்லேன் - முயலும் ஆற்றலை யான் பெறவில்லை. என் - என்னுடைய. மகனை - புதல்வனாகிய திண்ணனை. உங்களுக்கு நாதனாக - உங்களுக்குத் தலைவனாக. எல்லீரும் - நீங்கள் எல்லோரும். கைக்கொண்மின் - ஏற்றுக்கொள்ளுங்கள். என்ற - என்று கூறிய. போதின் - சமயத்தில். அன்னவரும் - அந்த வேடர்களும்; ஒருமை பன்மை மயக்கம். இரங்கி - நாகன் தங்களுக்குத் தலைவனாக இராமல் போவதற்காக வருத்தத்தை அடைந்து. ப்: சந்தி. பின் - பிறகு. மகிழ்ந்து - திண்ணன் தங்களுக்குத் தலைவனாக வருவதை எண்ணி மகிழ்ச்சியை அடைந்து. 'தசரதன் தவம்புரிய எண்ணியதையும், இராமனை அரசனாகச் செய்வதையும் எண்ணி மந்திரிகள் வருத்தத்தையும் மகிழ்ச்சியையும் அடைந்தார்கள்' என்று வரும் இராமாயண வரலாறு இங்கே நினைப்பதற்குரியது.

"திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் ஆங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென இருந்தார்."

''அன்ன ராயினும் அரசனுக் கதுவல துறுதி
பின்னர் இல்லெனக் கருதியும் பெருநில வரைப்பில்
மன்னும் மன்னுயிர்க் கிராமனின் மன்னவர் இல்லை
என்ன உன்னியும் விதியது வலியினும் இசைந்தார்.''

*(மந்திரப் படலம், 32-3)*

என்று கம்பராமாயணத்தில் வருவதைக் காண்க.

தம் - தங்களுடைய. கோன் - அரசனாகிய நாகனுடைய. அடி - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி - பணிந்து. இம்மாற்றம் - பின்வரும் இந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். அறைகின்றார்கள் - கூறுகிறவர்கள் ஆனார்கள்.

அடுத்து உள்ள 46-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'''இவ்வளவு காலமும் உன்னுடைய வில்லின் கீழே தங்கியிருந்து இனிமையாக உணவை உண்டு ஒரு துன்பமும் இல்லாமல் நாங்கள் வாழ்ந்திருந்தோம்; இனிமேலும், தலைவனே, உன்னுடைய திருவருள் வழியில் நின்று வாழ்வதை அல்லாமல் அடுத்திருக்கும் வழி வேறு இருக்கிறதோ? அது அல்லாமல் உண்மையான வீரத்தைப் பெற்ற திண்ணனை உன்னுடைய பரம்பரையில் மிகவும் மேம்பாட்டை அடையும் வண்ணமே பெற் றெடுத்து அடியேங்களுக்கு வழங்கினாய்; விளங்குகின்ற மேம்பாட்டைக் கொண்டு வில்லை ஏந்திய புதல்வனாகிய திண்ணனை இங்கே அழைத்துக்கொண்டு வந்து உங்களுடைய மலையை ஆளுகின்ற அரசாட்சியை அவனுக்கு வழங்கி அருள்வாயாக'' என்று மகிழ்ச்சியை அடைந்து அந்த வேடர்கள் கூறினார்கள்.' பாடல் வருமாறு:

'' 'இத்தனைகா லமும்நினது சிலைக்கீழ்த் தங்கி
இனிதுண்டு தீங்கின்றி இருந்தோம்; இன்னும்

அத்த,நின தருள்வழியே நிற்ப தல்லால்
அடுத்தநெறி வேறுளதோ? அதுவே அன்றி
மெய்த்தவிறல் திண்ணனைஉன் மரபில் சால
மேம்படவே பெற்றளித்தாய்; விளங்கு மேன்மை
வைத்தசிலை மைந்தனைஈண் டழைத்து நுங்கள்
வரையாட்சி அருள்.'என்றார் மகிழ்ந்து வேடர்.''

இத்தனை காலமும் - இவ்வளவு காலமும். நினது - உன்னுடைய. சிலைக்கீழ் - வில்லின் கீழே. த்: சந்தி. தங்கி - தங்கிக்கொண்டிருந்து. இனிது - இனிமையாக. உண்டு - உணவை உண்டு. தீங்கு - ஒரு துன்பமும். இன்றி - இல்லாமல். இருந்தோம் - நாங்கள் வாழ்ந்து கொண்டிருந்தோம். இன்னும் - இனிமேலும். அத்த - அடியேங்களுடைய தலைவனாகிய நாகனே. நினது - உன்னுடைய. அருள் - திருவருள். வழி - வழியில். ஏ: அசைநிலை. நிற்பது - நின்று வாழ்வதை. அல்லால் - அல்லாமல். அடுத்த - அடுத்தபடி இருக்கும். நெறி - வழி. வேறு - வேறாக. உளதோ - ஒன்று இருக்கிறதோ; இடைக்குறை. அதுவே அன்றி - அதனை அல்லாமல். ஏ: அசைநிலை. மெய்த்த - உண்மையாக உள்ள. விறல் - வீரத்தைப் பெற்ற. திண்ணனை - திண்ணன் என்பவனை. உன் - உன்னுடைய. மரபில் - பரம்பரையில். சால - மிகவும். மேம்பட - மேம்பாட்டை அடையும் வண்ணம். ஏ: அசைநிலை. பெற்று - பெற்றெடுத்து. அளித்தாய் - அடியேங்களுக்கு வழங்கினாய். விளங்கு - திகழும். மேன்மை - மேம் பாட்டை. வைத்த - கொண்ட. சிலை - வில்லை ஏந்திய. மைந்தனை - வலிமையைப் பெற்ற உன்னுடைய புதல்வனாகிய திண்ணனை. ஈண்டு - இங்கே. அழைத்து - அழைத்துக் கொண்டு வந்து. நுங்கள் - உங்களுடைய. வரை - மலையை. ஆட்சி - ஆளுகின்ற அரசாட்சியை. அருள் - அவனுக்கு

வழங்கியருள்வாயாக. வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. என்றார் - என்று கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 47-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'விற்களை ஏந்திய வேடர்கள் அவ்வாறு கூற நாகனும் தன்னுடைய புதல்வனாகிய திண்ணனைத் தனக்கு முன்னால் அழைத்துக்கொண்டு வருமாறு ஓர் ஆளிடம் சொல்லி அனுப்பிவிட்டு, "மலைப்பக்கத்தில் பொருந்தி யுள்ள நீண்ட காட்டில் முதல் முறையாகச் செய்யும் கன்னி வேட்டைக்குத் தன்னுடைய புதல்வனாகிய அந்தத் திண்ணன் செல்லும் பொருட்டுக் காட்டில் உள்ள தெய்வங் கள் மகிழும் வண்ணம் பூசை செய்து நிவேதனங்களைப் படைப்பதற்காகத் தலைமையான பரம்பரையின் வழியில் பிறந்த பூசாரியாகிய தேவராட்டியை அழைத்து வாருங்கள்" என்று கூற, அந்த இடத்தில் இருந்த வேடர்கள் போய் உள்ள நிலைமையை அந்தத் தேவராட்டிக்குக் கூற அந்த நரைத்த தலையை உடைய முதிய கிழவி மிகவும் மகிழ்ச்சி அடைந்து விருப்பத்தோடும் வேகமாக வந்து சேர்ந்தாள்.' பாடல் வருமாறு:

"சிலைமறவர் உரைசெய்ய நாகன் தானும்
திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பி விட்டு,
'மலைமருவு நெடுங்கானில் கன்னி வேட்டை
மகன்போகக் காடுபலி மகிழ ஊட்டத்
தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி
தனைஅழைமின்' எனஅங்குச் சார்ந்தோர் சென்று
நிலைமைஅவள் தனக்குரைப்ப நரைமூ தாட்டி
நெடிதுவந்து விருப்பினொடும் கடிது வந்தாள்."

சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். மறவர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். உரைசெய்ய

- அவ்வாறு கூற. நாகன் தானும் - நாகனும். தான்: அசைநிலை. திண்ணனை - தன்னுடைய புதல்வனாகிய திண்ணனை. முன் - தனக்கு முன்னால். கொண்டு - அழைத்துக்கொண்டு. வர - வருமாறு. ச்: சந்தி. செப்பி - கூறி. விட்டு - ஓர் ஆளை அனுப்பி விட்டு. மலை - மலைப் பக்கத்தில். மருவு - பொருந்தியுள்ள. நெடும் - நீளமாக இருக்கும். கானில் - காட்டில். கன்னி வேட்டை - முதல் முறையாகச் செய்யும் கன்னி வேட்டைக்கு. இராமபிரான் முதல் முதலாகத் தாடகையைப் போரில் வதம் செய்ததை, 'கன்னிப் போர்' என்று கம்பர் பாடுகிறார்.

> "வாசநாண் மலரோன் அன்ன மாமுனி பணிம றாத
> காசுலாம் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப் போரில்
> கூசுவாள் அரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி
> ஆசயால் உழலும் கூற்றும் இவைசிறி தணிந்த தன்றே."
>
> *(தாடகை வதைப் படலம், 77)*

என வருவதைக் காண்க.

மகன் - தன்னுடைய புதல்வனாகிய அந்தத் திண்ணன். போக - செல்லும் பொருட்டு. க்: சந்தி. காடு - காட்டில் உள்ள தெய்வங்கள்; ஆகுபெயர். மகிழ - மகிழ்ச்சியை அடையும் வண்ணம். பலி - பூசைசெய்து நிவேதனங்களை; ஒருமை பன்மை மயக்கம். ஊட்ட - படைப்பதற்காக. த்: சந்தி. தலை - தலைமையான. மரபின்வழி - பரம்பரையின் வழியில். வந்த - பிறந்த. தேவராட்டிதனை - பூசாரிச்சியாகிய தேவராட்டியை. தன்: அசை நிலை. அழைமின் - அழைத்துக் கொண்டு வாருங்கள். என - என்று கூற; இடைக்குறை. அங்கு - அந்த இடத்தில். ச்: சந்தி. சார்ந்தோர் - இருந்தவர்களாகிய வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சென்று - போய். நிலைமை - உள்ள நிலையை. அவள் தனக்கு - அந்தத் தேவராட்டிக்கு. தன்: அசைநிலை. உரைப்ப

- கூற. நரை - நரைத்த மயிர்களைத் தலையில் பெற்ற. மூதாட்டி - அந்த முதிய கிழவி. நெடிது - மிகவும். உவந்து - மகிழ்ச்சியை அடைந்து. விருப்பினொடும் - விருப்பத்தோடும். கடிது - வேகமாக. வந்தாள் - வந்து சேர்ந்தாள்.

பிறகு உள்ள 48-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு வந்த தேவராட்டி காட்டில் வளர்ந்து நிற்கும் மரத்தில் தோன்றிய கோடுகளை உடைய தளிர்களோடு சேர்ந்த கண்ணியைத் தன்னுடைய தலையில் அணிந்துகொண்டு, கலைமானினுடைய கொம்பை அறுத்துச் செய்த குழைகளைத் தன்னுடைய காதுகளில் பூட்டிக்கொண்டு, மானினுடைய வயிற்றில் தோன்றிய அரிதாரத்தினால் தன்னுடைய நெற்றியில் திலகத்தை வைத்துக்கொண்டு, மயிலினுடைய கழுத்தில் உள்ள நீலமான பீலியையும் சங்குமணிகளையும் கோத்து அமைத்த வடத்தையும் அணிந்துகொண்டு, மார்பிலிருந்து இறங்கிச் சுருங்கிக் கொங்கைகள் சரிவை அடைந்து தாழ்ந்து தொங்க, தழைத்த பீலியைத் தன்னுடைய இடுப்பில் கட்டியிருக்கும் மரவுரியின் மேல் அமைந்து விளங்க, அங்கே வந்து சேர்ந்து மலர்களோடு நெருங்கிய மலை நெல்லைக் குத்திய அரிசியாகிய பிரசாதத்தை வழங்கிப் போர் புரியும் வேடர்களினுடைய தலைவனாகிய நாகனை வாழ்த்திவிட்டு நின்றுகொண்டிருந்தாள்.' பாடல் வருமாறு:

"கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக்
கலைமருப்பின் அரிந்தகுழை காதிற் பெய்து
மானின்வயிற் றரிதாரத் திலகம் இட்டு
மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு
தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத்
தழைப்பீலி மரவுரிமேல் சார எய்திப்

பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப்
போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள்.''

கானில் - அந்தத் தேவராட்டி காட்டில் வளர்ந்து நிற்கும் மரத்தில் உள்ள; இட ஆகுபெயர். வரி - கோடுகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தளிர் - தளிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தளிர் - முற்றாத இலை. துதைந்த - பொருந்திய. கண்ணி - தலைமாலையை. சூடி - தன்னுடைய தலையில் அணிந்துகொண்டு. க்: சந்தி. கலை - கலைமானினுடைய. மருப்பின் - கொம்பை. அரிந்த - அறுத்துச் செய்த. குழை - குண்டலங்களை; ஒருமை பன்மை மயக்கம். காதில் - தன்னுடைய காதுகளில்; ஒருமை பன்மை மயக்கம். பெய்து - பூட்டிக் கொண்டு. மானின் - கஸ்தூரி மானினுடைய. வயிற்று - வயிற்றில் உண்டான. அரிதார - கஸ்தூரியினால். த்: சந்தி. திலகம் - பொட்டை. இட்டு - தன்னுடைய நெற்றியில் வைத்துக்கொண்டு. மயிற்கழுத்து - மயிலினுடைய கழுத்தில் உள்ள பீலியையும். மனவுமணி - சங்கு மணிகளையும் கோத்து அமைத்த. வடமும் - மாலையையும். பூண்டு - அணிந்துகொண்டு. 'மயிற்கழுத்து மனவுமணி - மயிலினுடைய கழுத்துக்களைத் துண்டு துண்டாக நறுக்கி இடையிடையே கோக்கப்பட்ட சங்குமணிகளை' எனலும் ஆம். கழுத்து: ஒருமை பன்மை மயக்கம். தான்: அசைநிலை. இழிந்து - மார்பிலிருந்து இறங்கி. திரங்கி - சுருங்கி. முலை - தன்னுடைய கொங்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். சரிந்து - சரிவை அடைந்து. தாழ - கீழே தொங்க. த்: சந்தி. தழை - தழைத்தலை உடைய சந்தன மரத் தழையுமாம். ப்: சந்தி. பீலி - மயிற்பீலிகளை; ஒருமை பன்மை மயக்கம். மரவுரிமேல் - மரப்பட்டையாகிய உடையின்மேல். சார - அமைய. எய்தி - அங்கே வந்து சேர்ந்து. ப்: சந்தி. பூ நெருங்கு - மலர்களோடு

சேர்ந்த. பூ: ஒருமை பன்மை மயக்கம். தோரை - மலை நெல்லைக் குத்திய. மலி - மிகுதியாக உள்ள. சேடை - அரிசியாகிய அட்சதையை. நல்கி - வழங்கி. ப்: சந்தி. போர் - யுத்தம் புரியும். வேடர் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். கோமானை - அரசனாகிய நாகனை. ப்: சந்தி. போற்றி - வாழ்த்திவிட்டு. நின்றாள் - நின்று கொண்டிருந்தாள்.

அடுத்து உள்ள 49-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு நின்றுகொண்டிருந்த முதிய குறத்தியினுடைய வடிவத்தைக் கொண்ட பூசாரிச்சியாகிய தேவராட்டியை நேரில் பார்த்து, ''தாயே, நீ வறுமை அகன்று நன்றாகவும் இனிமையாகவும் வாழ்ந்திருந்தாயோ?'' என்று கேட்கும் நாகனுக்கு எதிரில் அவனை நன்மைகள் பெருமாறு வாழ்த்துக்களைக் கூறிவிட்டு, ''நல்லவையும் மென்மையாக உள்ளவையும் ஆகிய மாமிசங்களையும், ஈசல்களோடு கள்ளையும், மலையில் விளைகின்ற தினை முதலிய தானியங்களையும், வேறு வகைகளையும், யான் விரும்பியவை யாவும் அன்றைக்கு நீ வழங்கியபடியினால் பெற்றுக் கொண்டு என்னுடைய வாழ்க்கையை நடத்துகிறவள் ஆனேன்; என்னை அழைத்துக்கொண்டு வந்த காரியம் என்ன?'' என்று தெய்வ ஆவேசத்தை அடையும் அந்தத் தேவராட்டி கேட்டாள்.' பாடல் வருமாறு:

''நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை
நேர்நோக்கி, 'அன்னை,நீ நிரப்பு நீங்கி
நன்றினிதின் இருந்தனையோ?' என்று கூறும்
நாகன்எதிர் நலம்பெருக வாழ்த்தி, 'நல்ல
மென்தசையும் ஈயலொடு நறவும் வெற்பில்
விளைவளனும் பிறவளனும் வேண்டிற் றெல்லாம்
அன்றுநீ வைத்தபடி பெற்று வாழ்வேன்;
அழைத்தபணி என்?'என்றாள் அணங்கு சார்ந்தாள்.''

நின்ற - அவ்வாறு தன்முன்னால் நின்று கொண்டிருந்த. முது - முதிய. குற - குறமகளினுடைய. க்: சந்தி. கோல - வடிவத்தைப் பெற்ற. ப்: சந்தி. படிமத்தாளை - முருகனுடைய விக்கிரகத்தை வைத்திருக்கும் தேவராட்டியை. படிமம் - விக்கிரகம். நேர் - நேராக. நோக்கி - பார்த்து. அன்னை - தாயே; விளி. நீ நிரப்பு - நீ வறுமை. நீங்கி - அகன்று. நன்று - நன்றாகவும். இனிதின் - இனிமை யாகவும். இருந்தனையோ - வாழ்ந்திருந்தாயோ. என்று - என. கூறும் - கேட்கும். நாகன் - நாகனுக்கு. எதிர் - எதிரில். நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். பெருக - பெருகி உண்டாகுமாறு. வாழ்த்தி - வாழ்த்துக்களைக் கூறுவிட்டு. நல்ல - நல்லவையும். மென் - மென்மையாக உள்ளவையும். தசையும் - ஆகிய மாமிசங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஈயலொடு - ஈசல்களோடு; ஒருமை பன்மை மயக்கம். நறவும் - கள்ளையும். வெற்பில் - மலையில். விளை - விளையும். வளனும் - தினை, மலைநெல், சோளம், கம்பு, வரகு, கேழ்வரகு முதலிய தானியங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பிற - வேறு. வளனும் - வளங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அவை யாவன செல்வம், அரிசி, நெல், புடைவை முதலியவை. வேண்டிற்று - யான் விரும்பியவை ஆகிய; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றையும். அன்று - அன்றைக்கு. நீ வைத்தபடி - நீ வழங்கியபடியினால். பெற்று - பெற்றுக்கொண்டு. வாழ்வேன் - என்னுடைய வாழ்க்கையை நடத்துபவள் ஆனேன். அழைத்த - என்னை இங்கே அழைத்துக் கொண்டு வந்த. பணி - காரியம். என் - என்ன. அணங்கு - தெய்வ ஆவேசத்தை. சார்ந்தாள் - அடைந்தவளாகிய அந்தத் தேவராட்டி. என்றாள் - என்று கேட்டாள்.

*பின்பு உள்ள 50-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*' ''ஒரு குற்றமும் இல்லாத என்னுடைய குடும்பத்தில் பிறந்த வலிமையையுடைய புதல்வனாகிய திண்ணன் எங்களுடைய சாதியினுடைய தலைமைப் பதவியை நான் வழங்க ஏற்றுக்கொண்டு அதனை மேற்கொண்டு பூட்டு தலைப் பெற்ற கொடிய விற்களை ஏந்தும் வேடர்களைப் பாதுகாக்கும் மலையின் உரிமையைப் பெற்றுக் கொண்டு முதல் முதலாக அதைச் செய்கிறான்; அவனுக்கு என்றைக்கும் வேட்டையாடுதலாகிய தொழில் எனக்கும் மேலாக இருக்கும் வண்ணம் வாய்க்கப் பெற்று வேறு இடங்களுக்குச் சென்று அங்கு உள்ளவர்களினுடைய பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டுவரும் வெற்றியை அடையும் வண்ணம் காட்டில் தங்கி எழுந்தருளியிருக்கும் கடவுளர்கள் விருப்பத்தைப் பெற்று உண்ணும்படி காட்டில் பூசை போட்டு நிவேதனங்களைப் படைப்பாயாக.'' என்று கவலை ஒன்றும் இல்லாதவனாகிய நாகன் கூறினான்.' பாடல் வருமாறு:*

''கோட்டம்இல் என்குலமைந்தன் திண்ணன் எங்கள்
குலத்தலைமை யான்கொடுப்பக் கொண்டு பூண்டு
பூட்டுறுவெம் சிலைவேடர் தம்மைக் காக்கும்
பொருப்புரிமை புகுகின்றான்; அவனுக் கென்றும்
வேட்டை வினை எனக்குமேலாக வாய்த்து
வேறுபுலம் கவர்வென்றி மேவு மாறு
காட்டிலுறை தெய்வங்கள் விரும்பி உண்ணக்
காடுபலி ஊட்'டென்றான் கவலை இல்லான்.''

கோட்டம் - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. என் - என்னுடைய. குல - குடும்பத்தில் பிறந்த மைந்தன் - வலிமையைப் பெற்ற புதல்வனாகிய. திண்ணன் - திண்ணன் என்பவன். எங்கள் - எங்களுடைய. குல -

வேட்டுச் சாதிக்கு. த்: சந்தி. தலைமை - தலைமைப் பதவியை. யான் - நான். கொடுப்ப - வழங்க. க் : சந்தி. கொண்டு - ஏற்றுக் கொண்டு. பூண்டு - அதனை மேற்கொண்டு. பூட்டு - பூட்டு ரதலை. உறு - பெற்ற. வெம் - கொடுமையான. சிலை - விற்களை ஏந்தும்; ஒருமை பன்மை மயக்கம். வேடர்தம்மை - வேடர்களை; ஒருமை பன்மை மயக்கம். தம் : அசைநிலை. க்:சந்தி. காக்கும் - அரசாட்சி செய்து பாதுகாக்கும். பொருப்பு - மலையினுடைய. உரிமை - உரிமையை. புகுகின்றான் - பெற்றுக் கொண்டு முதல் முதலாக அதைச் செய்கிறான். அவனுக்கு - அந்தத் திண்ணனுக்கு. என்றும் - என்றைக்கும். வேட்டை - விலங்குகளை வேட்டையாடுவதாகிய. வினை - தொழில். எனக்கு மேலாக - என்னைவிட மேலாக. வாய்த்து - வாய்க்கப் பெற்று. வேறு - பிற. புலம் - இடங்களுக்குச் சென்று; ஒருமை பன்மை மயக்கம். கவர் - அங்கே வாழ்பவர்களினுடைய பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு வரும். வென்றி - வெற்றியை. மேவுமாறு - அடையும் வண்ணம். காட்டில் உறை - காட்டில் தங்கி எழுந்தருளியிருக்கும். தெய்வங்கள் - கடவுளர்கள். விரும்பி - விருப்பத்தைப் பெற்று. உண்ண - உண்ணும்படி. க்:சந்தி. காடு - காட்டில். பலிஊட்டு - பூசை போட்டு நிவேதனங்களைப் படைப்பாயாக. பலி: ஒருமை பன்மை மயக்கம். கவலை - ஒரு கவலையும். இல்லான் - இல்லாதவனாகிய நாயகன். என்றான் - என்று கூறினான்.

பிறகு உள்ள 51-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்த நாகன் கூறிய வார்த்தைகளைக் கேள்விப்பட்ட மலையில் வாழும் தேவராட்டி, "உள்ளம் மகிழ்ச்சியை அடைந்து இந்த இடத்திற்கு அன்புடன் வருகின்ற எனக்கு

எந்த நாளைக்காட்டிலும் சகுனங்கள் மிகவும் நல்லவையாக உண்டாயின; இதனால் உன்னுடைய வலிமையைப் பெற்ற புதல்வனாகிய திண்ணன் ஆகிய வெற்றியைத் தருவதும், வரிந்து கட்டப்பெற்றதும் ஆகிய வில்லை ஏந்தியவன் உன்னுடைய அளவில் அல்லாமல் மேம்பாட்டை அடைகிறான்'' என்று கூற, விருப்பத்தை அடைந்து வாழ்த்துக்களை இயம்பி வெற்றியைப் பெற்ற காட்டுக் கடவுளர்கள் மகிழ்ச்சியை அடையுமாறு நிவேதனம் செய்ய வேண்டிய பண்டங்களைக் குறைவு இல்லாமல் வாங்கிக் கொண்டு சென்றாள்.' பாடல் வருமாறு:

''மற்றவன்றன் மொழிகேட்ட வரைச்சூ ராட்டி
'மனம்மகிழ்ந்திங் கன்போடு வருகின் றேனுக்
கெற்றையினும் குறிகள்மிக நல்ல ஆன;
இதனாலே உன்மைந்தன் திண்ண னான
வெற்றிவரிச் சிலையோன்நின் அளவி லன்றி
மேம்படுகின் றான்.'என்று விரும்பி வாழ்த்திக்
கொற்றவன தெய்வங்கள் மகிழ ஊட்ட
வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள்.''

மற்று - அசைநிலை. அவன்றன் - அந்த நாகனுடைய தன்: அசைநிலை. மொழி - வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்ட வரை - கேட்ட மலையில் வாழும். ச்: சந்தி. சூராட்டி - தெய்வ ஆவேசம் வந்து ஆடும் தேவராட்டி. மனம் - என்னுடைய உள்ளம். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. இங்கு - இந்த இடத்திற்கு. அன்போடு - அன்புடன். வருகின்றேனுக்கு - வருகின்ற எனக்கு. எற்றையினும் - எந்த நாளைக்காட்டிலும். குறிகள் - சகுனங்கள். மிக - மிகவும். நல்ல - நல்லவையாக. ஆன - ஆயின. இதனால் - இவ்வாறு நான் நல்ல சகுனங்களைக் கண்டதனால். ஏ:

அசைநிலை. உன் - உன்னுடைய. மைந்தன் - வலிமையைப் பெற்ற புதல்வனாகிய. திண்ணன் ஆன - திண்ணன் ஆகிய. வெற்றி - வெற்றியைத் தரும். வரி - வரிந்து கட்டப் பெற்ற. ச்: சந்தி. சிலையோன் - வில்லை ஏந்திய அவன். நின் - உன்னுடைய. அளவில் அன்றி - அளவில் அல்லாமல். மேம்படுகின்றான். மேம்பாட்டை அடைந்திருக்கிறான். என்று - எனக் கூறி. விரும்பி - விருப்பத்தை அடைந்து. வாழ்த்தி - அவனுக்கு வாழ்த்துக்களைக் கூறி. க்: சந்தி. கொற்ற - வெற்றியை வழங்கும். வன தெய்வங்கள் - காட்டில் வாழும் கடவுளர்கள். மகிழ - மகிழுமாறு. ஊட்ட - நிவேதனம் செய்வதற்கு. வேண்டுவன - வேண்டிய பிரப்பரிசி, இரத்தம் கலந்த சோறு, வெல்லம் முதலிய பண்டங்களை. குறைவு - ஒரு குறைவும். இன்றி - இல்லாமல். க்: சந்தி. கொண்டு - வாங்கிக்கொண்டு. போனாள் - அந்தத் தேவராட்டி சென்றாள்.

*அடுத்து உள்ள 52-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'தெய்வ ஆவேசம் வந்து ஆடும் குறத்தியாகிய முதிய கிழவி போன பிறகு திண்ணனார் வில்லை ஏந்திய தம்முடைய தந்தையாகிய நாகன் தம்மை அழைத்து வரச்செய்ய சீர்த்தியைக் கொண்ட மையைப் போலக் கரிய நிறம் பொருந்திய நறுமணம் வீசும் தலைமயிரில் நல்ல மணம் கமழும் கண்ணியை நீலமணியைப் போன்ற ஒரு மலை வந்தது என்று கூறும்வண்ணம் தங்களுடைய கைகளில் அமைந்த விற்களை ஏந்திய வேடர்கள் தம்மை வாழ்த்த எழுந்தருளி வாத்சல்யத்தைச் செய்யும் தம்முடைய தந்தையாகிய அந்த நாகனுடைய வெற்றிக் கழலைப் பூண்டிருக்கும் திருவடிகளைப் பணியும் சமயத்தில் செய்குன்றுகளைப் போல விளங்கும் தம்முடைய தோள்கள்

இரண்டையும் இறுகத் தழுவிக்கொண்டு செழிப்பாக இருக்கும் புலித்தோலாகிய ஆசனத்தில் தன்னுடைய முன்னால் இருக்குமாறு அமர வைத்தான்.' பாடல் வருமாறு:

"தெய்வம்நிகழ் குறமுதியாள் சென்ற பின்பு
திண்ணனார் சிலைத்தாதை அழைப்பச் சீர்கொள்
மைவிரவு நறும்குஞ்சி வாசக் கண்ணி
மணிநீல மலைஒன்று வந்த தென்னக்
கைவிரவு சிலைவேடர் போற்ற வந்து
காதல்புரி தாதைகழல் வணங்கும் போதில்
செய்வரைபோற் புயம்இரண்டும் செறியப் புல்லிச்
செழும்புலித்தோல் இருக்கையில்முன் சேர வைத்தான்."

தெய்வம் - தெய்வ ஆவேசம். நிகழ் - வந்து ஆடும். குற - குறத்தியாகிய. முதியாள் - முதிய கிழவியாகிய தேவராட்டி. சென்ற - அவ்வாறு போன. பின்பு - பிறகு. திண்ணனார் சிலை - திண்ணனார், வில்லை ஏந்திய. த்: சந்தி. தாதை - தம்முடைய தந்தையாகிய நாகன். அழைப்ப - தம்மை அழைத்துக் கொண்டு வரச் செய்ய. ச்: சந்தி. சீர் - சீர்த்தியை. கொள் - கொண்ட. மை - மையைப் போல. விரவு - கரிய நிறம் அமைந்த. நறும் - நறுமணம் கமழும். குஞ்சி - தம்முடைய தலைமயிரில். வாச - நல்ல வாசனை வீசும். க்: சந்தி. கண்ணி - கண்ணியை அணிந்த. மணிநீல - நீலமணியைப் போன்ற. மலை ஒன்று - ஒரு மலை. வந்தது என்ன - வந்தது என்று கூறும் வண்ணம். க்: சந்தி. கை - தங்களுடைய கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். விரவு - பிடித்து அமைந்த. சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்ற - வாழ்த்த. வந்து - எழுந்தருளி. காதல் - வாத்சல்யத்தை. புரி - செய்யும். தாதை - தம்முடைய தந்தையாகிய நாகனுடைய. கழல் - வெற்றிக் கழலைப்

பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். வணங்கும் - பணியும். போதில் - சமயத்தில். செய்வரை போல் - செய்குன்றுகளைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். புயம் - தோள்கள்; ஒருமை பன்மை மயக்கம். இரண்டும் - இரண்டையும். செறிய - இறுக. ப்: சந்தி. புல்லி - தழுவிக் கொண்டு. ச்: சந்தி. செழும் - செழுமையாகிய. புலித் தோல் - புலித்தோலாகிய. இருக்கையில் - ஆசனத்தில். முன் - தனக்கு முன்னால். சேர - இருக்குமாறு. வைத்தான் - அமர வைத்தான்.

*அடுத்து உள்ள 53-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'அவ்வாறு தனக்கு முன்னால் அமர்ந்திருந்த தன்னுடைய வலிமையைப் பெற்ற புதல்வனாகிய திண்ணனுடைய முகத்தைப் பார்த்த நாகன், "முதுமைப் பிராயம் என்னை வந்து சேர்தலினால் முன்பு செய்ததைப் போல என்னுடைய சொந்த முயற்சியினால் விலங்குகளை வேட்டையாடுவதற்கு இனிமேல் எனக்கு எண்ணம் இல்லை; எனக்கு மேலாக நிலை பெற்று விளங்கும் விற்களை ஏந்திய மலைவர்ணர்களாகிய வேடர்களினுடைய சாதியைப் பாதுகாக்கும் செயலை நீ மேற்கொண்டு பகைவர்களை ஆயுதங்களால் வெட்டி வீழ்த்தி, விலங்குகளை வேட்டையாடி என்றைக்கும் நின்னுடைய பரம்பரையினுடைய உரிமையைச் சுமப்பாயாக" என்று கூறிவிட்டுத் தோலுடையையும் உடைவாளையும் அந்தத் திண்ணனுடைய கைகளில் அளித்தான்.'* பாடல் வருமாறு:

"முன்இருந்த மைந்தன்முகம் நோக்கி நாகன்
'மூப்பெனைவந் தடைதலினால் முன்பு போல
என்னுடைய முயற்சியினால் வேட்டை யாட
இனிஎனக்குக் கருத்தில்லை; எனக்கு மேலாய்
மன்னுசிலை மலையர்குலம் காவல் பூண்டு
மாறெதிர்ந்து மாவேட்டை ஆடி என்றும்

உன்னுடைய மரபுரிமை தாங்கு வாய்.'என்
றுடைதோலும் சுரிகையும்கைக் கொடுத்தான் அன்றே.''

முன் - தனக்கு முன்னால் அவ்வாறு. இருந்த - அமர்ந்திருந்த. மைந்தன் - தன்னுடைய வலிமையைப் பெற்ற புதல்வனாகிய திண்ணனுடைய. முகம் - முகத்தை. நோக்கி - பார்த்து. நாகன் - திண்ணனுடைய தந்தையாகிய நாகன். மூப்பு - முதுமைப் பருவம். எனை - என்னை; இடைக்குறை. வந்து அடைதலினால் - வந்து சேர்தலினால். முன்பு - முன்நாட்களில். போல - செய்ததைப் போல. என்னுடைய முயற்சியினால் - என்னுடைய சொந்த முயற்சியில். வேட்டை ஆட - விலங்குகளை வேட்டையாடும் தொழிலைப் புரிவதற்கு. இனி - இனிமேல். எனக்குக் கருத்து இல்லை - எனக்கு எண்ணம் இல்லை. எனக்கு மேலாய் - என்னைவிட மேலாக. எனக்கு: உருபு மயக்கம். மன்னு - நிலைபெற்று விளங்கும். சிலை - விற்களை ஏந்தும்; ஒருமை பன்மை மயக்கம். மலையர் - மலைவாணர்களாகிய வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலம் - சாதியை. காவல் - பாதுகாக்கும் செயலை. பூண்டு - நீ மேற்கொண்டு. மாறு - பகைவர்களை; திணை மயக்கம். எதிர்ந்து - எதிர்த்து ஆயுதங்களால் அவர்களை வெட்டி வீழ்த்தி. மா - காட்டில் வாழும் சிங்கம், புலி, மான், வரையாடு,. புலி, வேங்கை, ஓநாய், கரடி முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். வேட்டை ஆடி - வேட்டையைச் செய்து. என்றும் - என்றைக்கும். உன்னுடைய - நின்னுடைய. மரபு - பரம்பரை பரம்பரையாக வந்த. உரிமை - உரிமையை. தாங்குவாய் - பொறுப்பாயாக. என்று - என நாகன் கூறிவிட்டு. உடைதோலும் - தோலாடையையும். சுரிகையும் - உடைவாளையும். கை - திண்ணனுடைய கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கொடுத்தான் - அளித்தான். அன்று, ஏ: இரண்டும் ஈற்றசை நிலைகள்.

*பிறகு உள்ள 54-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

*'திண்ணனார் தம்முடைய தந்தையாகிய நாகனுடைய மதிய நிலையைத் தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணி, தளர்ச்சியை மேற்கொண்டு தங்களுடைய வேட்டுவச் சாதியினுடைய தலைமைப் பதவிக்குச் சார்தல் தோன்றவே, வந்தமைந்த குறைபாட்டை நிரப்பும் வண்ணம் தம்முடைய திருவுள்ளத்தில் கொண்ட குறித்த எவ்வத்தோடு, நாகன் கூறியதை மறுக்காமல் ஏற்றுக்கொண்டு, முதலில் அந்த நாகனுடைய வெற்றிக்கழலைப் பூண்ட திருவடிகளைப் பணிந்து விட்டு, முறைமையினால் அவன் கொடுத்த முதன்மையான உடைவாளையம் தோலாடையையும் தம்முடைய கைகளில் வாங்கிக் கொண்டு, தம்முடைய திருவுள்ளத்தில் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் பொருட்டு நின்றுகொண்டிருந்த திண்ணனாருக்கு அவருடைய செல்வத்தைப்பெற்ற தந்தையாகிய நாகன் தன்னுடைய வதனம் மலர்ச்சியை அடைந்து பின்வருமாறு கூறுகிறவனானான்.' பாடல் வருமாறு:*

"தந்தைநிலை உட்கொண்டு தளர்வு கொண்டு
தங்கள்குலத் தலைமைக்குச் சார்வு தோன்ற
வந்தகுறை பாடதனை நிரப்பு மாறு
மனம்கொண்ட குறிப்பினால் மறாமை கொண்டு
முந்தைஅவன் கழல்வணங்கி முறைமை தந்த
முதற்சுரிகை உடைதோலும் வாங்கிக் கொண்டு
சிந்தைபரம் கொளநின்ற திண்ண னார்க்குத்
திருத்தாதை முகம்மலர்ந்து செப்பு கின்றான்."

*தந்தை திண்ணனார் தம்முடைய தந்தையாகிய நாகனுடைய. நிலை - முதிய நிலையை. உட்கொண்டு - தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணி. தளர்வு - தளர்ச்சியை. கொண்டு - மேற்கொண்டு. தங்கள் - தங்களுடைய. குல -*

வேட்டுவச் சாதியினுடைய. த்: சந்தி. தலைமைக்கு - தலைமைப் பதவிக்கு. சார்வு - சார்தல். தோன்ற - தோன்றவே. வந்த - வந்து அமைந்த. குறைபாடதனை - குறைபாட்டை. அது. பகதிப்பொருள் விகுதி. நிரப்புமாறு - நிரப்பும் வண்ணம்; நிறைவு செய்வதற்காக. மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். கொண்ட குறிப்பினால் - கொண்ட குறித்த எண்ணத்தோடு; உருபு மயக்கம். மறாமை - மறுக்காமல். கொண்டு - அந்தத் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டு. முந்தை - முதலில். அவன் - அந்த நாகனுடைய. கழல் - வீரக்கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். வணங்கி - பணிந்துவிட்டு. முறைமை - முறைமையினால். தந்த - அவன் கொடுத்த. முதல் - முதன்மையான. சுரிகை - உடைவாளையும். உடைதோலும் - தோலாடையையும். வாங்கிக் கொண்டு - தம்முடைய கைகளில் வாங்கிக் கொண்டு. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். பரம் - அந்தப் பொறுப்பை. கொள - ஏற்றுக் கொள்ளும் பொருட்டு; இடைக்குறை. நின்ற - நின்று கொண்டிருந்த. திண்ணனார்க்கு - தன்னுடைய புதல்வராகிய திண்ணனாருக்கு. த் : சந்தி. திரு - செல்வத்தைப் பெற்ற. த்:சந்தி. தாதை - தந்தையாகிய அந்த நாகன். முகம் - தன்னுடைய வதனம். மலர்ந்து - மலர்ச்சியை அடைந்து. செப்புகின்றான் - கூறுகின்றான் ஆனான்.

பிறகு உள்ள 55-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

' "நம்முடைய சாதியில் பிறந்த வேடர்களினுடைய உறவினர்களை யான் துணைவர்களாகக் கொண்டு இந்தத் தலைமைப் பதவியைத் தாங்கி அதற்குப் பின்னால் நன்மைகளையே புரிந்து, பகைவர்கள் போரிடும் போர்க்களத்தில் வேறு இடங்களில் வாழ்பவர்களிடம் உள்ள பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்தவற்றிற்குக் கருவியாக இருந்த உறுதியான வில்லினுடைய வளப்பம்

நீங்காத சிறப்போடு நீ வாழ்வாயாக! கொடுமையான காடுகளாகிய இடங்களில் புரியும் வேட்டைகளும் நினக்கு வாய்ப்பாக அமையும்; வேகத்தோடு நீ தாமதம் செய்யாமல் வேட்டையாடு வதற்காக இந்த வலிமையைக் கொண்ட கொடிய விற்களை ஏந்திய வேடர்களோடு எழுவாயாக!'' என்று கூறித் தன்னுடைய இயல்போடு நின்று கொண்டிருந்த நாகன் திண்ணனாருக்கு விடை கொடுத்து அனுப்பினான்.' பாடல் வருமாறு:

" 'நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை
நான்கொண்டு பரித்ததன்மேல் நலமே செய்து
தெம்முனையில் அயற்புலங்கள் கவர்ந்து கொண்ட
திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய்;
வெம்முனையின் வேட்டைகளும் உனக்கு வாய்க்கும்;
விரைந்துநீ தாழாதே வேட்டை ஆட
இம்முரண்வெம் சிலைவேடர் தங்க ளோடும்
எழுக'என விடைகொடுத்தான் இயல்பில் நின்றான்.''

நம்முடைய குல - நம்முடைய சாதியிற் பிறந்த. மறவர் - வேடர்களினுடைய. சுற்றத்தாரை - உறவினர் களை; ஒருமை பன்மை மயக்கம். நான் - யான். கொண்டு - துணைவர்களாகக் கொண்டு. பரித்து - இந்தத் தலைமைப் பதவியைத் தாங்கி. அதன் மேல் - அதற்குப் பின்னால். நலமே - நன்மைகளையே; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து. தெம்முனையில் - பகைவர்கள் போர் புரியும் போர்க்களத்தில். அயற்புலங்கள் - வேறு இடங்களில் வாழ்பவர்களிடம்; இட ஆகுபெயர். கவர்ந்து கொண்ட - உள்ள பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்தவற்றிற்கு. திண் - கருவியாக இருந்த உறுதியான. சிலையின் - வில்லினுடைய. வளம் - வளப்பம். ஒழியா - நீங்காத. ச்: சந்தி. சிறப்பின் - சிறப்போடு. வாழ்வாய் - நீ வாழ்வாயாக. வெம் - கொடுமையான. முனையின் -

காடுகளாகிய இடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வேட்டைகளும் - விலங்குகளை வேட்டையாடும் தொழில்களும். உனக்கு - நினக்கு. வாய்க்கும் - வாய்ப்பாக அமையும். விரைந்து - வேகத்தோடு. நீ தாழாது - தாமதம் செய்யாமல். ஏ: அசைநிலை. வேட்டை ஆட - விலங்குகளை வேட்டை ஆடுவதற்காக. இம்முரண் - இந்த வலிமையைக் கொண்ட. வெம் - கொடியதாக இருக்கும். சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர் தங்களோடும் - வேடர்களோடும். தம்: அசைநிலை. எழுக - எழுவாயாக. என - என்று கூறி; இடைக்குறை. இயல்பில் - தனக்கு உரிய இயல்போடு; உருபு மயக்கம். நின்றான் - நின்று கொண்டிருந்த நாகன். விடைகொடுத்தான் - திண்ணனாருக்கு விடைகொடுத்து அனுப்பினான்.

பிறகு வரும் 56-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிவந்த கண்களையும் வலிமையையும் கொலை புரியும் ஆற்றலையும் பெற்ற ஆண்சிங்கத்தைப் போன்ற உறுதியைக் கொண்ட திண்ணனார் தான் முற்பிறவியில் புரிந்த தவத்தின் பயனாகப் பெருமையைப் பெற்ற கொடுமையான கண்களையும் பேராற்றலையும் பெற்று விளங்கும் தம்முடைய தந்தையாகிய நாகனுடைய வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளைப் பணிந்து விட்டு அவனுடைய முன்னால் நின்று கொண்டு அவனிடம் விடையைப் பெற்றுக் கொண்டு தம்முடைய திருமாளிகைக்கு வெளியில் எழுந்தருளி வேடர்களோடும் மங்கலமான நீர் நிரம்பிய சுனையில் முழுகிவிட்டு வந்து தம்முடைய திருமாளிகையில் தங்கியிருந்து, தங்கிய இரவு நேரம் விடியும் வேளையில் வரிந்து கட்டிய விற்களைச் சேமித்து வைத்திருக்கும் ஆயுத சாலைக்குள் வீரம் பொங்கி எழும் வில்லால் ஆற்றலைக் காட்டும் விலங்குகளை

வேட்டையாடுவதற்கு ஏற்ற திருக்கோலத்தை மேற்கொள் வதற்காக அலங்காரம் செய்யும் தொழிலில் வல்லவராகிய கலைஞரோடும் தோற்றப் பொலிவை அடைந்து நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத்
திண்ணனார் செய்தவத்தின் பெருமை பெற்ற
வெங்கண்விறல் தாதைகழல் வணங்கி நின்று
விடைகொண்டு புறம்போந்து வேட ரோடும்
மங்லகநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி
வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப்
பொங்குசிலை அடல்வேட்டைக் கோலம் கொள்ளப்
புனைதொழிற்கை வினைஞரொடும் பொலிந்து புக்கார்."

செம் - சிவந்த. கண் - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வய - வலிமையையும். க்: சந்தி. கோள் - கொலை புரியும் ஆற்றலையும் பெற்ற. அரியேறு - ஆண்சிங்கத்தை. அன்ன - போன்ற. திண்மை - உறுதியைக் கொண்ட. த்: சந்தி. திண்ணனார் - நாகனுடைய புதல்வராகிய திண்ணனார். செய் - தான் முற்பிறவியில் புரிந்த. தவத்தின் - தவத்தின் பயனாக; ஆகுபெயர். பெருமை பெற்ற - பெருமையைப் பெற்ற. வெம் - கொடுமையாக இருக்கம். கண் - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். விறல் - பேராற்றலையும் பெற்று விளங்கும். தாதை - தம்முடைய தந்தையாகிய நாகனுடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகுபெயர். வணங்கி - பணிந்துவிட்டு. நின்று - அவனுக்கு முன்னால் நின்று கொண்டு. விடைகொண்டு - அவனிடம் விடையைப் பெற்றுக் கொண்டு. புறம் - தம்முடைய திருமாளிகைக்கு வெளியில். போந்து - எழுந்தருளி. வேடரோடும் - வேடர்களுடனும்; ஒருமை பன்மை மயக்கம். மங்கலநீர் - மங்கலமாகிய புனல் நிரம்பியுள்ள. ச்:

சந்தி. சுனை - சுனையில். படிந்து - முழுகி விட்டு வந்து. மனையின் - தம்முடைய திருமாளிகையில். வைகி - தங்கியிருந்து. வைகு - தங்கிய. இருளின் புலர் காலை - இரவு நேரம் போய் விடியும் வேளையில். இன்: வேண்டா வழி வந்த சாரியை. வரி - வரிந்து கட்டப்பெற்ற. வில் - விற்களைச் சேமித்து வைத்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். சாலை - ஆயுத சாலைக்குள். ப்: சந்தி. பொங்கு - வீரம் பொங்கி எழும். சிலை - வில்லால். அடல் - ஆற்றலைக் காட்டும். வேட்டை - விலங்குகளை வேட்டையாடுவதற்கு ஏற்ற. க்: சந்தி. கோலம் - திருக்கோலத்தை. கொள்ள - மேற்கொள் வதற்காக. ப்: சந்தி. புனை - அலங்காரம் செய்யும். தொழில் - வேலையில் வல்லவராகிய. கை - கைகளின் திறமையைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வினைஞரொடும் - கலைஞரொடும். பொலிந்து - தோற்றப் பொலிவை அடைந்து. புக்கார் - நுழைந்தார்.

அடுத்து வரும் 57-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'நெளிகளைப் பெற்ற தம்முடைய தலைமயிரின் சுருள்கள் உச்சியில் முடிக்கப்பெற்று நிமிர்ந்து விளங்க அதன்மேல் தளிர்களோடு கட்டப் பெற்ற கொண்டை மாலைக்கு நடுவில் மிக்க பிரகாசத்தைப் பெற்ற மயிற் பீலிகளைச் சேர்த்துக் கட்டி நறுமணத்தைப் பெற்ற முல்லை மலர் மாலையின் மேல் குறிஞ்சி மலரும், வெட்சி மலரும் நெருங்குதலைப் பெற்ற வண்டுகளினுடைய கூட்டம் சீர்த்தியைப் பெற்று மொய்க்கும் வண்ணம் முதுகுப் புறத்தில் அமைத்து.' பாடல் வருமாறு:

"நெறிகொண்ட குஞ்சிச்சுருள் துஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக்கிடை மொய்யொளிப் பீலி சேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின்குலம் சீர்கொளப் பின்பு செய்து."

இந்தப் பாடல் குளகம். நெறி - நெளிகளை; ஒருமை பன்மை மயக்கம். கொண்ட - பெற்ற. குஞ்சி - தம்முடைய தலைமயிரில் உள்ள. ச் : சந்தி. சுருள் - சுருள்கள்; ஒருமை பன்மை மயக்கம். துஞ்சி - உச்சியில் முடிக்கப் பெற்று. நிமிர்ந்து - மேல்நோக்கி. பொங்க - பொங்கி எழ. முறி - அதன் மேல் தளிர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கொண்ட - கட்டப் பெற்ற. கண்ணிக்கு - கொண்டை மாலைக்கு. இடை - நடுவில். மொய் - மிகுதியாக இருக்கும். ஒளி - பிரகாசத்தைப் பெற்ற. ப்:சந்தி. பீலி - மயிற் பீலிகளை; ஒருமை பன்மை மயக்கம். சேர்த்தி - சேர்த்துக் கட்டி. வெறி - நறுமணத்தை. கொண்ட - பெற்ற. முல்லை - முல்லை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பிணை - கட்டிய மாலையின். மீது - மேல். குறிஞ்சி - குறிஞ்சி மலரும். வெட்சி - வெட்சி மலரும். செறி - நெருங்குதலை; முதல் நிலைத் தொழிற்பெயர். கொண்ட - பெற்ற. வண்டின் - வண்டுகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குலம் - கூட்டம். சீர் - சீர்த்தியை. கொள - பெற்று மொய்க்கும் வண்ணம்; இடைக்குறை. ப்: சந்தி. பின்பு - முதுகுப்புறத்தில். செய்து - அமைத்து.

பின்பு உள்ள 58-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'நெற்றியின் முன்பக்கத்தின் மேல் மயிலிறகின் அடிக் குருத்துக்களுக்கு நடுவில் அமைத்த குன்றி மணியில் புரிகளைப் பெற்ற மயிராலாகிய கயிற்றைப் பொருந்தும் படி அணிந்து மின்னலைப் போல விளங்கும் சங்கு மணிகளையும், திகழும் வெண்மையான தோடுகளையும் திண்ணனாருடைய காதுகளில் தங்கிப் பக்கத்தில் இருந்த அவை பெருமையைப் பெற்ற சந்திரர்களைப் போலத் தங்கியிருக்க.' பாடல் வருமாறு:

"முன்நெற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயி றாரச் சாத்தி
மின்னில்திகழ் சங்கு விளங்குவெண் தோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக."

இந்தப் பாடலும் குளகம். முன்நெற்றியின் - நெற்றியின் முன்பக்கத்தின். மீது - மேல். முருந்து - மயிலிறகின் அடிக் குருத்துகளுக்கு; ஒருமை பன்மை மயக்கம். இடை - நடுவில். வைத்த - அமைத்த. குன்றி தன்னில் - குன்றிமணியில். தன்: அசைநிலை. புரி - புரிகளை; ஒருமை பன்மை மயக்கம். கொண்ட - பெற்ற. மயிர்க்கயிறு - மயிரால் ஆகிய கயிற்றை. ஆர - பொருந்தும்படி. ச்: சந்தி. சாத்தி - அணிந்து. மின்னில் - மின்னலைப் போல. திகழ் - விளங்கும். சங்கு - சங்கு மணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். விளங்கு - திகழும். வெண் - வெண்மையான. தோடு - தோடு களையும்; ஒருமை பன்மை மயக்கம். காதின் - திண்ணனாருடைய செவிகளில்; ஒருமை பன்மை மயக்கம். மன்னி - தங்கி. ப்: சந்தி. புடை - பக்கத்தில். நின்றன - இருந்த அவை. மா - பெருமையைப் பெற்ற. மதிபோல - சந்திரர்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். வைக - தங்கியிருக்க.

அடுத்து உள்ள 59-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனாருடைய கழுத்தில் வெண்மை நிறத்தைப் பெற்ற சோழிகளைச் சேர்த்து அமைத்து ஒளி வீசும் மாலையைச் சேரும்படி வைத்துக் கொண்டு சங்கு மணிகளோடு வேறு பல மணிகளைக் கோவையாகக் கோத்து அந்தக் கோவையின் நடுவில் காட்டுப் பன்றியினுடைய தந்தங்கள் துண்டுகளாகிய சந்திரர்களைப் போல விளங்குபவை தொங்க வேங்கைப் புலியினுடைய

வன்மையான தோல் இடுப்பிலும் கால்களில் தண்டை களைப் பூண்டு, பூத்தொழில் அழகு பொங்க அமைந்த சன்னவீரம் என்னும் அணிகலனும் விளங்க.' பாடல் வருமாறு:

''கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை ஏனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்றோல்
தண்டைச்செயல் பொங்கிய சன்ன வீரம் தயங்க.''

இந்தப் பாடலும் குளகம். கண்டத்திடை - திண்ணனாருடைய கழுத்தில். வெண் - வெள்ளை நிறத்தைப் பெற்ற. கவடி - சோழிகளை; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கதிர் - ஒளியை வீசும். மாலை சேர - கட்டிய மாலையைச் சேரும்படி. க்: சந்தி. கொண்டு - வைத்துக் கொண்டு. அக்கொடு - சங்கு மணிகளோடு; ஒருமை பன்மை மயக்கம். பல் - பல. மணி - மணிகளை; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன பாசி மணி, படிக மணி, நீல மணி, சிவப்பு மணி, மஞ்சள் மணி முதலியவை. கோத்து - கோவையாகக் கோத்து அமைத்து. இடை - அந்தக் கோவைக்கு நடுவில். ஏன - காட்டுப்பன்றி யினுடைய. க்: சந்தி. கோடு - கொம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். துண்ட - துண்டுகளான; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பிறை - சந்திரர்களை; ஒருமை பன்மை மயக்கம். போல்வன - போல உள்ளவை. தூங்கிட - தொங்க. வேங்கை - வேங்கைப் புலியினுடைய. வன் - வன்மையான. தோல் - தோல் இடுப்பிலும். தண்டை - கால்களில் தண்டைகளைப் பூண்டு; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செயல் - பூத்தொழில். பொங்கிய - அழகு பொங்க அமைந்த. சன்னவீரம் - முத்துக்களால் ஒரு சிறந்த மாலையைக் கட்டி அரசர் முதலியவர்கள் அணிந்து கொள்ளும் ஒருவகை

அணிகலன். அந்த அணிகலனை வேடர்கள் திண்ணனாருக்கு வேங்கைத் தோலால் செய்து அணிந்தார்கள். தயங்க - விளங்க.

பிறகு வரும் 60-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனாருடைய மார்பில் சிறிய யானைத் தந்தங்களினாற் செய்து அமைத்த திரட்சியைப் பெற்ற மணிகளைக் கட்டிய மாலை தொங்க, மாலையினால் தோற்றப் பொலிவை அடைந்த வாகுவலயங்கள் தழைப்பைப் பெற்று மின்னல்களைப் போல ஒளியை வீச ஒளியோடு சேர்ந்து விளங்கும் கங்கணங்கள் மேலே விளங்கிய முன்னங்கைகளில் கருமையான வில்லில் இறுகக் கட்டிய நாணைச் சுண்டும் கைகளில் செறிந்த அம்புகளை எய்வதற்குச் சாதனமாகிய கைக்கோதைகளைக் கட்டிவிட்டு.' பாடல் வருமாறு:

"மார்பிற்சிறு தந்த மணித்திரள் மாலை தாழத்
தாரிற்பொலி தோள்வல யங்கள் தழைத்து மின்னச்
சேர்விற்பொலி கங்கணம் மீது திகழ்ந்த முன்கைக்
கார்விற்செறி நாணெறி கைச்செறி கட்டி கட்டி."

இந்தப் பாடலும் குளகம். மார்பில் - திண்ணனாருடைய மார்பில். சிறு - சிறிய. தந்த - யானைத் தந்தங்களினாற் செய்து அமைத்த; ஒருமை பன்மை மயக்கம். மணித்திரள் மாலை - திரட்சியைப் பெற்ற மணிகளைக் கட்டிய மாலை. மணி: ஒருமை பன்மை மயக்கம். தாழ - தொங்க. த்: சந்தி. தாரில் பொலி - மாலையினால் தோற்றப் பொலிவைப் பெற்ற. பொலி: முதல் நிலைத் தொழிற் பெயர். தோள் வலயங்கள் - வாகு வலயங்கள். வலயங்கள் - வளைகள். தழைத்து - தழைப்பை அடைந்து. மின்ன - மின்னலைப் போல ஒளியை வீச. ச்: சந்தி. சேர்வில் பொலி

- கூடிய ஒளியோடு விளங்கும். கங்கணம் - கங்கணங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மீது - மேலே. திகழ்ந்த - விளங்கிய. முன்கை - முன்னங்கைகளில்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கார் - கருமையான. வில் - விரலில். செறி - நெருங்கியமைந்த. நாண் - நாணை. எறி - சுண்டும். கைச்செறி கட்டி - அம்புகளை எய்வதற்குச் சாதனமாகிய கைக்கோதையைக் கட்டிக் கொண்டு. கைக்கோதை - கைவிரல்களுக்குத் தோலினால் தைத்துப் போடும் உறை. கட்டி - கட்டிக் கொண்டு.

பிறகு வரும் 61-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'திண்ணனார் தம்முடைய இடுப்பில் புலியினுடைய தோலாகிய உடையின் மேல் கடலில் வீசும் அலைகளில் உண்டாகிய வெண்மையான சோழிகளைக் கட்டி அவற்றை ஓரத்தில் சேர்த்து அமைத்து வரிசையாக விளங்கும் நீண்ட தோலாடையில் உடைவாள் வெளியில் சுற்றியிருக்கும் நறுமணம் கமழும் சிவந்த வார்க் கச்சைச் செலுத்திப் பொருத்தமாக வைத்து இறுகக் கட்டி.' பாடல் வருமாறு:

"அரையிற்சர ணத்துரி ஆடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளல கார்த்து விளிம்பு சேர்த்தி
நிரையிற்பொலி நீளுடை தோல்சுரி கைப்பு றம்சூழ்
விரையில் துவர் வார்விசி போக்கி அமைத்துவீக்கி."

இந்தப் பாடலும் குளகம். அரையில் - திண்ணனார் தம்முடைய இடுப்பில். சரணத்து - புலியினுடைய. உரி ஆடையின் மீது - தோலுடையின் மேல். பௌவ - கடலில் வீசும். த்: சந்தி. திரையில் - அலைகளில்; ஒருமை பன்மை மயக்கம். படு - உண்டாகிய. வெள் - வெள்ளை நிறத்தைப் பெற்ற. அலகு - சோழிகளை; ஒருமை பன்மை மயக்கம். ஆர்த்து - கட்டிக் கொண்டு. விளிம்பு - அவற்றை ஓரத்தில்.

சேர்த்தி - சேர்த்து அமைத்து. நிரையின் - வரிசையாக. பொலி - விளங்கும். நீள் - நீளமான. உடைதோல் - தோலாடையில். சுரிகை - உடைவாள். ப்: சந்தி. புறம் - வெளியில். சூழ் - சுற்றியிருக்கும். விரையில் - நறுமணம் கமழும். துவர் - சிவந்த. வார்விசி - வார்க்கச்சை. போக்கி - செலுத்தி. அமைத்து - பொருத்தமாக வைத்து. வீக்கி - இறுகக் கட்டி.

அடுத்து வரும் 62-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'வீரக்கழல் தன்னுடைய வலக்காலில் திகழும்படி அணிந்து கொண்டு தன்னுடைய திருவடிகளில் சேருமாறு போட்டுக் கொண்ட நீண்ட செருப்புக்கள் விருப்பத்தை வாய்க்கும்படி செய்ய கனத்தைப்பெற்ற பெரிய வில்லைத் தன்னுடைய வலக்கையில் எடுத்துக் கொண்டு தன்னுடைய குலதெய்வத்தை வணங்கித் திண்ணன் சேரும்படி தன்னுடைய அழகிய காலை வளைத்து வைத்துக் கொண்டு அந்த வில்லில் நாணைக் கட்டி வியப்பை அடைந்து அந்த வில்லை எடுத்துக் கொண்டு.' பாடல் வருமாறு:

"வீரக்கழல் காலின் விளங்க அணிந்து பாதம்
சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு வில்வலம் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாள்மடித் தேற்றி வியந்து தாங்கி."

இந்தப் பாடலும் குளகம். வீரக்கழல் காலின் - வீரக்கழல் தன்னுடைய வலக்காலில். விளங்க - திகழும் வண்ணம். அணிந்து - அணிந்து கொண்டு. பாதம் - தன்னுடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். சேர - சேருமாறு. த்: சந்தி. தொடு - போட்டுக் கொண்ட. நீடு - நீளமான. செருப்பு - செருப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். விருப்பு - விருப்பத்தை. வாய்ப்ப - வாய்க்கும்படி செய்ய. ப்: சந்தி. பார - கனத்தைப் பெற்ற. ப்: சந்தி. பெரு

- பெரிய. வில் - வில்லை. வலம் - தன்னுடைய வலக்கையில். கொண்டு - எடுத்துக் கொண்டு. பணிந்து - தன்னுடைய குலதெய்வத்தை வணங்கிவிட்டு. திண்ணன் சார -. திண்ணன் சேரும்படி. த்: சந்தி. திரு - தன்னுடைய அழகிய. த்: சந்தி. தாள் - திருவடியை. மடித்து - வளைத்து வைத்துக் கொண்டு. ஏற்றி - அந்த வில்லில் நாண் கயிற்றைக் கட்டி. வியந்து - வியப்பை அடைந்து. தாங்கி - அந்த வில்லை எடுத்துக் கொண்டு.

பிறகு வரும் 63-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்த இடத்தில் அந்தச் சமயத்தில் உலகங்களில் வாழ்பவர்களுடைய பிறவித் துன்பத்தைப் போக்கும் பொருட்டு ஓங்கி எழுந்த தூய்மையும் பெருமையும் பெற்ற பெரிய மாரியைப் போல துண் என்று சத்தமிட கொடுமையான தம்முடைய கண்களில் கோபம் நெடுநேரம் விலகி விலகி அகலத் தம்முடைய சிவந்த கைகளாகிய இடங்களால் வில்லைத் தடவிச் சிறிய நாண் கயிற்றைத் திண்ணனார் சுண்டினார்.' பாடல் வருமாறு:

"அங்கப் பொழுதிற் புவனத்திடர் வாங்க ஓங்கித்
துங்கப்பெரு மாமழை போன்று துண்ணென் றொலிப்ப
வெங்கட்சினம் நீடு விலங்கி விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தால்தட விச்சிறு நாண் எறிந்தார்."

அங்கு - அந்த இடத்தில். அப்பொழுதில் - அந்தச் சமயத்தில். புவனத்து - உலகத்தில் வாழும் மக்களுடைய; இட ஆகு பெயர். இடர் - பிறவித் துன்பத்தை. வாங்க - போக்கும் பொருட்டு. ஓங்கி - ஓங்கி எழுந்து. த்: சந்தி. துங்க - தூய்மையான. ப்: சந்தி. பெரு - பெருமையைப் பெற்ற. மா - பெரிய. மழை - மாரியை. போன்று - போல. துண் என்று ஒலிப்ப - துண் எனச் சத்தத்தை எழுப்ப. வெம் -

*கொடுமையான. கண் - தம்முடைய கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். சினம் - கோபம். நீடு - நெடுநேரம். விலங்கி - விலகி. விலங்கி - விலகி. நீங்க - அகல. ச்: சந்தி. செம் - தம்முடைய சிவந்த. கைத்தலத்தால் - கைகளாகிய இடங்களினால்; ஒருமை பன்மை மயக்கம். தடவி - வில்லைத் தடவி. ச்: சந்தி. சிறு - சிறிய. நாண் - நாண் கயிற்றை. எறிந்தார் - திண்ணனார் சுண்டினார்.*

*அடுத்து வரும் 64-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'பல வேறு வேறாக உள்ள அம்புகளை அம்புப் புட்டிலிலிருந்து தேர்ந்து எடுத்து அவற்றை ஒருங்கே செல்லுமாறு எய்து விற்களை ஏந்திய வேடர்கள் கூட்டமாகச் சென்று உடுக்கைகளை எடுத்து ஒலிக்கச் செய்யும் முற்றத்தில் ஒவ்வொரு திசையிலும் சேர்ந்து மிகுதியாக ஒலிக்க வலிமையான ஆண் சிங்கத்தைப் போல விளங்குபவராகிய திண்ணனார் கொல்லுவதற்குரிய அம்புகளை ஆராய்ந்து எடுத்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:*

''பல்வேறு வாளி புதைபார்த் துடன்போத ஏவி
வில்வேடர் ஆயத் துடிமேவி ஒலிக்கும் முன்றில்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறும் துதைந்து விம்ம
வல்லேறு போல்வார் அடல்வாளி தெரிந்து நின்றார்.''

*பல் - பல. வேறு - வேறாக உள்ள. வாளி - அம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். புதை - அம்புப் புட்டிலிலிருந்து. பார்த்து - தேர்ந்து எடுத்து. உடன் போத - அவற்றை ஒருங்கே செல்லுமாறு. ஏவி - எய்து. வில் விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆய - கூட்டமாகச் சென்று. த்: சந்தி. துடி - உடுக்குகளை; ஒருமை பன்மை*

மயக்கம். மேவி - எடுத்து. ஒலிக்கும் - ஒலிக்கச் செய்யும். முன்றில் - முற்றத்தில். சொல் - கூறப்படும். வேறு - வேறு வேறாகிய. வாழ்த்து - வாழ்த்துக்களின் முழக்கம்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். த்: சந்தி. திசைதோறும் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் திசைகள் ஒவ்வொன்றிலும். திசை: ஒருமை பன்மை மயக்கம். துதைந்து - சேர்ந்து. விம்ம - மிகுதியாக ஒலிக்க. வல் - வலிமையான. ஏறு - ஆண்சிங்கத்தை. போல்வார் - போல விளங்குபவராகிய திண்ணனார். அடல் - கொல்லுவதற்குரிய. வாளி - அம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். தெரிந்து - ஆராய்ந்து எடுத்துக் கொண்டு. நின்றார் - நின்று கொண்டிருந்தார்.

அடுத்து உள்ள 65-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பெருமையைப் பெற்ற விற்களை ஏந்திய வேடர்கள் பக்கத்தில் நெருங்கி வந்த சமயத்தில் நீலோற்பலமாகிய சிறந்த பெருமையைக் கொண்ட பெரிய மலரைப் போலச் செல்லுகின்ற திருமேனியின் ஒளிவெள்ளத்தை வீசும் திண்ணனாருக்கு முன்னால் தேனும், நல்ல மாமிசங்களும் தெளிவாகிய கள்ளும், தேவர்களுக்கு வேடர்கள் நிவேதனம் செய்யும் உணவும், நெற்பொரிகளும் வேறாகவும் இருக்கிறவற்றை எடுத்துக்கொண்டு காட்டில் வாழும் கடவுளுக்குப் பூசை போட்டு நிவேதனங்களைப் படைக்கும் தெய்வ ஆவேசத்தைத் தாங்கும் தேவராட்டி அங்கே வந்தாள்.' பாடல் வருமாறு:

"மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதில்
பானற்குல மாமல ரிற்படர் சோதி யார்முன்
தேனற்றசை தேறல் சருப்பொரி மற்றும் உள்ள
கானப்பலி நேர்கட வுட்பொறை யாட்டி வந்தாள்."

மான - பெருமையைப் பெற்ற. ச்: சந்தி. சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மருங்கு - காட்டின் பக்கத்தில். நெருங்கு - நெருங்கி வந்த. போதில் - சமயத்தில். பானல் - நீலோற்பலமாகிய. குல - பெருமையைக் கொண்ட. மா - பெரிய. மலரில் - மலரைப் போல. படர் - செல்லுகின்ற. சோதியார் - திருமேனியின் ஒளிவெள்ளத்தை வீசும் திண்ணனாருக்கு. முன் - முன்னால். தேன் - தேனையும். நல் - நல்ல. தசை - மாமிசங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். தேறல் - தெளிவாகிய கள்ளையும். சரு - தெய்வங்களுக்கு வேடர்கள் நிவேதனம் செய்யும் உணவையும். ப்: சந்தி. பொரி - நெற் பொரிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். மற்றும் - பிறவுமாக. உள்ள - இருக்கிற பொருள்களையும் எடுத்துக்கொண்டு. கான - காட்டில் வாழும் தெய்வத்திற்கு; இடஆகுபெயர் ப்: சந்தி. பலி - பூசைபோட்டு நிவேதனங்களை; ஒருமை பன்மை மயக்கம். நேர் - படைக்கும். கடவுள் - தெய்வ ஆவேசத்தை. பொறை - தாங்குதலைப் பெற்ற. ஆட்டி - தேவராட்டி. வந்தாள் - அங்கே வந்து சேர்ந்தாள்.

அடுத்து உள்ள 66-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நின்று கொண்டு எந்த இடங்களிலும் கூடியிருக்கும் விற்களை ஏந்திய வேடர்கள் அகல அங்கே வந்து திண்ணன் இருந்த திருமாளிகைக்குள் போய் அவன் இருந்த இடத்திற்குப் போய் அந்த இடத்தில் வள்ளலாகிய அந்தத் திண்ணனுடைய அழகிய நுதலில் தெய்வத்தைப் பூசித்த அட்சதையை அணிந்து, ''உன்னுடைய தகப்பனாகிய நாகனுடைய தகப்பனுக்கும் உனக்கு இருக்கும் இந்த நன்மைகள் இருப்பவை அல்ல; மிகவும் பெரியது உன்னுடைய இந்த வீரம்; அதை எடுத்துச் சொல்லுதல்

நம்முடைய அளவுக்குள் அகப்பட்டது அன்று'' என்று அங்கே வந்த தேவராட்டி கூறினாள்.' பாடல் வருமாறு:

''நின்றெங்கும் மொய்க்கும் சிலைவேடர்கள் நீங்கப் புக்குச்
சென்றங்கு வள்ளல் திருநெற்றியில் சேடை சாத்தி
'உன்தந்தை தந்தைக்கும் இந்நன்மைகள் உள்ள அல்ல;
நன்றும் பெரிதுன்விறல், நம்மள வன்றி' தென்றாள்.''

நின்று - நின்றுகொண்டு. எங்கும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மொய்க்கும் - கூடியிருக்கும். சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வேடர்கள் - வில்விழாவுக்கு வந்து வேடர்கள். நீங்க - அகல. ப்: சந்தி. புக்கு - திண்ணன் இருந்த திருமாளிகைக்குள் நுழைந்து. ச்: சந்தி. சென்று - அவன் உள்ள இடத்திற்குப் போய். அங்கு - அந்த இடத்தில். வள்ளல் - வள்ளலாகிய திண்ணனுடைய. திரு - அழகிய. நெற்றியில் - நுதுலில். சேடை - தெய்வத்தைப் பூசித்த அட்சதையை. சாத்தி - அணிந்து. உன் - உன்னுடைய. தந்தை - தகப்பனாகிய நாகனுக்கு. தந்தைக்கும் - தகப்பனாராகிய உன்னுடைய பாட்டனுக்கும். இந்நன்மைகள் - இத்தகைய நல்ல குணங்களும் வீரமும் செல்வமும். உள்ள - இருக்கின்றவை. அல்ல - அல்ல ஆகும். நன்றும் - மிகவும். பெரிது - பெரியது. உன் - உன்னுடைய. விறல் - வீரம். இது - இந்த வீரத்தை எடுத்துச் சொல்லுதல். நம் - நம்முடைய. அளவு அன்று - அளவுக்குள் அடங்கியது அன்று. என்றாள் - என்று அங்கே வந்த தேவராட்டி கூறினாள். திண்ணனை வள்ளல் என்று இங்கே குறிப்பிட்டதைப் போல வேறோரிடத்திலும், ''வலத்திருக் கண்ணில் தம் கண் அப்பிய வள்ளலார்.'' (கண்ணப்ப நாயனார் புராணம், 180) என்று சேக்கிழார் பாடுவதைக் காண்க.

பின்பு வரும் 67-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த வகையில் வாழ்த்துக்களைக் கூறும் தெய்வ ஆவேசம் வந்து ஆடுவதைப்' பெற்ற தேவராட்டியைக் கூறுவதற்கும் அரியதாக உள்ள சிறப்பை அவள் செய்த செயலுக்குக் கைம்மாறாகப் புரிந்து அவளை விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் திண்ணனார் தம்முடைய கையில் பிடித்துக் கொண்டிருந்த உறுதியான வில்லைப் பெற்ற கரிய மாரியைப் பொழியும் மேகம் என்று கூறும் வண்ணம் உண்மையான பொலிவைப் பெற்ற வேட்டையாடுவதை மேற்கொண்டு தம்முடைய திருமாளிகையிலிருந்து எழுந்து சென்றார்.' பாடல் வருமாறு:

"அப்பெற்றியில் வாழ்த்தும் அணங்குடை யாட்டி தன்னைச்
செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேகம் என்ன
மெய்ப்பொற்புடை வேட்டையின் மேற்கொண் டெழுந்து போந்தார்."

அப்பெற்றியில் - அந்த வகையில். வாழ்த்தும் - வாழ்த்துக்களைக் கூறும். அணங்கு - தெய்வ ஆவேசம் வந்து ஆடுவதை; ஆகுபெயர். உடை - பெற்ற. ஆட்டி தன்னை - தேவராட்டியை. தன்: அசைநிலை. ச்: சந்தி. செப்பற்கு - கூறுவதற்கு. அரிது - அரியது. ஆய - ஆகிய. சிறப்பு - சிறப்பை; என்றது பணம் சீலை முதலியவற்றை. எதிர் - அவள் செய்த நன்மைக்குக் கைம்மாறாக. செய்து - புரிந்து. போக்கி - அவளை அனுப்பி விட்டு. க்: சந்தி. கை - தம்முடைய இடக்கையில். ப்: சந்தி. பற்றிய - பிடித்துக் கொண்ட. திண் - உறுதியான. சிலை - வில்லை ஏந்திய. க்: சந்தி. கார் - கருமையான. மழை - மாரியைப் பெய்யும். மேகம் என்ன - மேகம் என்று கூறுமாறு. மெய் - உண்மையான. ப்: சந்தி. பொற்பு - பொலிவை. உடை - பெற்று. வேட்டையின் - விலங்குகளை வேட்டையாடுவதை. மேற்கொண்டு - தாம் மேற்கொண்டு. எழுந்து - தம்முடைய

திருமாளி கைகயிலிருந்து எழுந்து. போந்தார் - சென்றார். திண்ணனாருக்கு மேகத்தை உவமையாகக் கூறுவதை, ''கருவரை காளமேகம் ஏந்திய தென்னத் தாதை, பொருவரைத் தோள்கள் ஆரப்புதல்வனை எடுத்துக் கொண்டான்.'', ''கருமுகில் என்ன நின்ற கண்படா வில்லியார்.'' (கண்ணப்ப நாயனார் புராணம், 15, 166) என்று சேக்கிழார் வேறிடங்களிற் பாடியவற்றாலும் தெரிந்து கொள்ளலாம்.

அடுத்து வரும் 68-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய திருவடிகளில் போட்டுக்கொண்டு தங்கப் பெற்ற செருப்புகளை உடையவராய், தோலாகிய தழைப்பைப் பெற்ற நீளமாக இருக்கும் ஆடையை இடுப்பில் உடுத்தவராய், அம்புகளோடு வில்லைப் பிடித்த கைகளைக் கொண்டவராய், வெம்மையைப் பெற்ற கொடிய கண்களைப் பெற்றவராய் ஆண்சிங்கத்தைப் போலச் செல்லும் தலைவராகிய திண்ணனாருக்கு முன்னால் கணக்கு இல்லாதவர்களும் யமனைப் போன்ற வலிமையை உடையவர்களும் ஆகிய வேடர்கள் கூடிய நீளமான கூட்டம் மிகுதியாக அமைந்து மேலெழுந்தது.' பாடல் வருமாறு:

"தாளில்வாழ் செருப்பர், தோல் தழைத்த நீடு தானையார்,
வாளியோடு சாபம் மேவு கையர், வெய்ய வன்கணார்,
ஆளியேறு போல ஏகும் அண்ண லார்முன் எண்ணிலார்
மீளி வேடர் நீடு கூட்டம் மிக்குமேல் எழுந்ததே."

தாளில் - தம்முடைய திருவடிகளில்; ஒருமை பன்மை மயக்கம். வாழ் - போட்டுக்கொண்டு தங்கப் பெற்ற. செருப்பர் - செருப்புக்களை உடையவராய்; முற்றெச்சம். செருப்பு: ஒருமை பன்மை மயக்கம். தோல் - தோலாகிய. தழைத்த - தழைப்பைப் பெற்ற. நீடு - நீளமாக இருக்கும்.

தானையார் - ஆடையை இடுப்பில் உடுத்தவராய்; முற்றெச்சம். வாளியோடு - அம்புகளோடு; ஒருமை பன்மை மயக்கம். சாபம் - வில். மேவு - பிடித்த. கையர் - கைகளைக் கொண்டவராய்; முற்றெச்சம். கை: ஒருமை பன்மை மயக்கம். வெய்ய - வெம்மையான. வன் - கொடிய. கணார் - கண்களைப் பெற்றவராய்; முற்றெச்சம்; இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். ஆளியேறு போல - ஆண்சிங்கத்தைப் போல. ஏகும் - செல்லும். அண்ணலார் - தலைவராகிய திண்ணனாருக்கு; 'பெருமையைப் பெற்றவர்' எனலும் ஆம். முன் - முன்னால். எண் - கணக்கு. இலார் - இல்லாதவர்களாகிய; இடைக்குறை. மீளி - யமனைப் போன்ற வலிமையைப் படைத்த. வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நீடு - கூடிய நீளமான. கூட்டம் மிக்கு - கூட்டம் மிகுதியாக அமைந்து. மேல் எழுந்தது - மேலே எழுந்து வந்தது. ஏ: ஈற்றசை நிலை.

திண்ணனாருக்குச் சிங்கத்தை உவமை கூறுதல், "என்னை ஆளும் கானவர்க்கரிய சிங்கம்.", "செங்கண் வயக் கோளரியே றன்ன திண்மைத் திண்ணனார்." (கண்ணப்ப நாயனார் புராணம், 41, 56) என்று சேக்கிழார் வேறிடங்களிலும் பாடுவனவற்றால் உணரலாகும்.

பின்று உள்ள 69-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வன்மையாகத் தொடர்ச்சியைப் பெற்றுக் கட்டிய கயிறுகளை வலிமையான கைகளை உடைய வீரர்கள் பிடித்துக்கொள்ள வெற்றியைத் தரும் பெண் தெய்வமாகிய கொற்றவை வேடர்கள் ஏந்திய விற்களின்மேல் மேவிய திருவடி முன்னால்போய் நீளுகிறதைப் போல் உள்ளவையாகிய சிவந்த நாக்குகளைப் பெற்ற வாய்களை உடையனவாகி ஒன்றோடு ஒன்று சேராமல் ஓடுகின்ற

*வேட்டை நாய்கள் அந்தக் காட்டின் பக்கமெல்லாம் காணப்பட்டன.' பாடல் வருமாறு:*

"வன்றொ டர்ப்பி ணித்தபாசம் வன்கை மள்ளர் கொள்ளவே
வென்றி மங்கை வேடர் வில்லின் மீதுலாவு பாதம்முன்
சென்று நீளு மாறுபோல்வ செய்ய நாவின் வாயவாய்
ஒன்றோ டொன்று நேர்படாமல் ஓடு நாய்கள் மாடெலாம்."

*வன் - வன்மையாக. தொடர் - தொடர்ச்சியைப் பெற்று; முதனிலைத் தொழிற்பெயர். ப்: சந்தி. பிணித்த - கட்டிய. பாசம் - கயிறுகளை; ஒருமை பன்மை மயக்கம். வன் - வலிமையைப் பெற்ற. கை - கைகளைக் கொண்டு; ஒருமை பன்மை மயக்கம். மள்ளர் - வீரர்களாகிய வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கொள்ள - பிடித்துக்கொள்ள. ஏ: அசைநிலை. வென்றி - வெற்றியைத் தரும். மங்கை - பெண் தெய்வமாகிய கொற்றவை. வேடர் - வேடர்கள் ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். வில்லின் - விற்களில்; ஒருமை பன்மை மயக்கம். மீது - மேல். உலாவு - மேவும். பாதம் - திருவடி. முன் - முன்னால். சென்று - போய். நீளுமாறு - நீளும் இயல்பை. போல்வ - போல உள்ளவை. செய்ய - சிவந்த. நாவின் - நாக்குகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வாயவாய் - வாய்களைப் பெற்றவையாகி. ஒன்றொடு ஒன்று - ஒரு நாயோடு வேறு ஒரு நாய். நேர்படாமல் - ஒன்று சேராமல். ஓடு - ஓடுகின்ற. நாய்கள் - வேட்டை நாய்கள். மாடு - அந்தக் காட்டின் பக்கம். எலாம் - எல்லாம் காணப்பட்டன; இடைக்குறை.*

*பிறகு வரும் 70-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'போர்த்தொழிலையும், வலையை வீசி விலங்குகளைப் பிடிப்பதையும், வில்லைப் பிரயோகம் செய்யும்*

தொழிலையும் வெளியில் செய்பவரும், தம்மைச் சார்ந்த வலையைப் போன்ற பந்த பாசமாகிய கட்டினை அறுக்கும் வண்ணம் போகும் ஐயராகிய திண்ணனாருக்கு முன்னால் கரிய வலையில் அகப்படுத்தும் பொருட்டு மலைப் பக்கத்திலும் காட்டிலும் வாழும் விலங்குகளை வளைத்துப் பிடிப்பதற்காக நீண்ட வார்களையும், வலை வகைகளையும் தூக்கிக்கொண்டு வந்த மலை வாணர்களாகிய வேடர்கள் முந்திக்கொண்டு சென்றார்கள்.' பாடல் வருமாறு:

"போர் வலைச் சிலைத் தொழிற் புறத்திலே விளைப்பவர்
சார் வலைத் தொடக்கறுக்க ஏகும் ஐயர் தம்முனே
கார் வலைப் படுத்தகுன்று கானமா வளைக்க நீள்
வார் வலைத் திறம் சுமந்து வந்தவெற்பர் முந்தினார்."

போர் - போர்த் தொழிலையும். வலை - வலையை வீசி விலங்குகளைப் பிடிப்பதையும். ச்: சந்தி. சிலை - வில்லைப் பிரயோகம் செய்யும். த்: சந்தி. தொழில் - தொழிலையும். புறத்தில் - தாம் வாழும் உடுப்பூருக்கு வெளியில். ஏ: அசை நிலை. விளைப்பவர் - செய்பவரும். சார் - தம்மைச் சார்ந்த. வலைத்தொடக்கு - வலையைப் போன்ற பந்த பாசமாகிய கட்டினை. அறுக்க - அறுக்கும் வண்ணம். ஏகும் - போகும். ஐயர் - ஐயராகிய திண்ணனாருக்கு. தம் - தம்முடைய. முன் - முன்னால். ஏ: அசை நிலை. கார் - கருமையான. வலை - வலையில். ப்: சந்தி. படுத்த - அகப்படுத்தும் பொருட்டு. குன்று - மலைப்பக்கத்திலும். கானம் - காட்டிலும் வாழும். மா - விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். வளைக்க - வளைத்துப் பிடிப்பதற்காக. நீள் - நீளமான. வார் - வார்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வலை - வலைகளின்; ஒருமை பன்மை மயக்கம். த்:சந்தி. திறம் - வகைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். சுமந்து வந்த - தூக்கிக்கொண்டு வந்த. வெற்பர் -

மலைவாணர்களாகிய வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். முந்தினார் - முந்திக் கொண்டு சென்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 71-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு சென்று பெருமையைப் பெற்ற வேதக் கூட்டங்கள் தம்மைத் தேட எல்லாக் காலத்திலும் இருப்பவரும், அந்தக் குளிர்ச்சியைப் பெற்ற பிறைச்சந்திரனும் அடம்பும் கொன்றை மலர்மாலையும் தங்கியிருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரரைத் தம்முடைய கண்களில் நீண்டிருக்கும் பார்வை ஒன்றைக் கொண்டு தரிசனம் செய்யப்போகும் பக்தராகிய திண்ணனாருக்கு முன்னால் கணக்கு இல்லாத பார்வை மிருகங்களைக் கூட்டிக் கொண்டு வேடர்கள் எல்லா இடங்களுக்கும் போனார்கள்.' பாடல் வருமாறு:

"நண்ணிமா மறைக்குலங்கள் நாட என்றும் நீடும்அத்
தண்ணிலா அடம்பு கொன்றை தங்குவேணியார் தமைக்
கண்ணில்நீடு பார்வை ஒன்று கொண்டுகாணும் அன்பர்முன்
எண்ணில் பார்வை கொண்டுவேடர் எம்மருங்கும் ஏகினார்."

நண்ணி - அவ்வாறு சென்று. மா - பெருமையைப் பெற்ற. மறைக்குலங்கள் - வேதங்களினுடைய கூட்டங்கள். மறை: ஒருமை பன்மை மயக்கம். இப்போது இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களே இருந்தாலும் முன்பு பல வேதங்கள் இருந்தன என்பதை, 'அனந்தா வை வேதா' என்ற வடமொழி வாக்கியம் புலப்படுத்தும். நாட - தம்மைத் தேட. என்றும் - எல்லாக் காலத்திலும். நீடும் - இருக்கும். அத்தண் நிலா - அந்தக் குளிர்ச்சியைப் பெற்ற பிறைச் சந்திரனும். அடம்பு - அடம்பும். கொன்றை - கொன்றை

மலர் மாலையும்; ஆகு பெயர். தங்கு - தங்கியிருக்கும். வேணியார் தமை - சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரரை. தமை: இடக்குறை. தம்: அசைநிலை. க்: சந்தி. கண்ணில் - தம்முடைய கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். நீடு - நீண்டிருக்கும். பார்வை ஒன்று கொண்டு - பார்வை ஒன்றைக் கொண்டு. காணும் - தரிசனம் செய்யப் போகும். அன்பர் - பக்தராகிய திண்ணனாருக்கு. முன் - முன்னால். எண் - கணக்கு. இல் - இல்லாத; கடைக்குறை. பார்வை - பார்வை மிருகங்களாகிய மான்களை; ஒருமை பன்மை மயக்கம். இவற்றைக் கொண்டு மற்ற மான்களை வேடர்கள் பிடிப்பார்கள். கொண்டு - கூட்டிக் கொண்டு. வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எம்மருங்கும் - எல்லாப் பக்கங்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ஏகினார் - சென்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 72-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஊதுகொம்புகள் முன்னால் முழங்கவும், சிறிய அடிக்கும் பக்கங்களைப் பெற்ற சிறுபறைத் தொகுதியும் பக்கத்தில் போய் ஒலிக்கவும், மற்றப் பக்கத்தில் பம்பையை அதை வைத்திருப்பவர் தட்டி ஒலிக்கச் செய்யவும், திரட்சியைக் கொண்ட கைகளை மக்கள் தட்டுகின்ற சிறந்த சத்தம் எங்கும் பரந்து போகவும், காட்டில் வேட்டையாடுதலை மேற்கொண்டு எழுந்த வேட்டுவச்சாதி பக்கங்களில் வளைந்து வளைந்து போயிற்று.' பாடல் வருமாறு:

"கோடு முன் பொலிக்கவும் குறுங்கண்ஆ குளிக்குலம்
மாடு சென் றிசைப்பவும் மருங்குபம்பை கொட்டவும்
சேடு கொண்ட கைவிளிச் சிறந்தஓசை செல்லவும்
காடு கொண்டெழுந்த வேடு கைவளைந்து சென்றதே."

கோடு - ஊதுகொம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். முன்பு - தங்களுக்கு முன்னால். ஒலிக்கவும் - முழங்கவும். குறும் - சிறியவையாக இருக்கும். கண் - அடிக்கும் பக்கங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஆகுளி - சிறு பறைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குலம் - தொகுதி. மாடு - பக்கத்தில். சென்று - போய். இசைப்பவும் - ஒலியை எழுப்பவும். மருங்கு - மற்றொரு பக்கத்தில். பம்பை - பம்பையை. கொட்டவும் - அதை வைத்திருப்பவர் தட்டி ஒலிக்கச் செய்யவும். சேடுகொண்ட - திரட்சியைக் கொண்ட; 'பெருமையைக் கொண்ட' எனலும் ஆம். கை - தங்களுடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். விளி - ஒருவரை அழைக்கும்போது கைகளைத் தட்டி அழைப்பது வழக்கம். ச்: சந்தி. சிறந்த ஓசை - சிறப்பாக அமைந்த சத்தம். செல்லவும் - எங்கும் பரந்துபோகவும். காடு - காட்டில். கொண்டு - வேட்டையாடுதலை மேற்கொண்டு. எழுந்த - எழுந்து சென்ற. வேடு - வேட்டுவச்சாதி; ''வேடு கொடுத்தது பார்'' என்று கம்பராமாயணத்தில் வருவதைக் காண்க. கை - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வளைந்து - வளைந்து வளைந்து. சென்றது - போயிற்று. ஏ: ஈற்றசை நிலை.

அடுத்து வரும் 73-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நெருங்கி வளர்ந்த பசுமையான மரங்களினுடைய சாதிகள் உயர்ந்து வளர்ந்திருக்கும் காட்டை அடைவதற்காக நேரில் வரும் கருமையான விற்களை ஏந்திய விசாலமான கைகளைப் பெற்றவர்களும், பெருமையை உடையவர் களும் ஆகிய வேடர்களினுடைய படை, கரையை மோதும் விசாலமாகிய அலைகளைக் கொண்ட சமுத்திரத்தினுடைய

பரந்த இடத்தில் சென்று சங்கமமாகும் பெரிய கருமையான அலைகள் நீளமாக அடிக்கும் யமுனா நதியாகிய கன்னிகையை ஒத்து விளங்கியது.' பாடல் வருமாறு:

"நெருங்குபைந் தருக்குலங்கள் நீடு காடு கூடநேர்
வரும்கரும் சிலைத்தடக்கை மான வேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும் பெரும்
கருங்தரங்க நீள்புனற் களிந்தி கன்னி ஒத்ததே."

நெருங்கு - நெருங்கி வளர்ந்த. பைம் - பசுமையான. தரு - மரங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குலங்கள் - சாதிகள். நீடு - உயரமாக வளர்ந்திருக்கும். காடு - காட்டை. கூட - அடைவதற்காக. நேர் - நேரில். வரும் கரும் - வரும் கருமையான. சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தட - விசாலமான. க்: சந்தி. கை - கைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். மான - பெருமையையும் கொண்ட. வேடர் - வேடர்கள் அடங்கிய. சேனை - படை. தான்: அசை நிலை. பொரும் - கரையை மோதும். தடம் - விசாலமான. திரை - அலைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கடல் - சமுத்திரத்தினுடைய. பரப்பிடை - பரந்த இடத்தில். ப்: சந்தி. புகும் - சென்று சங்கமம் ஆகும். பெரும் - பெருமையைப் பெற்ற. கரும் - நீல நிறத்தைப் பெற்ற. தரங்க - அலைகள் வீசும்; ஒருமை பன்மை மயக்கம். நீள் - நீளமான. புனல் - நீர் ஓடும். களிந்தி கன்னி - யமுனை ஆறாகிய கன்னிகையை. ஒத்தது - ஒத்து விளங்கியது. ஏ: ஈற்றசை நிலை. வேடர்கள் அடங்கிய படை யமுனை ஆற்றில் ஓடும் நீரைப்போன்றதாக இருந்தது.

பின்பு வரும் 74-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தெற்குத் திக்கில் உள்ள மலையோடு மரங்கள் நெருங்கி வளர்ந்து நிற்கும் காட்டில் வாழும் மான்களினுடைய

கூட்டம், காட்டுப்பன்றி, கொடுமையான மரை மானினுடைய தொகுதிகள் முதலான பல விலங்குச் சாதிகள் சேர்ந்து நின்றிருக்கின்றன என்று அந்த விலங்குகளின் கால்களின் சுவடுகளைக் கொண்டு தெரிந்து கொண்ட ஒற்றர்கள் கூற வலிமையான தங்களுடைய விசாலமான கைகளில் வார்களை எடுத்துக் கொண்டு எந்த இடங்களிலும் வேடர்கள் ஓடினார்கள்.' பாடல் வருமாறு:

"தென்றிசைப் பொருப்புடன் செறிந்தகானின் மானினம்
பன்றிவெம் மரைக்கணங்கள் ஆதியான பல்குலம்
துன்றிநின்ற என்றடிச் சுவட்டின்ஒற்றர் சொல்லவே
வன்றடக்கை வார்கொடெம் மருங்கும்வேடர் ஓடினார்."

தென்திசை - தெற்குத் திக்கில் உள்ள. ப்: சந்தி. பொருப்புடன் - மலையோடு. செறிந்த - மரங்கள் நெருங்கி வளர்ந்த. கானின் - காட்டில் வாழும். அந்த மரங்களாவன: தேக்கு மரம், வேங்கை மரம், வாகை மரம், நுணா மரம், கடப்ப மரம், புளிய மரம், மா மரம், தென்ன மரம், பலா மரம், மகிழ மரம், அரச மரம், பூவரச மரம், ஆல மரம், மருத மரம், பாலை மரம், வில்வ மரம், விளா மரம், பவழமல்லிகை மரம், தமால மரம், கொன்றை மரம், புலிநகக்கொன்றை மரம், பனை மரம், ஆத்தி மரம், கொய்யா மரம், வேப்பமரம் முதலியவை. மான் - மான்களினுடைய. இனம் - சாதிகள். அவையாவன: புள்ளிமான், கலைமான், கடமை மான் முதலியன. பன்றி - காட்டுப்பன்றி. வெம் - கொடுமையாகிய. மரைக்கணங்கள் - மரைமான்களின் கூட்டங்கள். மரை: ஒருமை பன்மை மயக்கம். ஆதியான - முதலான. பல் - பல. குலம் - சாதி விலங்குகள்; ஒருமை பன்மை மயக்கம். துன்றி - சேர்ந்து. நின்ற - நின்று கொண்டிருக்கின்றன. என்று - என. அடி - அந்த விலங்கு களின் கால்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சுவட்டின் - சுவடுகளைக் கொண்டு; ஒருமை பன்மை

மயக்கம். ஒற்றர் - ஒற்றர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சொல்ல - கூற. ஏ: அசைநிலை. வன் - வலிமையைப் பெற்ற. தட - விசாலமான. க்: சந்தி. கை - தங்கள் கைகளில் வைத்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வார்கொடு - வார்களை எடுத்துக்கொண்டு; ஒருமை பன்மை மயக்கம். எம்மருங்கும் - எந்தப் பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஓடினார் - ஓடினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 75-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'புதர்களை ஒடியுமாறு வாளால் வெட்டிவிட்டு, வார்களை நீளமாக விட்டு, யோசனை தூரம் உள்ள காட்டில் பரவிய இடங்களில் எல்லாம் நீண்ட உறுதியான வலைகளினுடைய கட்டுக்களை அந்தக் காட்டில் நீளமான இடங்களில் கட்டி நேரில் காவலைக் கொள்ளும் வண்ணம் பரவியிருக்கும் காட்டைப் பாதுகாப்புச் செய்து அமைத்த பிறகு செடியைப்போலப் பறட்டையாக உள்ள தலைகளையும், விற்களை ஏந்திய கைகளையும் கொண்டிருக்கும் வேடர்கள் திண்ணனாருக்கு முன்னால் வந்து சேர்ந்தார்கள்.' பாடல் வருமாறு:

"ஒடியெறிந்து வாரொழுக்கி யோசனைப் பரப்பெலாம்
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப் பிணித்தநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச் சிலைக்கைவேடர் திண்ணனார்முன் நண்ணினார்."

ஒடி எறிந்து - புதர்களை ஒடியுமாறு வாளால் வெட்டி விட்டு. 'ஒடி - சுருக்கு வலைகளை' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். வார் - வார்களை; ஒருமை பன்மை மயக்கம். ஒழுக்கி - நீளமாகவிட்டு. யோசனை - ஒன்பது மைல் தூரமாக உள்ள. ப்: சந்தி. பரப்பு - காட்டில் பரவியுள்ள இடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாம்;

இடைக்குறை. நெடிய - நீளமாக உள்ள. திண் - உறுதியாகிய. வலை - வலைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொடக்கு - கட்டுக்களை; ஒருமை பன்மை மயக்கம். நீள் - அந்தக் காட்டில் நீளமாக உள்ள. இடை - இடங்களில். ப்: சந்தி. பிணித்த - கட்டிய. நேர்கடி கொள - நேரில் காவலைக் கொள்ளும் வண்ணம். கொள: இடைக்குறை. 'நேர்கடி கொள - நேரில் கண்டவர்கள் அச்சத்தை அடைய' எனலும் ஆம். ப்: சந்தி. பரந்த - பரவிய இடம் அமைந்த. காடு - காட்டை. காவல் செய்து அமைத்தபின் - பாதுகாப்புச் செய்து அமைத்த பிறகு. செடி - புதரைப் போன்ற. தலை - தலைகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சிலை - வில்லை ஏந்திய. க்: சந்தி. கை - கைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். திண்ணனார் முன் - திண்ணனாருக்கு முன்னால். நண்ணினார் - வந்து சேர்ந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 76-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொடுமையான வில்லை ஏந்திய இடக்கையைப் பெற்ற வீரராகிய திண்ணனாரும் வேடர்களோடு சேர்ந்து கொண்டு முன்னால் மேகங்கள் தவழும் பெரிய மலையின் சரிவுற்ற பக்கத்தில் ஓடிவந்த விலங்குகளைப் பயத்தை அடையுமாறு செய்து எதிர்க்கும் வேட்டை நாய்களை நேராக ஓடுமாறு விட்டு நீளமானவையும் சிவந்தவையுமாகிய அம்புகளோடு சுற்றிப் பாதுகாவலைச் செய்துள்ள காட்டுக்குள் போய்ச் சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"வெஞ்சிலைக்கை வீரனாரும் வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கும் மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சுவித் தடர்க்கும்நாய்க ளட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னோடுசூழல் செய்தகானுள் எய்தினார்."

வெம் - கொடுமையான. சிலை - வில்லை ஏந்திய. க்: சந்தி. கை - இடக் கையைப் பெற்ற. வீரனாரும் - வீரராகிய திண்ணனாரும். வேடரோடு - வேடர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கூடி - சேர்ந்து கொண்டு. முன் - முன்னால். மஞ்சு - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலைக்கும் - தவழும். மா - பெரிய. மலை - மலையினுடைய. ச்:சந்தி. சரி - சரிவுக்கு. ப்: சந்தி. புறத்து - வெளியில். வந்த - ஓடி வந்த. மா - மான் முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். அஞ்சு வித்து - அச்சத்தை அடையுமாறு செய்து. அடர்க்கும் - எதிர்க்கும். நாய்கள் - வேட்டை நாய்களை. அட்டமாக - நேராக. விட்டு - ஓடுமாறு விட்டு. நீள் - நீளமானவையும்; வினையாலணையும் பெயர். செஞ் - சிவந்தவையும்; வினையாலனையும் பெயர். சரத்தினோடு - ஆகிய அம்புகளோடு; ஒருமை பன்மை மயக்கம். சூழல் - பாதுகாவலை. செய்த - அமைத்துள்ள. கானுள் - காட்டுக்குள். எய்தினார் - போய்ச் சேர்ந்தார். திண்ணனாரை வீரர் என்று கூறுவதை, ''கண் துயிலாத வீரர்.'' (கண்ணப்ப நாயனார் புராணம், 132) என்று வேறோரிடத்தில் சேக்கிழார் பாடுவதாலும் உணரலாம்.

அடுத்து உள்ள 77-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொடிய மான் முதலிய விலங்குகளை எழும்பி ஓடுமாறு செய்யும் வண்ணம் அந்த வேட்டை நாய்களை ஏவி விட்டு மலை வாணர்களாகிய வேடர்களினுடைய கூட்டம் ஓடிச் சென்று நேராக எய்வதற்கு உரியவை ஆகும் அம்புகளை முன்னால் ஆராய்ந்து எடுத்துக் கொண்டுபோக எந்த இடங்களிலும் மிகுதியாக ஓசையை எழுப்பும் உடுக்குகளின் தொகுதிகள், பம்பை முதலிய வாத்தியங்கள் முழங்கி எழத் தங்களுடைய கைகளைத் தட்டி அதிரச் செய்து

விலங்குகளைக் காடு முழுவதும் எழுந்து ஓடுமாறு செய்தார்கள்.' பாடல் வருமாறு:

"வெய்யமா எழுப்பஏவி வெற்பர்ஆயம் ஓடிநேர்
எய்யும்வாளி முன்தெரிந்து கொண்டுசெல்ல எங்கணும்
மொய்குரல் துடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா எழுப்பினார்கள் கானெலாம்."

வெய்ய - கொடிய. மா - மான் முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். எழுப்ப - எழும்பி ஓடுமாறு செய்யும் வண்ணம். ஏவி - வேட்டை நாய்களை ஏவி விட்டு. வெற்பர் - மலைவாணர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஆயம் - கூட்டம். ஓடி - ஓடிச் சென்று. நேர் - நேராக. எய்யும் - எய்வதற்கு உரியவையாக இருக்கும். வாளி - அம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். முன் - முன்னால். தெரிந்து - ஆராய்ந்து. கொண்டு - அந்த அம்புகளை எடுத்துக் கொண்டு. செல்ல - போக. எங்கணும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். கணும்: இடைக்குறை. மொய் - மிகுதியாக. குரல் - ஓசையை எழுப்பும். துடி - உடுக்குக்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குலங்கள் - தொகுதிகள். பம்பை முன் - பம்பை முதலிய வாத்தியங்கள்; என்றது முரசு, பேரிகை, பறை, தப்பட்டை முதலியவற்றை. சிலைத்து - முழங்கி. எழ - எழா நிற்க. க்: சந்தி. கை - தங்களுடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். விளித்து - தட்டி. அதிர்த்து - அதிரச் செய்து. மா - மான், கரடி, வேங்கை, புலி, சிங்கம், ஓநாய், நரி முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். கான் - காடு. எலாம் - முழுவதும்; இடைக்குறை. எழுப்பினார்கள் - எழுந்து ஓடுமாறு செய்தார்கள்.

அடுத்து உள்ள 78-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'காட்டுப்பன்றியோடு மான்களினுடைய கூட்டங்கள், கரடி, உறுதியான கலைமான்களினுடைய கூட்டம், காட்டெருமை, யானை, கொடுமையான புலிகளினுடைய கூட்டங்கள், காட்டுப்பசு ஆகிய விலங்குகள் பலவாக அச்சத்தை அடைந்து எழுந்து பாய முன்னால் படையாக உள்ள வேடர்கள் மேலே எதிர்த்துச் சென்று கோபத்தோடு சீறிக்கொண்டு அம்புகளால் அந்த விலங்குகளைக் கொன்றார்கள்.' பாடல் வருமாறு:

"ஏனமோடு மானினங்கள் எண்குதிண் கலைக்குலம்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
ஆனமா அநேகமா வெருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறிஅம்பில் நூறினார்."

ஏனமோடு - காட்டுப் பன்றியோடு. மான் - மான்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இனங்கள் - கூட்டமும். எண்கு - கரடியும். திண் - உறுதியான. கலைக்குலம் - கலை மான்களினுடைய கூட்டமும். கலை: ஒருமை பன்மை மயக்கம். கானமேதி - காட்டெருமையும். யானை - யானையும். வெம் - கொடுமையாகிய. புலி - புலிகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கணங்கள் - கூட்டங்களும். கான்மரை - காட்டுப் பசுமாடும். ஆன - இவ்வாறு உளவான. மா - விலங்குகள்; ஒருமை பன்மை மயக்கம். அநேகமா - பலவாக. வெருண்டு - அச்சத்தை அடைந்து. எழுந்து பாய - எழுந்து கொண்டு தாவிப் பாய. முன் - முன்னால். சேனை - படையாக உள்ள. வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மேல் - மேலே. அடர்ந்து - எதிர்த்துச் சென்று. சீறி - கோபத்தோடு சீறிக்கொண்டு. அம்பில் - அம்புகளால்; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். நூறினார் - கொன்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 79-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு வேடர்கள் கொன்றபோது கலைமான்கள் தங்களுடைய கால்கள் வெட்டப்பட்டவையாகவும், இடுப்புக்கள் துண்டிக்கப்பட்டவையாகவும், தலைகள் வெட்டப்பட்டவையாகவும் ஆயின; சில காட்டுப்பசு மாடுகள் அம்புகளால் தங்களுடைய குடல்கள் அறுந்து தரையில் விழ இறந்து போயின; நெருங்கியிருந்த கடமை மான்கள் நீண்ட தங்களுடைய உடம்புகளின்மேல் வேடர்கள் எய்த அம்பு உருவிச் செல்லத் தங்களுடைய தலைகளை நிமிர்த்திக் கொண்டு கிடந்தன; பல புள்ளிமான்கள் ஆற்றலைக் கொண்ட அம்பு படும் தங்களுடைய உடம்புகள் துள்ள விழுபவையாக இருந்தன.' பாடல் வருமாறு:

"தாள்அறுவன, இடைதுணிவன, தலைதுமிலன கலைமா,
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா;
நீளுடல்விடு சரம்உருவிட நிமிர்வனமிடை கடமா;
மீளிகொள்கணை படும்உடலெழ விழுவனபல உழையே."

கலைமா - அவ்வாறு வேடர்கள் கொன்றபோது கலைமான்கள்; ஒருமை பன்மை மயக்கம். தாள் - தங்களுடைய கால்கள்; ஒருமை பன்மை மயக்கம். அறுவன - வெட்டப் பட்டவையாகவும். இடை - தங்களுடைய இடுப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். துணிவன - துண்டிக்கப்பட்டவையாகவும். தலை - தங்களுடைய தலைகள்; ஒருமை பன்மை மயக்கம். துமிலன - வெட்டப்பட்டவையாகவும் ஆயின. சில மரைமா - சில காட்டுப்பசு மாடுகள்; ஒருமை பன்மை மயக்கம். வாளிகளொடு - அம்புகளால்; உருபு மயக்கம். குடல் - தங்களுடைய குடல்கள்; ஒருமை பன்மை மயக்கம். சொரிதர - அறுந்து தரையில் விழ. மறிவன - இறந்து போனவை

ஆயின. மிடை - நெருங்கியிருந்த. கடமா - கடமை மான்கள்; ஒருமை பன்மை மயக்கம். நீள் - நீளமான. உடல் - தங்களுடைய உடம்புகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். விடு - வேடர்கள் எய்த. சரம் - அம்பு. உருவிட - உருவிச் செல்ல. நிமிர்வன - தங்களுடைய தலைகளை நிமிர்த்திக்கொண்டு தரையில் கிடப்பவை ஆயின. பல உழை - பல புள்ளி மான்கள்; ஒருமை பன்மை மயக்க. ஏ: ஈற்றசை நிலை. மீளி கொள் - யமனைப் போன்ற ஆற்றலைக் கொண்ட. கணை - அம்பு. படும் உடல் - தைக்கும் தங்களுடைய உடம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். எழ - துள்ள. விழுவன - விழுபவையாக இருந்தன.

அடுத்து உள்ள 80-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கொடுமையான அம்புபட்ட கழுத்துக் கிழிய வேகமாக அந்த அம்பு உருவிச் சென்ற ஆழமான வாயையுடைய யானை தன்னுடைய கண்களிலிருந்து சிவந்த நெருப்பை உமிழ, அந்த யானையிடம் வேடர்கள் எய்த அம்பு பதிய, முன்னால் உள்ள பெரிய கருமையான விலங்காகிய காட்டுப் பன்றி அந்த இடத்தில் எழுந்த தன்னுடைய தலையை அந்த அம்பு ஊடுருவிச் சென்ற சமயத்தில் பலத்தை உடைய தன்னுடைய பற்கள் அழுந்தும்படி அந்த அம்பைப் பொங்கி எழுந்த கோபத்தோடு கவ்வுபவற்றைப் போலச் சில புலிகள் விளங்கின.' பாடல் வருமாறு:

''வெங்கணைபடு பிடர்கிழிபட விசைஉருவிய கயவாய்
செங்கனல்விட அதனொடுகணை செறியமுன்இரு கருமா
அங்கெழுசிரம் உருவியபொழு தடலெயிறுற அதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள்.''

வெம் - கொடுமையான. கணை - அம்பு. படு - பதிந்த. பிடர் - தன்னுடைய கழுத்து. கிழிபட - கிழிய. விசை - வேகமாக. உருவிய - அந்த அம்பு ஊடுருவிச் சென்ற. கயவாய் - ஆழமான வாயை உடைய யானை; அன்மொழித் தொகை. செங்கனல் - தன்னுடைய கண்களிலிருந்து சிவந்த நெருப்பை. விட - உமிழ. அதனொடு - அந்த யானையினிடம்; உருபு மயக்கம். கணை - வேடர்கள் எய்த அம்பு. செறிய - பதிய. முன் - முன்னால் உள்ள. இரு - பெரிய. கரு - கருமையான. மா - விலங்காகிய காட்டுப்பன்றி. அங்கு - அந்த இடத்தில். எழு - எழுந்த. சிரம் - தன்னுடைய தலையை. உருவிய - அந்த அம்பு ஊடுருவிச் சென்ற. பொழுது - சமயத்தில். அடல் - பலத்தை உடைய. எயிறு - தன்னுடைய பற்கள்; ஒருமை பன்மை மயக்கம். உற - அழுந்தும்படி. அதனை - அந்த அம்பை. ப்: சந்தி. பொங்கிய - பொங்கி எழுந்த. சினமொடு - கோபத்தோடு. கவர்வன - கவ்வுபவற்றை. சில புலிகள் புரைவன - போலச் சில புலிகள் விளங்கின.

பிறகு வரும் 81-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பல கலைமான்கள் தங்களுக்குப் பின்னால் இருந்து வேடர்கள் எய்த அம்புகள் அந்தக் கலை மான்களினுடைய பின் பக்கங்களில் பதிய அவற்றின் வயிறுகளின் நடுவே சென்று முன் முகங்களிலும் நடுமுகங்களிலும் மேலே ஊடுருவிச் செல்ல முடுகிச் சென்ற வேகத்தோடு அந்தக் கொல்லுகின்ற நுனிகளைப் பெற்ற வருத்துகின்ற அம்புகளினுடைய கூட்டம் எதிரில் வந்த முகத்தை ஊடுருவிச் செல்ல அந்த அம்பு ஒன்றுக்கு ஒன்று எதிருக்கு எதிரே போர் செய்வனவற்றை ஒத்த தலைகளை உடையவையாக விளங்கின.' பாடல் வருமாறு:

''பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்நடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடன்அக்
கொன்முனைஅடு சரமினம்எதிர் குறுகியமுகம் உருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள்.''

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. பல கலைகள் - பல கலைமான்கள். பின் - தங்களுக்குப் பின்னால் இருந்து. மறவர்கள் - வேடர்கள். விடு - எய்த. பகழிகள் - அம்புகள். பிறகு - அந்தக் கலைமான்களினுடைய பின் பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். உற - பதிய. வயிறிடை - அவற்றின் வயிறுகளின் நடுவில்; ஒருமை பன்மை மயக்கம். போய் - சென்று. முன் - முன் முகங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நடு முகம் - நடுமுகங்களிலும். மிசை - மேலே. உருவிட - ஊடுருவிச் செல்ல. முடுகிய - முடுகிச் சென்ற. விசையுடன் - வேகத்தோடு. அ - அந்த. க்: சந்தி. கொல் - கொல்லும். முனை - நுனிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அடு - வருத்துகின்ற. சரம் - அம்புகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இனம் - கூட்டம். எதிர் - எதிரில். குறுகிய - வந்த. முகம் - முகத்தை. உருவ - ஊடுருவிச் செல்ல. த்: சந்தி. தன் எதிர் எதிர் - அந்த அம்பு ஒன்று தனக்கு எதிர் எதிரில். பொருவன - போர் செய்பவற்றை. நிகர் - ஒத்த. தலையன - தலைகளை உடையவையாக விளங்கின.

பிறகு வரும் 82-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கருமையான மலை ஒரு வில்லோடு வேகமாகக் கடுகி வந்ததைப் போலப் போர்க்களத்திற்கு நேரில் வந்த அரசராகிய திண்ணனார் விலங்குகளுக்கு முன்னால் எய்யும் கொலை புரியும் அம்புக்கு எதிரில் மற்றோர் அம்பு கொலையைப் புரியும் சமயத்தில் அந்த அம்புகளே போர் புரியும் யானையோடு கோபத்தைப் பெற்ற

சிங்கத்தினிடத்தில் குற்றம் அற அதனுடைய உடம்புக்குள் புகுவதால் வருகின்ற இராத்திரி வேளையோடு பகல் வேளை அடைகின்றது என்று கூறும் வண்ணம் செறிந்திருக்கும் அந்தக் காடு.' பாடல் வருமாறு:

"கருவரைஒரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசில்முன்விடும் அடுசரம்எதிர் கொலைபயில் பொழுதவையே
பொருகரியொடு சினஅரியிடை புரையறஉடல் புகலால்
வரும்இரவொடு பகல்அணைவன எனமிடையும் அவ்வனமே."

கரு - கருமையான. வரை - மலை. ஒருதனுவொடு - ஒரு வில்லோடு. விசை - வேகமாக. கடுகியது - கடுகி வந்தது. என - என்று கூறும் வண்ணம்; இடைக்குறை. முனை - போர்க்களத்திற்கு. நேர் - நேரில் எழுந்தருளிய. குரிசில் - அரசராகிய திண்ணனார். முன் - விலங்குகளுக்கு முன்னால். விடும் - எய்யும். அடு - கொலை புரியும். சரம் - அம்புக்கு. எதிர் - எதிரில். கொலை - மற்றோர் அம்பு கொலையை. பயில் - புரியும். பொழுது - சமயத்தில். அவையே - அந்த அம்புகளே. பொரு - போர் புரியும். கரியொடு - ஒரு யானையோடு. சின - கோபத்தைப் பெற்ற. அரியிடை - ஒரு சிங்கத்தினிடத்தில். புரை அற - குற்றம் அற. உடல் - அதனுடைய உடம்புக்குள். புகலால் - புகுவதால். வரும் - ஒவ்வொரு நாளும் வரும். இரவொடு - இராத்திரி நேரத்தோடு. பகல் - பகல் வேளை. அணைவன - சேர்ந் திருப்பவை. என - என்று கூறும் வண்ணம்; இடைக்குறை. அவ்வனம் - அந்தக் காடு. ஏ : ஈற்றசை நிலை. மிடையும் - செறிந்திருக்கும்.

திண்ணனாருக்கு மலை உவமை: "மலை ஒன்று வந்த தென்னக் கை விரவு சிலைவேடர் போற்ற வந்து." என்று சேக்கிழார் வேறோர் இடத்தில் பாடியதைக் காண்க.

பின்பு உள்ள 83-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தக் காட்டில் உள்ள நீளமான இடத்தில் வேகத்தோடு மேலெழும்பிக் குதிக்க நீண்ட மேகத்தைத் தொடும் வண்ணம் குதித்து எழுகின்ற மான், தங்களுடைய கால்களில் பூண்ட வெற்றிக்கழல்களைப் பெற்ற வேடர்கள் எய்யும் அம்புகளினுடைய வரிசை தொடர்ந்து செல்பவை அவை தாம் ஒளியை வீசும் கிரணங்களைப் பெற்ற சந்திரனிடத்திலிருந்து பிரிந்து வரும் என்று சொல்லுமாறு தரையில் விழும் அந்த மானைக் கிரகத்தோடு பழகிக் கவ்வுகின்ற பாம்பு தொடர்ந்து செல்கின்ற நிலையை மேற்கொள்ளும் வண்ணம் எதிரில் வரும் பல மான்கள் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"நீளிடைவிசை மிசைகுதிகொள நெடுமுகில்தொட எழுமான்
தாளுறுகழல் மறவர்கள்விடு சரம்நிரைதொடர் வனதாம்
வாள்விடுகதிர் மதிபிரிவுற வருமெனவிழும் உழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளஉள எதிர்ப்பலவே."

நீள் - அந்தக் காட்டில் உள்ள நீளமான. இடை - இடத்தில். விசை - வேகத்தோடு. மிசை - மேல். குதிகொள - குதிக்க. கொள : இடைக்குறை. நெடு - நீளமான. முகில் - மேகத்தை. தொட - தொடும் வண்ணம். எழுமான் எழுகின்ற மான். தாள் - தங்களுடைய கால்களில்; ஒருமை பன்மை மயக்கம். உறு - பூண்ட. கழல் - வெற்றிக் கழல்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மறவர்கள் - வேடர்கள். விடு - எய்யும். சரம் - அம்புகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரை - வரிசை. தொடர்வன - தொடர்ந்து செல்பவையாகிய. தாம் - அவைதாம். வாள் - ஒளியை. விடு - வீசும். கதிர் - கிரணங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மதி - சந்திரனிடத்திலிருந்து.

*பிரிவுற வரும் - பிரிவு அமையுமாறு வரும். என - என்று கூறுமாறு; இடைக்குறை. விழும் - தரையில் விழும். உழையை - அந்த மானை. சந்திரனிடம் உள்ள கறையை மான் என்று கூறுவது வழக்கம். க்: சந்தி. கோளொடு - கிரகத்தோடு. பயில் - பழகிக் கவ்வுகின்ற. பணி - பாம்பு. தொடர் - தொடர்ந்து செல்கின்ற. நிலை - நிலையை. கொள - மேற்கொள்ளும் வண்ணம்: இடைக்குறை. எதிர் - எதிரில் வரும். ப்:சந்தி. பல - பல மான்கள். ஏ: ஈற்றசை நிலை. உள - இருக்கின்றன. சந்திர கிரகணத்தின்போது அதை ராகு என்ற பாம்பு கவ்வுவதாகக் கூறுதல் மரபு.*

*பிறகு உள்ள 84-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'சமுத்திரத்தில் பரந்திருக்கும் நீரை முகந்து கொள்ளும் பொருட்டு அந்தச் சமுத்திரத்தில் படிபவை ஆகிய கரிய மேகம் என்று கூறுமாறு வரிசையாக படர்தலோடு நெருங்கித் தழைகள் நெருங்கியவையாகி மேவுகின்ற செடிகள் வளர்ந்திருக்கும் காடாகிய அதன்மேல் கொல்லுதலைப் பெற்ற அம்புகள் தங்களுடைய உடம்புகளில் பதிய மலையினுடைய அடிவாரமாகிய இடத்தில் சுழல்வதால் செறிந்திருக்கும் கரிய மரைமான் கரடிகளோடு காட்டெருமைகள் தரையில் இறந்து விழுபவையாக இருக்கும்.' பாடல் வருமாறு:*

**"கடல்விரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே**
**படர்வொடுசெறி தழைபொதுளிய பயில்புதல்வனம் அதன்மேல்**
**அடலுறுசரம் உடலுறவரை யடியிடம்அல மரலால்**
**மிடைகருமரை கரடிகளொடு விழுவன வனமேதி."**

*கடல் - சமுத்திரத்தில். விரி - பரந்திருக்கும். புனல் - நீரை. கொள - முகந்து கொள்ளும் பொருட்டு;*

இடைக்குறை. விழுவன - படிபவை ஆகிய. கரு - கரிய. முகில் - மேகம். என - என்று கூறுமாறு; இடைக்குறை. நிரை - வரிசையாக. ஏ: அசைநிலை. படர்வொடு - படர்தலோடு. செறி - நெருங்கி. தழை - தழைகள்; ஒருமை பன்மை மயக்கம். பொதுளிய - நெருங்கியவையாகி. பயில் - மேவுகின்ற. புதல் - செடிகள் வளர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வனம் அதன் மேல் - காடாகிய அதற்கு மேலே. அடல் - கொல்லுதலை. உறு - பெற்ற. சரம் - அம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். உடல் - தங்களுடைய உடம்புகளில்; ஒருமை பன்மை மயக்கம். உற - பதிய. வரை - மலையினுடைய. அடி - அடிவாரமாகிய. இடம் - இடத்தில். அலமரலால் - சுழல்வதனால். மிடை - செறிந் திருக்கும். கரு - கரிய. மரை - மரைமான். கரடிகளொடு - கரடிகளோடு. வனமேதி - காட்டெருமைகள்; ஒருமை பன்மை மயக்கம். விழுவன - இறந்த போய்த் தரையில் விழுபவையாக இருக்கும்.

பின்பு உள்ள 85-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பல துறைகளில் அஞ்சுதலோடு பரப்பிய வலைகள் அறும் வண்ணம் நுழையும் விலங்குகள் வேகமாக ஓடுவதைத் தடுப்பதற்காகத் தாங்கள் கொண்ட கோபத்தோடு அவற்றைக் கவ்விப் பிடிக்கும் வேட்டை நாய்கள் உலகத்தில் உள்ள புண்ணியம் பாவம் என்ற இரண்டு வினைகளாகிய வலையினிடையில் சிக்கித் தங்களுடைய இயல்பாகிய நிலைகளிலிருந்து சுழலும் மக்களுடைய வாழ்க்கையின் வழியில் சேர்கின்ற தன் மாத்திரைகளைப் பெற்ற மனங்களின் நடுவில் மெய்யறிவைப் பெறாதபடி தடையைப் புரிந்த மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்து இந்திரியங்களினுடைய தன்மையை ஒத்திருந்தன.' பாடல் வருமாறு:

"பலதுறைகளின் வெருவரவொடு பயில்வலைஅற நுழைமா
உலமொடுபடர் வனதகையுற உறசினமொடு கவர்நாய்
நிலவியஇரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின்அள வுளவே."

*பல* - பல்வேறு. *துறைகளின்* - துறைகளில். *வெருவரவொடு* - அஞ்சுதலோடு. *பயில்* - பரப்பிய. *வலை* - வலைகளில்; ஒருமை பன்மை மயக்கம். *அற* - அறும் வண்ணம். *நுழை* - அந்த வலைகளில் நுழையும். *மா* - மான், கரடி, புலி, சிங்கம், ஓநாய் முதலிய விலங்குகள்; ஒருமை பன்மை மய்கம். *உலமொடு* - வேகத்தொடு. *படர்வன* - ஓடும் அந்த விலங்குகளை. *தகைஉற* - தடுத்தலைச் செய்வதற்காக. *உறு* - தாங்களிடம் உண்டான. *சினமொடு* - கோபத்தோடு. *கவர்* - அந்த விலங்குகளைக் கவ்விப் பிடிக்கும். *நாய்* - வேட்டை நாய்கள்; ஒருமை பன்மை மயக்கம். *நிலவிய* - உலகத்தில் உள்ள. *இருவினை* - புண்ணியம், பாவம் என்னும் இரண்டு வகைகளாகிய. *வினை:*' ஒருமை பன்மை மயக்கம். *வலையிடை* - வலையினிடையில் சிக்கி. *நிலை* - தங்களுடைய இயல்பான நிலைகளிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். *சுழல்பவர்* - சுழலும் மக்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். *நெறி* - வாழ்க்கையின் வழியில். *சேர்* - சேர்கின்ற. *புலன்* - தன் மாத்திரைகளை; ஒருமை பன்மை மயக்கம். இவை சப்த ஸ்பரிச ரூபரணகந்தம் என்பன; ஒலி, தொடுதல், உருவம், சுவ்வை, மணம் என்பவை. *உறு* - பெற்ற. *மனனிடை* - மனங்களின் நடுவில்; ஒருமை பன்மை மயக்கம். *தடை செய்த* - மெய்யறிவை அடைய முடியாதபடி தடையைப் புரிந்த. *பொறிகளின்* - மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்னும் ஐந்து இந்திரியங் களினுடைய. *அளவு* - தன்மையை. *உள* - பெற்றிருந்தன; இடைக்குறை. *ஏ:* இற்றசை நிலை.

அடுத்து வரும் 86-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொடுமையைப் பெற்றவையாகிய விலங்குகளுக்கு எதிரில் வேகமாகச் சென்றும் அவற்றை மிக்க கொலையைச் செய்பவர்களாகிய விற்களை ஏந்திய வேடர்கள் உடுக்குக் களைப் போன்ற கால்களை உடையவையும், வளைந்த காதுகளைப் பெற்றவையும் ஆகி வந்த யானைக்குட்டிகளைக் கொல்லுவதற்காக அவற்றைத் தொடர்ந்து செல்ல மாட்டார்கள்; வெடியைப் போல முழங்கி ஓடும் சிறிய விலங்குகளினுடைய குட்டிகளின்மேல் அம்புகளை எய்து உண்டாக்கும் கொலையை அவர்கள் செய்ய மாட்டார்கள்; தங்களுடைய கால்கள் தளர்ச்சியை அடையுமாறு கருப்பத்தை உடையவையாகி அடைகிற பெண் மான்களை அம்புகளை எய்து அவர்கள் அலைக்க மாட்டார்கள்.' பாடல் வருமாறு:

"துடியடியன, மடிசெவியன, துறுகயமுனி தொடரார்;
வெடிபடவிரி சிறுகுருளைகள் மிசைபடுகொலை விரவார்;
அடிதளர்வுறு கருவுடையன அணைவுறுபிணை அலையார்;
கொடியனஎதிர் முடுகியும்உறு கொலைபுரி மறவோர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்திருக்கிறது. கொடியன - கொடுமையைப் பெற்றவையாகிய விலங்குகளுக்கு. எதிர் - எதிரில். முடுகியும் - வேகமாகச் சென்றும். உறு - மிக்க. கொலைபுரி - கொலையைச் செய்யும். மறவோர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். துடி - உடுக்குக்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். அடியன - கால்களை உடையவையும். அடி: ஒருமை பன்மை மயக்கம். மடி - வளைந்த. செவியன - காதுகளைப் பெற்றவையும். செவி: ஒருமை பன்மை மயக்கம். துறு - ஆகி வந்த. கயமுனி - யானைக் குட்டிகளை; ஒருமை பன்மை மயக்கம். தொடரார் - கொல்லுவதற்காக அவற்றைத் தொடர்ந்து செல்ல மாட்டார்கள்; ஒருமைப்

பன்மை மயக்கம். வெடிபட - வெடியைப் போல முழங்கி. இரி - ஓடும். சிறு - சிறிய. குருளைகள் - மான், புலி, காட்டுப்பசு, காட்டுப்பன்றி, காட்டெருமை, ஓநாய், ஒட்டகம், சிங்கம் முதலிய விலங்குகளினுடைய குட்டிகளின். மிசை - மேல். படு - அம்புகளை எய்து உண்டாக்கும். கொலை - கொலையை. விரவார் - அவர்கள் செய்யமாட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அடி - தங்களுடைய கால்கள்; ஒருமை பன்மை மயக்கம். தளர்வுறு - தளர்ச்சியை அடையுமாறு. கரு - கருப்பத்தை. உடையன - உடையவை ஆகி; முற்றெச்சம். அணைவுறு - அடைகின்றன. பிணை - பெண் மான்களை; ஒருமை பன்மை மயக்கம். அலையார் - அம்புகளை எய்து துன்புறுத்த மாட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்த வரும் 87-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு வருகின்ற கொலை செய்வதாகிய வீரத் தொழில் தங்களுக்கு எதிரில் நடக்கும்போது அதிரும் வண்ணம் துதிக்கைகளைப் பெற்ற மலைகளைப் போன்ற யானைகளும், அச்சத்தை அடையுமாறு செறிந்துள்ள அந்தக் காட்டில் எழுந்து வருவதாகிய ஒரு காட்டுப்பன்றி மழையைப் பெய்யும் கருமையான மேகம் என்று கூறுமாறு இடியைப் போன்ற குரலோடு பிதிர்கின்ற நெருப்பைத் தன்னுடைய கண்களிலிருந்து சிதறச் செய்து பரப்பியிருந்த வலைகளை அறுமாறு தன்னுடைய தலை நிமிர்தலைப் பெற்றிருக்க முடுகிச் சென்ற மிகுதியான வேகத்தோடு.' பாடல் வருமாறு:

"இவ்வகைவரு கொலைமறவினை எதிர்நிகழ்வுழி அதிரக்
கைவரைகளும் வெருவுறமிடை கான்எழுவதொர் ஏனம்
பெய்கருமுகில் எனஇடியொடு பிதிர்கனல்விழி சிதறி
மொய்வலைகளை அறநிமிர்வுற முடுகியகடு விசையில்."

இந்தப் பாடல் குளகம். இவ்வகை - இவ்வாறு. வரு - வருகின்ற. கொலை - கொலை செய்வதாகிய. மற - வீரத்தைப் பெற்ற. வினை - தொழில். எதிர் - தங்களுக்கு எதிரில். நிகழ்வுழி - நடக்கம் போது. அதிர - அதிரும் வண்ணம்; அதிர்ச்சியை அடையுமாறு. க்: சந்தி. கை - துதிக்கைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வரைகளும் - மலைகளைப் போன்ற யானைகளும்; உவம ஆகுபெயர். வெருவுற - அச்சத்தை அடையும் வண்ணம். மிடை - செறிந்துள்ள. கான் - அந்தக் காட்டில். எழுவது - எழுந்து வருவதாகிய. ஓர் - ஒரு. ஏனம் - காட்டுப் பன்றி. பெய் - மழையைப் பெய்யும். கரு - கருமையான. முகில் - மேகம். என - என்று கூறுமாறு; இடைக்குறை. இடியொடு - இடியைப் போன்ற குரலொடு. பிதிர் - பிதிர்கின்ற. கனல் - நெருப்பை. விழி - தன்னுடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். சிதறி - சிதறச் செய்து. மொய் - பரப்பியிருந்த. வலைகளை அற - வலைகளை அறுமாறு. நிமிர்வுற - தன்னுடைய தலை நிமிர்தலைப் பெற்றிருக்க. நிமிர்தல் - மேல் நோக்குதல். முடுகிய - முடுகிச் சென்ற. கடு - மிகுதியான. விசையில் - வேகத்தோடு; உருபு மயக்கம்.

பிறகு வரும் 88-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு செல்லும் அந்தக் காட்டுப் பன்றியைக் கொல்லுகின்ற வலிமையோடு எதிர்க்கும் வேடர்கள் ஆண் சிங்கத்தைப் போல விளங்கும் அந்தத் திண்ணனார் அதைத் தொடர்ந்து செல்லும் வேகத்தோடு அதனுடைய அடிகளின் சுவடுகளின் வழியே போகும் சமயத்தில் வேறு ஒருவரும் அதனை அறிந்து கொள்ளவில்லை; அந்தத் திண்ணனார் தனியாகத் தொடர்ந்து செல்லும்போது அந்தக் காட்டுப் பன்றியின் மேல் அம்பினுடைய நுனியினால் கொல்லும் விற்களைப் பெற்ற காளை மாடுகளைப் போன்றவர் களாகிய

இரண்டு வேடர்கள் அந்தத் திண்ணனாருடைய திருவடிகளைப் பிரியாதவர்களாகி உடன் சென்றார்கள்.' பாடல் வருமாறு:

"போமதுதனை அடுதிறலொடு பொருமறவர்கள் அரியே
றாமவர்தொடர் வுறும்விசையுடன் அடிவழிசெலும் அளவில்
தாமொருவரும் அறிகிலர்அவர் தனிதொடர்வுழி அதன்மேல்
ஏமுனைஅடு சிலைவிடலைகள் இருவர்கள்அடி பிரியார்."

போம் - அவ்வாறு வேகமாகச் செல்லும். அது - தனை - அந்தக் காட்டுப் பன்றியை; தன்: அசைநிலை. அடு - கொல்லும். திறலொடு - ஆற்றலோடு. பொரு - போர் புரியும். மறவர்கள் - வேடர்கள். அரியேறு ஆம் - ஆண் சிங்கத்தைப் போன்றவராகும். அவர் - அந்தத் திண்ணனார். தொடர்வுறும் - அந்தக் காட்டுப் பன்றியைத் தொடர்ந்து செல்லும். விசையுடன் - வேகத்தோடு. அடி - அதனுடைய அடிகளின் சுவடுகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். வழி - வழியில். செலும் - போகும்; இடைக்குறை. அளவில் - சமயத்தில். தாம்: அசைநிலை. ஒருவரும் - ஒரு வேடரும். அறிகிலர் - அவர் போவதைத் தெரிந்து கொள்ளவில்லை. அவர் - அந்தத் திண்ணனார். தனி - தனியாக. தொடர்வுழி - அந்தக் காட்டுப் பன்றியைத் தொடர்ந்து செல்லும்போது. அதன்மேல் - அந்த விலங்கின் மேல். ஏ - அம்பினுடைய. முனை - நுனியால். அடு - கொல்லுகின்ற. சிலை - விற்களை ஏந்திய; ஒருமை பன்மை மயக்கம். விடலைகள் - காளை மாடுகளைப் போன்ற வேடர்கள்; உவம ஆகுபெயர். இருவர்கள் - இரண்டு பேர்கள். அடி - திண்ணாருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பிரியார் - பிரியாதவர்களாகி அவரோடு சென்றார்கள்; முற்றெச்சம்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 89-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அவ்வாறு விரும்பிச் சென்ற வெற்றிக் கழலைப் பூண்ட கால்களைப் பெற்ற வீரர்களாகிய வேடர்கள் நாணன் என்பவனும் நீண்டு வரிந்து கட்டப்பெற்ற வில்லை ஏந்திய காடன் என்பவனும் என்னும் இரண்டு பேர்களும் மலைப் பக்கத்தைக் காக்கும் காவலர்களோடு வேகத்தோடு சேர்ந்து கொண்டவர்களாகி எய்கின்ற அம்புகளோடு கொலை புரியும் வேட்டை நாய்களிடமிருந்து தப்பி நீளமாக இருக்கிற மலைச் சரிவில் செல்லுவதாகி ஒரு மரத்தினுடைய நிழலுக்கு வேகமாகச் செல்லும் அந்தக் காட்டுப்பன்றி.' பாடல் வருமாறு:

"நாடியகழல் வயவர்கள்அவர் நாணனும்நெடு வரிவில்
காடனும்எனும் இருவரும்மலை காவலரொடு கடிதில்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படர்வதுதரு நீழலின்விரை கேழல்."

இந்தப் பாடல் குளகம். நாடிய - அவ்வாறு விரும்பிச் சென்ற. கழல் - வெற்றிக் கழல்களைப் பூண்ட கால்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். வயவர்கள் - வீரர்களாகிய வேடர்கள். அவர் - ஆகிய அவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நாணனும் - நாணன் என்பவனும். நெடு - நீளமான. வரி - வரிந்து கட்டப்பெற்ற. வில் - வில்லை ஏந்திய. காடனும் - காடன் என்பவனும். எனும் - என்னும்; இடைக்குறை. இருவரும் - இரண்டு வேடர்களும். மலை - மலைப் பக்கத்தை. காவலரொடு - காக்கும் காவலர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கடிதில் - வேகத்தோடு; உருபு மயக்கம். கூடினர் - சேர்ந்து கொண்டவர்களாகி; முற்றெச்சம்; ஒருமை பன்மை மயக்கம். விடு - எய்யும். பகழிகளொடு - அம்புகளோடு. கொலை - கொலையைப் புரியும். ஞமலிகள் - வேட்டை நாய்களிடத்திலிருந்து. வழுவி - தப்பிச் சென்று. நீடிய - நீளமாகிய. சரி -

மலைச்சரிவில். படர்வது - செல்வதாகிய அந்த விலங்கு. தரு - ஒரு மரத்தினுடைய. நீழலின் - நிழலுக்கு; உருபு மயக்கம். விரை - வேகமாகச் செல்லும். கேழல் - அந்தக் காட்டுப்பன்றி.

பிறகு வரும் 90-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'குன்றிமணிகளை ஒத்தவையும் முன்னால் எதிர்ப்பதற்காக எரியும் கொடுமையானவையும் ஆகிய கண்களையும், இடியைப் போன்ற குரலையும், நீளமான உடலையும் பெற்ற அந்தக் காட்டுப் பன்றியும் எதிர்த்தலாகிய வன்மையான ஆற்றலோடு செல்லுகின்ற வழியில் நெடுநேரம் ஓடி அங்கே இருந்ததாகிய ஒரு மலையின் அடிவாரத்தில் மருவிய வழியில் உள்ள இடத்துக்குப் போய் அந்த அடிவாரத்தில் தன்னுடைய வலிமை சுழல மரங்களினுடைய வரிசையினிடையே நின்று கொண்டிருந்தது.' பாடல் வருமாறு:

"குன்றியைநிகர் முன்செறஎரி கொடுவிழிஇடி குரல்நீள்
பன்றியும்அடல் வன்றிறலொடு படர்நெறிநெடி தோடித்
துன்றியதொரு குன்றடிவரை சுலவியநெறி சூழல்
சென்றதனிடை நின்றதுவலி தெருமரமரம் நிரையில்."

குன்றியை - குன்றிமணிகளை; ஒருமை பன்மை மயக்கம். நிகர் - ஒத்தவையும்; பெயரெச்ச வினையாலணையும் பெயர். முன் - முன்னால். செற - எதிர்ப்பதற்காக. எரி - நெருப்பைப் போல எரியும். கொடு - கொடுமையாகிய. விழி - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். இடி - இடியைப் போன்ற. குரல் - குரலையும். நீள் - நீளமான உடலையும்; ஆகுபெயர். பன்றியும் - பெற்றதாகிய அந்தக் காட்டுப் பன்றியும். அடல் - எதிர்த்தலாகிய. வன் - வன்மையான. திறலொடு - ஆற்றலோடு. படர் - செல்லுகின்ற. நெறி - வழியில். நெடிது - நெடு நேரம். ஓடி - ஓடிப் போய். த்: சந்தி. துன்றியது -

அங்கே இருந்ததாகிய. ஒரு குன்று - ஒரு மலையினுடைய. அடிவரை - அடிவாரத்தில். சுலவிய - மேவிய. நெறி - வழியில் உள்ள. சூழல் - இடத்துக்கு. சென்று - போய். அதனிடை - அந்த அடிவாரத்தில். வலி - தன்னுடைய வலிமை. தெருமர - சுழல. மரம் - மரங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரையில் - வரிசையினிடையே. நின்றது - நின்று கொண்டிருந்தது.

பிறகு உள்ள 91-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்த மரங்கள் வளர்ந்து நிற்கும் இடத்திற்குச் சென்று சேர்ந்த அந்தக் காட்டுப் பன்றியினுடைய நிலையைத் தெரிந்து கொள்பவராகி முன்னால் தம்முடைய கையில் ஆராய்ந்து வைத்திருந்த ஓர் அம்பினால் அந்தக் காட்டுப் பன்றியைக் கொலை செய்வதை எண்ணாதவராகி வேகமாக முடுகிச் சென்று மிகுதியாக எழுகின்ற ஒளியை வீசும் தம்முடைய உடைவாளை நுனி தெரியும் வண்ணம் எதிரில் உருவிக் கொண்டு ஆயுதங்களைப் பிரயோகம் செய்யும் சாதியிற் பிறந்த வேடர்களினுடைய தலைவராகிய திண்ணனார் அந்தக் காட்டுப் பன்றியினுடைய உடம்பு முறியும் வண்ணம் குத்தினார்.' பாடல் வருமாறு:

"அத்தருவளர் சுழலிடையடை அதன்நிலையறி பவர்முன்
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறஎதிர் உருவிக்
குத்தினர்உடல் முறிபடஎறி குலமறவர்கள் தலைவர்."

அத்தரு - அந்த மரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளர்ந்து நிற்கும். சுழலிடை - இடத்திற்கு; உருபு மயக்கம். அடை - சென்று சேர்ந்த. அதன் - அந்தக் காட்டுப் பன்றியினுடைய. நிலை - நிலைமையை. அறிபவர் - தெரிந்து கொள்பவராகி; முற்றெச்சம். முன் - முன்னால். கை - தம்முடைய கையில். த்: சந்தி. தெரி - ஆராய்ந்து

வைத்திருந்த. கணையினில் - ஓர் அம்பினால்; உருபு மயக்கம். அடுவது - அந்தக் காட்டுப் பன்றியைக் கொலை செய்வதை. கருதலர் - எண்ணாதவராகி; முற்றெச்சம். விசை - வேகமாக. கடுகி - முடுகிச் சென்று. மொய்த்து - மிகுதியாகி. எழு - எழுகின்ற. சுடர் - ஒளியை. விடு - வீசும். சுரிகையை - தம்முடைய உடைவாளை. முனை - நுனி. பெற - தெரியும்படி. எதிர் - எதிரில். உருவி - தம்முடைய இடுப்பிலிருந்து உருவிக்கொண்டு. க்: சந்தி. எறி - ஆயுதங்களைப் பிரயோகம் செய்யும். குல - சாதியிற் பிறந்த. மறவர்கள் - வேடர்களினுடைய. தலைவர் - தலைவராகிய திண்ணனார். உடல் - அந்தக் காட்டுப் பன்றியினுடைய உடம்பு. முறிபட - முறிந்து விழும் வண்ணம். குத்தினர் - குத்தினார்.

அடுத்து வரும் 92-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வேடர்களினுடைய கருமையான திருமேனியை யும், சிவந்த கண்களையும் ஏந்திய வில்லையும் கொண்டவராகிய திண்ணனார் வேகத்தோடு தம்முடைய உடைவாளால் குத்தப் பக்கங்களில் இரண்டு துண்டு களாகித் தரையில் விழுந்த அந்தக் காட்டுப் பன்றியைப் பார்த்து நாணன் என்னும் வேடன், "வேடனே, இந்தக் காட்டுப் பன்றிக்குப் பின்னால் இன்றைக்குப் பல காதங்கள் ஓடிவந்து களைத்துப் போய்விட்டோம்; இந்த ஆண் பிள்ளையாகிய திண்ணன் இதைக் கொன்று விட்டான்; ஐயோ! என்ன ஆச்சரியம்!" என்று கூறி அந்தத் திண்ணனாருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி னார்கள்.' பாடல் வருமாறு:

"வேடர்தம் கரிய செங்கண் வில்லியார் விசையிற் குத்த
பாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டு நாணன்
'காடனே, இதன்பின் இன்று காதங்கள் பலவந் தெய்த்தோம்;
ஆடவன் கொன்றான் அச்சோ!' என்றவர் அடியில் தாழ்ந்தார்."

வேடர்தம் - வேடர்களுக்குள். கரிய - கருமையான திருமேனியையும். செம் - சிவந்த. கண் - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வில்லியார் - ஏந்திய வில்லையும் கொண்டவராகிய திண்ணனார். விசையில் - வேகத்தோடு; உருபு மயக்கம். குத்த - தம்முடைய உடைவாளாற் குத்த. பாடு - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். இரு - இரண்டு. துணியாய் - துண்டுகளாகி; ஒருமை பன்மை மயக்கம். வீழ்ந்த - இறந்து போய்த் தரையில் விழுந்த. வராகத்தை - அந்தக் காட்டுப் பன்றியை. க்: சந்தி. கண்டு - பார்த்து. நாணன் - நாணன் என்னும் வேடன். காடனே இதன் - காடனே இந்தக் காட்டுப் பன்றிக்கு. பின் - பின்னால். இன்று - இன்றைக்கு. காதங்கள் பல - பல காதங்கள். காதம் - பத்து மைல் தூரம். வந்து - ஓடி வந்து. எய்த்தோம் - களைத்துப் போய் விட்டோம். ஆடவன் - இந்த ஆண் பிள்ளையாகிய திண்ணன். கொன்றான் - இந்த விலங்கைக் கொலை செய்து விட்டான். அச்சோ - என்ன ஆச்சரியம்! என்று - என்று கூறிவிட்டு. அவர் - அந்தத் திண்ணனாருடைய. அடியில் - திருவடிகளில்; ஒருமை பன்மை மயக்கம். தாழ்ந்தார் - விழுந்து அந்த இரண்டு வேடர்களும் வணங்கினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 93-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த நாணனும் காடனும் திண்ணனாரிடம் பின் வருமாறு கூறலானார்கள்: ''இந்த வழியில் நாங்கள் ஓடிவந்து மிகுதியாக பசிவந்து எங்களை அடைந்தது; நீ தந்த இந்தக் காட்டுப் பன்றியினுடைய உடம்பை நெருப்பில் வாட்டிச் சிறிதளவு நீ உண்டு நாங்களும் உண்டு விட்டுத் தண்ணீரைத் குடித்து விட்டுப் பிறகு வெற்றியைக் கொள்கின்ற வேட்டையாடுவதற்குக் காட்டுக்கு மெல்லப் போவோம்.''

என்று அந்த இரண்டு வேடர்களும் கூறினார்கள்.' பாடல் வருமாறு:

> "மற்றவர் திண்ண னார்க்கு மொழிகின்றார்; 'வழிவந் தாற்ற
> உற்றது பசிவந் தெம்மை; உதவிய இதனைக் காய்ச்சிச்
> சற்றுநீ அருந்தி யாமும் தின்று தண்ணீர் குடித்து
> வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோம் மெல்ல.' என்றார்."

மற்று: அசைநிலை. அவர் - நாணனும் காடனும் ஆகிய அவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். திண்ணனார்க்கு - தங்களுடைய தலைவராகிய திண்ணனாருக்கு. மொழி கின்றார் - பின்வருமாறு கூறலானார்கள்; ஒருமை பன்மை மயக்கம். வழி - இந்த வழியில். வந்து - ஓடி வந்து. ஆற்ற - மிகுதியாக. எம்மை - எங்கள் இரண்டு பேர்களையும். பசிவந்து உற்றது - பசிவந்து சேர்ந்தது. உதவிய - நீ குத்தித் தந்த. இதனை - இந்தக் காட்டுப் பன்றியினுடைய உடலை. க்: சந்தி. காய்ச்சி - நெருப்பில் வாட்டி. ச்: சந்தி. சற்று - சிறிதளவும். நீ அருந்தி - நீ உண்டுவிட்டு. யாமும் - நாங்களும். தின்று - உண்டு விட்டு. தண்ணீர் குடித்து - தண்ணீரைக் குடித்து விட்டு. வெற்றிகொள் - வெற்றியைக் கொள்கின்ற. வேட்டை - விலங்குகளை வேட்டையாடு வதற்கு. க்: சந்தி. காடு - காட்டுக்கு. குறுகுவோம் மெல்ல - மெல்லப் போவோம். என்றார் - என்று அந்த இரண்டு வேடர்களும் கூறினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 94-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'என்று நாணனும் காடனும் ஆகிய வேடர்கள் அவ்வாறு சொல்ல அவர்களைத் திண்ணனார் பார்த்து, "தண்ணீர் எந்த இடத்தில் நன்றாகவும் இந்தக் காட்டில் இருக்கிறது?" என்று கேட்க, நாணன் என்னும் வேடன், "இதோ வளர்ந்து நின்ற இந்தப் பெரிய தேக்க மரத்துக்கு

அப்பால் போனால் உயரமான மலைக்குப் பக்கத்தில் குளிர்ச்சியை அடைந்திருக்கும் நீரைப் பெற்ற பொன் முகலி என்ற ஆறு ஓடும்'' என்று கூறினான்.' பாடல் வருமாறு:

''என்றவர் கூற நோக்கித் திண்ணனார், 'தண்ணீர் எங்கே
நன்றும்இவ் வனத்தில் உள்ள' தென்றுரை செய்ய நாணன்,
'நின்றஇப் பெரிய தேக்கின் அப்புறம் சென்றால் நீண்ட
குன்றினுக் கயலே ஓடும் குளிர்ந்த பொன்முகலி' என்றான்.''

என்று - என. அவர் - நாணனும் காடனுமாகிய அவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூற - அவ்வாறு சொல்ல. நோக்கி - அவர்களைப் பார்த்து. த்: சந்தி. திண்ணனார் - அவர்களுடைய தலைவராகிய திண்ணனார். தண்ணீர் - நாம் குடிப்பதற்குத் தண்ணீர். எங்கு - எந்த இடத்தில். ஏ: அசைநிலை. நன்றும் - நன்றாகவும். இவ்வனத்தில் - இந்தக் காட்டில். உள்ளது - இருக்கிறது. என்று - என. உரை செய்ய - கேட்க. நாணன் - நாணன் என்னும் வேடன். நின்ற - இதோ வளர்ந்து நின்ற. இப்பெரிய - இந்தப் பெரிய. தேக்கின் - தேக்க மரத்துக்கு. அப்புறம் - அப்பால். சென்றால் - போனால். நீண்ட - உயரமாக உள்ள. குன்றினுக்கு - மலைக்கு. அயல் - பக்கத்தில். ஏ: அசை நிலை. குளிர்ந்த - குளிர்ச்சியை அடைந்த நீர் நிரம்பிய. பொன்முகலி ஓடும் - பொன்முகலி ஆறு ஓடும். என்றான் - என்று கூறினான்.

பிறகு வரும் 95-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'பொங்கி எழுந்த கோபத்தையும் வில்லையும் பெற்ற அந்த வேடனாகிய நாணன் அவ்வாறு கூறிய பிறகு, ''அந்த இடத்திற்கு நாம் மூன்று பேர்களும் செல்வோம்; இந்த இடத்தில் கிடக்கும் இந்தக் காட்டுப் பன்றியினுடைய உடலை எடுத்துக் கொண்டு நீங்கள் வாருங்கள்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டுத் திண்ணனாராகிய

தாமும் அந்த இடத்திற்கு அந்தப் பொன்முகலியாற்றைப் பார்த்து எழுந்தருளினார்; அரைக்காத தூரத்தில் சிவந்த கண்களைப் பெற்ற இடப வாகனத்தை ஓட்டுபவராகிய காளஹஸ்தீசுவரர் எழுந்தருளித் தங்கியிருக்கும் அழகிய காளத்தி மலையினுடைய பக்கங்களில் வளர்ந்து நிற்கும் மரங்களை உடைய சோலையைப் பார்த்தார்.' பாடல் வருமாறு:

"பொங்கிய சினவில் வேடன் சொன்னபின் 'போவோம் அங்கே;
இங்கிது தன்னைக் கொண்டு போதுமின்.' என்று தாமும்
அங்கது நோக்கிச் சென்றார்; காவதம் அரையிற் கண்டார்
செங்கண்ஏ றுடையார் வைகும் திருமலைச் சாரல் சோலை."

பொங்கிய - பொங்கி எழுந்த. சின - கோபத்தையும். வில் - ஏந்திய வில்லையும். வேடன் - வேடனாகிய நாணன். சொன்ன - அவ்வாறு கூறிய. பின் - பிறகு. அங்கு - அந்த இடத்திற்கு. ஏ: அசை நிலை. போவோம் - நாம் மூன்று பேர்களும் செல்வோம். இங்கு - இந்த இடத்தில் கிடந்த. இது தன்னை - இந்தக் காட்டுப் பன்றியினுடைய உடலை. தன்: அசைநிலை. க்: சந்தி. கொண்டு - எடுத்துக்கொண்டு. போதுமின் - நீங்கள் இரண்டு பேர்களும் வாருங்கள். என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. தாமும் - திண்ணனாராகிய தாமும். அங்கு - அந்த இடத்திற்கு. அது - அந்தப் பொன்முகலியாற்றை. நோக்கி - பார்த்து. ச்: சந்தி. சென்றார் - எழுந்தருளினார். காவதம் அரையில் - அரைக்காத தூரத்தில்; அரைக்காதம் - ஐந்துமைல். செம் - சிவந்த. கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஏறு - இடப வாகனத்தை. உடையார் - தம்முடைய வாகனமாகப் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரர். வைகும் - எழுந்தருளித் தங்கியிருக்கும். திரு - அழகிய. மலை - காளத்தி மலையினுடைய. ச்: சந்தி. சாரல் - பக்கங்களில்

வளர்ந்து நிற்கும் மரங்களை உடைய. சோலை - பூம்பொழிலை. கண்டார் - பார்த்தார்.

செங்கண் ஏறு: ''செங்கண் வெள்ளேறி.'', ''செங்கண் வெள்விடையாய்.'' என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''செங்கண் மால்விடையார்.'', ''செங்கண் மால்விடை ஏறிய செல்வனார்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''செங்கண் மால்விடையாய் தெளிதேனே.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''செங்கண் வெள் விடையின் பாகர்.'', ''செங்கண் வெள்ளேற்றின் பாகன்.'', ''செங்கண் மால்விடையார்.'', ''செங்கண் மால்விடையார் திருக் காளத்தி.'', ''செங்கண் விடையார் திருமேனி.'', ''செங்கண் விடையார் திருமலர்க்கை.'', ''செங்கண் விடையார் திருவானைக்கா.'', ''செங்கண் விடையார் திருவண்ணா மலை.'', ''செங்கண் மால்விடை அண்ணல் மேவு திருப்பருப்பதம்.'', ''செங்கண் விடையார் மன்னும் திருக்கானப்பேர்.'', ''செங்கண் ஏற்றவர் தில்லை.'', ''செங்கண் ஏற்றவர் திருமுதுகுன்றினை.'', ''செங்கண் ஏற்றவர் சேவடி வணங்கி.'', ''செங்கண் ஏற்றவரே பொருள்.'', ''செங்கண் விடையார் திருப்பழனம்.'', ''செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து.'', ''செங்கண் விடை உலகத்தவரைத் திருப்பதிகம் பாடினார்.'', ''செங்கண் விடைக் கொடியார்.'', ''செங்கண் விடையார் தமைப் பணிந்து.'', ''செங்கண் மால்விடையார் பாதம் சேர்ந்தனர்.'', ''செங்கண் விடையார் திருக்கோயில்.'', ''செங்கண் விடையார் திருமுன்றில்.'' என்று சேக்கிழாரும் பாடி அருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 96-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''நாணனே, இதோ காணும் மலைக்குப் போவோம்'' என்று காடன் கூற, ''அதைப் பார்க்க நீ சென்றால் நல்ல

காட்சியே தோன்றும்; இந்த ஆகாயத்தளவும் உயரமாக உள்ள அழகிய காளத்தி மலையின் மேல் எழுந்தருளி நேராக வளைவு இல்லாத குடுமித்தேவர் எழுந்தருளியிருப்பார்; அவரை நாம் நம்முடைய கைகளைக் கூப்பிக் கும்பிடலாம்.'' என்று நாணன் கூறினான்.' பாடல் வருமாறு:

"'நாணனே, தோன்றும் குன்றில் நண்ணுவேம்.' என்ன நாணன்
'காணநீ போதின் நல்ல காட்சியே காணும்; இந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை எழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவர் இருப்பர்; கும்பிடலாம்' என்றான்."

நாணனே - என்னுடைய நண்பனாகிய நாணனே. தோன்றும் - இதோ காணும். குன்றில் - மலைக்கு; உருபு மயக்கம். நண்ணுவேம் - நாம் இருவரும் போவோம். என்ன - என்று காடன் கூற. நாணன் - நாணன் என்னும் வேடன். காண - அந்த மலையைப் பார்க்க. நீ போதின் - நீ சென்றால். நல்ல - கண்களுக்கு அழகாக உள்ள. காட்சியே காணும் - காட்சியே தோன்றும். இந்தச்சேண் - இந்த ஆகாயத்தளவும். உயர் - உயர்ந்திருக்கும். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலை மிசை - காளத்தி மலையின் மேல். எழுந்து - எழுந்தருளி. செவ்வே - நேராக. கோணம் - வளைவு. இல் - இல்லாத; கடைக்குறை. குடுமித்தேவர் - குடுமியை உடைய கடவுள். இருப்பர் - கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பார். கும்பிடலாம் - நாம் நம்முடைய கைகளைக் குவித்து அவரைக் கும்பிடலாம். என்றான் - என்று நாணன் கூறினான்.

அடுத்து வரும் 97-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இனிமேல் ஆவது என்ன இருக்கிறது? இந்தக் காளத்தி மலையைப் பார்த்து இங்கே அடையும்தோறும் என்னுடைய மேலே உள்ள சுமை போவதாகிய செயல் ஒன்று இருக்கிறது போல இருக்கும்; அந்தக் குடுமித்

தேவரைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலும் பொங்கி எழுந்து மேலும் மேலும் என்னிடம் உள்ள மனமும் வேறு ஒரு விருப்பத்தை அடைய வேகத்தோடு நிற்கும்; அந்தக் குடுமித்தேவர் அந்த மலையில் எழுந்தருளியிருப்பது எந்த இடத்தில்? நாம் செல்ல.'' என்று திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

" 'ஆவதென்? இதனைக் கண்டிங் கணைதொறும் என்மேற் பாரம்
போவதொன் றுளது போலும்; ஆசையும் பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற விரையா நிற்கும்;
தேவரங் கிருப்ப தெங்கே? போ'கென்றார் திண்ண னார்தாம்."

ஆவது - இனிமேல் ஆகப்போகும் காரியம். என் - என்ன இருக்கிறது. இதனை - இந்தக் காளத்தி மலையை. க்: சந்தி. கண்டு - பார்த்து. இங்கு - இந்த இடத்தை. அணை தொறும் - அடையும் ஒவ்வொரு தடவையும். என்மேல் - என்மேல் உள்ள. பாரம் - சுமை. போவது ஒன்று - போவதாகிய செயல் ஒன்று. உளதுபோலும் - இருக்கிறது போலத் தோற்றும். உளது: இடைக்குறை. ஆசையும் - ஆவலும். பொங்கி - பொங்கி எழுந்து. மேன்மேலும் - மேலும் மேலும். மேவிய - என்னிடம் உள்ள. நெஞ்சும் - மனமும். வேறு ஓர் - வேறாகிய ஒரு. விருப்பு - விருப்பத்தை. உற - அடைய. விரையாநிற்கும் - விரைகிறதாக இருக்கும். தேவர் - அந்தக் குடுமித்தேவர். அங்கு - அந்தக் காளத்தி மலையில். இருப்பது - எழுந்தருளி இருப்பது. எங்கு - எந்த இடத்தில். ஏ: அசைநிலை. போகு - நான் செல்வேன். திண்ணனார் தாம் - திண்ணனார். தாம்: அசைநிலை. என்றார் - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு வரும் 98-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு வேகமாகப் போக நாணனும் காடனும் ஆகிய

அந்த வேடர்களும் அவரோடு சென்று தன்னுடைய கரைகளில் வளர்ந்து நிற்கும் மூங்கிலில் உண்டான முத்துக்களும், அகில் மரக்கட்டையும், சந்தன மரமும், மலை வழங்கும் மாணிக்கங்களும், தங்கமும், வயிரமும், ஒவ்வொரு மணல் மேட்டிலும் தன்னுடைய அலைகள் முன்னால் கொண்டு வந்து குவித்து வைத்த அழகிய பொன்முகலி யாற்றை அடைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"உரைசெய்து விரைந்து செல்ல அவர்களும் உடனே போந்து
கரைவளர் கழையின் முத்தும் கார்அகிற் குறடும் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறும்
திரைகள்முன் திரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார்."

உரைசெய்து - திண்ணனார் அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு. விரைந்து - வேகமாக. செல்ல - எழுந்தருள. அவர்களும் - நாணன், காடன் என்னும் அந்த வேடர்களும். உடன் - திண்ணனாரோடு. ஏ: அசைநிலை. போந்து - சென்று. கரை - தன்னுடைய கரைகளில்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளர்ந்து நிற்கும். கழையின் - மூங்கிலில் தோன்றிய. முத்தும் - முத்துக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கார் - கருமையான. அகில் - அகில் மரத்தினுடைய. குறடும் - கட்டையையும். சந்தும் - சந்தன மரத்தையும். வரை - மலை. தரு - வழங்கும். மணியும் - மாணிக்கங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்னும் - தங்கத்தையும். வயிரமும் - வயிரத்தையும். புளினந்தோறும் - ஒவ்வொரு மணல் மேட்டிலும். திரைகள் - தன்னுடைய அலைகள். முன் - முன்னால். திரட்டிவைத்த - குவித்து வைத்த. திரு - அழகிய. முகலியினை - பொன்முகலியாற்றை. ச்: சந்தி. சார்ந்தார் - நாணனும் காடனும் திண்ணனாரும் அடைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 99-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அடைந்து அந்தப் பொன்முகலியாற்றினுடைய கரையின் பக்கத்தில் ஒரு அழகிய மரத்தினுடைய நிழலில் தாங்கள் கொண்டு வந்திருந்த காட்டுப்பன்றியினுடைய உடம்பை வைத்து விட்டு வளைந்த வில்லை ஏந்திய காடன் என்னும் வேடனை மரத்தில் நெருப்பைக் கடையும் கோலைச் செய்து, "இந்த இடத்தில் நீ நெருப்பைப் பாதுகாத்துப் பார்த்துக் கொண்டிருப்பாயாக. நாங்கள் இந்தக் காளத்தி மலையின் மேல் ஏறிப் பார்த்து விட்டு மீண்டும் வந்து சேருவோம்" என்று திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு நாணன் என்னும் வேடனும் தாமும் சென்றார்கள்.' பாடல் வருமாறு:

"ஆங்கதன் கரையின் பாங்கோர் அணிநிழற் கேழல் இட்டு
வாங்குவிற் காடன் றன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி
'ஈங்குநீ நெருப்புக் காண்பாய்: இம்மலை ஏறிக் கண்டு
நாங்கள்வந் தணைவோம்' என்று நாணனும் தாமும் போந்தார்."

ஆங்கு - அவ்வாறு அடைந்து. அதன் - அந்தப் பொன்முகலியாற்றினுடைய. கரையின் - கரைக்கு. பாங்கு - பக்கத்தில். ஓர் அணி - ஓர் அழகிய. நிழல் - மரத்தினுடைய நிழலில். கேழல் - தாங்கள் எடுத்துக்கொண்டு வந்திருந்த காட்டுப்பன்றியினுடைய உடலை; ஆகுபெயர். இட்டு - வைத்து விட்டு. வாங்கு - வளைந்த. வில் - வில்லை ஏந்திய. காடன் தன்னை - காடன் என்னும் வேடனை. தன்: அசைநிலை. மரக்கடை - மரத்தைக் கடையும். தீக்கோல் - நெருப்பை உண்டாக்கும் கோலை. பண்ணி - செய்து. ஈங்கு - இந்த இடத்தில். நீ நெருப்பு - நீ நெருப்பை. க்: சந்தி. காண்பாய் - பார்த்துக் கொண்டிருப்பாயாக. இம்மலை - இந்தக் காளத்திமலையின் மேல். ஏறிக் கண்டு - ஏறிப்பார்த்து விட்டு. நாங்கள் - நாணனும் நானும் ஆகிய நாங்கள் இரண்டு பேர்களும். வந்து - திரும்பி வந்து. அணைவோம் - சேருவோம். என்று - எனத் திண்ணனார் திருவாய்

மலர்ந்தருளிச் செய்துவிட்டு. நாணனும் - நாணன் என்னும் வேடனும். தாமும் - திண்ணனாராகிய தாமும். போந்தார் - சென்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு உள்ள 100-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வண்டுகள் செறிந்து மொய்க்கும் பொன்முகலி ஆற்றினுடைய கரையைச் சுற்றி வளர்ந்து நிற்கும் பல வகையான மரங்களைப் பெற்ற பூம்பொழிலில் மலர்ந்துள்ள மலர்களை வாரிக்கொண்டு வந்த பொன்முகலி ஆற்றினுடைய தெளிந்த நீரில் இறங்கித் தம்முடைய திருவுள்ளத்தில் தெளிவை அடையும் திண்ணனார் களிப்பு உண்டாகும் மகிழ்ச்சி பொங்கி எழக் காளத்தி மலையைப் பார்த்துவிட்டு குளிர்ச்சியுள்ள நீர் ஓடும் பொன்முகலி ஆற்றின் வழியில் சென்று சிறப்பைப் பெற்ற அந்த மலையினுடைய பக்கத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அளிமிடை கரைசூழ்சோலை அலர்கள் கொண் டணைந்த ஆற்றின்
தெளிபுனல் இழிந்து சிந்தை தெளிவுறும் திண்ண னார்தாம்
களிவரும் மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார்."

அளி - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். மிடை - செறிந்து மொய்க்கும். கரை - பொன்முகலி ஆற்றினுடைய கரையை. சூழ் - சுற்றி வளர்ந்து நிற்கும். சோலை - பல வகையான மரங்களைப் பெற்ற பூம்பொழிலில்; அந்த மரங்களாவன: அரச மரம், ஆல மரம், தென்ன மரம், பனம் மரம், செவ்வாழை மரம், கருவாழை மரம், சுகந்தன் வாழை மரம், கூளி வாழை மரம், மொந்தன் வாழை மரம், ரஸ்தாளி வாழை மரம், பேயன் வாழை மரம், நுணா மரம், வாதநாராயண மரம், புளிய மரம், மா மரம், பலா மரம், விளா மரம், வில்வ மரம், வேப்ப மரம், தேக்க மரம். மருத மரம், கொடுக்காப்புளி மரம், பவழமல்லிகை மரம், வாகை

மரம், வேங்கை மரம், இருப்பை மரம், கடம்ப மரம் முதலியவை. அலர்கள் - மலர்ந்த மலர்களை. கொண்டு - வாரிக் கொண்டு. அணைந்த - ஓடி வந்த. ஆற்றின் - பொன் முகலி ஆற்றில் ஓடும். தெளி - தெளிந்த. புனல் - நீரில். இழிந்து - இறங்கி. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். தெளிவு - தெளிவை. உறும் - அடையும். திண்ணனார் தாம் - திண்ணனார். தாம்: அசைநிலை. களி - களிப்பு. வரும் - உண்டாகும். மகிழ்ச்சி - ஆனந்தம். பொங்க - பொங்கி எழ. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையை. கண்டு - பார்த்து. கொண்டு - விட்டு. குளிர் - குளிர்ச்சி; முதல்நிலைத் தொழிற் பெயர். வரு - உடைய நீர் ஓடும். நதியூடு - அந்தப் பொன்முகலி ஆற்றின் வழியே. ஏகி - சென்று. க்: சந்தி. குல - சிறப்பைப் பெற்ற. வரை - அந்த மலையினுடைய. ச்: சந்தி. சாரல் - பக்கத்தை. சேர்ந்தார் - அடைந்தார்.

அடுத்து உள்ள 101-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சூரியன் உச்சியை அடைய தெய்வத் தன்மையையும் பெருமையையும் பெற்ற அந்த காளத்தி மலையினுடைய மேற்புறத்தில் அதிர்ச்சியை உண்டாக்கும் துந்துபி என்னும் வாத்தியங்கள் ஐந்தினுடைய முழக்கம் சமுத்திரத்தி னுடைய முழக்கத்தைக் காண்பிக்க, "இந்த முழக்கம் என்ன? நாணனே?" என்று கேட்ட திண்ணனாரிடம், "இந்த மலையில் பெரிய தேனடைகளைச் சுற்றிக் கொண்டு தேன் உள்ள மலர்களில் வண்டுகள் மொய்த்து அதனால் பக்கத்தில் பொங்கி எழும் ஓசையோ?" என்று திண்ணன் கேட்டான்.' பாடல் வருமாறு:

"கதிரவன் உச்சி நண்ணக் கடவுள்மால் வரையின் உச்சி
அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கம் காட்ட,
'இதுஎன்கொல்? நாணா,' என்றாக், 'கிம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமலர் ஈக்கள் மொய்த்து மருங்கெழும் ஒலிகொல்?' என்றான்."

கதிரவன் - சூரியன். உச்சி - உச்சியை. நண்ண - அடைந்து நண்பகல் வேளை வர. க்: சந்தி. கடவுள் - தெய்வத் தன்மையையும். மால் - பெருமையையும் பெற்ற. வரையின் - காளத்தி மலையினுடைய. உச்சி - மேற்புறத்தில். அதிர் - அதிர்ச்சியை; முதல் நிலைத் தொழிற் பெயர். தரும் - உண்டாக்கும். ஓசை ஐந்தும் - ஐந்து தேவ துந்துபிகளின் முழக்கமும். ஆர்கலி - சமுத்திரத்தினுடைய. முழக்கம் - முழக்கத்தை. காட்ட - தோன்றச் செய்ய. இது - இந்த முழக்கம். என் - என்ன. கொல் : அசைநிலை. நாணா - நாணனே. என்றார்க்கு - என்று கேட்ட திண்ணனாரிடம்; உருபு மயக்கம். இம்மலை - இந்தக் காளத்தி மலையில். ப்:சந்தி. பெருந்தேன் - பெரிய தேனடைகளை; ஆகுபெயர். சூழ்ந்து - சுற்றிக் கொண்டு. மது - தேன் நிறைந்த. மலர் - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். ஈக்கள் - தேனீக்கள். மொய்த்து - மொய்த்து அதனால். மருங்கு - பக்கத்தில். எழும் - எழுந்து கேட்கும். ஒலிகொல் - ஓசையோ. என்றான் - என்று திண்ணன் கேட்டான்.

அடுத்து வரும் 102-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'முன் பிறவியில் புரிந்த தவப்பயனினுடைய தொகுதி முடிவே இல்லாத இன்பமான பக்தியை எடுத்துக் காண்பிக்க அளவு இல்லாத பேராவல் பொங்கி எழுந்து நிலைபெற்று விளங்கும் விருப்பம் மிகுதியாக உண்டாக வள்ளலாராகிய திண்ணனார் அந்தக் காளத்தி மலையைப் பார்த்துத் தம்முடைய எலும்புகள் நெகிழ்ந்து உருக்கத்தை அடைந்து தம்முடைய திருள்வுத்தில் எழுந்த பெரிய விருப்பத்தோடும்.' பாடல் வருமாறு:

"முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்ப மான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்."

இந்தப் பாடல் குளகம். முன்பு - முன்பிறவியில். செய் - புரிந்த. தவத்தின் - தவத்தினுடைய பயனினுடைய; ஆகுபெயர். ஈட்டம் - தொகுதி. முடிவு - முடிவே. இலா - இல்லாத; இடைக்குறை. இன்பமான - பேரின்பமான. அன்பினை - பக்தியை. எடுத்துக்காட்ட - எடுத்துக் காண்பிக்க. அளவு இலா - அளவு இல்லாத. இலா: இடைக்குறை. ஆர்வம் - பேராவல். பொங்கி - பொங்கி எழுந்து. மன் - நிலைபெற்று விளங்கும். பெரும் - பெரிய. காதல் - விருப்பம். கூர - மிகுதியாக உண்டாக. வள்ளலார் - வள்ளலாராகிய திண்ணனார். மலையை - காளத்தி மலையை. நோக்கி - பார்த்து. என்பு - தம்முடைய எலும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். நெக்கு - நெகிழ்ந்து. உருகி - உருக்கத்தை அடைந்து. உள்ளத்து - தம்முடைய திருவுள்ளத்தில். எழு - எழுந்த. பெரு - பெரிய. வேட்கையோடும் - விருப்பத்தோடும்.

என்பு நெக்குருகுதல்: ''என்பெலாம் நெக்கிராப் பகல் ஏத்தி நின்று.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''என்பு நைந் துருகி நெக்கு நெக்கேங்கி.'', ''என்புருகிப் பாடுகின்றிலை.'', ''என்பெலாம் உருக நோக்கி.'', ''என்பெலாம் உருக்கி எள்ளியையாய் ஆண்ட ஈசனே.'', ''ஈர்த்தீர்த்தென் என் புருக்கி.'', ''என்புள் உருக்கி இருவினையை ஈடழித்து.'', ''என்பே உருக நின்னருள் அளித்து.'' என்று மாணிக்கவாசகரும், ''என்பெலாம் உருகும் அன்பர்.'' என்று கருவூர்த் தேவரும், ''என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்.'' என்று திருமூலரும், ''அன்பின் அடைந்தவர் கணிமையும் நாடொறும், என்பினை உருக்கும் இயற்கைய.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''என்பும் தழுவிய ஊனும் நெக அகமே எழுந்த அன்பின் வழிவந்த ஆரமிர்தே.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''என்பு கரைந்து.'', என்புள்ளுருக்கும் அடியாரை.'', ''என்பும் மனமும்

கரைந்துருக விழுந்தார்.'', ''என்பும் உருக உயிரொன்றி உடம்பும் ஒன்றாம் என இசைந்தார்.'', ''என்புருக மடுத் தெரித்தார்.'' என்று சேக்கிழாரும் பாடியருளிய வற்றைக் காண்க.

*பிறகு வரும் 103-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'நாணன் என்னும் வேடனும் தம்முடைய பக்தியும் முன்னால் குளிர்ச்சியைப் பெற்ற காளத்தி மலையின் மேல் ஏறிச் செல்ல, தாமும் பாதுகாக்கும் தத்துவங்கள் என்று கூறப்படும் பெருகிய படிகளின் மேல் ஏறி ஆணையாகும் சிவத்தைச் சேர்வதற்காக அடைபவர்போல ஐயர் ஆகிய திண்ணனார் உயரமான நிலையைக் கொண்டே அந்தக் காளத்தி மலையின்மேல் ஏறி நேராக எழுந்தருளும் சமயத்தில்.' பாடல் வருமாறு:*

**''நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்**
**பேணுதத் துவங்கள் என்னும் பெருகுசோ பானம் ஏறி**
**ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்**
**நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில்.''**

இந்தப் பாடலும் குளகம். நாணனும் - *நாணன் என்னும் வேடனும்.* அன்பும் - *தம்முடைய பக்தியும்.* முன்பு - *முன்னால்.* நளிர் - *குளிரும்.* வரை - *காளத்தி மலையின் மேல்.* ஏற - *ஏறிச் செல்ல.* த்: *சந்தி.* தாமும் - *திண்ணனாராகிய தாமும்.* பேணு - *பாதுகாக்கும்.* தத்துவங்கள் என்னும் - *தத்துவங்கள் என்று கூறப்படும். இவை 96 ஆகும்.* பெருகு - *பெருகியுள்ள.* சோபானம் - *படிகளின் வழியாக; ஒருமை பன்மை மயக்கம்.* ஏறி - *மேலே ஏறிச் சென்று.* ஆணையாம் - *ஆணையாக விளங்கும்.* சிவத்தை - *சிவபரம்பொருளை.* ச்: *சந்தி.* சார - *சேர்வதற்காக.* அணைபவர்போல - *அடைபவரைப் போல.* ஐயர் -

ஐயராகிய திண்ணனார். நீள் - உயரமாகிய. நிலை - நிலையைப் பெற்ற. மலையை - காளத்தி மலையின் மேல்; உருபு மயக்கம். ஏறி - ஏறிய பிறகு. நேர்பட - நேராக. ச்: சந்தி. செல்லும் - எழுந்தருளும். போதில் - சமயத்தில்.

பிறகு உள்ள 104-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பிறைச் சந்திரன் தங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற்கொண்டவராகிய காளஹஸ்தீசுவரரை எழுந்தருளி அந்தத் திண்ணனார் பார்ப்பதற்கு முன்னால் அழகிய கண்களைப் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரர் கருணை மிகுதியாக அமைந்த திருவருட் பார்வை தம்மை அடைய இப்போது தங்கியுள்ள பிறப்புக்குக் காரணமான முன்பு உள்ள சார்பு தம்மை விட்டு அகலுமாறு நீங்கிப் பொங்கி எழுந்த சோதியின் நிழலில் ஒப்பு இல்லாத அன்பே தம்முடைய வடிவமாக ஆயினார்.' பாடல் வருமாறு:

"திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணா முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவில்அன் புருவம் ஆனார்."

திங்கள் - பிறைச்சந்திரன். சேர் - தங்கிய. சடையார் தம்மை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரரை. தம்: அசைநிலை. ச்: சந்தி. சென்று - காளத்தி மலையின் மேல் ஏறிப் போய். அவர் - அந்தத் திண்ணனார். காணா - காளஹஸ்தி ஈசுவரரைப் பார்ப்பதற்கு. முன் - முன்னால், ஏ: அசை நிலை. அங்கணர் - அழகிய கண்களைப் பெற்றவராகிய காளஹஸ்தி ஈசுவரர். கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர்: இடைக்குறை. கருணை கூர்ந்த - கருணை மிகுதியாக அமைந்த. அருள் திரு நோக்கம் - திருவருட் பார்வை. எய்த - தம்மை அடைய. த்: சந்தி. தங்கிய - இப்போது தங்கியுள்ள. பவத்தின் -

வேடராகப் பிறந்த பிறப்புக்குக் காரணமான. முன்னை - முன் பிறவியிற் செய்த. ச்: சந்தி. சார்பு - சார்பாகிய வினைகள்; ஒருமை பன்மை மயக்கம். விட்டு - தம்மைவிட்டு விட்டு. அகல - அகன்று போக. நீங்கி - அந்த வினைகளிலிருந்து விடுபட்டு. ப்: சந்தி. பொங்கிய - பொங்கி எழுந்த. ஒளியின் - தேசினுடைய. நீழல் - நிழலில். பொரு - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. அன்பு - அன்பே. உருவம் - தம்முடைய திருவுருவமாக. ஆனார் - ஆயினார். அன்பு வேறு அவர் வேறு என்று இல்லாமல் அவரே அன்பு வடிவமாக ஆகிவிட்டார். ''கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு.'' என்று மாணிக்கவாசகர் பாடியருளியதைக் காண்க.

அடுத்து வரும் 105-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'வானத்தை அளாவும் அழகிய காளஹஸ்தி மலையில் எழுந்தருளிய கொழுந்தைப் போல இருக்கிற தாம் ஒருவரே யாவருக்கும் தலைவராக விளங்கும் காளஹஸ்தீசுவரரைத் திண்ணனார் தரிசனம் செய்தார்; அப்போது தம்மிடம் எழுந்து தோன்றிய பெரிய மகிழ்ச்சியோடு அமைந்த பக்தியினுடைய வேகமானது மேலே போக மிகுதியாக உள்ளதாகிய ஒரு வேகத்தோடும் மோகம் உடையவராய் ஓட்டமாக ஓடிப் போய்க் காளஹஸ்தீசுவரராகிய சிவலிங்கப் பெருமானாரைத் தழுவிக் கொண்டார்; உச்சியை மோந்து பார்த்து விட்டு நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

''மாகமார் திருக்கா ளத்தி மலைஎழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார்; எழுந்த பேருவகை அன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடும்
மோகமாய் ஓடிச் சென்றார்; தழுவினார்; மோந்து நின்றார்.''

மாகம் - வானத்தை. ஆர் - அளாவும். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலை - காளஹஸ்தி மலையில். எழு - எழுந்தருளிய. கொழுந்தாய் - கொழுந்தைப் போல. உள்ள -

இருக்கிற. ஏக நாயகரை - தாம் ஒருவரே யாவருக்கும் தலைவராக விளங்கும் காளஹஸ்தீசுவரரை. க்: சந்தி. கண்டார் - திண்ணனார் தரிசனம் செய்தார். எழுந்த - அப்போது பொங்கி எழுந்து தம்மிடம் தோன்றிய. பேருவகை - பெரிய மகிழ்ச்சியோடு அமைந்த. அன்பின் - பக்தியினுடைய. வேகமானது - விரைவான போக்கு. ஆனது: சொல்லுருபு. மேற்செல்ல - மேலே போக. மிக்கது - மிகுதியாக உள்ளதாகிய. ஓர் - ஒரு. விரைவினோடும் - வேகத்தோடும். மோகமாய் - மோகத்தை உடையவராய்; திணை மயக்கம். ஓடி - ஓட்டமாக ஓடி. ச்: சந்தி. சென்றார் - போனார். தழுவினார் - காளஹஸ்தீசுவரராகிய சிவலிங்கப் பெருமானாரைத் தழுவிக் கொண்டார். மோந்து - அவருடைய உச்சியை மோந்து பார்த்து விட்டு. நின்றார் - நின்று கொண்டிருந்தார்.

பிறகு வரும் 106-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நீண்ட நேரம் திண்ணனார் பெருமூச்சு விட்டு நின்று கொண்டு நிரம்பி எழுந்த தம்முடைய திருமேனியில் உள்ள ஒவ்வொரு மயிர்க்காலிலும் திருவடிவம் எல்லா இடங்களிலும் மயிர்க்கூச்சுப் பொங்கி எழச் செந்தாமரை மலர்களைப் போன்ற தம்முடைய கண்களிலிருந்து நீர் அருவியைப் போலப் பாய, ''அடியேனுக்கு இந்தக் காளத்தி ஈசுவரர் இந்த இடத்தில் கிடைத்தார், ஐயோ! என்ன ஆனந்தம்!'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு ஒப்பு இல்லாத அன்பே ஒரு வடிவமாக விளங்கும் இயல்பு தோற்றத்தை அளிக்க.' பாடல் வருமாறு:

"நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கால் தோறும்
வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீர் அருவி பாய
'அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ!' என்று
படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற."

இந்தப் பாடல் குளகம். நெடிது - நீண்டதாகிய. போது - நேரம். உயிர்த்து - திண்ணனார் பெருமூச்சு விட்டு. நின்று - நின்று கொண்டு. நிறைந்து - நிரம்பி. எழு - எழுந்த. மயிர்க்கால் தோறும் - தம்முடைய திருமேனியில் உள்ள ஒவ்வொரு மயிர்க்காலிலும். வடிவு - தம்முடைய திருவுருவம். எலாம் - எல்லா இடங்களிலும்; இடைக்குறை. புளகம் - மயிர்க்கூச்சு. பொங்க - பொங்கி எழ. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கண்ணீர் - கண்களிலிருந்து சொரியும் நீர்; ஒருமை பன்மை மயக்கம். அருவி பாய - அருவியைப் போலப் பாய்ந்து தரையில் ஓட. அடியனேற்கு - அடியேனுக்கு. இவர் தாம் - இந்தக் காளஹஸ்தீசுவரர். தாம்: அசைநிலை. இங்கு - இந்த மலையில். ஏ: அசை நிலை. அகப்பட்டார் - கிடைத்தார். அச்சோ - ஐயா என்ன ஆனந்தம்! என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. படி - ஒப்பு. இலா - இல்லாத; இடைக்குறை. ப்: சந்தி. பரிவுதான் - அன்பே. ஓர் - ஒரு. படிவம் ஆம் - வடிவமாக விளங்கும். பரிசு - இயல்பு. தோன்ற - தோற்றத்தை அளிக்க.

அடுத்து உள்ள 107-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

' "கொடிய வீரத்தைப் பெற்ற குடும்பத்தில் பிறந்த வேட்டுவர்களுடைய சாதியிற் பிறந்தவரைப் போல துதிக்கையைப் பெற்ற மலையைப் போன்ற யானையும், கரடியும், வேங்கையும், சிங்கமும் திரிகின்ற இந்தக் காட்டில் உம்மோடு துணையாக இருப்பவர் ஒருவரும் இல்லாமல் ஐயோ! இந்தக் காளத்தி மலையில் தனியாகத் தேவரீர் இந்த இடத்தில் எழுந்தருளியிருப்பதா?" என்று திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு வருத்தத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

" 'வெம்மறக் குலத்து வந்த வேட்டுவர் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானம் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ள ஒருவரும் இன்றிக் கெட்டேன்!
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே!' என்று நைந்தார்."

வெம் - கொடிய. மற - வீரத்தைப் பெற்ற. க்: சந்தி. குலத்து - குடும்பத்தில். வந்த - பிறந்த. வேட்டுவர் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். சாதியார் - சாதியிற் பிறந்தவரை. போல் - போல. கை - துதிக்கையைப் பெற்ற. ம்: சந்தி. மலை - மலையைப் போன்ற யானையும். கரடி - கரடியும். வேங்கை - வேங்கைப் புலியும். அரி - சிங்கமும். திரி - திரியும். கானம்தன்னில் - இந்தக் காட்டில். தன்: அசைநிலை. உம்முடன் - உம்மோடு. துணையாய் - துணையாகி. உள்ள - இருக்கிற. ஒருவரும் - ஒரு மனிதரும். இன்றி - இல்லாமல். க்: சந்தி. கெட்டேன் - ஐயோ! இம்மலை - இந்தக் காளத்தி மலையில். தனியே - தனியாகவே. நீர் - தேவரீர். இங்கு - இந்த இடத்தில். இருப்பதே - தங்கியிருப்பதா? என்று - எனத் திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. நைந்தார் - வருத்தத்தை அடைந்தார்.

கைம்மலை: "கைவரை யெனத் தகைய காளை." (தாடகை வதைப் படலம், 47), "கார்கடாமென மிகக் கடுத்த கைம்மலை." (ஆற்றுப் படலம், 47), "கைந்நாகம் அனையோன்." (திருவடி தொழுத படலம், 2), "கைக் குன்றப் பெருங்கரைய நிருதர்." (களம் காண் படலம், 24) என்று கம்பர் பாடியவற்றைக் காண்க.

பிறகு வரும் 108-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் தம்முடைய கையில் வைத்திருந்த வில் தரையில் விழுந்ததைக் கவனிக்கவில்லை; காளை

மாட்டைப் போன்றவராகிய அவர் மறுபடியும், ''இந்தப் பச்சை இலைகளோடு மலர்களையும் பறித்துக் கொண்டு வந்து அவற்றைக் காளஹஸ்தீசுவரராகிய சிவலிங்கப் பெருமானாரின் மேல் வைத்து நீரையும் அபிடேகம் செய்து நல்லதாகிய இந்தக் காரியத்தைப் புரிந்தவர் யாவரோ?'' என்று கேட்டவுடன் பக்கத்தில் நின்று கொண்டிருந்த வில்லை ஏந்திய அந்த நாணன் என்னும் வேடனும், ''யான் இதனைத் தெரிந்து கொண்டேன்.'' என்று கூறுவானானான்.' பாடல் வருமாறு:

''கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள, 'இந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ?' என்றலும் மருங்கு நின்ற
அச்சிலை நாணன் தானும், 'நானிது அறிந்தேன்.' என்பான்.''

காளையார் - காளைமாட்டைப் போன்றவராகிய திண்ணனார். கை - தம்முடைய கையில் வைத்திருந்த. ச்: சந்தி. சிலை - வில். விழுந்தது - தரையில் விழுந்ததை. ஓரார் - கவனிக்கவில்லை. மீள - மறுபடியும். இந்தப் பச்சிலையோடு - இந்தப் பச்சையான இலைகளோடு; ஒருமை பன்மை மயக்கம். என்றது வில்வ பத்திரங்களை. பூவும் - மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். பறித்து - கொய்து கொண்டு வந்து. இட்டு - இந்தச் சிவலிங்கப் பெருமானாரின் மேல் வைத்து. நீரும் - நீரையும். வார்த்து - அபிடேகம் செய்து. மச்சிது - நல்லதாகிய இந்தச் செயலை. இது தெலுங்கு. செய்தார் - புரிந்தவர். யாரோ - எவரோ. என்றலும் - என்று திண்ணனார் கேட்டவுடன். மருங்கு - அவருடைய பக்கத்தில். நின்ற - நின்று கொண்டிருந்த. அச்சிலை நாணன் தானும் - வில்லை ஏந்திய அந்த நாணன் என்னும் வேடனும். தான்: அசைநிலை. நான் - யான். இது - இவ்வாறு செய்தவர் யார் என்ற இதனை. அறிந்தேன் -

தெரிந்து கொண்டிருக்கிறேன்; கால மயக்கம். என்பான் - என்று கூறுபவனானான்.

அடுத்து வரும் 109-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அதைக் கேட்ட நாணன் என்னும் வேடன், "வலிமையான ஆற்றலைப் பெற்ற உன்னுடைய தந்தையாகிய நாகனோடு விலங்குகளை வேட்டையாடி விட்டு முன்பு ஒருநாள் இந்தக் காளத்தி மலைக்கு வந்தோமாக இந்தக் காளஹஸ்தீசுவரராகிய சிவலிங்கப் பெருமானாரைக் குளிர்ந்த நீரால் அபிடேகம் செய்து தான் கொண்டுவந்து சேர்ந்த இலைகளையும் மலர்களையும் இவர் தலையின்மேல் அணிந்து நிவேதனத்தைப் படைத்து இவருக்கு முன்னால் தோத்திரங்களைக் கூறி ஓர் அந்தணன் அன்றைக்கு இதனைப் புரிந்தான்; இன்றைக்கும் இது அந்த அந்தணன் புரிந்ததாகும்." என்று கூறினான்.' பாடல் வருமாறு:

" 'வன்றிறல் உந்தை யோடு மாவேட்டை ஆடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக் குளிர்ந்தநீர் இவரை ஆட்டி
ஒன்றிய இலைப்பூச் சூட்டி ஊட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
அன்றிது செய்தான்; இன்றும் அவன்செய்த தாகும்.' என்றான்."

வன் - அதைக் கேட்ட நாணன் என்னும் வேடன் வலிமையான. திறல் - ஆற்றலைப் பெற்ற. உந்தையோடு - உன்னுடைய தந்தையாகிய நாகனோடு. மா - மான் முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். வேட்டை ஆடி - வேட்டை ஆடிவிட்டு. ப்: சந்தி. பண்டு - முன்பு. இக்குன்றிடை - இந்தக் காளத்தி மலைக்கு; உருபு மயக்கம். வந்தோமாக - நாங்கள் வந்தோமாக. க்: சந்தி. இவரை - இந்தச் சிவலிங்கப் பெருமானாரை. குளிர்ந்த - குளிர்ச்சியாக

அமைந்த. நீர் - நீரால். ஆட்டி - அபிடேகம் செய்து. ஒன்றிய - தான் பறித்துக் கொண்டு வந்து சேர்ந்த. இலை - இலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பூ - மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சூட்டி - இவருடைய தலையின்மேல் அணிந்து. ஊட்டி - நிவேதனத்தையும் படைத்து. முன்பு - முன் ஒருநாள். அறைந்து - தோத்திரங்களைக் கூறி. ஓர் - ஒரு. பார்ப்பான் - பிராமணன். அன்று - அன்றைக்கு. இது - இந்தச் செயலை. செய்தான் - புரிந்தான். இன்றும் - இன்றைக்கும். அவன் - அந்த அந்தணன். செய்தது ஆகும் - புரிந்ததே ஆகும் இது. என்றான் - என்று நாணன் கூறினான்.

அடுத்து உள்ள 110-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பி எழுந்ததானாலும் ஒழிதல் இல்லாமல் குறையாத அன்போடு திண்ணனார், "அழகிய காளத்தி மலையில் எழுந்தருளிய நாயகராகிய காளஹஸ்தீசுவரருக்கு இனிமையான காரியங்கள் நினைத்த இவைகளோ ஆகும்" என்று எண்ணி இந்தச் செயலைப் பற்றிக்கொண்டு அந்தத் தலைவராகிய காளஹஸ்தீசுவரரைப் பிரிய முடியாத அளவு இல்லாத அன்பு உண்டாக.' பாடல் வருமாறு:

> "உண்ணிறைந் தெழுந்த தேனும் ஒழிவின்றி ஆரா அன்பில்
> திண்ணனார், 'திருக்கா ளத்தி நாயனார்க் கினிய செய்கை
> எண்ணிய இவைகெ லாம்'என் றிதுகடைப் பிடித்துக் கொண்டவ்
> வண்ணலைப் பிரிய மாட்டா அளவில்ஆ தரவு நீட."

இந்தப் பாடல் குளகம். உள் - தம்முடைய திருவுள்ளத்தில். நிறைந்து - நிரம்பி. எழுந்ததேனும் - எழுந்ததானாலும். 'தம்முடைய திருமாளிகைக்குப் போகலாம் என்ற எண்ணம் திண்ணனாருக்கு உண்டானா

லும்.' என்பது கருத்து. ஒழிவு - ஒழிதல். இன்றி - இல்லாமல். ஆரா - திருப்தியடையாத; குறையாத. அன்பில் - அன்போடு; உருபு மயக்கம். திண்ணனார் - அந்தத் திண்ணனார். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளஹஸ்தி மலையில் எழுந்தருளியிருக்கும். நாயனார்க்கு - தலைவராகிய காளஹஸ்தீசுவரருக்கு. இனிய - இனிமையான; உகந்த. செய்கை - செயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். எண்ணிய - அந்த அந்தணன் நினைத்த. இவைகெலாம் - இவைகளோ ஆகும். என்று - என எண்ணி. இது - இத்தகைய செயலை; என்றது நாணன் கூறிய செயலை. கடைப்பிடித்துக் கொண்டு - பற்றிக் கொண்டு. அவ்வண்ணலை - அந்தத் தலைவராகிய காளஹஸ்தீசுவரரை. 'அண்ணல் - பெருமையை உடையவர்' எனலும் ஆம். ப்: சந்தி. பிரிய - விட்டுப் பிரிய. மாட்டா - முடியாத. அளவுஇல் - அளவு இல்லாத. இல்: கடைக்குறை. ஆதரவு - அன்பு. நீட - உண்டாக.

பிறகு வரும் 111-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இந்தக் காளஹஸ்தீசுவரரைப் பார்த்த எனக்கு, ''இவர் தனியாக உள்ளவராக இருந்தாரே! ஏன்?'' என்று தோன்றுகிறது. இவருக்குத் திருஅமுது செய்வதற்கு மாமிசம் படைப்பவர் யாரும் இல்லை; இவரைப் பிரிய என்னால் முடியாது; நான் என்ன செய்வேன்? இனிமேல் நாம் மிகுதியாக இவருக்கு மாமிசத்தை எடுத்துக்கொண்டு இந்த இடத்திற்கு வரவும் வேண்டும்.'' எனத் திண்ணனார் எண்ணி.' பாடல் வருமாறு:

" 'இவர்தமைக் கண்டே னுக்குத் தனியராய் இருந்தார், என்னே?
இவர்தமக் கமுது செய்ய இறைச்சியும் இடுவார் இல்லை;
இவர்தமைப் பிரிய ஒண்ணா தென்செய்கேன்? இனியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டுங் கெய்தவும் வேண்டும்' என்று."

இந்தப் பாடலும் குளகம். இவர்தமை - இந்தக் காளஹஸ்தீசுவரரை; தமை: இடைக்குறை. தம்: அசை நிலை. க்: சந்தி.கண்டேனுக்கு - பார்த்த எனக்கு. த்: சந்தி. தனியராய் - இவர் தனியாக உள்ளவராகி. இருந்தார் - இருந்தாரே. என் - ஏன்? ஏ: அசைநிலை. 'என்று தோன்றுகிறது' என்பதை இங்கே வருவிக்க. இவர் தமக்கு - இவருக்கு. தம்: அசைநிலை. அமுது செய்ய - உண்ணுவதற்கு. இறைச்சியும் இடுவார் - மாமிசத்தைப் படைப்பவர். உம்மையைப் பிரித்து இடுவார் என்பதனோடு கூட்டுக. இல்லை - யாரும் இல்லை. இவர் தமை - இவரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. பிரிய - என்னால் பிரிந்திருக்க. ஒண்ணாது - முடியாது. என் - என்ன. செய்கேன் - செய்வேன். இனி - இனிமேல். யான் - நான். சால - மிகுதியாக. இவர்தமக்கு - இவருக்கு. தம்: அசைநிலை. இறைச்சி - மாமிசத்தை. கொண்டு - எடுத்துக் கொண்டு. இங்கு - இந்தக் காளத்தி மலைக்கு. எய்தவும் வேண்டும் - வரவும் வேண்டும். என்று - என்று திண்ணனார் எண்ணி.

பின்பு உள்ள 112-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'திண்ணனார் அவ்வாறு மாமிசத்தைக் கொண்டு வருவதற்காகச் செல்வார்; திரும்பி வருவார்; காளஹஸ்தீசுவரரைத் தழுவிக் கொள்வார்; மறுபடியும் செல்வார்; விருப்பத்தோடும் அந்த ஈசுவரரைப் பார்த்துக் கொண்டே நிற்பார்; தன்னுடைய கன்றுக்குட்டியை விட்டு நீங்கும் ஈன்றணிமையை உடைய பசுமாட்டைப்போல விளங்குவார்; ''தலைவனே, தேவரீர் திருவமுது செய்வதற்காக நல்ல மென்மையாகிய மாமிசத்தை யானே குற்றம் ஒரு சிறிதும் இல்லாமல் ஆராய்ந்து பார்த்து வேறாக எடுத்துக் கொண்டு இந்த இடத்திற்கு வந்து சேருவேன்.'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்வார்.' பாடல் வருமாறு:

''போதுவர்; மீண்டு செல்வர்; புல்லுவர்; மீளப் போவார்;
காதலின் நோக்கி நிற்பர்; கன்றகல் புனிற்றாப் போல்வர்;
'நாதனே, அமுது செய்ய நல்லமெல் இறைச்சி நானே
கோதறத் தெரிந்து கொண் டிங்கு வருவேன்' என்பார்.''

*போதுவர் - திண்ணனார் அவ்வாறு மாமிசத்தைக் கொண்டு வருவதற்காகச் செல்வார். மீண்டு - திரும்பி. செல்வர் - காளத்தி மலைக்கு வருவார். புல்லுவர் - காளஹஸ்தீசுவரரைத் தழுவிக் கொள்வார். மீள - மறுபடியும். ப்: சந்தி. போவார் - செல்வார். காதலின் - விருப்பத்தோடு. நோக்கி - அந்த ஈசுவரரைப் பார்த்துக் கொண்டே. நிற்பர் - நிற்பார். கன்று - தன்னுடைய கன்றுக் குட்டியை. அகல் - விட்டு நீங்கும். புனிற்று - ஈன்று அணிமையை அடைய. ஆ - பசுமாட்டை. ப்: சந்தி. போல்வர் - போல விளங்குவார். நாதனே - அடியே னுடைய தலைவனே. அமுது செய்ய - தேவரீர் அமுது செய்வதற்காக. நல்ல - நல்லதும்; வினையாலணையும் பெயர். மெல் - மென்மையானதும் ஆகிய; வினையா லணையும் பெயர். இறைச்சி - மாமிசத்தை. நானே - அடியேனே. கோது - ஒரு குற்றமும். அற - இல்லாதபடி. த்: சந்தி. தெரிந்து - ஆராய்ந்து. கொண்டு - அதைக் கொண்டு. இங்கு - இந்த இடத்திற்கு. வருவேன் - வந்து சேருவேன். என்பார் - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்வார்.*

*அடுத்து உள்ள 113-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

*''யார் தேவரீருக்கு உறவினராகத் தேவரீர் இந்தக் காளத்தி மலையில் இருப்பது என்று எண்ணி அடியேன் தேவரீரைப் பிரிய முடியாதவனாக இருக்கிறேன்; தேவரீர் பசித்து இருக்க இந்த இடத்தில் நின்று கொண்டிருக்கவும் முடியாதவன் அடியேன்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டுக் கண்களிலிருந்து சொரியும் நீர் வழியச் சென்று*

திரும்பி வரத் தீர்மானம் செய்தவராகி அந்தத் திண்ணனார் தம்முடைய நீளமான வில்லைத் தம்முடைய கையில் எடுத்துக் கொண்டு தம்முடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருக்கரங்களால் காளத்தீசுவரரைக் கும்பிட்டுப் பிறகு தரையில் விழுந்து பணிந்து விட்டுச் சென்றார்.' பாடல் வருமாறு:

" 'ஆர்தம ராக நீரிங் கிருப்பதென் றகல மாட்டேன்;
நீர்பசித் திருக்க இங்கு நிற்கவும் கில்லேன்.' என்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை எடுத்துக் கொண்டு மலர்க்கையால் தொழுது போந்தார்."

ஆர் - யார். தமராக - தேவரீருக்கு உறவினராக. நீர் - தேவரீர். இங்கு - இந்தக் காளத்தி மலையில். இருப்பது - தனியாக இருப்பது. என்று - என எண்ணி. அகலமாட்டேன் - பிரிய முடியாதவனாக இருக்கிறேன். நீர் - தேவரீர். பசித்திருக்க - பசியோடு இருக்க. இங்கு நிற்கவும் - இந்த இடத்தில் நிற்கவும். கில்லேன் - முடியாதவனாகி. என்று - எனத் திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. கண் - தம்முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். சோர்தரு - சொரியும். நீர்வார - நீர்வழிய. ப்: சந்தி. போய் - காளத்தி மலையை விட்டுச் சென்று. வர - மாமிசத்தை எடுத்துக் கொண்டு திரும்பி வர. த்: சந்தி. துணிந்தாராகி - தீர்மானம் செய்தவராகி. வார் - திண்ணனார் தம்முடைய நீளமான. சிலை - வில்லை. எடுத்துக் கொண்டு - தம்முடைய திருக்கரத்தில் எடுத்துக் கொண்டு. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கையால் - தம்முடைய திருக்கரங்களால்; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - காளத்தீசுவரரைக் கும்பிட்டுப் பிறகு தரையில் விழுந்து வணங்கிவிட்டு. போந்தார் - அந்த மலையிலிருந்து சென்றார்.

அடுத்து உள்ள 114-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் காளத்தீசுவரருடைய சந்நிதியிலிருந்து பிரிய முடியாத அருமையோடு அவரை அகன்று அழகு மேவும் காளத்தி மலையிலிருந்து இறங்கி வந்து நாணன் என்னும் வேடன் தமக்குப் பின்னால் வந்து சேர முன்பு இருந்த வேறு துறைகளில் விருப்பம் அகன்று பக்தி தம்மை உந்திக் கொண்டு செலுத்தப் போகும் அந்தத் திண்ணனார் அழகிய பொன்முகலி ஆற்றினுடைய தங்கத்தை அணிந்த கரையின் மேல் ஏறி அன்று அலர்ந்த புதிய மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்களைப் பெற்ற பூஞ்சோலைக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"முன்புநின் றரிதில் நீங்கி மொய்வரை இழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
அன்புகொண் டுய்ப்பச் செல்லும் அவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையில் ஏறிப் புதுமலர்க் காவிற் புக்கார்."

முன்புநின்று - திண்ணனார் காளத்தீசுவரருடைய சந்நிதியிலிருந்து. அரிதில் - அவரைப் பிரிய முடியாத அருமையோடு; உருபு மயக்கம். நீங்கி - அவரைவிட்டு அகன்று. மொய் - அழகு மேவும். வரை - காளத்தி மலையிலிருந்து. இழிந்து - இறங்கி வந்து. நாணன் - நாணன் என்னும் வேடன். பின்பு - தமக்குப் பின்னால். வந்து அணைய - வந்து சேர. முன்னை - முன்பு தம்மிடம் இருந்த. ப்: சந்தி. பிற - வேறு. துறை - துறைகளில்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன விளையாடுதல், ஆடை அணிதல், அணிகலன்களைப் பூணுதல் முதலியவை. வேட்கை - விருப்பம். நீங்கி - அகன்று. அன்பு - பக்தி. கொண்டு - தம்மை உந்திக் கொண்டு. உய்ப்ப - செலுத்த. ச்: சந்தி. செல்லும் - போகும். அவர் - அந்தத் திண்ணனார். திரு - அழகிய. முகலி ஆற்றின் - பொன்முகலியாற்றி னுடைய.

பொன் - அந்த ஆறுகொண்டு வந்து சேர்த்த தங்கத்தை. புனை - அணிந்த. கரையில் - கரையின் மேல்; உருபு மயக்கம். ஏறி - ஏறிச் சென்று. ப்: சந்தி. புது - அன்று அலர்ந்த புதிய. மலர் - மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. காவில் - பூஞ்சோலைக்குள். புக்கார் - நுழைந்தார்.

*பிறகு வரும் 115-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

'காடன் என்னும் வேடனும் திண்ணனாருக்கு எதிரில் போய் அவரை வணங்கிவிட்டு, "நான் நெருப்பைக் கடைந்து வைத்திருக்கிறேன்; கொம்புகளைக் கொண்ட காட்டுப் பன்றியினுடைய அங்கங்கள் எல்லாவற்றையும் உங்களுடைய எண்ணத்தின்படி பக்கத்தில் இருக்க அவற்றைச் சரி பார்த்துக் கொள்ளுங்கள்; மீண்டும் நாம் நம்முடைய வீடுகளுக்குச் செல்வதற்கு இன்றைய நெடுநேரம் நீங்கள் தாமதம் செய்தது ஏனோ?" என்று கூறியவுடன் அவ்விடத்தில் நின்று கொண்டிருந்த நாணன் என்னும் வேடன்.' பாடல் வருமாறு:

> "காடனும் எதிரே சென்று தொழுது, 'தீக்கடைந்து வைத்தேன்;
> கோடுடை ஏனம் உங்கள் குறிப்படி உறுப்பை எல்லாம்
> மாடுற நோக்கிக் கொள்ளும்; மறித்துநாம் போகைக் கின்று
> நீடநீர் தாழ்த்த தென்னோ?' என்றலும் நின்ற நாணன்."

இந்தப் பாடல் குளகம். காடனும் - காடன் என்னும் வேடனும். எதிர் - திண்ணனாருக்கு எதிரில். ஏ: அசைநிலை. சென்று - போய். தொழுது - அவரை வணங்கிவிட்டு. தீ - நெருப்பை. க்: சந்தி. கடைந்து - தீக்கடை கோலினால் கடைந்து. வைத்தேன் - நான் வைத்திருக்கிறேன். கோடு - கொம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். உடை - பெற்ற. ஏனம் - அந்தக் காட்டுப் பன்றியினுடைய உடலை; ஆகு

பெயர். உ.ங்கள் - உங்களுடைய. குறிப்படி - குறித்த எண்ணத்தின் படியே. உறுப்பை எல்லாம் - அதனுடைய அங்கங்கள் எல்லாவற்றையும். உறுப்பை: ஒருமை பன்மை மயக்கம். மாடு - உங்களுடைய பக்கத்தில். உற - இருக்க. நோக்கிக் கொள்ளும் - அவற்றைச் சரி பார்த்துக் கொள்ளுங்கள். மறித்து - மீண்டு. நாம் - யாம். போகைக்கு - நம்முடைய வீடுகளுக்குச் செல்வதற்கு. இன்று - இன்றைக்கு. நீட - நெடு நேரமாக. நீர் - நீங்கள். தாழ்த்தது - தாமதம் செய்தது. என்னோ - ஏனோ. என்றலும் - என்று காடன் என்னும் வேடன் கேட்டவுடன். நின்ற - அங்கே நின்று கொண்டிருந்த. நாணன் - நாணன் என்னும் வேடன்.

பிறகு உள்ள 116-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'''அந்த இடத்தில் இந்தத் திண்ணன் காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் குடுமித் தேவரைப் பார்த்து அவரைத் தழுவிக்கொண்டு, தன்னுடைய வளையைப் பிடித்துக் கொண்டு வெளியில் போகாத வலிமையைப் பெற்ற உடும்பு என்று கூறுமாறு அந்த நிலையிலிருந்து இவன் அகல வில்லை; இந்த இடத்திற்கும் அந்தக் குடுமித் தேவர் உண்ணும் பொருட்டு மாமிசத்தை எடுத்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறான்; நம்முடைய சாதியின் தலைமைப் பதவியை இவன்விட்டு விட்டான்; அந்தக் குடுமித் தேவருக்கு நல்லவன் ஆகிவிட்டான்'' என்று நாணன் என்னும் வேடன் காடன் என்னும் வேடனிடம் கூறினான்.' பாடல் வருமாறு:

''அங்கிவன் மலையில் தேவர் தம்மைக்கண் டணைத்துக்
கொண்டு
வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான்;
இங்கும்அத் தேவர் தின்ன இறைச்சிகொண் டேகப் போந்தான்;
நம்குலத் தலைமை விட்டான்; நலப்பட்டான் தேவர்க்' கென்றான்."

அங்கு - அந்த இடத்தில். இவன் - திண்ணனாகிய இவன். மலையில் - காளத்தி மலையில் எழுந்தருளி யிருக்கும். தேவர் தம்மை - குடுமித்தேவரை. தம்: அசை நிலை. க்: சந்தி. கண்டு - பார்த்து. அணைத்துக் கொண்டு - கட்டித் தழுவிக் கொண்டு. வங்கினை - தன்னுடைய வளையை. 'ஒரு மரப் பொந்தை' எனலும் ஆம். ப்: சந்தி. பற்றி - பிடித்துக் கொண்டு. ப்: சந்தி. போதா - எவ்வளவு இழுத்தாலும் வராத. வல் - வலிமையைப் பெற்ற. உடும்பு என்ன - உடும்பு என்று சொல்லும் வண்ணம். ''உடும்புப்பிடி'' என்பது வழக்கு. காடன் என்னும் வேடன் தன்னுடைய சாதிக்கு ஏற்ற உவமையைக் கூறினான். நீங்கான் - அந்த நிலையிலிருந்து இவன் அகலவில்லை. இங்கும் - இந்த இடத்திலும். அத்தேவர் - அந்தக் குடுமித் தேவர். தின்ன - உண்ணும் பொருட்டு. இறைச்சி - மாமிசத்தை. கொண்டு - எடுத்துக் கொண்டு. ஏக - போவதற்காக. ப்: சந்தி. போந்தான் - வந்திருக்கிறான். நம் - நம்முடைய. குல - வேட்டுவச் சாதியினுடைய. த்: சந்தி. தலைமை - தலைமைப் பதவியை. விட்டான் - விட்டு விட்டான். தேவர்க்கு - அந்தக் குடுமித் தேவருக்கு. நலப்பட்டான் - நல்லவன் ஆகி விட்டான். என்றுான் - என்று நாணன் என்னும் வேடன் காடன் என்னும் வேடனிடம் கூறினான்.

பிறகு வரும் 117-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

' ''திண்ணனே, நீ என்ன செய்து விட்டாய்? நீதான் என்ன பைத்தியத்தைக் கொண்டாய்? எங்களுக்கு முன்னால் பெரிய தலைவன் நீ அல்லவோ?'' என்று நாணன் என்னும் வேடன் கேட்க, திண்ணனார் அவனுடைய முகத்தைப் பாராதவராகி வலிமையான பெரிய காட்டுப் பன்றியினுடைய உடலை நெருப்பில் வாட்டி மிகுதியாக உள்ள இனிய சுவையைப் பெற்ற மாமிசத் துண்டுகளை

வேறு வேறாகத் தம்முடைய அம்பினால் நெருப்பிலிருந்து இழுத்துக் கொண்டு.' பாடல் வருமாறு:

"'என்செய்தாய் திண்ணா? நீதான் என்னமால் கொண்டாய்? எங்கள்
முன்பெரு முதலி அல்லை யோ?'என முகத்தை நோக்கார்
வன்பெரும் பன்றி தன்னை எரியினில் வதக்கி மிக்க
இன்புறு தசைகள் வெவ்வே றம்பினால் ஈர்ந்து கொண்டு."

இந்தப் பாடல் குளகம். திண்ணா - திண்ணனே. என் - நீ என்ன. செய்தாய் - செய்து விட்டாய். நீதான் என்னமால் - நீதான் என்ன பைத்தியத்தை. கொண்டாய் - அடைந்தாய். எங்கள் - எங்களுடைய. முன் - முன்னால். பெரு - பெருமையைப் பெற்ற. முதலி - தலைவன். அல்லையோ - நீ அல்லவோ? என - என்று நாணன் என்னும் வேடன் கேட்க; இடைக்குறை. முகத்தை - அவனுடைய முகத்தை. நோக்கார் - திண்ணனார் பாராதவராகி; முற்றெச்சம். வன் - வலிமையைப் பெற்ற. பெரும் - பெரிய. பன்றி தன்னை - அந்தக் காட்டுப் பன்றியினுடைய உடலை; ஆகுபெயர். தன்: அசைநிலை. எரியினில் - நெருப்பில் இட்டு. வதக்கி - வாட்டி. மிக்க - மிகுதியாக உள்ள. இன்புறு - இனிய சுவையைப் பெற்ற. தசைகள் - மாமிசத் துண்டுகளை. வெவ்வேறு - வேறு வேறாக. அம்பினால் - தம்முடைய அம்பால். ஈர்ந்து - நெருப்பிலிருந்து இழுத்து. கொண்டு - அவற்றை எடுத்துக் கொண்டு.

பிறகு வரும் 118-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் ஓர் அம்பில் அந்த மாமிசத் துண்டுகளைக் கோத்து நெருப்பில் வாட்டிக் கொழுப்பைப் பெற்ற அந்த மாமிசத் துண்டுகள் பதத்தோடு வேக, அவற்றினுடைய சிறந்த சுவையை முன்னால் தெரிந்து கொள்ளும் பொருட்டு

அவற்றைத் தம்முடைய திருவாயில் இட்டுக் கடித்துப் பார்த்து மிகவும் இனிய சுவையைப் பெற்ற மாமிசத் துண்டுகள் எல்லாவற்றையும் சருகாகிய இலைகளைச் சேர்த்துத் தைத்த ஒரு தொன்னையைப் பொருத்தமாக அமைத்துச் சேருமாறு அந்தத் துண்டுகளை அந்தத் தொன்னைக்குள் வைப்பவர் ஆயினார்.' பாடல் வருமாறு:

"கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான் வாயினில் அதுக்கிப் பார்த்துச்
சாலவும் இனிய எல்லாம் சருகிலை இணைத்த கல்லை
ஏலவே கோலிக் கூட அதன்மிசை இடுவார் ஆனார்."

கோலினில் - திண்ணனார் ஓர் அம்பில். கோத்து - அந்த மாமிசத் துண்டுகளைக் கோத்து. க்: சந்தி. காய்ச்சி - நெருப்பில் வாட்டி. க்: சந்தி. கொழும் - கொழுப்பைப் பெற்றிருக்கும். தசை - அந்த மாசிசத் துண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். பதத்தில் - பக்குவமாக. வேவ - வேக. வாலிய - அவற்றினுடைய சிறந்த. சுவை - சுவையை. முன் - முன்னால். காண்பான் - தெரிந்து கொள்ளும் பொருட்டு. வாயினில் - தம்முடைய திருவாயில். அதுக்கிப் பார்த்து - இட்டுக் கடித்துப் பார்த்து. ச்: சந்தி. சாலவும் - மிகவும். இனிய - இனிய சுவையைப் பெற்ற மாமிசத் துண்டுகள். எல்லாம் - எல்லாவற்றையும். சருகு இலை - இலைச் சருகுகளை; ஒருமை பன்மை மயக்கம். சருரு - உலர்ந்த இலை. இணைத்த - சேர்த்துத் தைத்த. கல்லை - ஒரு தொன்னையை. ஏல - பொருத்தமாக. ஏ: அசைநிலை. கோலி - அமைத்து. க்: சந்தி. கூட - சேருமாறு. அதன்மிசை - அந்த தொன்னைக்குள். 'மிசை' என்பது 'மேல்' என்று பொருளை உடையதாயினும் இங்கே உள்ளே என்று பொருள் கொள்ள வேண்டும். இடுவார் - அந்தத் துண்டுகளை வைப்பவர். ஆனார் - ஆயினார்.

பிறகு உள்ள 119-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'திண்ணனாருடைய பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்களாகிய நாணன் என்னும் வேடனும், காடன் என்னும் வேடனும் பிறகும், "பைத்தியம் மிகுதியாக முதிர்ச்சியை இவன் அடைந்தான்; என்ன காரணமோ? அருமையாகப் பெறுவதற்குரிய மாமிசத்தை நெருப்பில் வாட்டித் தன்னுடைய வாயில் இட்டுக் கடித்துப் பார்த்து வேறு வேறாக வாயிலிருந்து உமிழ்கிறான்; பெரிய பசியை உடையவன் ஆனாலும் இவன் ஒரு பேச்சையும் பேசுவது இல்லை; எங்களுக்கும் உரிய பங்குகளைக் கொடுக்கும் இயல்பை இவன் தெரிந்து கொள்ளவில்லை; இனிய சுவை இல்லாத வேறு மாமிசத் துண்டுகளை வெளியில் எறிகிறான்.' பாடல் வருமாறு:

"மருங்குநின் றவர்கள் பின்னும், 'மயல் மிகமுதிர்ந்தான் என்னே?
அரும்பெறல் இறைச்சி காய்ச்சி அதுக்கிவே றுமிழா நின்றான்;
பெரும்பசி உடைய னேனும் பேச்சிலன்; எமக்கும் பேறு
தரும்பரி சுணரான்; மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான்."

மருங்கு - திண்ணனாருடைய பக்கத்தில். நின்றவர்கள் - நின்று கொண்டிருந்தவர்களாகிய நாணன் என்னும் வேடனும் காடன் என்னும் வேடனும். பின்னும் - பிறகும். மயல் - பைத்தியம். மிக - மிகுதியாக. முதிர்ந்தான் - முதிர்ச்சியை இவன் அடைந்தான். 'இவனுக்குப் பைத்தியம் முற்றிவிட்டது' என்பது கருத்து. என் - இதற்கு என்ன காரணம்? ஏ: அசைநிலை. அரும்பெறல் - அருமையாகப் பெறுவதற்குரிய. இறைச்சி - மாமிசத்தை. காய்ச்சி - நெருப்பில் வாட்டி. அதுக்கி - அதைத் தன்னுடைய வாயில் இட்டுக் கடித்துப் பார்த்து. வேறு - வேறு வேறாக. உமிழா நின்றான் - வாயிலிருந்து உமிழ்கிறான். பெரும் - பெரிய. பசி

- பசியை. உடைய னேனும் - இவன் உடையவன் ஆனாலும். பேச்சு இலன் - ஒரு வார்த்தையையும் பேசுவது இல்லை. எமக்கும் - எங்கள் இருவருக்கும். பேறு - உரிய பங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். தரும் - அளிக்கும். பரிசு - இயல்பை. உணரான் - இவன் தெரிந்து கொள்ளவில்லை. மற்றை - இனிய சுவை இல்லாத வேறு. த்: சந்தி. தசை - மாமிசத் துண்டுகளை; ஒருமை பன்மை மயக்கம். புறத்து - வெளியில். எறியா நின்றான் - எறிகிறான்.

அடுத்து வரும் 120-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

' ''இந்தத் திண்ணன் குடுமித் தேவரிடம் பைத்தியத்தைக் கொண்டு விட்டான்; இந்தப் பைத்தியத்தைப் போக்குவதற்கு ஆகிய பரிகாரம் ஒன்றையும் யாம் தெரிந்து கொண்டிருக்கவில்லை; பூசாரிச்சியாகிய தேவராட்டியை இவனுடைய தந்தையாகிய நாகனுடன் சென்று நாம் அவளை அழைத்துக் கொண்டு வந்து இந்தப் பைத்தியத்தைப் போக்க வேண்டும்; அதற்காக வேட்டையாடும் அந்தக் காட்டிற்கு வேலை ஆட்களையும் அழைத்துக் கொண்டு செல்வோம்'' என்று நினைத்து அந்த நாணன் என்னும் வேடனும், காடன் என்னும் வேடனும் சென்றார்கள்.' பாடல் வருமாறு:

"தேவுமால் கொண்டான் இந்தத் திண்ணன் மற்றிதனைத் தீர்க்கல்
ஆவதொன் றறியோம்; தேவ ராட்டியை நாக னோடு
மேவிநாம் கொணர்ந்து தீர்க்க வேண்டும்; அவ்வேட்டைக் கானில்
ஏவல்ஆட் களையும் கொண்டு போதும்'என் றெண்ணிப் போனார்."

இந்தத் திண்ணன் - இந்தத் திண்ணனாகிய நம்முடைய தலைவன். தேவு - குடுமித் தேவரிடம். மால் - பைத்தியத்தை. கொண்டான் - கொண்டு விட்டான். மற்று: அசை நிலை. இதனை - இந்தப் பைத்தியத்தை. த்: சந்தி. தீர்க்கல் - போக்கு வதற்கு. ஆவது - ஆகிய பரிகாரம். ஒன்று - ஒன்றையும். அறியோம் - யாம் தெரிந்து கொண்டிருக்கவில்லை. தேவராட்டியை - பூசாரிச்சியாகிய தேவராட்டியை. தேவராட்டி - தெய்வ ஆவேசம் வந்து ஆடுகிற பெண்மணி. நாகனோடு - இவனுடைய தந்தையாகிய நாகனுடன். மேவி - சென்று. நாம் - நாம் இருவரும். கொணர்ந்து - அழைத்துக் கொண்டு வந்து. தீர்க்க வேண்டும் - இந்தப் பைத்தியத்தைப் போக்க வேண்டும். அவ்வேட்டைக்கானில் - வேட்டையாடும் அந்தக் காட்டிற்கு; உருபு மயக்கம். ஏவல் ஆட்களையும் - பணிபுரியும் வேலைக்காரர்களையும். கொண்டு - அழைத்துக்கொண்டு. போதும் - நாம் இருவரும் செல்வோம். என்று - என. எண்ணி - நினைத்து. ப்: சந்தி. போனார் - அந்த நாணன் என்னும் வேடனும் காடன் என்னும் வேடனும் சென்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 121-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் காட்டில் வாழும் வேடர்களாகிய நாணனும் காடனும் அவ்வாறு சென்றதைப் பார்க்க வில்லை; வேகத்தோடு தொன்னைக்குள் மாமிசமாகிய உணவை வைத்துக் கொண்டு குடுமித்தேவருக்கு அபிடேகம் செய்ய எண்ணிப் பெருமையைப் பெற்ற பொன்முகலியாற்றில் ஓடும் நல்ல நீரைத் தம்முடைய தூய்மையான திருவாயில் பெய்து எடுத்துக் கொண்டு தாம் பறித்த தூய நறுமணம் கமழும் திருப்பள்ளித் தாமத்தைத் தம்முடைய தலைமயிரில் பொருந்துமாறு வைத்துக் கொண்டார்.' பாடல் வருமாறு:

"கானவர் போன தோரார்; கடிதினில் கல்லை யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சனம் ஆட்ட உன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு கொய்த
தூநறும் பள்ளித் தாமம் குஞ்சிமேல் துதையக் கொண்டார்."

கானவர் - திண்ணனார் காட்டில் வாழும் வேடர்களாகிய நாணனும் காடனும்; ஒருமை பன்மை மயக்கம். போனது - அவ்வாறு சென்றதை. ஓரார் - கவனிக்கவில்லை.. கடிதினில் - வேகத்தோடு; உருபு மயக்கம். கல்லையின் கண் - தொன்னைக்குள். ஊன் - மாமிசமாகிய. அமுது - உணவை. அமைத்துக்கொண்டு - வைத்துக்கொண்டு. மஞ்சனம் - அபிடேகம். ஆட்ட - குடுமித்தேவருக்குச் செய்ய. உன்னி - எண்ணி. மா - பெருமையைப் பெற்ற. நதி - பொன் முகலி ஆற்றில் ஓடும். நல் - நல்ல. நீர் - நீரை. தூய - தம்முடைய தூயதாகிய. வாயினில் - திருவாயில். கொண்டு - பெய்து எடுத்துக் கொண்டு. கொய்த - தாம் பறித்த. தூ - தூய. நறும் - நறுமணம் கமழும். பள்ளித் தாமம் - திருப்பள்ளி யெழுச்சியின்போது காளஹஸ்தீசுவரருக்கு அணியும் மாலையை. குஞ்சிமேல் - தம்முடைய தலைமயிரின் மேல். துதைய - பொருந்துமாறு. க்: சந்தி. கொண்டார் - வைத்துக் கொண்டார்.

பின்பு வரும் 122-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனார் வில்லைக் கொடுமையான அம்போடு ஒரு கையில் பிடித்துக்கொண்டு, தொன்னைக்குள் வைத்திருக்கும் தூய மெல்லிய மாமிசமாகிய நல்ல விருந்துணவை மற்றொரு கையில் எடுத்துக்கொண்டு, "இனியவராகிய எம்முடைய தலைவராகிய குடுமித் தேவர் மிகவும் பசியோடு இருப்பார்" என இரக்கத்தை அடைந்து, ஏக்கத்தைப் பெற்று மிகவும் வேகமாகச் சென்று இறைவராகிய காளஹஸ்தீசுவரர் திருக்கோயில் கொண்டு

எழுந்தருளியிருக்கும் காளத்தி மலையை அடைந்தார்.' பாடல் வருமாறு:

> ''தனுஒரு கையில் வெய்ய சரத்துடன் தாங்கிக் கல்லைப்
> புனிதமெல் இறைச்சி நல்ல போனகம் ஒருகை ஏந்தி
> 'இனியஎம் பிரானார் சாலப் பசிப்பர்.' என்றிரங்கி ஏங்கி
> நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினார் திண்ண னார்தாம்.''

இந்தப் பாடல் விற்பூட்டுப் பொருள் கோள் அமைந்தது. திண்ணனார்தாம் - திண்ணனார். தாம்: ஈற்றசை நிலை. தனு - வில்லை. ஒரு கையில் - ஒப்பற்ற தம்முடைய இடக்கையில். வெய்ய - கொடிய. சரத்துடன் - அம்போடு. தாங்கி - எடுத்துக் கொண்டு. க்: சந்தி. கல்லை - தொன்னைக்குள் வைத்திருக்கும். ப்: சந்தி. புனித - தூய. மெல் - மெல்லிய. இறைச்சி - மாமிசமாகிய. நல்ல - இனிய சுவையைப் பெற்ற நல்ல. போனகம் - விருந்துணவை. ஒரு - ஒப்பற்ற. கை - தம்முடைய வலக்கையில். ஏந்தி - எடுத்துக் கொண்டு. இனிய - இனியவராகிய; வினையாலணையும் பெயர். எம் - எம்முடைய. பிரானார் - தலைவராகிய குடுமித்தேவர். சால - மிகவும். ப்: சந்தி. பசிப்பர் - பசியோடு இருப்பார். என்று - என. இரங்கி - இரக்கத்தை அடைந்து. ஏங்கி - ஏக்கத்தைப் பெற்று. நனி - மிகவும். விரைந்து - வேகமாகச் சென்று. இறைவர் - எங்கும் நிறைந்திருப்பவராகிய காளத்தீசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். வெற்பை - காளத்தி மலையை. நண்ணினார் - அடைந்தார்.

பின்பு உள்ள 123-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார், ''நம்முடைய தலைவராகிய குடுமித் தேவர் களைத்துப் போய்விட்டார்'' என்று எண்ணி வேகமாகப் போய் அடைந்து காளத்தி மலையில் முளைத்து

எழுந்த எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய காளஹஸ்தீசுவரரைப் பார்த்துத் தம்முடைய தலையின் மேல் செருகிக் கொண்டிருந்த மலர்களைத் தம்முடைய காலில் வளைவாக அணிந்திருந்த பொலிவை உடைய செருப்பினால் தள்ளி விட்டுத் தம்முடைய திருவாயில் பெய்து கொண்டு வந்திருந்த அபிடேக நீரை விளையச் செய்த பக்தியை உமிழ்பவரைப் போல மலங்கள் அற்றவராகிய காளஹஸ்தீசு வரருடைய திருமுடியின் மேல் உமிழ்ந்தார்.' பாடல் வருமாறு:

"இளைத்தனர் நாயனாரென் றீண்டச் சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொற் செருப்பால் மாற்றி வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தஅன் புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார்."

நாயனார் - திண்ணனார் தம்முடைய தலைவராகிய குடுமித்தேவர். இளைத்தனர் : களைத்துப் போய்விட்டார். என்று - என எண்ணி. ஈண்ட - வேகமாக. ச்: சந்தி. சென்று - போய். எய்தி - அடைந்து. வெற்பின் - காளத்தி மலையில். முளைத்து எழு - முளைத்து எழுந்த; "முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி." என்று திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியதைக் காண்க. முதலை - எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய காளஹஸ்தீசுவரரை. க்: சந்தி. கண்டு - பார்த்து. முடிமிசை - அவருடைய திருமுடியின் மேல் இருந்த. மலரை - மலர்களை; இவை சிவகோசரியார் அருச்சித்தவை. க்: சந்தி. காலில் - தம்முடைய திருவடியில். வளைத்த - வளைவாக அணிந்திருந்த. பொன் - பொலிவை உடைய. செருப்பால் - செருப்பினால். மாற்றி - தள்ளிவிட்டு. வாயில் - தம்முடைய திருவாயில் பெய்து கொண்டு வந்திருந்த. மஞ்சன - அபிடேகத்துக்குரிய. நீர் தன்னை - பொன்முகலி

ஆற்றிலிருந்து கொண்டு வந்திருந்த நீரை. தன்: அசைநிலை. விளைத்த - விளையச் செய்த. அன்பு - பக்தியை. உமிழ்வார் போல - உமிழ்பவரைப் போல. விமலனார் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களிலிருந்து இயல்பாகவே நீங்கியுள்ள காளஹஸ்தீசுவரருடைய. ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' என்று நன்னூலில் வருவதைக் காண்க. முடிமேல் - திருமுடியின் மீது. விட்டார் - உமிழ்ந்தார்.

அடுத்து உள்ள 124-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'தம்முடைய தலையின் மேல் சுமந்து கொண்டு வந்திருந்த திருப்பள்ளித் தாமத்தை விசாலமாகிய காளஹஸ்தி மலையின்மேல் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தம்முடைய தலைவராகிய காளஹஸ்தீசுவரருடைய திருமுடிமேல் வளைந்து கொண்டு அணிந்து தம்முடைய வில்லின்மேல் விளங்கிய செந்தாமரை மலரைப் போன்ற கையைப் பெற்ற திண்ணனார் கொண்டு வந்து வைத்த சருகிலைகளைத் தைத்த தொன்னைக்குள் வைத்திருந்த மாமிசமாகிய அழகிய உணவைக் காளஹஸ்தீசுவரருக்கு எதிரில் வைத்து விட்டு.' பாடல் வருமாறு:

> "தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தடங்கா ளத்தி
> மலைமிசைத் தம்பி ரானார் முடிமிசை வணங்கிச் சாத்திச்
> சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனார் சேர்த்த கல்லை
> இலைமிசைப் படைத்த ஊனின் திருவமு தெதிரே வைத்து."

இந்தப் பாடல் குளகம். தலைமிசை - தம்முடைய தலைமயிரின் மேல்; ஆகுபெயர். ச்: சந்தி. சுமந்த - சுமந்து கொண்டு வந்திருந்த; மலர்கள் மிகுதியாக இருந்தமை யால்; 'சுமந்த' என்றார். ''சாய்க் காட்டெம்பெருமாற்கே, பூநாளும் தலை சுமப்ப.'' என வருதலைக் காண்க. பள்ளித் தாமத்தை - திருப்பள்ளி எழுச்சியின் போது அணியும் மாலையை. த்:

சந்தி. தடம் - விசாலமான. காளத்திமலை மிசை - காளஹஸ்தி மலையின் மீது திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். த்: சந்தி. தம் - தம்முடைய. பிரானார் - தலைவராகிய காளஹஸ்தீசுவரருடைய. முடிமிசை - திருமுடியின் மேல். வணங்கி - தம்முடைய திருமேனியை வளைத்துக் கொண்டு. ச்: சந்தி. சாத்தி - அணிந்து. ச்: சந்தி. சிலை - மிசை - தம்முடைய வில்லின் மேல். ப்: சந்தி. பொலிந்த - விளங்கிய. செம் - செந்தாமரை மலரைப் போலச் சிவந்த. கை - திருக்கரத்தைப் பெற்ற. த்: சந்தி. திண்ணனார் சேர்த்த - திண்ணனார் கொண்டு வந்து வைத்த. கல்லை இலைமிசை - சருகிலைகளைத் தைத்துச் செய்த தொன்னைக்குள். இலை: ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. படைத்த - வைத்திருந்த. ஊனின் - மாமிசமாகிய. இன்: வேண்டாவழி வந்த சாரியை. திரு - இனி சுவையைப் பெற்ற அழகிய. அமுது - உணவை. எதிர் - காளஹஸ்தீசுவரருக்கு எதிரில். ஏ: அசைநிலை. வைத்து - வைத்துவிட்டு.

சுமந்த மலர்கள்: ''பூவொடு நீர் சுமந்தேத்தி.'' என்று திருமூலரும் பாடியருளியதைக் காண்க.

பிறகு வரும் 125-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கொழுப்பைப் பெற்ற மாமிசத் துண்டங்கள் எல்லாவற்றையும் அம்பினால் ஆராய்ந்து பார்த்து அதில் கோத்துக் கொண்டு அவ்விடத்தில் நெருப்பில் தக்க பக்குவம் உண்டாகுமாறு வாட்டி அவற்றைத் தம்முடைய பற்களால் கடித்துத் தம்முடைய நாக்கினால் அவற்றில் அமைந்த இனிய சுவை பெற்ற தன்மையை அறிந்து கொண்டு, ''அடியேன் படைத்த இந்த மாமிசம் மிக்வும் அழகானது; அடியேனுடைய தலைவரே, இத்னை அமுது செய்து அருளுங்கள்'' என்று திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"'கொழுவிய தசைகள் எல்லாம் கோலினில் தெரிந்து கோத்துங்
கழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி நாவில்
பழகிய இனிமை பார்த்துப் 'படைத்தஇவ் விறைச்சி சால
அழகிது நாய னீரே, அமுதுசெய் தருளும்' என்றார்."

கொழுவிய - கொழுப்பைப் பெற்ற. தசைகள் - மாமிசத் துண்டங்கள். எல்லாம் - எல்லாவற்றையும். கோலினில் - ஓர் அம்பினால்; உருபு மயக்கம். தெரிந்து - ஆராய்ந்து பார்த்து. கோத்து - அந்த அம்பில் கோத்துக் கொண்டு. அங்கு - அந்த இடத்தில். அழல் - நெருப்பில். உறு - தக்க. பதத்தில் - பக்குவம் உண்டாகுமாறு. காய்ச்சி - வாட்டி. ப்: சந்தி. பல்லினால் - தம்முடைய பற்களால்; ஒருமை பன்மை மயக்கம். அதுக்கி - கடித்து. நாவில் - தம்முடைய நாக்கினால்; உருபு மயக்கம். பழகிய - அவற்றில் அமைந்த. இனிமை - இனிய சுவையாகிய தன்மையை. பார்த்து - அறிந்து கொண்டு. ப்: சந்தி. படைத்த - அடியேன் தேவரீருக்கு முன் படைத்த. இவ்விறைச்சி - இந்த மாமிசம். சால - மிகவும். அழகிது - அழகை உடையது. நாயனீரே - அடியேனுடைய தலைவராகிய குடுமித்தேவரே. அமுது செய்தருளும் - இதை அமுது செய்தருளுங்கள். என்றார் - என்று திண்ணனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு உள்ள 126-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அத்தகைய இந்த வார்த்தைகளைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து காளஹஸ்தீசுவரருக்குத் திருவமுது படைத்து உண்ணச் செய்த வேடர்களுக்கு அரசராகிய திண்ணனார், ''அழகிய காளத்தி மலையை உடைய குடுமித் தேவருக்கு இனிய சுவையைக் கொண்ட நல்ல மாமிசத்தை இனிமேலும் படைக்க வேண்டும்'' என்னும் எழுந்த பெரிய விருப்பத்தைப் பார்த்துத் தன்னுடைய பல நீண்ட கிரணங்களைச் சுருக்கிக் கொண்டு, பகலைச் செய்யும் சூரியன் அத்தமன மலையில் இறங்கி அத்தமனம் ஆனான்.' பாடல் வருமாறு:

"அன்னஇம் மொழிகள் சொல்லி அமுது செய்வித்த வேடர்
மன்னனார், 'திருக்கா ளத்தி மலையினார்க் கினிய நல்லூன்
இன்னமும் வேண்டும்' என்னும் எழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையில் தாழ்ந்தான்."

அன்ன - அத்தகைய. இம்மொழிகள் - இந்த வார்த்தைகளை. சொல்லி - திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. அமுது செய்வித்த - காளஹஸ்தீசுவரருக்குத் திருவமுதைப் படைத்து உண்ணச் செய்த. வேடர் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். மன்னனார் - அரசராகிய திண்ணனார். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலையினார்க்கு - காளஹஸ்தி மலையை உடையவராகிய குடுமித் தேவருக்கு. இனிய - இனிய சுவையைப் பெற்ற. நல் - நல்ல. ஊன் - மாமிசத்தை. இன்னமும் - இதற்கு மேலும். வேண்டும் - நாம் படைக்க வேண்டும். என்னும் - என. எழு - திண்ணனாருடைய உள்ளத்தில் எழுந்த. பெரும் - பெரிய. காதல் - விருப்பத்தை. கண்டு - பார்த்து. பல் - பல. நெடும் - நீளமாக இருக்கும். கரங்கள் - கிரணங்களை. கூப்பி - சுருக்கிக்கொண்டு. ப்: சந்தி. பகலவன் - பகல் வேளையைச் செய்யும் சூரியன்; "பகற் செய்யும் செஞ்ஞாயிறும்" என வருவதைக் காண்க. மலையில் - அத்தமன கிரியில். தாழ்ந்தான் - இறங்கி அத்த மனம் ஆனான்.

பின்பு உள்ள 127-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு செவ்வந்தி நேரமாகிய மாலை வேளை வந்தவுடன், "இனி இராத்திரி வந்துவிடும்; கொடிய மிருகங்கள் இங்கே இருக்கின்றன" எனத் திண்ணனார் அச்சத்தை அடைந்து உண்மையில் வேறு எந்த வேலையையும் மேற்கொள்ளாதவராகி, செவ்வையாகிய பக்தி ஒன்றையே தாங்கிக் கொண்டு தம்முடைய அழகிய கரத்தில் வில்லையும் எடுத்துக் கொண்டு மையைப் போன்ற

கரியமலை என்று கூறும் வண்ணம் ஐயராகிய காளஹஸ்தீசுவரருடைய பக்கத்திலிருந்து திண்ணனார் போகாமல் நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"அவ்வழி அந்தி மாலை அணைதலும், 'இரவு சேரும்;
வெவ்விலங் குள'என் றஞ்சி மெய்ம்மையின் வேறு கொள்ளார்;
செவ்விய அன்பு தாங்கித் திருக்கையில் சிலையும் தாங்கி
மைவரை என்ன ஐயர் மருங்குநின் றகலா நின்றார்."

அவ்வழி - அவ்வாறு. அந்தி - செவ்வந்தி நேரமாகிய. மாலை - மாலை வேளை. அணைதலும் - வந்தவுடன். இரவு - இனிமேல் இராத்திரி. சேரும் - வந்துவிடும். வெவ் - கொடிய. விலங்கு - மிருகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். உள - இந்தக் காட்டில் இருக்கின்றன. என்று - என. அஞ்சி - அச்சத்தை அடைந்து. மெய்ம்மையின் - உண்மையில். வேறு - வேறு எந்த வேலையையும். கொள்ளார் - மேற்கொள்ளாதவராகி; முற்றெச்சம். செவ்விய - செவ்வையாகிய. அன்பு - பக்தி ஒன்றையே. தாங்கி - தம்முடைய உள்ளத்தில் தாங்கிக் கொண்டு. த்: சந்தி. திரு - அழகிய. க்: சந்தி. கையில் - தம்முடைய இடக்கரத்தில். சிலையும் - வில்லையும். தாங்கி - பிடித்துக்கொண்டு. மை - மையைப் போன்ற. வரை - கரிய மலை. என்ன - என்று கூறும் வண்ணம். ஐயர் - ஐயராகிய காளஹஸ்தீசுவரருக்கு. மருங்கு நின்று - பக்கத்திலிருந்து. அகலா - போகாமல். நின்றார் - திண்ணனார் நின்று கொண்டு இருந்தார்.

பின்பு வரும் 128-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அடைவதற்கு அருமையாக இருக்கும் தவங்களைப் புரிந்து முனிவர்களும் தேவர்களும் கருமையான மலையிலும், காட்டிலும், அடைந்தும் பார்ப்பதற்கு அரியவராகிய காளஹஸ்தீசுவரரைப் பேராவல் முன்னால் பெருகி எழ திருப்தியடையாத பக்தியோடு தரிசித்துக்

கொண்டு நேரில் அமையப் பார்த்துக் கொண்டு நெடுங்காலமாக உள்ள அக இருளாகிய அறியாமை போகுமாறு நிலைத்து நின்றவராகிய திண்ணனார் நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"சார்வரும் தவங்கள் செய்து முனிவரும் அமரர் தாமும்
கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற் கரியார் தம்மை
ஆர்வம்முன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டு
நேர்பெற நோக்கி நின்றார், நீளிருள் நீங்க நின்றார்."

சார்வு - அடைவதற்கு. அரும் - அருமையாக இருக்கும். தவங்கள் - தவங்களை. செய்து - புரிந்து. முனிவரும் - முனிவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அமரர்தாமும் - தேவர்களும். தாம்: அசைநிலை. கார் - கருமையான; 'மேகங்கள் தவழும்' எனலும் ஆம்; கார்: ஒருமை பன்மை மயக்கம். வரை - மலையையும். அடவி - காட்டையும். சேர்ந்தும் - அந்தத் தவங்களைப் புரிவதற்காக அடைந்தும். காணுதற்கு - பார்ப்பதற்கு. அரியார் தம்மை - அரியவராகிய காளஹஸ்தீசுவரரை. தம்: அசை நிலை. ஆர்வம் - பேராவல். முன் - முன்னால். பெருக - பெருகி எழ. ஆரா - திருப்தியடையாத. 'குறையாத' எனலும் ஆம். அன்பினில் - பக்தியோடு; உருபு மயக்கம். கண்டுகொண்டு - தரிசித்துக்கொண்டு. நேர் - நேரில். பெற - அமைய. நோக்கி - பார்த்துக் கொண்டு. நீள் - நெடுங்கால மாக உள்ள. இருள் - அக இருளாகிய அறியாமை. நீங்க - போகுமாறு. நின்றார் - நிலைத்து நின்றவராகிய திண்ணனார். நின்றார் - நின்று கொண்டிருந்தார்.

அடுத்து வரும் 129-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'மூங்கில்கள் உதிர்க்கும் முத்துக்கள் மலையைப் போலக் குவிந்த குவியலில் ஒளியை வீசும் நிலா ஒரு பக்கம்

பொங்கி எழ, குகைகளில் வாழும் பாம்புகள் உமிழ்ந்த சிவந்த மாணிக்கங்கள் வீசும் வெயிலைப் போன்ற ஒளி ஒரு பக்கம் மிகுதியாகத் தோன்ற, தழைத்த கிரணங்களைப் பெற்ற சூரியனோடும் சந்திரன் அமாவாசையில் சங்கக் குழைகளை அணிந்த காதுகளைப் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரருக்குரிய காளத்தி மலைக்கு அந்த ஈசுவரரைக் கும்பிட்டு வணங்குவதற்காக வந்தாற்போல இருக்கும்.' பாடல் வருமாறு:

"கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபால் பொங்க
முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயில் ஒருபால் மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதி யோடும் சந்திரன் தலைஉ வாவில்
குழையணி காதர் வெற்பைக் கும்பிடச் சென்றால் ஒக்கும்."

கழை - மூங்கில்கள்; ஒருமை பன்மை மயக்கம். சொரி - உதிர்க்கும். தரள - முத்துக்கள்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குன்றில் - மலையைப் போலக் குவிந்த குவியலில்; உவம ஆகுபெயர். கதிர் - ஒளியை வீசும்; 'சந்திரனுடைய கிரணமாகிய' எனலும் ஆம். நிலவு - நிலா. ஒருபால் - ஒரு பக்கத்தில். பொங்க - பொங்கி எழ. முழை - குகைகளில் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். அரவு - பாம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். உமிழ்ந்த - தங்களுடைய வாய்களிலிருந்து உமிழ்ந்த. செய்ய - சிவந்த. மணி - மாணிக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வெயில் - வீசும் சூரியனுடைய வெயிலைப் போன்ற ஒளி; உவம ஆகுபெயர். ஒருபால் - ஒரு பக்கத்தில். மொய்ப்ப - மிகுதியாகத் தோன்ற. த்: சந்தி. தழை - தழைத்த. கதிர் - கிரணங்களை வீசும். ப்: சந்தி. பரிதியோடும் - சூரியனோடும். சந்திரன் - சந்திரனும். தலை உவாவில் - அமாவாசையில். குழை - சங்கக் குழைகளை; ஒருமை பன்மை மயக்கம். அணி - அணிந்த. காதர் - செவிகளைப் பெற்றவராகிய காளஹஸ்தீசுவரர்

திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். காது: ஒருமை பன்மை மயக்கம். வெற்பை - காளத்தி மலைக்கு வந்து. க்: சந்தி. கும்பிட - காளத்தி நாதரைக் கும்பிட்டு வணங்குவதற்காக. ச்: சந்தி. சென்றால் ஒக்கும் - வந்தாற்போல இருக்கும். முத்துக்களின் ஒளி சந்திரனுடைய நிலவைப் போலவும், மாணிக்கங்களின் ஒளி சூரியனுடைய வெயிலைப் போலவும் இருத்தலால் அந்த இருவரும் காளத்தி நாதரைத் தரிசித்து வணங்குவதற்கு வந்ததைப்போல இருக்கும்.

பிறகு உள்ள 130-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கலந்திருக்கும் பல மாணிக்கங்கள் வீசிய விரிந்த ஒளியினுடைய பரப்புப் பொங்கி எழ, மரகதக் கற்களும் பிரகாசத்தைக் கொண்ட நீல மணிகளும் வீசும் ஒளி வெள்ளம் அடர்வதனால் சூரியன் சந்திரன் என்னும் இரண்டு சுடர்களுக்கும் பயப்பட்டுத் திண்ணனார் சென்ற ஒவ்வொரு பக்கங்களிலும் இராத்திரியில் தோன்றும் இருட்டு எவ்விடத்திலும் ஒதுங்கியிருந்தாற் போல் ஒரு தோற்றம் இருக்கிறது.' பாடல் வருமாறு:

"விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மரகதம் ஒளிகொள் நீல மணிகளும் இமைக்கும் சோதி
பொரஇரு சுடருக் கஞ்சிப் போயின புடைகள் தோறும்
இரவிருள் ஒதுங்கி னாலே போன்றுள தெங்கும் எங்கும்."

விரவு - கலந்திருக்கும். பல் - பல. மணிகள் - மாணிக்கங்கள். கான்ற - வீசிய. விரி - விரிந்த. கதிர் - ஒளியினுடைய. ப்: சந்தி. படலை - பரப்பு. பொங்க - பொங்கி எழ. மரகதம் - மரகதக் கற்களும்; ஒருமை பன்மை மயக்கம். ஒளி - பிரகாசத்தை. கொள் - கொண்ட. நீல மணிகளும் - நீல இரத்தினங்களும். இமைக்கும் - வீசும்.

சோதி - ஒளி வெள்ளம். பொர - அடர்வதனால். இரு - இரண்டு. சுடருக்கு - சுடர்களாகிய சூரியனுக்கும் சந்திரனுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். அஞ்சி - பயப்பட்ட. ப்: சந்தி. போயின - திண்ணனார் சென்ற. புடைகள் தோறும் - ஒவ்வொரு பக்கங்களிலும். இரவு - இரவு நேரத்தில் தோன்றும். இருள் - இருட்டு. எங்கும் - எவ்விடத்திலும். எங்கும் - எந்த இடத்திலும். ஒதுங்கினாலே போன்று - ஒதுங்கியிருப்பதைப் போல. ஏ: அசைநிலை. உளது - ஒரு தோற்றம் இருக்கிறது; இடைக்குறை.

பிறகு உள்ள 131-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிவந்த நெருப்பினுடைய பிரகாசத்தைப் போல ஒளி பொங்கி எழும் பெரிய சோதி விருட்சங்களாலும், குரங்குகள் மலைக் குகையில் கொண்டு போய் வைத்த மாணிக்கங்களினுடைய விளக்கு வீசும் பிரசாகத்தைப் போன்ற பிரகாசங்களாலும், மெய், வாய், கண்கள், மூக்கு. காதுகள் என்னும் ஐந்து இந்திரியங்களாலும் உணரப்படும் ஸ்பரிசம், ரஸம், ரூபம், கந்தம், சப்தம் என்னும் ஐந்தையும், காமம், குரோதம், லோபம், மதம், மோகம், மாச்சரியம் என்னும் ஆறு உட்பகைகளையும் அடக்கி இருக்கிறவர்களாகிய முனிவர்களுடைய திருமேனிகளி லிருந்து வீசும் அரிய பெரிய ஒளி வெள்ளத்தாலும் அடியேங்களுடைய தந்தையாரைப் போன்றவராகிய காளத்தி நாதர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் அழகிய காளஹஸ்தி மலையில் இராத்திரி என்பது ஒன்று இல்லை ஆகும்.' பாடல் வருமாறு:

"செந்தழல் ஒளியிற் பொங்கும் தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்துஆ றடக்கி யுள்ளார் அரும்பெரும் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினில் இரவொன் றில்லை."

செம் - சிவந்த. தழல் - நெருப்பினுடைய. ஒளியின் - பிரகாசத்தைப் போல. பொங்கும் - ஒளி பொங்கி எழும். தீபமா மரங்களாலும் - பெருமையைப் பெற்ற சோதி விருட்சங்களாலும். சோதி விருட்சம் என்பது அருகில் செல்பவர்களுக்குத் தோன்றாமல் தெய்வத் தன்மையைப் பெற்ற மலைகளிலும் தபோவனங்களிலும் இருப்பது. பகல் நேரத்தில் ஒருவருக்கும் தன்னுடைய ஒளியைக் காட்டாமல் இரவு நேரத்தில் தன் ஒளியைக் காட்டிச் சோதியாய் விளங்குவது. மந்திகள் - குரங்குகள். முழையில் - மலைக் குகையில். வைத்த - கொண்டுபோய் வைத்த. மணி - மாணிக்கங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். விளக்கு - விளக்கு வீசும் பிரகாசத்தைப் போன்ற; ஆகுபெயர். ஒளிகளாலும் - பிரகாசங்களாலும். ஐந்தும் - மெய், வாய், கண்கள், மூக்கு, செவிகள் என்பவற்றால் உணப்படும் ஸ்பரிசம், ரஸம், ரூபம், கந்தம், சப்தம் என்ற ஐந்தையும். ஆறு - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்னும் ஆறு உட்பகைகளையும். அடக்கியுள்ளார் - அடக்கியிருப்பவர்களாகிய முனிவர்களி னுடைய; ஒருமை பன்மை மயக்கம். அரும் - அருமையும். பெரும் - பெருமையும் பெற்ற. சோதியாலும் - திருமேனியிலிருந்து வீசும் ஒளி வெள்ளத்தாலும். அந்த முனிவர்களை நெடுந்தூரத்திலிருந்து பார்த்தால் அவர் களுடைய திருமேனிகள் ஒளிவடிவமாகத் தோன்றும். எந்தையார் - அடியேங்களுடைய தந்தையாரைப் போல விளங்குபவராகிய காளத்தி நாதர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்; 'எந்தையார்' என்றது சேக்கிழார் தம்மையும் திண்ணனாரையும் சேர்த்துச் சொன்னது. திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலையினில் - காளஹஸ்தி மலையில். இரவு ஒன்று - இராத்திரி நேரம் என்ற ஒன்று. இல்லை - இல்லை ஆகும்.

*அடுத்து உள்ள 132-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

'ஒவ்வொரு நாளும் வரும் கறுப்பு நிறம் உள்ள இரவு நேரம் அகன்று மேவிய நடு யாமம் போய்ச் சுருங்கி விடியற் காலம் வர, அதனை அறிந்த பறவைகளினுடைய சுற்றிக் கூவும் ஒலியைக் கேட்டு, கரிய நீரைப் பெற்ற சமுத்திரம் என்று கூறும் வண்ணம் நின்று கொண்டிருந்தவரும், தம்முடைய கண்களை மூடி உறங்காத வீரரும் ஆகிய திண்ணனார் அருமையாகப் பெறுவதற்குரிய தம்முடைய தலைவராகிய காளத்தி நாதருக்கு உணவைப் போய்க் கொண்டு வந்து சேர விரும்பி.' பாடல் வருமாறு:

"வரும்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமம் சென்று
சுருங்கிட அறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்
கருங்கடல் என்ன நின்ற கண்துயி லாத வீரர்
அரும்பெறல் தம்பி ரானார்க் கமுதுகொண் டணைய வேண்டி"

இந்தப் பாடல் குளகம். வரும் - ஒவ்வொரு நாளும் வரும். கறை - கறுப்புநிறம் உள்ள. ப்: சந்தி. பொழுது - இரவு நேரம். நீங்கி - அகன்று. மல்கிய - பிறகு மேவிய. யாமம் - நடுச்சாமம்; நள்ளிரவு. சென்று - போய். சுருங்கிட - சுருங்கி விடியற் காலம் வர. அறிந்த - அதைத் தெரிந்து கொண்ட. புள்ளின் - பறவைகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். அந்தப் பறவைகளாவன: காக்கை, சிட்டுக்குருவி, தூக்கணாங் குருவி, பருந்து, கழுகு, மீன்கொத்திப் பறவை, மைனா, மரங்கொத்திப் பரவை, கோழி, புறா முதலியவை. சூழ் - சுற்றி. சிலம்பு - கூவும். ஓசைகேட்டு - ஒலியைக் கேட்டு. க். சந்தி. கரும் - கரிய நீர் நிரம்பிய. கடல் - சமுத்திரம். என்ன - என்று கூறுமாறு. நின்ற - நின்று கொண்டிருந்த. கண் - தம்முடைய கண்களை; ஒருமை பன்மை மயக்கம். துயிலாத - மூடி உறங்காத. வீரர் - வீரராகிய திண்ணனார். அரும் பெறல் - அருமையாகப்

*பெறுவதற்குரிய. தம் - தம்முடைய. பிரானார்க்கு - தலைவராகிய காளத்தி நாதருக்கு. அமுது - உணவை. கொண்டு - போய்க் கொண்டு வந்து. அணைய - மீண்டும் காளத்தி மலைக்கு வந்து சேர. வேண்டி - விரும்பி.*

*கண் துயிலாத வீரர்: ''கருமுகிலென்ன நின்ற கண்படா வில்லியார்.'' (166) என்று இந்தப் புராணத்தில் பிறகு வருவதைக் காண்க.*

*அடுத்து உள்ள 133-ஆம் பாட்டின் கருத்து வருமாறு:*

*'குட்டையான கால்களைக் கொண்ட காட்டுப் பன்றியோடும் கரிய கலைமானும், தினைப்புனத்தில் மேயும் புள்ளி மானும், பிறவுமாக உள்ள வேறு வேறு விலங்குச் சாதிகளை வேட்டை புரிதலாகிய தொழிலில் காட்டும் தந்திரத்தினால் அந்த விலங்கினங்களுக்குத் துன்பத்தைப் புரியும் காலத்தை எண்ணிப் பார்த்து வடிவம் நன்றாகத் தெரியாத சமயத்தில் பகைவர்களைக் கொல்லும் வில்லையும் எடுத்துக் கொண்டு வள்ளலாகிய காளத்தி நாதரை வணங்கி விட்டுத் திண்ணனார் சென்றார்.' பாடல் வருமாறு:*

> "ஏறுகாற் பன்றி யோடும் இருங்கலை புனமான் மற்றும்
> வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரசி னாலே
> ஊறுசெய் காலம் சிந்தித் துருமிகத் தெரியாப் போதின்
> மாறடு சிலையும் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார்."

*ஏறு - குட்டையான. கால் - கால்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வயிற்றில் ஏறும் குறிய கால்களை உடைய காட்டுப்பன்றி. உடலுக்கு ஏற்ற கால்கள் இல்லாமையினால் 'ஏறுகால்' என்றார். பன்றியோடும் - காட்டுப் பன்றியோடும். இரும் - கரிய; 'பெரிய' எனலும் ஆம். கலை - கலைமானும். புனம் - தினைப் புனத்தில்*

மேயும். மான் - புள்ளிமானும். மற்றும் - பிறவுறமாக உள்ள. வேறு வேறு - வேறு வேறாகிய. இனங்கள் - விலங்குச் சாதிகளை. வேட்டை வினை - வேட்டை புரிதலாகிய. த்: சந்தி. தொழில் - தொழிலில். விரசினால் - தந்திரத்தால்; சாமர்த்தியத்தால். ஏ: அசை நிலை. ஊறுசெய் - அந்த விலங்கினங்களுக்குத் துன்பத்தைப் புரியும். காலம் - காலத்தை. சிந்தித்து - எண்ணிப் பார்த்து. உரு - வடிவம். மிக - நன்றாக. த்: சந்தி. தெரியா - அறிய முடியாத. ப்: சந்தி. போதில் - சமயத்தில். மாறு - பகைவர்களை; திணை மயக்கம். அடு - கொல்லும். சிலையும் - வில்லையும். கொண்டு - தம்முடைய இடக்கையில் எடுத்துக் கொண்டு. வள்ளலை - வள்ளலாகிய காளத்திநாதரை. த்: சந்தி. தொழுது - வணங்கிவிட்டு. போந்தார் - திண்ணனார் சென்றார்.

*பிறகு வரும் 134-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'நிறைந்திருத்தலைக் காட்டும் இருட்டைப் போக்கிவிட்டுத் தன்னுடைய முகத்தைக் காண்பிக்கும் இரதத்தைப் பெற்ற சூரியன் உண்மையைக் காட்டும் பக்தியைக் கொண்ட வில்லை ஏந்தியவராகிய திண்ணனார் புரியும் ஒப்பற்ற வேட்டையில் விலங்குகளை அம்புகளால் எய்து விழச் செய்யும் காட்டில் விலங்குகளை ஓடாமல் வளைத்து அகப்படுத்துவதற்காக விரித்து வைத்த வலையை எடுத்துத் தன்னுடைய கைகளால் காட்டுபவனைப்போலத் தன்னுடைய கிரணங்களைக் காண்பித்து வானத்தில் உதயமாகும் சமயத்தில்.' பாடல் வருமாறு:*

"மொய்காட்டும் இருள்வாங்கி முகம்காட்டும் தேர்இரவி
மெய்காட்டும் அன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க இட்டகருந் திரைஎடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி எழும்போதில்."

இந்தப் பாடல் குளகம். மொய் - நிறைந்திருத்தலை; முதனிலைத் தொழிற் பெயர். காட்டும் - காண்பிக்கும். இருள் - இருட்டை. வாங்கி - போக்கிவிட்டு. முகம் - தன்னுடைய முகத்தை. காட்டும் - காணச் செய்யும். தேர் - இரதத்தை ஓட்டும். இரவி - சூரியன். மெய் - உண்மையாக. காட்டும் - அமைத்துக் காண்பிக்கும். அன்பு - பக்தியை. உடைய - பெற்ற, உண்மையான பக்தியை உடையவர் என்பது கருத்து. வில்லியார் - வில்லை ஏந்தும் திண்ணனார். தனி - ஒப்பற்ற. வேட்டை - வேட்டையில். எய் - அம்புகளால் எய்து கொல்லும். காட்டின் - காட்டில் வாழும். மா - மான் முதலிய விலங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். வளைக்க - ஓடாமல் வளைத்து அகப்படுத்து வதற்காக. இட்ட - விரித்து வைத்த. கருந்திரை - வலையை. எடுத்து - மேலே எடுத்து. க்: சந்தி. கை - தன்னுடைய கைகளால்; ஒருமை பன்மை மயக்கம். காட்டு வான்போல - காட்டுபவனைப் போல. க்: சந்தி. கதிர் - தன்னுடைய கிரணங்களை; ஒருமை பன்மை மயக்கம். காட்டி - தோன்றச் செய்து. எழும் - வானத்தில் உதயமாகும். போதில் - சமயத்தில்.

பின்பு உள்ள 135-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தமக்குக் கிடைத்த சீர்த்தியைப் பெற்ற சைவாகமத்தில் கூறப்பட்ட பூசைக்கு ஏற்றவாறு தாம் பறித்துக்கொண்டு வந்திருந்த மலர்களையும், பொன் முகலியாற்றிலிருந்து மொண்டு கொண்டு வந்திருந்த நீரையும், முதலாக உள்ள வேறு பொருள்களையும் எடுத்துக்கொண்டு மையைப் போன்ற கரிய நிறம் தழைத்து விளங்கும் திருக்கழுத்தைப் பெற்ற காளத்தி மலையில் கோயில் கொண்ட அமுதத்தைப் போன்றவராகிய காளத்தி நாதரை வழிபாடு புரிந்துவரும் தவத்தைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் என்பவர் காளத்தி மலையை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"எய்தியசீர் ஆகமத்தில் இயம்பிய பூசனைக் கேற்பக்
கொய்தமல ரும்புனலும் முதலான கொண்ட ணைந்தார்,
மைதழையும் கண்டத்து மலை மருந்தை வழிபாடு
செய்துவரும் தவமுடைய முனிவர்சிவ கோசரியார்."

எய்திய - தமக்குக் கிடைத்த. சீர் - சீர்த்தியைப் பெற்ற. ஆகமத்தில் - சைவாகமத்தில். இயம்பிய - விதித்துக் கூறப் பெற்ற. பூசனைக்கு - பூசைக்கு. ஏற்ப - ஏற்றவாறு. க்: சந்தி. கொய்த - தாம் நந்தவனத்தில் பறித்துக் கொண்டு வந்திருந்த. மலரும் - மலர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: நந்தியாவட்டை, மல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், அரளிப் பூ, மகிழ மலர், கடம்ப மலர், வெட்சி மலர், கொன்றை மலர் முதலியவை. புனலும் - பொன் முகலியாற்றிலிருந்து மொண்டுகொண்டு வந்திருந்த நீரும். முதலான - முதலான பொருள்களை. அவையாவன: தூபக்கால், கற்பூரத் தட்டு, சாம்பிராணி, கர்ப்பூரம், ஊதுவத்தி, அடிக்கும் மணி, நிவேதனப் பொருள் முதலியன. கொண்டு - எடுத்துக்கொண்டு. மை - மையைப் போன்ற கரிய நிறம். தழையும் - தழைத்து விளங்கும். க்ண்டத்து - திருக்கழுத்தைப் பெற்ற. மலை - காளத்தி மலையில் கோயில்கொண்ட. மருந்தை - அமுதத்தைப் போன்றவரும் பிணிகளைப் போக்கும் மருந்தைப் போன்றவரும் ஆகிய காளத்தி நாதரை; உவம ஆகுபெயர். வழிபாடு செய்து வரும் - வழிபாட்டைப் புரிந்துவரும். தவம் உடைய - தவத்தைப் பெற்ற. முனிவர் - அந்தணராகிய. சிவகோசரியார் - சிவகோசரியார் என்பவர். அணைந்தார் - கா்ளத்தி மலையை அடைந்தார்.

மருந்து: "சடையார் கழல் பரவி உருகும் மனம் உடையார் தமக்குறுநோய் அடையாவே.", "பிணிபடு கடல் பிறவிகளை எளிது.", "ஒடுங்கும் பிணி பிறவி

கேடென்றிவை உடைத்தாய் வாழ்க்கை ஒழியத்தவம், அடங்கும் இடம் கருதி நின்றீர் எல்லாம் அடிகள் அடி நீழற்கீழாளாம் வண்ணம்... தொழுமின்களே.'', ''பிணிநீர சாதல் பிறத்தல் இவை பிரியப் பிரியாத பேரின்பத்தோ, டணிநீர மேலுலகம் எய்தலுறில்... தொழுமின்களே.'', ''ஊன்றும் பிணி பிறவி கேடென்றிவை உடைத்தாய வாழ்க்கை ஒழிய... தொழுமின்களே.'', ''நோயும் பிணியும் அருந்துயரமும் நுகருடைய வாழ்க்கை ஒழிய... தொழுமின்களே.'', ''பகடூர் பசி நலிய நோய் வருதலாற் பழிப்பாய் வாழ்க்கை ஒழிய... தொழுமின்களே.'', ''நீரார் சடையானை நித்தம் ஏத்துவார் தீரா நோயெல்லாம் தீர்தல் திண்ணமே.'', ''தில்லைச் சிற்றம்பலம் ஏத்த மாணா நோயெல்லாம் வாளா மாயுமே.'', ''அரனே என்றுகைப் பாடும் அடியார்க்குறு நோய் அடையாவே.'', ''விடையா என்பாரை அறியா வினைகள் அருநோய் பாவம் அடையாவே.'', ''மருந்தவன்.'', ''செடிகோள் நோயின்னடை யார் திறம்பார் செறுதீவினை, கடிய கூற்றமும் கண்டகலும்... அடியார்கட்கே.'', ''செழுமா மறைப் பட்டன் சேவடியே பணிமின் பிணி போகவே.'', ''எம்பிரான் எனக் கமுதமாவானும்.'', ''பிணியறியார்... சாய்க்காட்டெம் தலைவன்தான் சார்ந்தாரே.'', ''அடியார்மேல் தீவினைநோய் வாராமே அறம்கொண்ட சிவதன்மம் உரைத்த பிரான்.'', ''தீவினைக்கோர் மருந்தாவான்.'', ''விடையாய் என ஏத்தி அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா வருநோயே.'', ''பேராயிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே.'', ''பணிவார் மேற் பெருக்கும் இன்பம் துன்பம் ஆனபிணி போமே.'', ''பரவினாற் பற்றறும் அருநோயே.'', ''இசைபாடி நின்றார்களைத் துன்பநோய் அடையாவே.'', ''ஏத்தவல்லவர் மங்குநோய் பிணி மாயுமே.'', ''பிணிவரினும் சீருடைக்கழலாற் சிந்தை செய்யேன்.'', ''சிந்தை நோயவை தீர நல்கிடும்.'', ''பெயர்

ஏத்தும் மாந்தர் பிணிபேருமே.'', ''கண்டு கைதொழுதலும் கவலை நோய் கழலுமே.'', ''ஐயனை அடி பணிந்தரற்றுமின் அடர்ந்தரும் வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே.'', ''மழபாடியை உன்னிலங்க வுறுபிணி இல்லையே.'', ''உடல் தோன்றிய பல்பிணியும் பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்து மின்.'', ''சடையீர் உமதிணையடி உளம்கொள உறு பிணியிலரே.'', ''தொண்டர்கள் துயர்பிணி இலரே.'', ''உம் தொழுகழல் உற்றவர் உறுபிணி இலரே.'', ''எம்மானை வணங்கி ஏத்த மருவா பிணிதானே.'', ''உணருமின்கள் உன்னிய சிந்தையின் நீங்ககில்லார்க் குயர்வாம் பிணிபோமே.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மருந்தாகிப் பிணி தீர்க்கும் அணியான ஐயாரர்க்கு.'', ''மயக்கம் தீர்க்கும் மருந்தினை.'', ''உற்றநோய் தீர்ப்பர் போலும்.'', ''பேரிடாப் பிணிகள் தீர்க்கும் பிஞ்ஞகன்.'', ''ஒரு மருந்தாகி உள்ளாய் உம்பரோ டுலகுக் கெல்லாம் பெருமருந்தாகி நின்றாய்... வல்வினைகள் தீர்க்கும் அருமருந்தாலவாயில் அப்பனே.'', ''உற்ற நோய் வினை தீர்ப்பான்.'', ''நோய் பிணி தீர்த்தாய்.'', ''பிதற்றுகின்றார் பிணிதீர்த்தருளாய்.'', ''பக்தர்கட்கமுதாய பரத்தினை.'', ''மருந்தினோடு நற்சுற்றமும் மக்களும் பொருந்தி நின்றெனக் காயஎம் புண்ணியன்.'', ''உற்றவர்தம் உறுநோய் களைபவர்.'', ''பொருந்து நோய் பிணிபோகத் துரப்பதோர் மருந்தும் ஆகுவர் மன்னு மாற்பேறரே.'', ''பிணித்த நோய்ப் பிறவிப் பிறிவையது மாறுணர்த்தலாம்.'', ''மருந்து வானவர் தானவர்க்கு.'', ''பிறப்பு மூப்புப் பெரும்பசி வான்பிணி, இறப்பு நீங்கி இங்கின்பம் வந்தெய்திடும், சிறப்பர் சேறையுட் செந்நெறியான் கழல், மறப்ப தின்றி மனத்தினுள் வைக்கவே.'', ''அடியார்தம் அல்லல் தீர்க்கும் அரு மருந்தை.'', ''ஒழித்திடுமே உள்குவார் உள்ளத்துள்ள உறுபிணியும் செறு பகையும்.'',

''சிவமூர்த்தி என்றெழுவார் சிந்தையுள்ளால் உற்றதோர் நோய்களைந்து.'', ''பருகா அமுதமாம்.'', ''அம்மை பயக்கும் அமிர்து.'', ''மூலநோய் தீர்க்கும் முதல்வன்.'', ''அற்றவர் கட் காரமுதம் ஆனாய் போற்றி.'', ''ஆரமுதே என்றேன் நானே.'', ''தீர்ப்பரிய வல்வினை நோய் தீர்ப்பாய் நீயே.'', ''பொல்லா என் நோய் தீர்த்த புனிதன்.'', ''நிச்சல் நலிபிணிகள் தீர்ப்பான்.'', ''அடியார்கட் காரமுதே.'', ''அருவாய வல்வினை நோய் அடையா வண்ணம்.'', ''சார்ந்தார்க் கின்னமுதானான்.'', ''சார்ந்தார்க்க முதானான்.'', ''மருந்தும் ஆகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்.'', ''அறுத்தானை அடியார்தம் அருநோய்.'', ''வானத்தார் போற்றும் மருந்தே அடியார் தம் அருநோய்.'', ''வானத்தார் போற்றும் மருந்தே போற்றி.'', ''அடியார்கட் காரமுதம் ஆனாய் போற்றி.'', ''மருந்தானை மந்திரிப்பார் மனத்துளானை.'', ''தோற்றம் நிலை இறுதிப் பொருளாய் வந்த மருந்தவன் காண்.'', ''அஞ்செழுத்து நினைவார்க் கென்றும் மருந்தவன்.'', ''பிணியைத் தீர்க்கும் மருந்தவன் காண்.'', ''தன்னடைந்தார் தம்வினைநோய் பாவம் எல்லாம் அரித்தானை.'', ''இன்னமுதை.'', ''அடைந்தவர் கட் கமுதொப்பானை.'', ''ஆராத இன்னமுதை.'', ''அடைந்தார் தம் பாவங்கள் அல்லல் நோய்கள் அருவினைகள் நல்குரவு செல்லா வண்ணம் கடிந்தானை.'', ''பிணிநோய் பிரிவிக்கும் மருந்து.'', ''மருந்தாய்ப் பிணி தீர்க்குமாறு கண்டேன்.'', ''ஆராத இன்னமுதை அடியார் தங்கட் கனைத்துலகும் ஆனானை.'', ''ஆரமுதை அமரர்கோனை.'', ''ஆரமுதாம் அணி தில்லைக் கூத்தன்.'', ''அடியார்கட் காரமுதம் ஆயினான்.'', ''ஆராத இன்ன முதை அடியார் தம்மேல் வரும் துயரம் தவிர்ப்பானை.'', ''கட்டம் பிணிகள் தவிர்ப்பார்.'', ''அல்லல் தீர்க்கும் அரு மருந்தை.'', ''புகழும் அன்பர்க் கின்பமரும் அமுதை.'', ''ஆவின்கீழ் இருந்தானை

அமுதானானை.'', ''பழனமே என்பீராகில் பயின்றெழுந்த பழவினை நோய் பாற்றலாமே.'', ''வெண்காடே வெண்காடே என்பீராகில் வீடாத வல்வினை நோய் வீட்டலாமே.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''பிணி வண்ணத்த வல்வினை தீர்த்தருளீர்.'', ''திருக்கற்குடி மன்னி நின்ற ஆரா இன்னமுதே.'', ''அயனே என் அமுதே.'', ''பரவுவார் பிணி களைவாய்.'', ''ஐயாற்றமுதே.'', ''அமுதாக உள்ளூறும் தேசனை.'', ''நள்ளாறனை அமுதை.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''தேசனே தேனார் அமுதே.'', ''ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே.'', ''ஊற்றான உண்ணா ரமுதே.'', ''அருள்நனி சுரக்கும் அமுதே காண்க.'', ''இன்றெனக் காரமுதானாய் போற்றி.'', ''அரசே போற்றி அமுதே போற்றி.'', ''வானோர்க் கரிய மருந்தே போற்றி.'', ''அளிபவர் உள்ளத் தமுதே போற்றி.'', ''கண்ணா ரமுதக் கடலே போற்றி.'', ''ஆரா அமுதே அருளே போற்றி.'', ''மாலமுதப் பெருங் கடலே.'', ''அறிவனே அமுதே.'', ''தேனே அமுதே கரும்பின் தெளிவே.'', ''ஆணே பெண்ணே ஆரமுதே.'', ''தேனே அமுதே சிந்தைக்கரி யாய்.'', ''பணிவார் பிணி தீர்த்தருளி.'', ''தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கு மரனே.'', ''அப்பனே எனக் கமுதனே.'', ''தேனையும் பாகையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து.'', ''அத்தன் ஆனந்தன் அமுதன்.'', ''விண்ணுக்கொரு மருந்தை.'', ''என்னானை என்னரையன் இன்னமுது.'', ''அடியோங்கட் காரமுதை.'', ''கண்ணா ரமுதமுமாய் நின்றான்.'', ''என் உளம் புகுந்த ஆரா அமுதமாய்.'', ''தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த வான் வந்த வார் கழலே.'', ''என்னுட் கலந்த தேனாய் அமுதமுமாய்.'', ''என்னானை என்னப்பன் என்பார்கட் கின்னமுதை.'', ''வான நாடர் மருந்தினை.'', ''என்னுடைய யாரமு தெங்கள் அப்பன்.'', ''மண்ணோர் மருந்து.'',

''பாலும் அமுதமும் தேனுடனாம் பராபரமாய்.'', ''உத்தர கோச மங்கை ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடி.'', ''தேன் தங்கித் தித்தித் தமுதூறி.'', ''நெஞ்சுளே நின்ற முதமூறி.'', ''ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே.'', ''கடலமுதே கரும்பே.'', ''பொன்னம் பலத்தாடும் அமுதே.'', ''திரை பொரா மன்னும் அமுதத் தெண்கடலே.'', ''எனைப் பிறப் பறுக்கும் எம்மருந்தே.'', ''குறைவிலா நிறைவே கோதிலா அமுதே.'', ''என் கண்ணே அமுதூறித் தித்தித்து.'', ''என் ஆரமுதேயோ.'', ''ஆரா அமுதே ஆசைப் பட்டேன்.'', ''தன்னைத் தந்த என்னாரமுதை.'', ''தேனைப் பாலை நிறையின் அமுதை அமுதின் சுவையை.'', ''பிறவிப் பிணிக்கோர் மருந்தே.'', ''அந்த மில் அமுதே அரும்பெரும் பொருளே ஆரமுதே.'', ''ஆண்டு கொண்ட என்னாரமுதை.'', ''கோதில முதானானை.'', ''பிணிமூப் பென்றி வையிரண்டும் ஒழியச் சென்றுலகுடைய ஒரு முதலை.'', ''பண்டைக் கொடுவினை நோய் காவாய்.'', ''கோற்றேனெனக் கென்கோ குரைகடல் வாயமுதென்கோ, ஆற்றேன் எங்கள் அரனே அருமருந்தே.'', ''அச்சோ எங்கள் அரனே அருமருந்தே என தமுதே.'', ''பாண்டியற் காரமுதாம் ஒருவரை.'', ''என் குடிமுழுதாண்டு வாழ்வற வாழ்வித்த மருந்தே.'', ''அன்பினில் விளைந்த ஆரமுதே.'', ''ஆளானார்க் குண்ணார்ந்த ஆரமுதே.'', ''தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்.'', ''கருத்தில் உருத்தமுதாம் சிவபதத்தை.'', ''இன்னமுதாய ஆனந்த வெள்ளத்தான்.'', ''பிணிகெட நல்கும் பெருந்துறை எம்பேரருளாளன்.'', ''செங்கமல மலர்போல் ஆருருவாய் என் ஆரமுதே.'', ''என் அமுதே என நினைந்தேத்தி.'', ''ஆரா அமுதாய் அமைந்தன்றே.'', ''பிணிகெட இவைகண்டு.'', ''மகேந்திர மாமலைமேல் இருந்த மருந்தே.'', ''ஆடரவாடும் அம்பலத் தமுதே.'' என்று திருமாளிகைத்

தேவரும், ''என்னுயிர்க் கமுதினை.'', ''வேடலங்காரக் கோலத் தின்னமுதை.'', ''திருவ்ாவடுதுறை அமுதே.'', ''தேனே அமுதே என் சித்தமே.'', ''பாலும் அமுதமும் தேனுமாய் ஆனந்தம் தந்து.'' என்று சேந்தனாரும், ''அகவுயிர்க் கமுதே.'', ''கன்னலும் பாலும் தேனும் ஆரமுதம் கனியுமாய் இனியை ஆயினையே.'', ''பாலுமாய் அமுதாம் பன்னகாபரணன்.'', ''வம்பளிந்த கனியே என் மருந்தே.'', ''நாற்பெருந்தடந்தோட் கன்னலே தேனே அமுதமே.'', ''முக்கட் பகவனாம் அகஉயிர்க் கமுதாம்.'', ''திரள முதாங்கே தாய்தலைப்ப பட்டங்குருகி ஒன்றாய் தன்மையில்.'', ''அன்பரானவர்கள் பருகும் ஆரமுதே.'', ''கட்டியர் அட்ட ஆரமிர்தர்.'' என்று கருவூர்த் தேவரும், ''பத்தியாய் உணர்வோர் அருளைவாய மடுத்துப் பருகுதோ றமுத மொத்தவர்க்கே தித்தியா இருக்கும்.'', ''எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமை ஆளும்.'' என்று பூந்துருத்தி நம்பிகாட நம்பியும், ''தென்தில்லை அம்பலத்துள் என்னாரமுதை.'', ''அடியார்க்கருளும் தெளிவாரமுதே.'' என்று கண்டராதித்தரும், ''அருவாய் உருவாய் ஆரா அமுதமாய்.'', ''பாலினை இன்னமுதைப் பரமாய பரஞ்சுடரை.'' என்று திருவாலியமுத னாரும், ''என் அகம் நெக ஊறும் அமர்தினுக்கு.'', ''ஆவிக்க முதை.'', ''என்மனத்தகத்தே பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே பல்லாண்டு கூறுதுமே.'' என்று சேந்தனாரும், ''அப்பனை நந்தியை ஆரா அமுதினை.'', ''ஆதி மருந்தென்றறிவார் அகலிடம் சோதி மருந்திது சொல்ல வொண்ணாதே.'' என்று திருமூலரும், ''தித்தித்தமுத முமாம்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''நம்மேல் மறுதலை நோய் தீர்ப்பான்.'', ''நம்மேல் வரலாம் நோய் தீர்ப்பான்.'', ''நோய் வருங்கைக் கஊளவான்.'' என்று நக்கீர தேவ நாயனாரும், ''அரியாரும் பாகத் தமுதன்.'' என்று கபில தேவ

நாயனாரும், ''மயலான தீரும் மருந்தாகும்.'' என்று பரணதேவ நாயனாரும், ''அணைதொரும் சிறக்கும் அமிர்தே போற்றி.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''அன்பின் வழிவந்த ஆரமிர்தே.'', ''நிமிர்புன் சடை அமிர்தே.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''உய்யக் கொண்ட கோதிலா அமுதே.'', ''திருவதிகை வீரட்டானத் தமுதை.'', ''அடியவர் தம் கண்ணாரமுதை.'', ''திருவான்மியூர் மருந்தை.'', ''மாமலை மேல் மருந்தை.'', ''அஞ்சைக் களத்து நஞ்சுண்ட அமுதை.'', ''மன்னு திருநள்ளாற்று மருந்தை.'', ''மலைமேல் மருந்தை வணங்கினார்.'', ''ஆருயிராய் அமிர்தாகி முத்தனாம் முதல்வன்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 136-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு சிவகோசரியார் வந்து அந்த அழகிய காளத்தி மலையில் தேவர்களினுடைய தலைவராகிய காளத்தி நாதருடைய பக்கத்தில் தம்முடைய திருவுள்ளத் தில் நியமத்துடனும் போகின்ற அவர் காளத்தி நாதருடைய அழகிய சந்நிதியில் வேக வைத்த மாமிசத்தையும் எலும்புகளையும் பார்த்து அவற்றை விட்டு அகலுவதற்காக அவற்றை மிதித்துக் கொண்டு ஓடி, ''இந்தத் தகுதியல்லாத செயலை, ஐயோ! ஆர் புரிந்தார்?'' என்று மனம் வருந்துவாரானார்.' பாடல் வருமாறு:

''வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடும் செல்கின்றார் திருமுன்பு
வெந்தஇறைச் சியும்எலும்பும் கண்டகல மிதித்தோடி
'இந்தஅனு சிதம்கெட்டேன்! யார்செய்தார்?' என்றழிவார்.''

வந்து - அவ்வாறு சிவகோசியார் வந்து. திரு - அழகிய. மலையின்கண் - காளத்தி மலையில். வானவர் -

தேவலோகத்தில் வாழும் தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகர் - தலைவராகிய காளத்தி நாதருக்கு. மருங்கு - பக்கத்தில். சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். நியமத்தோடும் - நியமத்துடனும். செல்கின்றார் - போகிறவராகிய அந்த அந்தணர். திரு - அழகிய. முன்பு - காளத்தி நாதருடைய சந்நிதியில். வெந்த - வேக வைத்த. இறைச்சியும் - மாமிசத்தையும். எலும்பும் - எலும்பு களையும்; ஒருமை பன்மை மயக்கம். கண்டு - பார்த்து. அகல - அவற்றைவிட்டு அகலுவதற்காக. மிதித்து ஓடி - அவற்றை மிதித்துக்கொண்டு ஓடி. இந்த அனுசிதம் - இந்தத் தகாத செயலை. கெட்டேன் - ஐயோ! யார் - ஆர். செய்தார் - புரிந்தார். என்று - என எண்ணி. அழிவார் - மனம் வருந்துவாரானார்.

அடுத்து உள்ள 137-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'''பக்கத்தில் வரவும், நேரில் வருவதற்குப் பயப்படாத வேடர் யாரோ இந்தத் தகாத செயலைச் செய்திருக்கிறார்; தேவர்களுக்கெல்லாம் முதல் தேவனும் பரமேசுவரனும் ஆகிய காளத்தி நாதனே, தேவரீருடைய அழகிய சந்நிதியில் இந்தக் காரியத்தைச் செய்து விட்டு அந்த வேடர் செல்கிறதா? இவ்வாறு நடக்கும் வண்ணம் தேவரீர் திருவுள்ளத்தில் கொள்வதா?'' என்று சிவகோசரியார் பதற்றத்தை அடைந்து அழுது தரையில் விழுந்து தம்முடைய திருவுள்ளம் சுழன்றார்.' பாடல் வருமாறு:

'''மேவநேர் வரஅஞ்சா வேடுவரே இதுசெய்தார்;
தேவதே வேசனே, திருமுன்பே இதுசெய்து.
போவதே? இவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ளம்
ஆவதே?' எனப்பதறி அழுதுவிழுந் தலமந்தார்.''

மேவ - பக்கத்தில் வரவும். நேர் - நேரில். வர - வரவும். அஞ்சா - பயப்படாத. வேடுவரே - யாரோ ஒரு வேடர்தாம். இது - இந்தத் தகாத செயலை. செய்தார் - புரிந்திருக்கிறார். தேவ - தேவர்கள் யாவருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். தேவேசனே - முதல் தேவனும் பரமேசுவரனும் ஆகிய காளத்தி நாதனே. திரு - தேவரீருடைய அழகிய. முன்பு - சந்நிதியில். ஏ: அசை நிலை. இது - இந்தச் செயலை. செய்து - புரிந்து விட்டு. போவதே - செல்வதா? இவ்வண்ணம் - இவ்வாறு. புகுத - நடக்கும் வண்ணம். நீர் - தேவரீர். திருவுள்ளம் - திருவுள்ளத்தில். ஆவதே - கொள்வதா? என - என்று; இடைக்குறை. ப்: சந்தி. பதறி - பதற்றத்தை அடைந்து. அழுது - புலம்பி. விழுந்து - தரையில் விழுந்து. அலமந்தார் - சிவகோசரியார் தம்முடைய திருவுள்ளம் சுழன்றார்.

பிறகு வரும் 138-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'''இந்தக் காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் விளக்கினுடைய கொழுந்தைப் போன்ற காளத்தி நாதருக்குப் புரியும் பூசையும் தாமதிக்க அடியேன் உயிரோடு இருப்பது இனிமேல் ஏன்?'' என்று எண்ணி அந்த மாமிசத்தையும், எலும்புகளோடு இலைகளையும், செருப்புக்களின் சுவடுகளையும், வேட்டை நாயினுடைய அடிகளின் சுவடுகளையும் ஒரு துடைப்பத்தால் பெருக்கி அகற்றிய பிறகு விருப்பத்தோடும் அழகிய பொன்முகலியாற்றுக்குச் சென்று அதில் ஓடும் நீரில் முழுகிவிட்டு வேகமாகக் காளத்தி மலையைச் சிவகோசரியார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"'பொருப்பில்எழும் சுடர்க்கொழுந்தின் பூசனையும் தாழ்க்கநான்
இருப்பதினி என்?'என்றவ் விறைச்சிஎலும் புடன்இலையும்
செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றியபின்
விருப்பினொடும் திருமுகலிப் புனல்மூழ்கி விரைந்த
ணைந்தார்."

பொருப்பில் - இந்தக் காளத்தி மலையில். எழும் - எழுந்தருளியிருக்கும். சுடர் - விளக்கினுடைய. க்: சந்தி. கொழுந்தின் - கொழுந்தைப் போன்ற காளத்தி நாதருக்கு; உவம ஆகுபெயர். பூசனையும் - அடியேன் புரியும் பூசையும். தாழ்க்க - தாமதிக்க. நான் - அடியேன். இருப்பது - உயிரோடு இருப்பது; 'சும்மா இருப்பது' எனலும் ஆம். இனி - இனிமேல். என் - ஏன். என்று - என்று எண்ணி. அவ்விறைச்சி - அந்த மாமிசத்தையும். எலும்புடன் - எலும்புகளோடு; ஒருமை பன்மை மயக்கம். இலையும் - இலைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செருப்படியும் - செருப்புக்களினுடைய சுவடுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். நாய் - வேட்டை நாயினுடைய. அடியும் - அடிகளினுடைய சுவடுகளையும்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகு பெயர். திரு - அழகிய. அலகால் - ஒரு துடைப்பத்தால். மாற்றிய - பெருக்கி அகற்றிய. பின் - பிறகு. விருப்பினொடும் - விருப்பத்தோடும். திரு - அழகிய. முகலி - பொன் முகலியாற்றில் ஓடும். ப்: சந்தி. புனல் - நீரில். மூழ்கி - மூழ்கிவிட்டு. விரைந்து - வேகமாக. அணைந்தார் - சிவகோசரியார் காளத்தி மலையை அடைந்தார்.

அடுத்து உள்ள 139-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தகாத செயல் நடந்ததை மாற்றுவதற்காகப் பரிசுத்தமாகும் புண்ணியாவாசனச் செயலைச் செய்து காளத்தி நாதரை வணங்கிப் பெறவேண்டிய பொருள்களை எடுத்துக் கொண்டு வந்து பரிசுத்தமாகிய பூசையை ஆரம்பித்துக் குற்றம் இல்லாத அபிடேகம் முதலாக உள்ள அங்கங்களோடு பூசை முழுவதையும் முறைப்படி செய்து நிறைவேற்றி முதல்வராகிய காளத்தி நாதருடைய வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளைச் சிவகோசரியார் வணங்கினார்.' பாடல் வருமாறு:

"பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாம் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவில்திரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதும்முறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார்."

பழுது - தகாத செயல். புகுந்தது - நடந்ததை. தீர - போக்குவதற்காக. ப்: சந்தி. பவித்திரமாம் - பரிசுத்தமாக இருக்கும். செயல் - புண்ணியாவாசனமாகிய செயலை. புரிந்து - செய்து விட்டு. தொழுது - காளத்தி நாதரை வணங்கி. பெறுவன - பெற வேண்டியவற்றை. அவையாவன: அபிடேகத் தீர்த்தம், எண்ணெய், பரிவட்டம், அணிகலன்கள், மலர்கள், தூபக்கால், சாம்பிராணி, தீபம், கற்பூரத்தட்டு, கற்பூரம், அட்சதைகள், அடிக்கும் மணி, நிவேதனப் பொருள்கள் முதலியவை. கொண்டு - எடுத்துக் கொண்டு வந்து. தூய - பரிசுத்தமாகிய. பூசனை - காளத்தி நாதருடைய பூசையை. தொடங்கி - ஆரம்பித்து. வழு - குற்றம். இல் - இல்லாத; கடைக்குறை. திருமஞ்சனம் - அபிடேகம். ஏ: அசைநிலை. முதலாக - முதலிய. வரும் - அங்கங்களோடு அமையும். என்றது, பரிவட்டம் உடுத்தல், மலர் மாலையையும் அணிகலன்களையும் உருத்திராட்ச மாலையையும் அணிதல், அருச்சனை புரிதல், தீபம் காட்டுதல், தூபம் காட்டுதல், கற்பூர ஆரத்தி செய்தல், மணியை அடித்தல், பிரதட்சிணம் செய்தல், தோத்திரங் களைப் புரிதல் முதலியவை. பூசை முழுதும் - பூசை முழுவதையும். முறைமையின் - செய்ய வேண்டிய முறைப்படி. முடித்து - செய்து நிறைவேற்றி. முதல்வனார் - முதல்வராகிய காளத்தி நாதருடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகு பெயர். பணிந்தார் - சிவகோசரியார் வணங்கினார்.

பிறகு வரும் 140-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு தரையில் விழுந்து காளத்தி நாதரை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு, ''ஒப்பற்ற முதல்வனாக விளங்கும் பரமேசுவரனே!'' என பல தடவைகளால் தாம் அத்தியயனம் செய்து தெளிவை அடைந்திருந்த வேத மந்திரங்களால் தோத்திரம் புரிந்து ஒளியை வீசும் பிறைச் சந்திரனைப் புனைந்த சடாபாரத்தின் தொகுதியைப் பெற்ற திருமுடியை யும், அழகிய கண்களையும் பெற்றவராகிய காளத்தி நாதரிடம் விடை பெற்றுக் கொண்டு சினம் முதலிய உட்பகைகள் குறைந்த திருவுள்ளத்தைப் பெற்ற அழகிய அந்தணராகிய சிவகோசரியார் தாம் தவம் புரியும் காட்டை அடைந்தார்.' பாடல் வருமாறு:

''பணிந்தெழுந்து, 'தனிமுதலாம் பரன்'என்று பன்முறையால்
துணிந்தமறை மொழியாலே துதிசெய்ச் சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை அங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தி னிடைச்சார்ந்தார்.''

பணிந்து - அவ்வாறு தரையில் விழுந்து காளத்தி நாதரை வணங்கிவிட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. தனி - ஒப்பற்ற. முதலாம் - முதல்வனாக விளங்கும்; திணை மயக்கம். பரன் - பரமேசுவரனே; விளி. என்று - என. பல் - பல. முறையால் - தடவைகளால்; ஒருமை பன்மை மயக்கம். துணிந்த - தாம் முறைப்படி அத்தியயனம் செய்து தெளிவை அடைந்திருந்த. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். மொழியால் - மந்திரங்களால்; ஒருமை பன்மை மயக்கம். ஏ: அசைநிலை. துதி - தோத்திரம். செய்து - புரிந்து. சுடர் - ஒளியை வீசும். த்: சந்தி. திங்கள் - பிறைச் சந்திரனை. அணிந்த - புனைந்த. சடை முடிக்கற்றை

- தொகுதியாகிய சடாபாரத்தைப் பெற்ற திருமுடியையும். அங்கணரை - அழகிய கண்களையும் பெற்றவராகிய காளத்தி நாதரிடம்; உருபு மயக்கம். கணர்: இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். விடைகொண்டு - விடைபெற்றுக் கொண்டு. தணிந்த - காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்னும் ஆறு உட்பகைகளும் குறைந்த. மன - திருவுள்ளத்தைப் பெற்ற. த்: சந்தி. திரு - அழகிய. முனிவர் - அந்தணராகிய சிவகோசரியார். தபோவனத்தி னிடை - தாம் தவம் புரியும் காட்டை; உருபு மயக்கம். ச்: சந்தி. சார்ந்தார் - அடைந்தார்.

பிறகு வரும் 141-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இவ்வாறு அந்தப் பெருமையைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் தாம் தவம் புரியும் காட்டிற்குச் சென்றார்; இனிமேல் இதன் பிறகு மையின் நிறத்தைப் பெற்ற கருமையான தலை மயிரைக் கொண்ட காட்டு வேடர்களினுடைய தலைவராகிய திண்ணனார் தம்முடைய திருக்கரத்தில் அழகிய நிறத்தைக் கொண்ட வில்லை வளைத்து அம்புகளை எய்து காட்டில் விலங்குகளைத் தனியாக வேட்டையாடி அப்பால் புரிந்த அழகைப் பெற்ற செயல் திறத்தை இனிமேல் அடியேன் பாடுவேன்; அதனால் தீவினையாகிய பாவத்தின் வகையிலிருந்து அகலுவேன்.' பாடல் வருமாறு:

"இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினார்: இனிஇப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறம்மொழிவேன்; தீவினையின் திறம்
ஒழிவேன்."

இது சேக்கிழார் கூற்று. இவ்வண்ணம் - இவ்வாறு. பெரு - அந்தப் பெருமையைப் பெற்ற. முனிவர் -

*அந்தணராகிய சிவகோசரியார். ஏகினார் - தாம் தவம் புரியும் காட்டிற்குச் சென்றார். இனி - இனிமேல். இப்பால் - இதன் பிறகு. மை - மையைப் போன்ற. வண்ண - நிறத்தைக் கொண்ட. க்: சந்தி. கரும் - கருமையான. குஞ்சி - தலை மயிரைப் பெற்ற. வனவேடர் - காட்டில் வாழும் வேடர் களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பெருமானார் - தலைவராகிய திண்ணனார். கை - தம்முடைய திருக்கரத்தில். வண்ண - அழகிய நிறத்தைக் கொண்ட. ச்: சந்தி. சிலை - வில்லை. வளைத்து - வளைத்து அம்புகளை எய்து. க்: சந்தி. கான் - காட்டில். வேட்டை தனி ஆடி - விலங்குகளைத் தனியாக வேட்டையாடி. ச்: சந்தி. செய் - அப்பால் புரிந்த. வண்ண - அழகைப் பெற்ற. த்: சந்தி. திறம் - செயல் திறத்தை. மொழிவேன் - இனிமேல் அடியேன் பாடுவேன். தீவினையின் - அதனால் தீவினையாகிய பாவத்தின். திறம் - வகையிலிருந்து. ஒழிவேன் - அகலுவேன்.*

*பிறகு உள்ள 142-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'அந்த அழகிய காளத்தி மலைக்கு வெளியில் எழுந்தருளிய திண்ணனார் அடர்ச்சியாக உள்ள சிறு பாறைகளுக்கும் பெரிய மலைகளுக்கும் நடுவிலுள்ள சரிவுகளில் பெரிய காட்டுப்பன்றிகள் தினைக் கொல்லை யில் தினையை மேய்ந்துவிட்டு வருவனவற்றையும் வெட்டித் துண்டங்களாகச் செய்து மான்களின் கூட்டங்கள் காட்டிலிருந்து ஒரு வழியில் போய் ஏறுகின்ற நீர் நிலையினுடைய துறையில் ஒளிந்து நின்று கொண்டு அந்த மான் கூட்டங்களை அம்புகளை எய்து கொலை செய்தருளி.' பாடல் வருமாறு:*

"திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகல்
பெருமலைக ளிடைச்சரிவில் பெரும்பன்றி புனம்மேய்ந்து
வருவனவும் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை ஒளிநின்று கொன்றருளி."

இந்தப் பாடல் குளகம். திரு - அழகிய. மலையின் - காளத்தி மலைக்கு. புறம் - வெளியில். போன - எழுந்தருளிய. திண்ணனார் செறி - திண்ணனார் அடர்த்தியாக உள்ள. துறுகல் - சிறிய பாறைகளுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். பெரு - பெரிய. மலைகள் இடை - மலைகளுக்கும் நடுவில் உள்ள. ச்: சந்தி. சரிவில் - சரிவுகளில்; ஒருமை பன்மை மயக்கம். பெரும் - பெரிய. பன்றி - காட்டுப் பன்றிகள்; ஒருமை பன்மை மயக்கம். புனம் - தினைக் கொல்லையில். மேய்ந்து - தினையை மேய்ந்து விட்டு. வருவனவும் - வருவனவற்றையும்; உம்மை எதிரது தழீஇய எச்ச உம்மை. துணி - துண்டங்களாக; ஒருமை பன்மை மயக்கம். படுத்து - வாளால் வெட்டி. மான் - மான்களின்; ஒருமை பன்மை மயக்கம். இனங்கள் - கூட்டங்கள்; 'வகைகள்' எனலும் ஆம். கானிடை நின்று - காட்டிலிருந்து. ஒருவழி - ஒருவழியில். ச்: சந்தி. சென்று - போய். ஏறு - ஏறுகின்ற. துறை - நீர் நிலையின் துறையில். ஒளிநின்று - ஒளிந்து நின்று கொண்டு. கொன்றருளி - அந்த மான் கூட்டங்களை அம்புகளை எய்து கொலை செய்தருளி.

அடுத்து வரும் 143-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'திண்ணனார் தாம் பழகிய குரலினால் கலைமான் களைக் கூவி அழைத்து அவை இறக்கும் வண்ணம் அவற்றின் உடம்புகளை ஊடுருவிச் செல்லும் கூர்மையான நுனிகளைப் பெற்ற கொடிய அம்புகளை எய்தும், அடிச் சுவடிகளைப் பார்த்துச் சென்று மரை மான்களினுடைய கூட்டங்களை அவை உறங்கும் இடத்தில் அம்புகள் பாயும்படி எய்து கொன்றும், தொடர்ந்து கடமைகளை அம்புகள் எய்து கொலை செய்தும், வெயிலை உண்டாக்கும் கொடிய சூரியன் உச்சியை அடையத் தாம் தனியாகப் புரிந்த

வேட்டையாகிய தொழிலைத் திண்ணனார் முடித்துக் கொண்டார்.' பாடல் வருமாறு:

''பயில்விளியால் கலைஅழைத்துப் பாடுபெற ஊடுருவும்
அயில்முகவெம் கணைபோக்கி அடியொற்றி மரையினங்கள்
துயிலிடையிற் கிடைஎய்து தொடர்ந்துகட மைகள்எய்து
வெயில்படுவெம் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார்.''

பயில் - திண்ணனார் தாம் பழகிய. விளியால் - மானைப் போலக் கூவிய குரலினால். கலை - கலை மான்களை; ஒருமை பன்மை மயக்கம். அழைத்து - கூவி அழைத்து. ப்: சந்தி. பாடு - அவை இறத்தலை. பெற - அடையும் வண்ணம். ஊடுருவும் - அவற்றினுடைய உடம்புகளை ஊடுருவிச் செல்லும். அயில் - கூர்மையான. முக - நுனிகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வெம் - கொடுமையான. கணை - அம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். போக்கி - எய்தும். அடி - அடிகளின் சுவடுகளை; ஒருமை பன்மை மயக்கம்; ஆகு பெயர். ஒற்றி - பார்த்துச் சென்று. மரை - மரை என்னும் விலங்கினுடைய. இனங்கள் - கூட்டங்களை. துயில் - அவை உறங்கும். இடையில் - இடத்தில். கிடை - அம்புகள் கிட்டிப் பாயும்படி. எய்து - எய்து கொலை செய்தும். தொடர்ந்து - மேலும் தொடர்ந்து. கடமைகள் - கடமைகள் என்னும் விலங்குகளை. எய்து - அம்புகளை எய்து கொன்று வீழ்த்தியும். வெயில் - வெயிலை. படு - உண்டாக்கும். வெம் - கொடுமையான; வெப்பத்தைப் பெற்ற. கதிர் - சூரியன். முதிர - உச்சியை அடைய. த்: சந்தி. தனி - தனியாகப் புரிந்த. வேட்டை - வேட்டையாகிய. வினை - தொழிலை. முடித்தார் - முடித்துக் கொண்டார்.

பிறகு வரும் 144-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இறந்து போன காட்டு மிருகங்கள் எல்லா வற்றையும் பரவியுள்ள காட்டில் ஓரிடத்தில் வைத்து விட்டு, பக்கத்தில் தீக்கடை கோலினால் நெருப்பை உண்டாக்கி, பெரிய உடைவாளைத் தம்முடைய இடுப்பிலிருந்து உருவி எடுத்து அந்த மிருகங்களினுடைய உடம்புகளை அந்த வாளால் வெட்டி நறுமணம் கமழும் கொம்புத் தேனையும் மிகுதியாகத் தேனடைகளிலிருந்து முறித்துக் கொண்டு வந்து தேக்க மரத்தின் இலைகளால் வட்டமாக உள்ள பெரிய தொன்னைகளை பக்கத்தில் பக்கத்தில் இருக்கும்படி வைத்து அந்தத் தொன்னைகளில் தேனை நிரப்பித் திண்ணனார் வைத்துக் கொண்டார்.' பாடல் வருமாறு:

"பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தில் ஒருசூழல்
இட்டருகு தீக்கடைகோல் இருஞ்சுரிகை தனைஉருவி
வெட்டிநறும் கோற்றேனும் மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படஅமைத்தார்."

பட்ட - இறந்துபோன. வன - காட்டில் வாழும். விலங்கு - மிருகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றையும். படர் - பரவியுள்ள. வனத்தில் - காட்டில் உள்ள. ஒரு சூழல் - ஓரிடத்தில். இட்டு - வைத்து விட்டு. அருகு - பக்கத்தில். தீக்கடைகோல் - நெருப்பைக் கடைந்து உண்டாகும் கோலால் நெருப்பை உண்டாக்கி. இரும் - பெரிய. சுரிகைதனை - உடைவாளை. தன்: அசைநிலை. உருவி - தம்முடைய இடுப்பிலிருந்து உருவி எடுத்து. வெட்டி - அந்த விலங்குகளினுடைய உடம்புகளை அந்த வாளால் வெட்டி. நறும் - நறுமணம் கமழும். கோல் தேனும் - கொம்புத் தேனையும். மிக - மிகுதியாக. முறித்து - தேனடைகளிலிருந்து முறித்துக் கொண்டு வந்து. த்: சந்தி. தேக்கு - தேக்க மரத்தினுடைய. இலையால் - இலைகளால்; ஒருமை பன்மை மயக்கம். வட்டம் உறு - வட்டமான

வடிவத்தைப் பெற்றிருக்கும். பெரும் - பெரிய. கல்லை - தொன்னைகளை; ஒருமை பன்மை மயக்கம். மருங்கு - பக்கத்தில். புடை - பக்கத்தில். பட - இருக்கும்படி வைத்து அந்தத் தொன்னைகளில் தேனை நிரப்பி. அமைத்தார் - திண்ணனார் வைத்துக் கொண்டார்.

*பிறகு உள்ள 145-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

'விறகுக் கட்டைகளை முறித்து ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைத்து நெருப்பைக் கடையும் அரணிக் கட்டையில் வெப்பமான நெருப்பைக் கடைந்து உண்டாக்கி மிகுதியாகக் கொழுந்து விட்டு எரியும் வண்ணம் வளர்த்துத் தாம் கொன்ற விலங்குகளின் உடம்புகளைக் கொத்திக் கூர்மையான நுனியை உடைய அம்பினால் குடைந்து குழியை உண்டாக்கிக் கொழுப்பை வாளால் அரிந்து கொண்டு அவ்வாறு வந்தவற்றை எடுத்துக் கொண்டு எழுந்து எரியும் நெருப்பில் வதக்க வேண்டியவற்றை வதக்கி.' பாடல் வருமாறு:

"இந்தனத்தை முறித்தடுக்கி எரிகடையும் அரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்
கொந்திஅயில் அலகம்பால் குட்டமிட்டுக் கொழுப்பரிந்து
வந்தனகொண் டெழும்தழலில் வக்குவன வக்குவித்து."

இந்தப் பாடல் குளகம். இந்தனத்தை - விறகுக் கட்டைகளை; ஒருமை பன்மை மயக்கம். முறித்து - ஒடித்து. அடுக்கி - ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கிவைத்து. எரி - நெருப்பை. கடையும் - தீக்கடை கோலால் கடையும். அரணியினில் - அரணிக்கட்டையில். வெம் - வெப்பமான. தழலை - நெருப்பை. ப்: சந்தி. பிறப்பித்து - கடைந்து உண்டாக்கி. மிக - மிகுதியாக. வளர்த்து - கொழுந்து விட்டு எரியுமாறு வளர்ந்து. மிருகங்கள் - தாம் வேட்டையாடிக்

கொன்ற விலங்குகளினுடைய உடம்புகளை; ஆகு பெயர். கொந்தி - வாளால் கொத்தி. அயில் - கூர்மையை உடைய. அலகு - நுனியைப் பெற்ற. அம்பால் - அம்பினால். குட்டம் இட்டு - குடைந்து குழியை உண்டாக்கி. க்: சந்தி. கொழுப்பு - கொழுப்பை. அரிந்து - வாளால் அரிந்து கொண்டு. வந்தன - அவ்வாறு வந்தவற்றை. கொண்டு - எடுத்துக் கொண்டு. எழும் - எழுந்து எரியும். தழலில் - நெருப்பில். வக்குவன - வதக்க வேண்டியவற்றை. வக்குவித்து - வதங்கச் செய்து. வதக்குவதை வக்குவது என்று கூறுவது வேடர்களின் குழூஉக்குறி.

பிறகு உள்ள 146-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கூர்மை வாய்ந்த அம்புகளால் சிதைத்து உருண்டைகளாக அமைப்பதையும், வகை வகையாகப் பிரித்து அமைப்பதையும் புரிந்து அந்த விலங்குகளி னுடைய உடம்புகளில் இருப்பவை ஆகிய அங்கங்களி னுடைய மாமிசங்கள் எல்லாவற்றையும் வாளால் அரிந்து ஒரு தொன்னையில் வைத்து அவற்றைச் சுடும்படி நீண்ட அம்பில் கோத்து எடுத்து நெருப்பில் நன்றாக வாட்டிப் பரிசுத்தமான திருவமுதைக் காளத்தி நாதருக்குப் படைப்பதற்காக அந்த மாமிசங்களினுடைய சுவையைத் திண்ணனார் பார்க்கலானார்.' பாடல் வருமாறு:

"வாயம்பால் அழிப்பதுவும் வகுப்பதுவும் செய்தவற்றின்
ஆயஉறுப் பிறைச்சிஎலாம் அரிந்தொருகல் லையில்இட்டுக்
காயநெடும் கோல்கோத்துக் கனலின்கண் உறக்காய்ச்சித்
தூயதிரு அமுதமைக்கச் சுவைகாணல் உறுகின்றார்."

வாய் - கூர்மை வாய்ந்த. அம்பால் - அம்புகளால்; ஒருமை பன்மை மயக்கம். அழிப்பதுவும் - சிதைத்து உருண்டைகளாக அமைப்பதையும். வகுப்பதுவும் - வகை

வகையாகப் பிரித்து அமைப்பதையும். செய்து. - புரிந்து. அவற்றின் - அந்த விலங்குகளினுடைய. ஆய - இருப்பவை ஆகிய. உறுப்பு - அங்கங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இறைச்சி - மாமிசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றையும்; இடைக்குறை. அரிந்து - தம்முடைய உடை வாளால் அறுத்து. ஒரு கல்லையில் - ஒரு பெரிய தொன்னைக்குள். இட்டு - வைத்து. க்: சந்தி. காய - அவற்றைச் சுடுவதற்காக. நெடும் - நீளமாக இருக்கும். கோல் - ஓர் அம்பில். கோத்து - கோத்து எடுத்து. க்: சந்தி. கனலின்கண் - நெருப்பில். உற - நன்றாக. க்: சந்தி. காய்ச்சி - வாட்டி. த்: சந்தி. தூய - பரிசுத்தமாகிய. திருஅமுது - திருஅமுதை; உணவை. அமைக்க - காளத்தி நாதருக்குப் படைப்பதற்காக. ச்: சந்தி. சுவை - அந்த மாமிசங்களி னுடைய சுவையை. காணல் உறுகின்றார் - திண்ணனார் பார்க்கலானார்; கால மயக்கம்.

பின்பு வரும் 147-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கணக்கைக் கடந்த தேவர்களுக்குப் படைக்கும் உணவை மேற்கொண்டு உண்ணச் செய்யும் சிவந்த நிறத்தைப் பெற்ற நெருப்பின் வாயில் வைத்தது என்று கூறுமாறு காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் தலைவராகிய காளத்தி நாதருக்கு உவப்பாகும் இயல்பைத் தாம் சோதனை பண்ணிப் பார்த்து அமைப்பதற்காகத் திண்ணனார் தம்முடைய அழகிய வாயில் அந்த மாமிசங் களாகிய திருவமுதை வைத்துக் கொண்டார்.' பாடல் வருமாறு:

"எண்ணிறந்த கடவுளருக் கிடும்உணவு கொண்டூட்டும்
வண்ணஎரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாம்சோதித் தமைப்பதற்குத்
திண்ணனார் திருவாயில் அமைத்தார்ஊன் திருஅமுது."

எண் - கணக்கை. இறந்த - கடந்த. கடவுளருக்கு - தெய்வங்களுக்கு. இடும் - படைக்கும். உணவு - உணவை. கொண்டு - தான் எடுத்துக் கொண்டு. ஊட்டும் - அவர்களை உண்ணச் செய்யும். வண்ண - சிவப்பு நிறத்தைப் பெற்ற. எரி - நெருப்பினுடைய. வாயின் கண் - வாயில். வைத்தது - இட்டது. என - என்று கூறும் வண்ணம்; இடைக்குறை. நெருப்பைத் தேவர்களின் வாய் என்பர். க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும். அண்ணலார்க்கு - தலைவராகிய காளத்தி நாதருக்கு. ஆம் - உவப்பாகும். பரிசு - இயல்பை. 'தாம்' என்றது திண்ணனாரை. சோதித்து - சோதனை செய்து. இது நல்லதா என்பதைத் தெரிந்து கொள்வதற்காகச் சோதனை செய்தார் என்றவாறு. அமைப்பதற்கு - அமைப்பதற்காக. த்: சந்தி. திண்ணனார் திருவாயில் - திண்ணனார் தம்முடைய அழகிய வாயில். ஊன் - மாமிசங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். திருஅமுது - திருஅமுதை. அமைத்தார் - வைத்துக் கொண்டார்.

பிறகு வரும் 148-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நல்ல பக்குவத்தை அடையும்படி நெருப்பில் வெந்து தம்முடைய நாக்கில் வைக்கும் மாமிசங்களை ஒரு தொன்னையில் வைத்து அவற்றின்மேல் தேனைத் தேனடையிலிருந்து பிழிந்து கலந்து அவ்வாறு கலந்த அந்த மாமிசங்களை எடுத்துக் கொண்டு மிக வேகமாகச் சென்று திருப்பள்ளித் தாமத்தையும் தூய்மையான அபிடேக நீரையும் விரைவில் முன்பு செய்ததைப் போலத் தம்மோடு எடுத்துக் கொண்டு திண்ணனார் காளத்தி மலைக்கு வந்து சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"நல்லபத முறவெந்து நாவின்கண் இடும்இறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமும்தூய் மஞ்சனமும்
ஒல்லையினில் முன்புபோல் உடன்கொண்டு வந்தணைந்தார்."

நல்ல பதம் - நல்ல பக்குவம். உற - உண்டாகுமாறு. வெந்து - நெருப்பில் வெந்து. நாவின்கண் - தம்முடைய நாக்கில். இடும் - வைக்கும். இறைச்சி - மாமிசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கல்லையினில் - ஒரு தொன்னைக்குள். படைத்து - வைத்து. த்: சந்தி. தேன் - அவற்றின் மேல் தேனை. பிழிந்து - தாம் கொண்டு வந்திருந்த தேனடையிலிருந்து பிழிந்து. கலந்து அது - கலந்து அவ்வாறு கலந்த மாமிசங்களை. அது: ஒருமை பன்மை மயக்கம். கொண்டு - எடுத்துக்கொண்டு. வல் - மிக. விரைந்து - வேகமாகச் சென்று. திருப்பள்ளித் தாமமும் - திருப்பள்ளி எழுச்சியின்போது காளத்தி நாதருக்கு அணியும் மாலையையும். தூய் - தூய்மையான. மஞ்சனமும் - பொன்முகலி யாற்றிலிருந்து கொண்டு வந்த அபிடேக நீரையும். ஒல்லையினில் - விரைவில். முன்பு போல் - முன்பு செய்ததைப் போல. உடன் - தம்மோடு. கொண்டு - எடுத்துக் கொண்டு. வந்து அணைந்தார் - திண்ணனார் காளத்தி மலைக்கு வந்து சேர்ந்தார்.

அடுத்து உள்ள 149-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு வந்து அழகிய காளத்தி மலையின் மேல் ஏறி காட்டில் வாழும் வேடர்களுடைய தலைவராகிய திண்ணனார் தேவர்களினுடைய தலைவராகிய காளத்தி நாதரை அடைந்து பிராமணராகிய சிவகோசரியார் புரிந்த பூசையில் அருச்சனை செய்த மலர்களையும் வில்வம் முதலிய பத்திரங்களையும் காளத்தி நாதராகிய சிவலிங்கப் பெருமானாருடைய தலையிலிருந்து முன்பு செய்ததைப் போலத் தள்ளிப் போக்கிய பிறகு முன்பு புரிந்த முறைப்படி தம்முடைய பூசையாகிய செயலைச் செய்து முடிப்பவரானார்.' பாடல் வருமாறு:

"வந்துதிருக் காளத்தி மலைஏறி வனசரர்கள்
தம்தலைவ னார்இமையோர் தலைவனார் தமைஎய்தி
அந்தணனார் பூசையினை முன்புபோல் அகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயல்முடிப்பார்."

வந்து - அவ்வாறு வந்து. திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலை ஏறி - காளத்தி மலையின் மேல் ஏறி. வனசரர்கள் தம் - காட்டில் வாழும் வேடர்களினுடைய. தம்: அசைநிலை. தலைவனார் - தலைவராகிய திண்ணனார். இமையோர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். தலைவனார் தமை - தலைவராகிய காளத்தி நாதரை. தம்: அசை நிலை. எய்தி - அடைந்து. அந்தணனார் - பிராமணராகிய சிவகோசரியார். பூசையினை - புரிந்த பூசையில் அருச்சனை செய்த மலர்களையும் வில்வம் முதலிய பத்திரங்களையும்; ஆகுபெயர். முன்பு போல் - முன்பு தாம் செய்ததைப் போல. அகற்றிய - தள்ளிப் போக்கிய. பின் - பிறகு. முந்தை - முன்பு புரிந்த. முறை - முறைப்படி. தம்முடைய பூசனையின் - தம்முடைய பூசையாகிய. 'இன்' வேண்டாவழி வந்த சாரியை. செயல் - செயலை. முடிப்பார் - செய்து நிறைவேற்றுபவரானார்.

பின்பு வரும் 150-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் தாம் கொண்டு வந்திருந்த மாமிசங்களாகிய திருவமுதைத் தொன்னையோடு காளத்தி நாதருக்கு முன்னால் வைத்து, "இந்தத் திருவமுது முன்பு அடியேன் படைத்ததைக் காட்டிலும் நல்ல சுவையைப் பெற்றது; காட்டுப் பன்றியோடு, புள்ளிமான், கலைமான்கள், மரைமான், கடமை ஆகிய இந்த விலங்குகளினுடைய உடம்புகளில் இருப்பவையான அவயவங்களினுடைய

மாமிசங்களாகிய திருவமுதை அடியேனும் சுவையைச் சோதனை செய்து பார்த்துத் தெரிந்து கொண்டேன்; இது தேனையும் சேர்த்துக் கலந்தது; இது தித்திப்பாக இருக்கும்.'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"'ஊனமுது கல்லையுடன் வைத்'திது; முன்னையின் நன்றால்;
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை இவையிற்றில்
ஆனஉறுப் பிறைச்சிஅமு தடியேனும் சுவைகண்டேன்;
தேனுமுடன் கலந்ததிது; தித்திக்கும்,' எனமொழிந்தார்."

ஊன் - திண்ணனார் தாம் கொண்டு வந்திருந்த மாமிசங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். அமுது - திருவமுதை. கல்லையுடன் - அவற்றை வைத்திருந்த தொன்னையோடு. வைத்து - காளத்தி நாதருக்கு முன்னால் வைத்து. இது - இந்த மாமிசங்களாகிய திருவமுது. முன்னையின் - முன்பு அடியேன் படைத்தவற்றைக் காட்டிலும். நன்று - நல்ல சுவையைப் பெற்றது. ஆல்: அசை நிலை. ஏனமொடு - காட்டுப் பன்றியோடு. மான் - புள்ளிமான். கலைகள் - கலைமான்கள். மரை - மரைமான். கடமை - கடமை என்னும் விலங்கு. இவையிற்றில் - ஆகிய இந்த விலங்குகளினுடைய உடம்புகளில். ஆன - இருப்பவையான. உறுப்பு - அவயவங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இறைச்சி - மாமிசங்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். அமுது - திருவமுதை. 'அடியேனும்' என்றது திண்ணனார் தம்மையே குறித்தது. சுவை - சுவையை. கண்டேன் - சோதனை செய்து பார்த்துத் தெரிந்து கொண்டேன். இது - இந்தத் திருஅமுது. தேனும் - தேனையும். உடன்கலந்தது - சேர்த்துக் கலந்தது. தித்திக்கும் - இது இனிப்பாக இருக்கும். என - என்று; இடைக்குறை. மொழிந்தார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

*பிறகு உள்ள 151-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

*'இந்த முறையில் திண்ணனார் காளத்தி நாதருக்குத் திருவமுதைப் படைத்து உண்ணச் செய்து தம்முடைய ஒப்புக் கூறுவதற்கு அருமையாகிய பூசையைப் புரிந்து அந்த வழியில் நடப்பவர் எந்தச் சமயத்திலும் மேலும் மேலும் தம்முடைய திருவுள்ளத்தில் தோன்றி எழும் பக்தியினால் காளத்தி அப்பருக்கு எதிரில் இருந்து கொண்டு இரவு நேரங்களில் துயில மாட்டார்; பகல் நேரங்களில் காட்டுக்குச் சென்று விலங்குகளை வேட்டையாடுவார்.' பாடல் வருமாறு:*

"இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியில் ஒழுகுவார்
எப்பொழுதும் மேன்மேல்வந் தெழும்அன்பால் காளத்தி
அப்பர்எதிர் அல்லுறங்கார்; பகல்வேட்டை ஆடுவார்."

*இப்பரிசு - இந்த முறையில் திண்ணனார். திருவமுது - திருவமுதை. செய்வித்து - காளத்தி நாதருக்குப் படைத்து உண்ணச் செய்து. த்: சந்தி. தம்முடைய ஒப்பரிய - ஒப்புக் கூறுவதற்கு அருமையாகிய தம்முடைய. பூசனை - பூசையை. செய்து - புரிந்து. அந்நெறியில் - அந்த வழியில். ஒழுகுவார் - நடப்பவராகிய அவர். எப்பொழுதும் - எந்த வேளையிலும். மேன்மேல் - மேலும் மேலும். வந்து எழும் - தம்முடைய திருவுள்ளத்தில் தோன்றி எழும். அன்பால் - பக்தியினால். காளத்தி அப்பர் - காளத்தி அப்பருக்கு. எதிர் - எதிரில் இருந்து கொண்டு. அல் - இரவு நேரங்களில்; ஒருமை பன்மை மயக்கம். உறங்கார் - துயில மாட்டார். பகல் - பகல் நேரங்களில்; ஒருமை பன்மை மயக்கம். வேட்டை ஆடுவார் - காளத்தி மலையிலிருந்து இறங்கி வந்து காட்டுக்குச் சென்று விலங்குகளை வேட்டை ஆடுவார்.*

அடுத்து வரும் 152-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'பெருமையைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் ஒவ்வொரு நாளும் காளத்தி மலைக்கு வந்து சேர்ந்து காட்டில் உள்ள வேடர்களுக்கு அரசராகிய திண்ணனார் புரியும் பூசைக்கு மிக மிகவும் தளர்ச்சியை அடைந்து இவை கெட்டவை என்று எண்ணித் திண்ணனார் பூசை செய்த நிர்மாலியங்களைத் தள்ளிவிட்டுச் சைவாகமம் கூறிய விதியோடு ஆகும் முறையில் காளத்தி நாதருக்கு அருச்சனையைப் புரிந்து அந்த வழியில் நடப்பவரானார்.' பாடல் வருமாறு:

"மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாம்முயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமைஎன அதுநீக்கிச் செப்பியஆ கமவிதியால்
ஆம்முறையில் அர்ச்சனைசெய் தந்நெறியில் ஒழுகுவரால்."

மா - பெருமையைப் பெற்ற. முனிவர் - அந்தணராகிய சிவகோசரியார். நாடோறும் - ஒவ்வொரு நாளும். வந்து - காளத்தி மலைக்கு வந்து. அணைந்து - சேர்ந்து. வன - காட்டில் வாழும். வேந்தர் தாம் - வேடர்களுக்கு அரசராகிய திண்ணனார். முயலும் - புரியும். பூசனைக்கு - பூசைக்கு. ச்: சந்தி. சால - மிக. மிக - மிகவும். த்: சந்தி. தளர்வு - தளர்ச்சியை. எய்தி - அடைந்து. த்: சந்தி. தீமை - இவை கெட்ட பான்மையை உடையவை. என - என்று எண்ணி; இடைக்குறை. அது - திண்ணனார் பூசை செய்த அந்த நிர்மாலியங்களை; ஒருமை பன்மை மயக்கம். நீக்கி - தள்ளிவிட்டு. ச்: சந்தி. செப்பிய ஆகம விதியால் - சைவாகமம் கூறிய விதியோடு; உருபு மயக்கம். ஆம் - ஆகும். முறையில் - முறைமையில். அர்ச்சனை - காளத்தி நாதருக்கு அருச்சனையை. செய்து - புரிந்து. அந்நெறியில் -

*அந்த வழியில். ஒழுகுவர் - நடப்பவரானார். ஆல்: ஈற்றசை நிலை.*

*பிறகு உள்ள 153-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'நாணன் என்னும் வேடனோடு காடன் என்னும் வேடன் சென்று திண்ணனாருடைய தந்தையாகிய நாகனுக்குத் திண்ணனாருடைய நிலையை எடுத்துக் கூறிய பிறகு அந்த நாகன் உணவும் துயிலும் இல்லாமல் தெய்வ ஆவேசம் வரும் தன்மையைப் பெற்ற தேவராட்டியையும் அழைத்துக் கொண்டு தான் விரும்பும் தன்னுடைய புதல்வராகிய திண்ணனாரிடத்தில் வந்து அவர் மேற்கொண்ட நிலைகள் எல்லாவற்றையும் தங்களுடைய சாதிக்கு மாறுபாடாக இருப்பதைத் தெரிந்து கொள்ளும் வழியில் கூறியும் அந்தத் திண்ணனார் தங்களுடைய எண்ணத்தின்படி வாராமல் இருந்ததனால் மேற்கொண்டு எதையும் செய்யாமல் அந்த வேடர்கள் விட்டு விட்டார்கள்.' பாடல் வருமாறு:*

"நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊனும்உறக் கமும்இன்றி அணங்குறைவா ளையும் கொண்டு
பேணுமாக னார்தம்பால் வந்தெல்லாம் பேதித்துக்
காணுநெறி தங்கள்குறி வாராமல் கைவிட்டார்."

*நாணனொடு - நாணன் என்னும் வேடனோடு. காடனும் - காடன் என்னும் வேடனும். போய் - சென்று. நாகனுக்கு - திண்ணனாருடைய தந்தையாகிய நாகனுக்கு. ச்:சந்தி. சொல்லிய - திண்ணனாருடைய நிலையை எடுத்துக் கூறிய. பின் - பிறகு. ஊனும் - அந்த நாகன் உணவும். உறக்கமும் - துயிலும். இன்றி - இல்லாமல். அணங்கு உறைவாளையும் - தெய்வ ஆவேசம் வரும் தன்மையைப் பெற்ற தேவராட்டியையும். கொண்டு - தன்னோடு*

அழைத்துக் கொண்டு. பேணும் - தான் விரும்பும்; 'தான் பாதுகாக்கும்' எனலும் ஆம். மகனார் தம்பால் - தன்னுடைய புதல்வராகிய திண்ணனாரிடத் திற்கு. தம்: அசை நிலை. வந்து - நாகன் வந்து. எல்லாம் - அவர் மேற்கொண்ட நிலைகள் எல்லாவற்றையும். பேதித்து - தங்களுடைய சாதிக்கு மாறுபாடாக இருப்பதைத் தெரிந்து கொள்ளும் வழியில் கூறி அவருடைய எண்ணத்தை மாற்ற முயன்றும். க்: சந்தி. காணும் - அந்தத் திண்ணனார் தான் கூறியதைத் தெரிந்து கொள்ளும். நெறி - வழிக்கு. தங்கள் - தங்களுடைய. குறி - எண்ணத்தின்படி. வாராமல் - வாராமல் இருந்ததனால். கைவிட்டார் - மேற்கொண்டு எந்த முயற்சியையும் செய்யாமல் விட்டு விட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பின்பு வரும் 154-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் முன்னால் அழகிய காளத்தி மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் முதல்வராகிய காளத்தி நாதர் வழங்கிய திருவருட் பார்வையால் இன்பத்தை உண்டாக்கும் ரசவாதத்தில் இரும்பு என்னும் உலோகம் தங்கமாக மாறியதைப் போலத் தம்முடைய திருமேனி யினுடைய இயல்பும், புண்ணியம் பாவம் என்னும் வினைகள் இரண்டும், உயிர்களிடம் வந்து சேரும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும் அற்றுப் போக பக்தியே தம்முடைய திருமேனிப் பிழம்பாக மாறியவராகிய அந்தத் திண்ணனார் தம்முடைய எண்ணத்திற்குள் அடங்கும் அளவைப் பெற்ற பெருமையை உடையவரோ?' பாடல் வருமாறு:

"முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கை
தன்பரிசும் வினைஇரண்டும் சாரும்மலம் மூன்றும்அற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ?"

முன்பு - முன்னால் திண்ணனார். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். முதல்வனார் - முதல்வராகிய காளத்திநாதர். அருள் நோக்கால் - வழங்கிய திருவருட் பார்வையால். இன்பு - இன்பத்தை. உறு - உண்டாக்கும். வேதகத்து - ரசவாதத்தில் பரிச வேதியினால். இரும்பு - இரும்பு என்னும் உலோகம். பொன் - தங்கம். ஆனாற்போல் - ஆக மாறினாற் போல. யாக்கைதன் - தம்முடைய திருமேனியின்; தன்: அசை நிலை. பரிசும் - இயல்பும். வினை - வினைகள் ஆகிய; ஒருமை பன்மை மயக்கம். இரண்டும் - புண்ணியம் பாவம் என்னும் இரண்டும். சாரும் - உயிர்களுக்கு வந்து சேரும். மலம் - மலங்கள்; ஒருமை பன்மை மயக்கம். மூன்றும் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றும். அற - தம்மிடமிருந்து அற்றுப் போக. அன்பு - பக்தியே. பிழம்பாய் - தம்முடைய திருமேனிப் பிழம்பாக. த்: சந்தி. திரிவார் - மாறியவராகிய. அவர் - அந்தத் திண்ணனார். கருத்தின் - தம்முடைய எண்ணத்திற்குள். இது சேக்கிழார் தம்மைக் குறித்தது. அளவினரோ - அடங்கும் அளவைப் பெற்ற பெருமையை உடையவரோ? அல்லர் என்பது கருத்து.

பின்பு உள்ள 155-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த முறையில் பக்தராகிய திண்ணனார் தமக்குத் தெரிந்த வழியில் காளத்தி நாதருக்குப் பூசையைப் புரிந்துவர, நிலை பெற்று விளங்கிய சைவ ஆகமம் விதித்துள்ள முறையோடு பெருமையைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் காளத்தி நாதருக்கு அருச்சனையைப் புரிந்து விட்டு, ''இந்த இடத்தில் அடியேனுடைய தலைவனாகிய காளத்திநாதனே, இந்த அனுசிதமான செயலைப் புரிந்தவரை அடியேன் பார்க்க முடியவில்லை; தேவரீருடைய

திருவருளினால் இதனைப் போக்கித் திருவருள் புரிய வேண்டும்.'' என்று பிரார்த்திக்க.' பாடல் வருமாறு:

''அந்நிலையில் அன்பனார் அறிந்தநெறி பூசிப்ப
மன்னியஆ கமப்படியால் மாமுனிவர் அருச்சித்,'திங்
கென்னுடைய நாயகனே, இதுசெய்தார் தமைக்காணேன்;
உன்னுடைய திருவருளால் ஒழித்தருள வேண்டும்.'என.''

இந்தப் பாடல் குளகம். *அந்நிலையில்* - அந்த முறையில். *அன்பனார்* - பக்தராகிய திண்ணனார். *அறிந்த* - தமக்குத் தெரிந்த. *நெறி* - வழியில். *பூசிப்ப* - காளத்தி நாதருக்குப் பூசையைப் புரிந்து கொண்டுவர. *மன்னிய* - நிலைபெற்று விளங்கிய. *ஆகமப்படியால்* - சைவாகமம் வித்துள்ள முறையோடு; உருபு மயக்கம். *மா* - பெருமையைப் பெற்ற. *முனிவர்* - அந்தணராகிய சிவகோசரியார். *அருச்சித்து* - காளத்தி நாதருக்கு அருச்சனையைப் புரிந்து விட்டு. *இங்கு* - இந்த இடத்தில். *என்னுடைய* - அடியேனுடைய. *நாயகனே* - தலைவனாகிய காளத்தி நாதனே. *இது* - இந்த அனுசிதமான செயலை. *செய்தார்தமை* - செய்தவரை; தம்: அசை நிலை. க்: சந்தி. *காணேன்* - அடியேன் பார்க்க முடியவில்லை. *உன்னுடைய* - தேவரீருடைய. *திருவருளால்* - திருவருளினால். *ஒழித்தருள* - இதனைப் போக்கித் திருவருள் புரிய. *வேண்டும் என* - வேண்டும் என்று பிரார்த்திக்க. என: இடைக்குறை.

பிறகு வரும் 156-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அன்றைக்கு இராத்திரியில் சொப்பனத்தில் தம்முடைய திருவருளைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியாரிடத்தில் மின்னலைப் போல விளங்கும் சடாபாரத்தைத் தம்முடைய திருமுடியின் மேற்கொண்ட அந்தணராகிய காளத்தி நாதர் எழுந்தருளி வந்து, ''வலிமையையும் ஆற்றலையும் பெற்ற வேடன் என்று

அந்தத் திண்ணனை நீ எண்ணாதே; அவனுடைய செயலை நன்றாக யாம் கூறக் கேட்பாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு.' பாடல் வருமாறு:

"அன்றிரவு கனவிண்கண் அருள்முனிவர் தம்பாலே
மின்திகழும் சடைமவுலி வேதியர்தாம் எழுந்தருளி
'வன்திறல்வே டுவன்என்று மற்றவனை நீநினையேல்;
நன்றவன்தன் செயல்தன்னை நாம்உரைப்பக் கேள்.'என்று."

இந்தப் பாடலும் குளகம். அன்று - அன்றைக்கு. இரவு - இராத்திரியில். கனவின்கண் - சொப்பனத்தில். அருள் - தம்முடைய திருவருளைப் பெற்ற. முனிவர் தம்பால் - அந்தணராகிய சிவகோசரியாரிடத்தில். தம்: அசை நிலை. ஏ: அசைநிலை. மின் - மின்னலைப் போல. திகழும் - விளங்கும். சடை - சடாபாரத்தையுடைய. மவுலி - திருமுடியைப் பெற்ற. வேதியர் தாம் - அந்தணராகிய காளத்தி நாதர். தாம்: அசை நிலை. எழுந்தருளி - எழுந்தருளி வந்து. வன் - வலிமையையும். திறல் - ஆற்றலையும் பெற்ற. வேடுவன் - வேடன். என்று - என. மற்று: அசை நிலை. அவனை - அந்தத் திண்ணனை. நீ நினையேல் - நீ எண்ணாதே. அவன்தன் - அவனுடைய. தன்: அசைநிலை. செயல் தன்னை - செயலை. தன்: அசை நிலை. நன்று - நன்றாக. நாம் - யாம். உரைப்ப - உனக்குக் கூற. க்: சந்தி. கேள் - நீ கேட்பாயாக. என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு.

பிறகு வரும் 157-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திண்ணனுடைய திருவுருவம் எல்லாம் எல்லாக் காலத்திலும் நம்மிடத்தில் கொண்ட பக்தியே; அவனுடைய அறிவு முழுவதும் நம்மைத் தெரிந்து கொள்ளும் அறிவே; எல்லாக் காலத்திலும் அவனுடைய செய்கைகள் யாவும் நமக்கு இனியவை ஆகும்; எல்லாக்

காலத்திலும் அவனுடைய நிலை இவ்வண்ணம் இருப்பதே; இதனை நீ தெரிந்து கொள்வாயாக.'' என்று காளத்திநாதர் சிவகோசரியாருக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்வாரானார்.' பாடல் வருமாறு:

"'அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீ'என் றருள்செய்வார்."

அவனுடைய - அந்தத் திண்ணனுடைய. வடிவு - திருவுருவம். எல்லாம் - முழுவதும். நம்பக்கல் - எம்மிடத்தில். அன்பு - வைத்திருக்கும் பக்தியே. என்றும் - எக்காலத்திலும். அவனுடைய - அந்த வேடனுடைய. அறிவு எல்லாம் - அறிவு அனைத்தும். நமை - நம்மை; இடைக்குறை. அறியும் - தெரிந்து கொள்ளும். அறிவு - அறிவேயாகும். என்றும் - எப்போதும். அவனுடைய - அந்தப் பக்தனுடைய. செயல் - செய்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - யாவும். நமக்கு - எமக்கு. இனிய - இனியவை. ஆம் - ஆகும். என்றும் - எந்தக் காலத்திலும். அவனுடைய - அந்த வேட்டுவனுடைய. நிலை - உண்மையான நிலைமை. இவ்வாறு - இவ்வண்ணம் இருப்பது. அறிநீ - இதனை நீ தெரிந்து கொள்வாயாக. என்று - என. அருள்செய்வார் - காளத்திநாதர் சிவகோசரியாரிடம் கனவில் திருவாய் மலர்ந்தருளிச் செய்வாரானார்.

அடுத்து உள்ள 158-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இந்தக் காளத்தி மலைக்கு வந்து அந்தத் திண்ணன் புரியும் பூசைக்கு முன்னால் என்மேல் சிவகோசரியார் முன்பு அருச்சனை செய்த அரும்புகளோடு மென்மையான மலர்களும் ஆகிய அவற்றைத் தள்ளிவிடும் பேராவலால்

விருப்பத்தைப் பெறும் பக்தியென்னும் வெள்ளத்தை யுடைய கால்வாய் பெருகிவந்தது என்று கூறுமாறு என்மேல் படிந்த அவனுடைய செருப்பை அணிந்த திருவடி அந்த இளமைப் பருவத்தைக் கொண்ட முருகனுடைய திருவடியை விடச் சிறப்பைப் பெற்றது.' பாடல் வருமாறு:

"பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவைநீக்கும் ஆதரவால்
விருப்புறும்அன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படிஅவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்."

இந்தப் பாடலும் காளத்திநாதர் சிவகோசரியாரிடம் கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளியதைக் கூறுவது. பொருப்பினில் - இந்தக் காளத்தி மலைக்கு; உருபு மயக்கம். வந்து அவன் - அந்தத் திண்ணன். செய்யும் - புரியும். பூசனைக்கு - பூசைக்கு. முன்பு - முன்னால். என்மேல் - என்னுடைய தலையின் மேல். முன்னை - முன்பு சிவகோசரியார் செய்த அருச்சனையில் போட்ட. அருப்பு - அரும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். உறு - அடைந்த. மென் - மென்மையான. மலர் - மலர்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவை - ஆகிய அவற்றை. நீக்கும் - தள்ளும். ஆதரவால் - பேராவலால். விருப்புறும் - விருப்பத்தை அடையும். அன்பு - பக்தி. எனும் - என்று கூறப்பெறும்; இடைக்குறை. வெள்ள - வெள்ளத்தை உடைய. க்: சந்தி. கால் - கால்வாய். பெருகிற்று - பெருகி வந்தது. என - என்று கூறுமாறு; இடைக்குறை. வீழ்ந்த - படிந்த. செருப்பு - அவனுடைய செருப்பை அணிந்த. அடி - திருவடி. அவ்விளம் பருவ - அந்த இளமைப் பருவத்தோடு விளங்கும். ச்: சந்தி. சேய் - முருகப் பெருமானுடைய. அடியின் - திருவடியைக் காட்டிலும். சிறப்பு - சிறப்பை. உடைத்து - பெற்றது. ஆல்: ஈற்றசை நிலை.

*பிறகு வரும் 159-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'உருக்கத்தை அடைந்த பக்தி ஒழிவு இல்லாமல் நிரம்பிய அந்தத் திண்ணனுடைய வடிவம் என்று கூறப்பெறும் பெருகி எழுந்த கொள்கலமாகிய முகத்தில் உள்ள வாயிலிருந்து விளங்கி இனியதாக உமிழப் படுவதால் ஒப்பற்ற சன்னு என்னும் முனிவனுடைய காது வெளிப்படுத்தும் உயர்ச்சியைக் கொண்ட கங்கையாறு முதலாகிய தீர்த்தங்களில் கரையை மோதும் நீரைக் காட்டிலும் எனக்கு அந்தத் திண்ணனுடைய வாய் உமிழும் நீர் தூய்மையை உடையது.' பாடல் வருமாறு:*

"உருகியஅன் பொழிவின்றி நிறைந்தஅவன் உருவென்னும்
பெருகியகொள் கலமுகத்தில் பிறங்கிஇனி தொழுகுதலால்
ஒருமுனிவன் செவிஉமிழும் உயர்கங்கை முதல்தீர்த்தப்
பொருபுனலின் எனக்கவன்வாய் உமிழும்புனல் புனிதம்."

*இந்தப் பாடலும் காளத்திநாதர் சிவகோசரியாருடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததைக் கூறுவது. உருகிய - உருக்கத்தை அடைந்த. அன்பு - பக்தி. ஒழிவு - இடையீடு. இன்றி - இல்லாமல். நிறைந்த - நிரம்பியுள்ள. அவன் - அந்தத் திண்ணனுடைய. உரு - வடிவம். என்னும் - என்று கூறப் பெறும். பெருகிய - பெரியதாக உள்ள. கொள்கல - பாத்திரத்தினுடைய. முகத்தில் - வாயில். பிறங்கி - விளங்கி. இனிது - இனியதாக. ஒழுகுதலால் - உமிழப் படுவதால். ஒரு - ஒப்பற்ற. முனிவன் - சன்னு என்னும் முனிவனுடைய. செவி - காது. உமிழும் - வெளியிடும். உயர் - உயர்ச்சியைப் பெற்ற. கங்கை - கங்கையாறு. முதல் - முதலாகிய. தீர்த்த - தீர்த்தங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொரு - கரையை மோதும். புனலின் - நீரைக் காட்டிலும். எனக்கு அவன் -*

எனக்கு அந்தத் திண்ணன். வாய் - தன் வாயிலிருந்து. உமிழும் புனல் - உமிழும் நீர். புனிதம் - தூய்மையை உடையது.

கபிலர் என்னும் முனிவர் சினம் மூண்டு சகரர்களை மாளுமாறு செய்தார். அவர்களுடைய பரம்பரையில் வந்த பகீரதன் கங்கையாற்றை அவர்கள்மேற் பாயச் செய்தால் உய்வார்கள் என்று எண்ணினான். கபிலர் ''நீ பிரமதேவனை நோக்கித் தவம் புரிவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார். அவ்வாறே பகீரதன் பதினாயிரம் ஆண்டுகள் பிரமதேவனைக் குறித்துத் தவம் புரிந்தான். பிரம தேவன் தோன்றி, ''உன்னுடைய தவத்தைக் கண்டு வியந்தோம். உன்னுடைய முன்னோர்கள் கபிலர் என்னும் முனிவர் சினம் மூண்டு சபித்ததனால் இறந்து போனார்கள். ஆகாயத்தி லிருந்து கங்கையாறு அவர்களுடைய எலும்புகளின் மேல் பாய்ந்தால் அவர்கள் நல்ல கதியை அடைவார்கள். ஆகாயத்திலிருந்து அந்தக் கங்கையாறு மண்ணுலகத்துக்கு வந்தால் அதனுடைய வேகத்தை தாங்குவது சிவ பெருமானுக்கல்லாமல் வேறு யாருக்கும் முடியாது. ஆகவே நீ சிவபெருமானை நோக்கித் தவத்தைப் புரிவாயாக'' என்றான்.

பகீரதன் அவ்வாறே சிவபெருமானை நோக்கிப் பதினாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். சிவபெருமான் தோன்றி, ''நான் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுவேன். கங்கையாறு வரட்டும்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு மறைந்தார். பகீரதன் கங்கையாற்றை நோக்கி ஐயாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். கங்கையாறு ஒரு பெண்மணியினுடைய உருவத்தோடு தோன்றி, ''யான் பூமிக்கு வந்தால் என்னை யாரால் தாங்க முடியும்?'' என்று கூறி மறைந்து போனாள்.

மறுபடியும் பகீரதன் சிவபெருமானை எண்ணி இரண்டரையாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். சிவபெருமான் எழுந்தருளி, ''உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்க, ''கங்கை இவ்வாறு சொன்னாள்'' என்று பகீரதன் இயம்ப, ''அஞ்சாதே. நான் அந்தக் கங்கையைச் சிறிதும் பிதிரவிடாமல் என்னுடைய சடாபாரத்தில் தாங்குவேன்'' என்று அருளிச் செய்தார்.

பகீதரன் மீண்டும் கங்கையை நோக்கி இரண்டரை ஆயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். பிறகு நீரையும், புழுதியையும், காற்றையும், சருகுகளையும், வெயிலையும் உண்டு, பிறகு அவற்றையும் உண்ணாமல் முப்பதினாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தான். அப்போது கங்கை யாவரும் நடுங்கும்படி தோன்றினாள். அவளைச் சிவபெருமான் தன்னுடைய சடை ஒன்றில் ஏற்றுக் கொண்டார். அவ்வாறு கங்கை அந்தச் சடையில் இருப்பதைக் கண்டு பகீரதன் திகைப்பை அடைந்து சிவபெருமானை வணங்கினான். அந்தப் பெருமான் அவனுடைய கருத்தை அறிந்து, ''நீ வருந்தாதே'' என்று அருளிக் கங்கையைச் சிறிதளவு விடவே கங்கை பூமிக்கு இறங்கி வந்தாள்.

பகீரதன் கங்கைக்கு முன்னால் விரைவோடு செல்ல அந்தக் கங்கை சன்னு என்னும் முனிவருடைய வேள்வியை அழித்து விட்டாள். அதைக் கண்டு சினந்து அந்த முனிவர் கங்கையைத் தம்முடைய உள்ளங்கையில் எடுத்துக் குடித்து விட்டான்.

அதைப் பார்த்துப் பகீரதன் முன்னால் நடந்தவற்றை அந்த முனிவரிடம் கூற முனிவர், ''கொண்டு போவாயாக'' என்று நவின்று தம்முடைய காதின் வழியாகக் கங்கையை விட்டான். கங்கை குதித்துக் கொண்டு சென்று

சகரர்களுடைய எலும்புகளின்மேற் பாயவே, அவர்கள் நல்ல கதியை அடைந்தார்கள். இந்த வரலாற்றைக் கூறும் கம்பராமாயணப் பாடல்கள் வருமாறு:

"சகரர் தொட்டலாற் சாகரம் எனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது; மகிதலம் முழுதும்
நிகரில் மைந்தனே புரந்தனன்; இவன்நெடு மரபில்
பகிர தன்எனும் பார்த்திபன் வந்தனன் பரிவால்."

"உலகம் யாவையும் பொதுவறத் திகிரியை உருட்டி
இலகு மன்னவன் இருந்துழி இறந்தமை வினவ
அலகில் தொன்முனி உரைத்திடக் கேட்டனன் அரசன்;
திலகம் மண்ணுற வணங்கி நின்றொரு மொழிசெப்பும்."

"கொடிய மாமுனி வெகுளியின் மடிந்தளம் குரவர்
முடிய நீள்நிர யத்தினில் அழுந்திடும் முறைமை
கடியு மாறெனக் கருந்தவ மதற்குறு கருமம்
அடிகள் சொற்றுக என்றலும் அந்தணன் அறைவான்."

"வையம் ஆளுடை மன்னவர் மன்னவ மடிந்தோர்
உய்ய நீள்தவம் ஒழிவறு பகலெலாம் ஒருங்கே
செய்ய நாண்மலர்க் கிழவனை நோக்கிநீ செய்தி;
நையல் என்றினி துரைத்தனன் நவையறு முனிவன்."

"ஞாலம் யாவையும் சுமந்திரன் தன்வயின் நல்கிக்
கோலும் மாதவத் திமகிரி மருங்கினிற் குறுகிக்
காலம் ஓர்பதி னாயிரம் அருந்தவம் கழிப்ப
மூல தாமரை முழுமுதற் கிழவன் முந்தினனே."

"நின்பெ ருந்தவம் வியந்தனம்; நினதுநீள் குரவர்
முன்பி றந்தனர் அருந்தவன் முனிவின்;ஆ தலினால்
மன்பெ ரும்புவி அதனில்லா னதிகடி தணுகி
என்பு தோயுமேல் இருங்கதி பெறுவர்என் றிசைத்தான்."

"மாக நன்னதி புவியிடை வருகின்றமற் றவன்தன்
வேகம் ஆற்றுதல் கண்ணுதற் கன்றிவே றரிதால்;
தோகை பாகனை நோக்கிநீ அருந்தவம் தொடங்கென்
றேகி னான்உல கனைத்தும்எவ் வுயிர்களும் ஈந்தான்."

"மங்கை பாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடம்.
தங்கு மாதவம் புரிதலும் தழல்நிறக் கடவுள்
அங்கு வந்துநின் கருத்தினை முடித்தும்என் றகன்றான்;
கங்கை யைத்தொழக் காலம்ஐ யாயிரம் கழித்தான்."

"ஒரும டக்கொடி ஆகிவந் துனதுமா தவம்என்
பொருபு னற்கொடிவரின் அவள்வேகம் ஆர் பொறுப்பார்?
அரன்உ ரைத்தசொல் விநோதம் மற்றின்னும் நீஅறிந்து
பெருகு நற்றவம் புரியென வரநதி பெயர்ந்தாள்."

"கரந்தை மத்தமோ டெருக்கவர் கூவிளை கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
அரந்தை யுற்றவன் இரண்டரை ஆயிரம் ஆண்டு
புரிந்து நற்றவம் பொலி தரவரை மகள்புனிதன்."

"எதிர்ந்து நின்னினை வென்னென இறைஞ்சி எம்பெரும,
அதிர்ந்து கங்கைஈ தறைந்தனள் என்றலும், அஞ்சேல்
பிதிர்ந்தி டாவகை காத்தும் என்றேகிய பின்றை
முதிர்ந்த மாதவம் இரண்டரை ஆயிரம் முடித்தான்."

"பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதிர் ஒளியையும் துய்த்துமற் றதையும்
பருக லின்றியும் முப்பதி னாயிரம் பருவம்
முருக காதலின் மன்னவன் அருந்தவம் முயன்றான்."

"உந்தி அம்புயத் துதித்தவன் உறைதரும் உலகும்
இந்தி ராதியர் உலகமும் நடுக்குற இரைந்து
வந்து தோன்றினள் வரநதி; மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினிற் கரந்தனன் சேர."

"புன்னு னித்தரு பனிஎன வரநதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளிதர வணங்கினன் திகைத்து
மன்னன் நிற்றலும் வருத்தல்நம் சடையள் வானதியின்
றென்ன விட்டனன் ஒருசிறி தவனிபோந் திழிந்தாள்."

"இழிந்த கங்கைமுன் மன்னவன் விரைவொடும் ஏகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை அழிப்பக்
கொழுந்து விட்டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா."

"உண்டு வந்தனன் மறைமுனிக் கணங்கள் கண்டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன் நிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழி கொடுத்தனன்; குதித்து
விண்டு நீங்கினர் உடலுகு பொடியின்மே வினளே."

"நிரயம் முற்றிய சகரர்கள் நெடுங்கதி செல்ல
விரைம லர்பொழிந் தார்த்தன விண்ணவர் குழாங்கள்
முரசம் முற்றிய பல்லியம் முறைமுறை முழங்க
அரசன் அப்பொழு தணிமதில் அயோத்திமீண் டடைந்தான்."

"அண்ட கோளகைப் புறத்ததாய அகிலம் அன்றளந்த
புண்ட ரீகமென் பதத்திடைப் பிறந்துபூ மகனார்
கொண்ட தீர்த்தமா பரன்கொளப் பகீரதன் கொணர
மண்ட லத்துவந் தடைந்ததிம் மாநதி மைந்த."

"சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பகல் தள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலாற்பகி ரதி யாகி
மகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்
நிகரில் சானவி எனப்பெயர் படைத்ததிந் நீத்தம்."

*(அகலிகைப் படலம், 43-61)*

*பிறகு வரும் 160-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:*

'இந்தக் காளத்தி மலைக்கு வந்து என்னை அடைந்த வேடனாகிய திண்ணன் தன்னுடைய இயல்பினால் உண்மையாக மலர்களும் என்மேலே விரிந்ததைப் போல விழுவதால் செந்தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பிரம தேவனோடு திருமால் முதலிய தேவர்கள் என்னிடம் வந்து அணியும் எந்த மலர்களும் அந்தத் திண்ணன் தன்னுடைய தலையிலிருந்து என்மேல் போடும் மலரைப் போல எனக்கு ஒத்து இரா.' பாடல் வருமாறு:

> "இம்மலைவந் தெனைஅடைந்த கானவன்தன் இயல்பாலே
> மெய்ம்மலரும் அன்புமேல் வீழ்ந்தனபோல் விழுதலால்
> செம்மலர்மேல் அயனொடுமால் முதல்தேவர் வந்துபுனை
> எம்மலரும் அவன்தலையால் இடும்மலர்போல் எனக்
> கொவ்வா."

இந்தப் பாடலும் காளத்திநாதர் சிவசோசரியா ருடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததைக் கூறுவது. இம்மலை - இந்தக் காளத்தி மலைக்கு. வந்து எனை - வந்து என்னை. எனை: இடைக்குறை. அடைந்த - சேர்ந்த. கானவன் - வேடனாகிய திண்ணன். தன் - தன்னுடைய. இயல்பால் - இயற்கையான தன்மையினால். ஏ: அசை நிலை. மெய் - உண்மையான. ம்: சந்தி. மலரும் - என்மேல் போடுகிற மலர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அன்பு - அவனுடைய பக்தி. மேல் - என்மேல். வீழ்ந்தன போல் - விழுந்தவற்றைப் போல. விழுதலால் - விழுவதால். செம் மலர்மேல் - செந்தாமரை மேல் வீற்றிருக்கும். அயனொடு - பிரம தேவனோடு. மால் - திருமால். முதல் - முதலிய. தேவர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வந்து - இங்கே வந்து. புனை - என்மேல் அணியும். எம்மலரும் - எந்த மலர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அவன் - அந்தத் திண்ணன். தலையால் -

தன்னுடைய தலையிலிருந்து; உருபு மயக்கம். இடும் - என்மேல் விழச் செய்யும். மலர்போல் - மலர்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். எனக்கு ஒவ்வா - எனக்கு ஒத்து இரா.

அடுத்து வரும் 161-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வெப்பமான நெருப்பில் பக்குவத்தை அடையும் வண்ணம் நன்றாக இந்த மாமிசம் வெந்திருக்கிறதா என்று பார்க்கும் அன்போடு உருகுகின்ற அவனுடைய உள்ளத்தில் உள்ள இனிமையினால் குழையும்படி அதைத் தன்னுடைய வாயில் இட்டு நன்றாக மென்று பார்த்து விட்டு எனக்குப் படைப்பதனால் புரிகின்ற வேத விதிப்படி யாகத்தைப் புரியும் அந்தணர்கள் முன்பு உள்ள யாகாக்கினியில் சமர்ப்பிக்கும் திருத்தமாக உள்ள ஹவிஸைக் காட்டிலும் எய்கின்ற வரிந்து கட்டப் பெற்ற வில்லை ஏந்திய அந்தத் திண்ணன் எனக்குப் படைத்த மாமிசங்கள் எனக்கு இனிய சுவையை உடையனவாய் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"வெய்யகனற் பதம்கொள்ள வெந்துளதோ எனும்அன்பால்
நையுமனத் தினிமையினில் நையமிக மென்றிடலால்
செய்யும்மறை வேள்வியோர் முன்புதரும் திருந்தவியில்
எய்யும்வரிச் சிலையவன்தான் இட்டஊன் எனக்கினிய."

இந்தப் பாடலும் காளத்திநாதர் சிவகோசரி யாருடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததைக் கூறுவது. வெய்ய - வெப்பமாக உள்ள. கனல் - நெருப்பில். பதம் - பக்குவத்தை. கொள்ள - பெறும் வண்ணம். வெந்துளதோ - இந்த மாமிசம் நன்றாக வெந்திருக்கிறதா. உளதோ: இடைக்குறை. எனும் - என்று பார்க்கும்; இடைக்குறை. அன்பால் - அன்போடு; உருபு மயக்கம். நையும் - உருக்கத்தை அடையும். மனத்து - திண்ணனுடைய

உள்ளத்தில் உள்ள. இனிமையினில் - இனிமையால்; உருபு மயக்கம். நைய - குழையும்படி. மிக - நன்றாக. மென்று - தன்னுடைய வாயில் இட்டு மென்று பார்த்து. இடலால் - எனக்குப் படைப்பதனால். செய்யும் - புரியும். மறை - வேதம் விதித்த முறைப்படி. வேள்வியோர் - யாகத்தைப் புரியும் அந்தணர்கள்; ஒருமை பன்மை மயக்கம். முன்பு - தங்களுக்கு முன்பு உள்ள யாகாக்கினியில்; ஆகுபெயர். தரும் - வழங்கும். திருந்து - திருத்தமாக உள்ள. அவியில் - ஹவிஸைக் காட்டிலும். எய்யும் - அம்புகளை எய்யும். வரி - வரிந்து கட்டப் பெற்ற. ச்: சந்தி. சிலையவன்தான் - வில்லை ஏந்திய திண்ணன். தான்: அசை நிலை. இட்ட - எனக்குப் படைத்த. ஊன் - மாமிசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எனக்கு இனிய - எனக்கு இனிமையான சுவையை உடையவையாக இருக்கின்றன.

பிறகு உள்ள 162-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நிலைபெற்று விளங்கும் பெருமையைக் கொண்ட வேத மந்திரங்களைப் பெருமையைப் பெற்ற முனிவர்கள் மகிழ்ச்சியை அடைந்து இயம்பும் இன்பத்தைப் பெற்ற சொற்களைக் கொண்ட தோத்திரங்களும் மந்திரங்களும் ஆகிய எவற்றைக் காட்டிலும் எனக்கு முன்னால் இருந்து கொண்டு அந்தத் திண்ணன் தன்னுடைய முகம் மலர்ச்சியைப் பெற உள்ளம் நெகிழ்ச்சியை அடைய, பக்தியோடு எண்ணி என்னை அல்லாமல் வேறு எதையும் தெரிந்து கொள்ளாத அவன் கூறும் வார்த்தைகள் எனக்கு நல்லவையாக இருக்கின்றன.' பாடல் வருமாறு:

''மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்
இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்க ளியாவையினும்
முன்பிருந்து மற்றவன்தன் முகம்மலர அகம்நெகிழ
அன்பில்நினைந் தெனையல்லால் அறிவுறா மொழிநல்ல.''

இந்தப் பாடலும் காளத்தி நாதர் சிவகோசரி யாருடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததைக் கூறுவது. மன் - நிலைபெற்று விளங்கும். பெருமா - மிக்க பெருமையைக் கொண்ட. மறை - வேதங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். மொழிகள் - மந்திரங்களை. மா - பெருமையைப் பெற்ற. முனிவர் - முனிவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். 'அந்தணர்கள்' எனலும் ஆம். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. உரைக்கும் - இயம்பும். இன்ப - இன்பத்தைத் தரும். மொழி - வார்த்தைகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தோத்திரங்கள் - துதிகளும். மந்திரங்கள் - மந்திரங்களும். இ: குற்றியலிகரம். யாவையினும் - ஆகிய எவற்றைக் காட்டிலும். முன்பு - எனக்கு முன்னால். இருந்து - இருந்து கொண்டு. மற்று: அசை நிலை. அவன் - அந்தத் திண்ணன். தன் - தன்னுடைய. முகம் - வதனம். மலர் - மலர்ச்சியோடு விளங்கவும். அகம் - தன்னுடைய உள்ளம். நெகிழ - நெகிழ்ச்சியை அடையவும். அன்பில் - பக்தியோடு; உருபு மயக்கம். நினைந்து - எண்ணி. எனை - என்னை; இடைக்குறை. அல்லால் - அல்லாமல். அறிவுறா - வேறு எதையும் தெரிந்து கொள்ளாத. மொழி - அவன் கூறும் வார்த்தைகள்; ஒருமை பன்மை மயக்கம். நல்ல - எனக்கு நல்லவையாக இருக்கின்றன.

பிறகு உள்ள 163-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'''உனக்கு அந்தத் திண்ணனுடைய செயலைக் காண்பிக்க, நாளைக்கு நீ இங்கே ஒளிந்து கொண்டிருந்தால் எனக்கு அவனுடைய அன்பு இருக்கும் தன்மைகள் எல்லாவற்றையும் பார்க்கப் போகிறாய்; நீ உன்னுடைய மனக் கவலையை விட்டு விடுவாயாக'' என வேதங்களை முறைப்படி அத்தியயனம் செய்து நிறைவேற்றிய

அந்தணராகிய சிவகோசரியாருக்குக் கனவில் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டுக் கங்கையாற்றின் நீரைத் தங்க வைத்திருக்கும் சடா பாரத்தைப் பெற்ற அழகிய திருவடியைக் கொண்டவராகிய காளத்திநாதர் எழுந்தருளிச் சென்று விட்டார்.' பாடல் வருமாறு:

"'உனக்கவன்தன் செயல்காட்ட நாளைநீ ஒளித்திருந்தால்
எனக்கவன்தன் பரிவிருக்கும் பரிசெல்லாம் காண்கின்றாய்;
மனக்கவலை ஒழி'கென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியார் எழுந்தருளிப் போயினார்."

உனக்கு அவன்தன் - உனக்கு அந்தத் திண்ணனுடைய. தன்: அசை நிலை. செயல் - செயலை. காட்ட - காண்பிக்க. நாளை - நாளைக்கு. நீ ஒளித்திருந்தால் - நீ இங்கே ஒளித்துக் கொண்டு மறைவாக இருந்தால். எனக்கு அவன்தன் - என்னிடம் அவனுடைய. எனக்கு: உருபு மயக்கம். தன்: அசைநிலை. பரிவு - அன்பு. இருக்கும் பரிசு - உள்ளதாகும் பான்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றையும். காண்கின்றாய் - நீ பார்க்கப் போகிறாய். மனக் கவலை - உன்னுடைய மனத்தில் உள்ள கவலையை. ஒழிக - விட்டு விடுவாயாக. என்று - என. ஒழிகென்று - ஒழிக என்று; தொகுத்தல் விகாரம். மறை - நான்கு வேதங்களையும் முறைப்படி அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். முனிவர்க்கு - அந்தணராகிய சிவகோசரியாருக்கு. அருள் செய்து - கனவில் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு. புனல் - கங்கையாற்றின் நீரைத் தங்க வைத்த. சடில - சடாபாரத்தை. த்: சந்தி. திருமுடியார் - பெற்ற அழகிய முடியைக் கொண்டவராகிய காளத்திநாதர். எழுந்தருளிப் போயினார் - அங்கிருந்து எழுந்தருளிச் சென்று விட்டார்; மறைந்தருளினார் என்றபடி.

அடுத்து வரும் 164-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சொப்பனம் காணும் நிலை அகன்ற பிறகு துயிலிலிருந்து விழித்து எழுந்து உணர்ச்சியை அடைந்து இரவில் தவத்தையே அணிகலனாகப் பூண்ட பெருமையைப் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் விடிகிற வரையிலும் தம்முடைய கண்களை மூடி உறக்கம் கொள்ளாதவராகித் தம்முடைய உள்ளத்தில் அடையும் ஆச்சரியத்தை உடையவராகி, அதனோடு உண்டாகும் அச்சமும் உடன் தோன்றியவராயிருக்க, வேகமாக ஓடும் ஏழு குதிரைகளைப் பூட்டிய ஒப்பற்ற இரதத்தின் மேல் காட்சியளிக்கின்ற வனாகிய சூரியன் உதயமாக.' பாடல் வருமாறு:

"கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவும் கண்துயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமும் உடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேல் தோன்றுவான் கதிர்தோன்ற."

இந்தப் பாடல் குளகம். கனவு நிலை - சொப்பனம் காணும் நிலை. நீங்கிய - அகன்ற. பின் - பிறகு. விழித்து - துயிலிலிருந்து விழித்து எழுந்து. உணர்ந்து - உணர்ச்சியை அடைந்து. கங்குலிடை - முதல்நாள் இரவில். ப்: சந்தி. புனைதவத்து - தவத்தையே அணிகலனாகக் கொண்ட. மா - பெருமையைப் பெற்ற. முனிவர் - அந்தணராகிய சிவகோசரியார். புலர்வளவும் - விடிகிற வரைக்கும். கண் - தம்முடைய கண்களை; ஒருமை பன்மை மயக்கம். துயிலார் - மூடி உறக்கத்தைக் கொள்ளாதவராகி; முற்றெச்சம். மனம் - தம்முடைய உள்ளத்தில். உறும் - அடையும். அற்புதம் ஆகி - ஆச்சரியத்தை உடையவராகி; திணை மயக்கம். வரும் - உண்டாகும். பயமும் - அச்சமும். உடனாகி - உடன் தோன்றியவராகியிருக்க; திணை மயக்கம். த்: சந்தி. துனை - வேகமாக ஓடும். புரவி - ஏழு குதிரைகளைப் பூட்டிய;

ஒருமை பன்மை மயக்கம். த் : சந்தி. தனி - ஒப்பற்ற. த்: சந்தி. தேர்மேல் - இரதத்தின் மீது. தோன்றுவான் - காட்சியளிக்கின்றவனாகிய. கதிர் - சூரியன். தோன்ற - உதயமாக.

*பிறகு வரும் 165-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'சிவகோசரியார் முதல் நாள் வந்ததைப் போல வந்து அழகிய பொன்முகலியாற்றில் ஓடும் நீரில் முழுகிவிட்டுப் பல தடவைகளும் தம்முடைய தலைவனாகிய காளத்திநாதன் தம்முடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்தவற்றை எண்ணி, நிலைபெற்று விளங்கும் அழகிய காளத்தி மலையின் மேல் ஏறி முன்பு செய்ததைப் போலப் பின்னிய சடாபாரத்தைப் பெற்றவனாகிய காளத்தி நாதனுக்குப் பூசையைப் புரிந்த பிறகு பின்பக்கமாக ஒளித்துக் கொண்டு மறைந்திருந்தார்.' பாடல் வருமாறு:*

"முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனல்மூழ்கிப்
பன்முறையும் தம்பிரான் அருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலைஏறி முன்புபோல்
பிஞ்ஞகனைப் பூசித்துப் பின்பாக ஒளித்திருந்தார்."

*முன்னை - சிவகோசரியார் முதல். நாள்போல் வந்து - நாளில் வந்ததைப் போல வந்து. திரு - அழகிய. முகலி - பொன் முகலியாற்றில் ஓடும். பொன்முகலி: இதை வடமொழியில் 'ஸ்வர்ணமுகி' என்பர். ப்: சந்தி. புனல் - நீரில். மூழ்கி - முழுகி விட்டு. ப்: சந்தி. பல் - பல. முறையும் - தடவைகளும்; ஒருமை பன்மை மயக்கம். தம் - தம்முடைய. பிரான் - தலைவனாகிய காளத்தி நாதன். அருள் செய்த - தம்முடைய கனவில் எழுந்தருளித் திருவாய் மலர்ந்தருளிச் செய்த. படி - வார்த்தைகளின் விதத்தை.*

நினைந்து - எண்ணி. மன்னு - நிலை பெற்று விளங்கும். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி மலை ஏறி - காளத்தி மலையின் மேல் ஏறி. முன்புபோல் - முன் நாட்களில் செய்ததைப் போல. பிஞ்ஞகனை - பின்னிய சடாபாரத்தைப் பெற்றவனாகிய காளத்தி நாதனுக்கு; உருபு மயக்கம். ப்: சந்தி. பூசித்து - பூசையைப் புரிந்தபிறகு. ப்: சந்தி. பின்பாக - பின் பக்கமாக. ஒளித்திருந்தார் - ஒளித்துக் கொண்டு மறைந்திருந்தார்.

அடுத்து வரும் 166-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கருமையான மேகத்தைப் போல் நின்று கொண்டிருந்த உறங்காதவரும் வில்லை ஏந்தியவருமாகிய திண்ணனார் தாம் எழுந்தருளுகின்ற முறைப்படி ஆறாம் தினத்தில் வரும் இராத்திரி நேரம் அகன்ற சமயத்தில் பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாகிய இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய அந்தணராகிய சிவகோசரியார் காளத்தி மலைக்கு வந்து சேருவதற்கு முன்னால் தாம் சென்று விலங்குகளைப் பெறுகின்ற முறையில் முன்பு செய்ததைப் போலத் தனியாக பெரிய வேட்டையைப் புரிந்து.' பாடல் வருமாறு:

''கருமுகில் என்னநின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை ஆறாம்நாளில் வரும்இர வொழிந்த காலை
அருமறை முனிவ னார்வந் தணைவதன் முன்னம் போகித்
தருமுறை முன்புபோலத் தனிப்பெரு வேட்டை யாடி.''

இந்தப் பாடல் குளகம். கரு - கருமையான. முகில் - மேகம். என்ன - என்று கூறும் வண்ணம். நின்ற - நின்று கொண்டிருந்த. கண் - தம்முடைய கண்களை; ஒருமை

பன்மை மயக்கம். படா - மூடி உறங்காத. வில்லியார் தாம் - வில்லை ஏந்தியவராகிய திண்ணனார். தாம்: அசை நிலை. வரும் - தாம் எழுந்தருளும். முறை - முறைப்படி. ஆறாம் நாளில் - ஆறாம் தினத்தில். வரும் - ஒவ்வொரு நாளும் வரும். இரவு - இராத்திரி வேளை. ஒழிந்த - அகன்ற. காலை - சமயத்தில். அரு - அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். முனிவனார் - அந்தணராகிய சிவகோசரியார். வந்து - காளத்தி மலைக்கு வந்து. அணைவதன் - சேருவதற்கு. முன்னம் - முன்னால். போகி - சென்று. த்: சந்தி. தரு - விலங்குகளைப் பெறுகின்ற. முறை - முறையில். முன்பு போல - முன்பு செய்ததைப் போல. த்: சந்தி. தனி - தனியாக. ப்: சந்தி. பெரு - பெரிய. வேட்டை - வேட்டையை. ஆடி - புரிந்து.

பிறகு உள்ள 167-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார் தனக்கு நிகர் இல்லாத மாமிசமாகிய திருவமுதையும், பொன்முகலியாற்றிலிருந்து கொண்டு வந்த நல்ல அபிடேக நீரையும், தம்முடைய தலையில் செருகி ஏறிய அன்றலர்ந்த மலர்களையும், வேறு வேறாகிய பான்மையில் எடுத்துக் கொண்டு தம்மைத் தெளிவாக அறிந்து கொண்ட பக்தர்களுக்கு அமுதத்தைப் போன்ற வரும், திருவருளாகிய செல்வத்தைப் பெற்றவரும், அழகிய காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும், கங்கையாறு தங்கும் சடாபாரத்தைப் பெற்ற திருமுடியை உடையவரும் ஆகிய காளத்தி நாதரைச் சமீபத்தில் சென்று அடைகிறவரானார்.' பாடல் வருமாறு:

''மாறில்ஊன் அமுதும்நல்ல மஞ்சனப் புனலும் சென்னி
ஏறுநாள் மலரும் வெவ்வே றியல்பினில் அமைத்துக்கொண்டு
தேறுவார்க் கமுதமான செல்வனார் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார்தம்மை அணுகவந் தணையா நின்றார்.''

மாறு - திண்ணனார் தனக்கு நிகர். இல் - இல்லாத; கடைக்குறை. ஊன் - மாமிசமாகிய. அமுதும் - திருவமுதை யும். நல்ல - நல்லதாகிய. மஞ்சன - அபிடேகத்துக்குரிய. ப்: சந்தி. புனலும் - பொன்முகலியாற்றிலிருந்து கொண்டு வந்த நீரையும். சென்னி - தம்முடைய தலையில். ஏறும் - செருகி ஏறிக்கொண்டிருக்கும். நாள் - அன்றலர்ந்த. மலரும் - மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வெவ்வேறு - வேறு வேறான. இயல்பினில் - பான்மையில். அமைத்துக் கொண்டு - அமையுமாறு எடுத்துக் கொண்டு. தேறுவார்க்கு - தம்மைத் தெளிவாக அறிந்து கொண்ட பக்தர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அமுதம் ஆன - அமுதத்தைப் போன்றவரான; உவம ஆகுபெயர். செல்வனார் - திருவருளாகிய செல்வத்தைப் பெற்ற வரும். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பவரும்; இட ஆகுபெயர். ஆறு - கங்கையாறு. சேர் - தங்கும். சடையார் தம்மை - சடாபாரத்தைப் பெற்ற திருமுடியை உடைய காளத்திநாதரை. தம்: அசைநிலை. அணுக வந்து - சமீபத்தில் சென்று. அணையா நின்றார் - அடைகிறவரானார்.

பின்பு உள்ள 168-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திண்ணனார், ''இவ்வளவு நேரம் தாமதித்து விட்டேன்'' என்று எண்ணி வேகமாகக் காளத்தி மலைக்குப் போகிறவராகிய அந்த வேடர் மிகுதியாக உள்ள பல சகுனங்கள் யாவும் முறை முறையாகக் கெடுதலைப் புலப்படுத்த, ''இத்தகைய கெட்ட சகுனங்கள் வந்து

முன்னால் இரத்தத்தைக் குறிப்பிடும்; அடியேனுடைய தந்தையாகிய குடுமித்தேவனுக்கு என்ன துன்பம் நேரிட்டதோ? ஐயோ! என்ன அவனை அடுத்திருக்கிறது?'' என்று அவர் காளத்தி மலைக்கு வரும் சமயத்தில்.' பாடல் வருமாறு:

> '''இத்தனை பொழுது தாழ்த்தேன்' எனவிரைந் தேகுவார் முன்
> மொய்த்தபல் சகுனம் எல்லாம் முறைமுறை தீங்கு செய்ய
> 'இத்தகு தீய புட்கள் ஈண்ட முன் உதிரம் காட்டும்;
> அத்தனுக் கென்கொல்? கெட்டேன்! அடுத்த' தென்
> றணையும் போதில்.''

இந்தப் பாடல் குளகம். இத்தனை - திண்ணனார் இவ்வளவு. பொழுது - நேரம். தாழ்த்தேன் - தாமதம் செய்து விட்டேன். என - என்று எண்ணி; இடைக்குறை. விரைந்து - வேகத்தை மேற்கொண்டு. ஏகுவார் - போகிறவராகிய அந்த வேடருக்கு. முன் - முன்னால். மொய்த்த - மிகுதியாக் உண்டாகிய. பல் - பல. சகுனம் - நிமித்தங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - யாவும். முறை முறை - ஒவ்வொன்றும் முறையே முறையே. தீங்கு - கெடுதலை. செய்ய - புலப்படுத்த. இத்தகு - இத்தகைய. தீய - கெட்ட. புட்கள் - சகுனங்கள். ஈண்ட - வந்து சேர்ந்து; எச்சத்திரிபு. முன் - எனக்கு முன்னால். உதிரம் - இரத்தத்தை. காட்டும் - குறிப்பிடும். அத்தனுக்கு - என்னுடைய தந்தையைப் போன்ற குடுமித் தேவனுக்கு. என்கொல் - என்ன நேர்ந்ததோ. கொல்: அசைநிலை. கெட்டேன் - ஐயோ! அடுத்தது - அவனுக்கு உண்டான கெடுதல் யாதோ? என்று - என எண்ணி. அணையும் - காளத்தி மலையை அடையும். போதில் - சமயத்தில்.

பிறகு வரும் 169-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தலைவராகிய திருக்காளத்தி மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சுவாமிகளாகிய காளத்தி நாதர் அந்தணராகிய சிவகோசரியாருக்குத் திண்ணனாருடைய அன்பைக் காண்பிக்கும் பொருட்டுத் தம்முடைய அழகிய கண்களில் ஒரு கண்ணிலிருந்து திடீரென்று இரத்தம் வழிந்து தரையில் ஓட எழுந்தருளியிருந்தார்; தூரத்தில் வரும்போதே அந்த அழகிய நிறத்தைக் கொண்ட கொடிய வில்லை ஏந்தியவராகிய திண்ணனார் அதைப் பார்த்து மிக வேகமாக அந்த இடத்திற்கு ஓடி வந்தார்.' பாடல் வருமாறு:

"அண்ணலார் திருக்காளத்தி அடிகளார் முனிவனார்க்குத்
திண்ணனார் பரிவுகாட்டத் திருநயனத்தில் ஒன்று
துண்ணென உதிரம்பாய இருந்தனர்; தூரத்தேஅவ்
வண்ணவெஞ் சிலையார்கண்டு வல்விரைந் தோடிவந்தார்."

அண்ணலார் - தலைவராகிய; 'பெருமையைப் பெற்றவராகிய' எனலும் ஆம். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். அடிகளார் - சுவாமிகளாகிய காளத்தி நாதர். முனிவனார்க்கு - அந்தணராகிய சிவகோசரியா ருக்கு. த்: சந்தி. திண்ணனார் - திண்ணனாருடைய, பரிவு - அன்பை. காட்ட - காண்பிக்கும் பொருட்டு. த்: சந்தி. திரு - அழகிய. நயனத்தில் - தம்முடைய கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். ஒன்று - ஒரு கண்ணிலிருந்து. துண்ணென - திடீரென்று. என: இடைக்குறை. உதிரம் - இரத்தம். பாய - வழிந்து தரையில் ஓட. இருந்தனர் - எழுந்தருளியிருந்தார். தூரத்து - தூரத்தில் வரும்போதே. ஏ: அசை நிலை. அவ் வண்ண - அந்த அழகிய நிறத்தைக் கொண்ட. வெம் - கொடுமையாகிய. சிலையார் - வில்லை ஏந்திய திண்ணனார்.

கண்டு - அதைப் பார்த்து. வல் விரைந்து - மிக வேகமாக. ஓடி வந்தார் - அந்த இடத்திற்கு ஓடி வந்தார்.

அடுத்து உள்ள 170-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு வேகமாக ஓடிவந்த திண்ணனார் காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழியும் இரத்தத்தைப் பார்த்தார்; மயக்கத்தை அடைந்தார்; தம்முடைய வாயில் மொண்டு கொண்டு வந்திருந்த பொன் முகலியாற்றில் ஓடிய நல்ல புனல் தரையில் சிந்த, தம்முடைய கரத்தில் வைத்திருந்த மாமிசமும் வில்லோடு சிதறித் தரையில் விழ கொத்துக்களில் உள்ள மலர் மாலையாகிய திருப்பள்ளித் தாமம் தம்முடைய தலை மயிரிலிருந்து நழுவித் தரையில் விழ, பசுமையான தழைகளோடு கட்டிய மலர் மாலையை அணிந்த மார்பைப் பெற்றவராகிய அந்தத் திண்ணனார் தரையின் மேல் பதைபதைத்து விழுந்தார்.' பாடல் வருமாறு:

"வந்தவர் குருதி கண்டார்; மயங்கினார்; வாயில் நன்னீர்
சிந்திடக் கையில் ஊனும் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமம் குஞ்சிநின் றலைந்து சோரப்
பைந்தழை அலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்."

வந்தவர் - அவ்வாறு வேகமாக ஓடி வந்து திண்ணனார். குருதி - காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழியும் இரத்தத்தை. கண்டார் - பார்த்தார். மயங்கினார் - மயக்கத்தை அடைந்தார். வாயில் - தம்முடைய வாயில் மொண்டு கொண்டு வந்திருந்த. நல் - நல்ல. நீர் - பொன்முகலி ஆற்றின் புனல். சிந்திட - தரையில் விழ. க்: சந்தி. கையில் - தம்முடைய கரத்தில் எடுத்துக் கொண்டு வந்திருந்த. ஊனும் - மாமிசமும். சிலையுடன் - வில்லோடு. சிதறி - கையிலிருந்து நழுவி. வீழ - தரையில் விழ. க்: சந்தி.

கொந்து - கொத்துக்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். அலர் - மலர் மாலையாகிய; ஆகு பெயர். பள்ளித் தாமம் - திருப்பள்ளி எழுச்சியின்போது காளத்தி நாதருக்கு அணியும் மாலை. குஞ்சி நின்று - தம்முடைய தலை மயிரிலிருந்து. அலைந்து - கலைந்து. சோர - தரையில் விழ. ப்: சந்தி. பைம் - பசுமையான. தழை - தழைகளோடு கட்டிய; ஒருமை பன்மை மயக்கம். அலங்கல் - மலர் மாலையை அணிந்த. மார்பர் - மார்பைப் பெற்றவராகிய அந்தத் திண்ணனார். நிலத்திடை - தரையின் மேல். ப்: சந்தி. பதைத்து - பதைபதைத்து. வீழ்ந்தார் - விழுந்தார்.

பின்பு உள்ள 171-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு தரையின்மேல் விழுந்தவராகிய திண்ணனார் பிறகு தரையிலிருந்து எழுந்து போய்க் காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழிந்த இரத்தத்தைத் துடைத்தார்; வழியும் அந்த இரத்தம் நிற்பதை அவர் பார்க்கவில்லை; செய்யும் செயல் இன்னதென்று தெரிந்து கொள்ளாதவராய்ப் பெரு மூச்சை விட்டுக் கொண்டு மறுபடியும் வருத்தத்தை அடைந்து சென்று தரையில் விழுந்தார்; பிறகு ஒருவாறு தம்முடைய திருவுள்ளம் தெளிந்து ''இந்த அடாத செயலைச் செய்தவர் யார்?'' என்று எண்ணித் தரையிலிருந்து எழுந்து நின்றார்; கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசைகளில் எல்லா இடத்திலும் நோக்கினார்; தம்முடைய கையில் வில்லையும் எடுத்துக் கொண்டார்.' பாடல் வருமாறு:

> ''விழுந்தவர் எழுந்து சென்று துடைத்தனர் குருதி; வீழ்வ
> தொழிந்திடக் காணார், செய்வ தறிந்திலர் உயிர்த்து மீள
> அழிந்துபோய் வீழ்ந்தார்; தேறி, 'யார்இது செய்தார்?' என்னா
> எழுந்தனர்; திசைகள் எங்கும் பார்த்தனர்; எடுத்தார் வில்லும்.''

விழுந்தவர் - அவ்வாறு தரையின்மேல் விழுந்தவராகிய திண்ணனார். எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து. சென்று - போய். குருதி - காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழிந்த இரத்தத்தை. துடைத்தனர் - தம்முடைய கையினால் துடைத்தார். வீழ்வது - வழிந்து தரையில் விழுவதாகிய அந்த இரத்தம். ஒழிந்திட - நிற்க. க்: சந்தி. காணார் - அவர் பார்க்கவில்லை. செய்வது - செய்யும் செயல் இன்னது என்று. அறிந்தலர் - தெரிந்து கொள்ளாதவராய்; முற்றெச்சம். உயிர்த்து - பெருமூச்சை விட்டுக்கொண்டு. மீள - மறுபடியும். அழிந்து - வருத்தத்தை அடைந்து. போய் - சென்று. வீழ்ந்தார் - தரையில் விழுந்தார். தேறி - பிறகு ஒருவாறு தமது திருவுள்ளத்தில் தெளிவை அடைந்து. யார் - எந்த மனிதர். இது - இந்த அடாத செயலை. செய்தார் - புரிந்தார். என்னா - என்று எண்ணி. எழுந்தனர் - தரையிலிருந்து எழுந்து நின்றார். திசைகள் - கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசைகளில். எங்கும் - எல்லா இடத்திலும். பார்த்தனர் - நோக்கினார். வில்லும் - தம்முடைய வில்லையும். எடுத்தார் - தம்முடைய இடக்கையில் எடுத்துக் கொண்டார்.

பின்பு உள்ள 172-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'திண்ணனார் அம்புகளையும் ஆராய்ந்து எடுத்துக் கொண்டு, ''இந்தக் காளத்தி மலையில் அடியேனுக்கு விரோதமாக வலிமையைப் பெற்ற கொடிய வேடர் இந்த அடாத செயலைப் புரிந்தவர் யாரேனும் இருக்கிறாரோ? மிருகங்களினுடைய சாதிகள், சிங்கம் முதலாகி இருக்கிறவை இதை உண்டாக்கினவோ? அடியேன் தெரிந்து கொள்ள முடியவில்லை.'' என்று எண்ணி அவர் உயரமாக உள்ள பெரிய காளத்தி மலையினுடைய பக்கங்களில் சென்று

நீண்ட நேரம் அந்த இடங்களில் தேடிக் கொண்டு போனார்.' பாடல் வருமாறு:

"வாளியும் தெரிந்து கொண்,'டிம் மலையிடை எனக்கு மாறா
மீளிவெம் மறவர் செய்தார் உளர்கொலோ? விலங்கின் சாதி
ஆளிமுன் னாகி உள்ள விளைத்தவோ? அறியேன்.' என்று
நீளிரும் குன்றைச் சாரல் நெடிதிடை நேடிச் சென்றார்."

வாளியும் - திண்ணனார் அம்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். தெரிந்து - ஆராய்ந்து. கொண்டு - எடுத்துக் கொண்டு. இம் மலையிடை - இந்தக் காளத்தி மலையில். எனக்கு - அடியேனுக்கு. மாறா - விரோதமாக. மீளி - யமனைப் போன்ற வலிமையைப் பெற்ற. மறவர் - வேடர். செய்தார் - இந்த அடாத செயலைப் புரிந்தவர். உளர்கொலோ - யாரேனும் இருக்கிறாரோ. ஓ: அசை நிலை. விலங்கின் - மிருகங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். சாதி - சாதிகள்; ஒருமை பன்மை மயக்கம். ஆளி - சிங்கம். முன்னாகி - முதலாகி. உள்ள - இருக்கிற விலங்குகள். விளைத்தவோ - இதைச் செய்தனவோ. அறியேன் - அடியேன் தெரிந்து கொள்ள முடியவில்லை. என்று - என எண்ணி. நீள் - அவர் உயரமாக உள்ள. இரும் - பெரிய. குன்றை - காளத்தி மலையினுடைய; உருபு மயக்கம். ச்: சந்தி. சாரல் - பக்கங்களில் சென்று; ஒருமை பன்மை மயக்கம். நெடிது - நீண்ட நேரம். இடை - அந்த இடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். நேடி - தேடிக் கொண்டு. ச்: சந்தி. சென்றார் - போனார்.

அடுத்து வரும் 173-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு தேடிக்கொண்டு சென்ற திண்ணனார் ஒரு வேடரையும் பார்க்கவில்லை; கெட்ட மிருகங்களை அந்த மலைப் பக்கங்களிலும், வேறு எந்த இடங்களிலும் தேடியும்

அவர் பார்க்கவில்லை; மறுபடியும் தம்முடைய தலைவராகிய காளத்தி நாதரிடம் வந்து நெடுநேரமாக இருந்த வருத்தத்தோடு அழகு நிறைந்த காளத்தி நாதருடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளைப் பிடித்துக் கொண்டு பக்கத்தில் இருக்கும் வண்ணம் அவரைத் தழுவிக்கொண்டு தம்முடைய கண்களிலிருந்து நீர்வழியக் கதறி அழுதார்.' பாடல் வருமாறு:

> ''வேடரைக் காணார்; தீய விலங்குகள் மருங்கும் எங்கும்
> நாடியும் காணார்; மீண்டும் நாயனார் தம்பால் வந்து
> நீடிய சோகத் தோடு நிறைமலர்ப் பாதம் பற்றி
> மாடுறக் கட்டிக் கொண்டு கதறினார் கண்ணீர் வார.''

வேடரை - அவ்வாறு தேடிக்கொண்டு சென்ற திண்ணனார் ஒரு வேடரையும். க்: சந்தி. காணார் - பார்க்க வில்லை. தீய - கெட்ட. விலங்குகள் - மிருகங்களையும். மருங்கும் - காளத்தி மலையினுடைய பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - வேறு எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நாடியும் - தேடிப் பார்த்தும். காணார் - அவர் பார்க்கவில்லை. மீண்டும் - மறுபடியும். நாயனார் தம்பால் - தம்முடைய தலைவராகிய காளத்தி நாதரிடம். தம்: அசை நிலை. வந்து - வந்து சேர்ந்து. நீடிய - நெடுநேரமாக இருந்த. சோகத்தோடு - வருத்தத்தோடு. நிறை - அழகு நிறைந்த. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பாதம் - காளத்தி நாதருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பற்றி - பிடித்துக்கொண்டு. மாடு - பக்கத்தில். உற - இருக்கும் வண்ணம். க்: சந்தி. கட்டிக் கொண்டு - அவரைத் தழுவிக் கொண்டு. கண் - தம்முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். நீர் வார - நீர் வழிய. கதறினார் - கதறி அழுதார்.

அடுத்து வரும் 174-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'''மகா பாவியாகிய அடியேன் பார்த்தபடியாகப் பரமேசுவரராகிய காளத்திநாதருக்கு உண்டான துன்பம் யாதோ? உயிரைக் காட்டிலும் இனியவரும், அடியேங் களுடைய தந்தையாரைப் போன்றவருமாகிய காளத்தி நாதருக்கு உண்டான துன்பம் என்னவோ? வந்து சேர்ந்தவர்கள் பிரியமுடியாத விமலராகிய இந்தக் காளத்தியப்பருக்கு வந்த துன்பம் யாதோ? உண்டானதாகிய ஒன்றை அடியேன் தெரிந்து கொள்ள முடியாதவனாக இருக்கிறேன்.'' என்று கதறி விட்டுப் பிறகும்.' பாடல் வருமாறு:

"பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ?
ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க் கடுத்த தென்னோ?
மேவினார் பிரிய மாட்டா விமலனார்க் கடுத்த தென்னோ?
ஆவதொன் றறிகி லேன்யான்; என்செய்கேன்?' என்று பின்னும்."

இந்தப் பாடல் குளகம். பாவியேன் - மகா பாவியாகிய அடியேன். கண்ட - பார்த்த. வண்ணம் - படியாக. பரமனார்க்கு - பரமேசுவரராகிய காளத்தி நாதருக்கு. அடுத்தது - உண்டான துன்பம். என்னோ - யாதோ. ஓ: அசை நிலை. ஆவியின் - என்னுடைய உயிரைக் காட்டிலும். இனிய - இனியவராகிய; வினையாலணையும் பெயர். எங்கள் - அடியேங்களுடைய; இது திண்ணனார் தம்மையும் மற்ற வேடர்களையும் சேர்த்துச் சொன்னது. அத்தனார்க்கு - தந்தையாரைப் போன்றவராகிய காளஹஸ்தீசுவரருக்கு. அடுத்தது - வந்த துன்பம். என்னோ - எதுவோ. ஓ: அசை நிலை. மேவினார் - தம்மை அடைந்தவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பிரியமாட்டா - பிரிய முடியாத. விமலனார்க்கு - இயல்பாகவே ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களிலிருந்தும் நீங்கினவருக்கு.

அடுத்தது - அடைந்த இடர்ப்பாடு. என்னோ - எதுவோ. ஓ: அசை நிலை. ஆவது - இனிமேல் செய்வதாகிய. ஒன்று - ஒரு செயலை. யான் - அடியேன். அறிகிலேன் - தெரிந்து கொள்ள முடியவில்லை. என் - என்ன. செய்கேன் - புரிவேன். என்று - என்று திண்ணனார் எண்ணி. பின்னும் - பிறகும்.

அடுத்து உள்ள 175-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''என்ன பரிகாரத்தைப் புரிந்தால் இவ்வாறு காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழியும் இரத்தம் நிற்கும்? அடியேங்களுடைய தலைவனாகிய காளத்திநாதனிடத்தில் இந்தத் துன்பமான செயலை முன்னால் புரிந்தவரை அடியேன் பார்க்கவில்லை; வலிமையைப் பெற்ற வெற்றிக்கழலைப் பூண்ட கால்களைப் பெற்ற வேடர்கள் எந்தக் காலத்திலும் மின்னலைப் போல ஒளியை வீசும் நீண்ட அம்புகளால் உண்டாகும் புண்களை ஆற்றிப் போக்குகின்ற உண்மையான மருந்தைத் தேடி எடுத்துக் கொண்டு தங்கம் உண்டாகும் அடிவாரத்தைப் பெற்ற காளத்தி மலைக்குக் கொண்டு அடியேன் வருவேன்'' என்று திண்ணனார் எண்ணிப் புறப்பட்டுச் சென்றார்.' பாடல் வருமாறு:

'''என்செய்தால் தீரு மோதான்? எம்பிரான் திறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன், மொய்கழல் வேடர் என்றும்
மின்செய்வார் பகழிப் புண்கள் தீர்க்குமெய் மருந்து தேடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவன்நான்' என்று
போனார்.''

என் - என்ன. செய்தால் - பரிகாரத்தைப் புரிந்தால். தீரும் - இவ்வாறு காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து இரத்தம் வழிவது நிற்கும். ஓ, தான்: இரண்டும் அசை

நிலைகள். எம்பிரான் - அடியேங்களுடைய தலைவனாகிய காளத்தி நாதன்; இது திண்ணனார் தம்மையும் பிற வேடர்களையும் சேர்த்துச் சொன்னது. திறத்து - இடத்தில். த்: சந்தி. தீங்கு - இந்தத் துன்பமான செயலை. 'தீய செயலை' எனலும் ஆம். முன் - முன்பு. செய்தார் தம்மை - புரிந்தவரை; தம்: அசை நிலை. க்: சந்தி. காணேன் - அடியேன் பார்க்கவில்லை. மொய் - வலிமையைப் பெற்ற. கழல் - வெற்றிக் கழல்களைப் பூண்ட கால்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வேடர் - வேடர்கள்; ஒருமை பன்மை மயக்கம். என்றும் - எல்லாக் காலத்திலும். மின் - மின்னலைப் போல. செய் - ஒளியை வீசும். வார் - நீண்ட. பகழி - அம்புகள் உண்டாக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. புண்கள் - புண்களை. தீர்க்கும் - ஆற்றிப் போக்கும். மெய் - உண்மையான. மருந்து - மருந்தை. தேடி - தேடி எடுத்துக்கொண்டு. ப்: சந்தி. பொன் செய் - தங்கம் உண்டாகும். தாழ் வரையில் - அடிவாரத்தைப் பெற்ற காளத்தி மலைக்கு; உருபு மயக்கம். நான் - அடியேன். கொண்டு வருவன் - கொண்டு திரும்பி வருவேன். என்று - என எண்ணி. போனார் - திண்ணனார் புறப்பட்டுச் சென்றார்.

பிறகு வரும் 176-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு எண்ணியவராகிய திண்ணனார் வேறு வேறாக அடர்ந்து பரவியுள்ள காடுகள் எல்லாவற்றிலும், தன்னுடைய சாதியிலிருந்து பிரிந்து வந்த சிவந்த கண்களைக் கொண்ட காளை மாடு என்று கூறுமாறு அச்சத்தை மேற்கொண்டு அடைந்து தினைக் கொல்லையில் பல பச்சிலைகளைப் பறித்து எடுத்துக் கொண்டு எல்லா உயிர்களுக்கும் தலைவனாகிய காளத்திநாதனிடம் வைத்த தம்முடைய திருவுள்ளத்தைக் காட்டிலும் வேகமாக வந்து

தாம் கொண்டு வந்திருந்த அந்தப் பச்சிலைகளாகிய மருந்துகளைக் காளத்தி நாதருடைய கண்ணில் பிழிந்து சொரிந்தார்.' பாடல் வருமாறு:

"நினைத்தவர் வேறு வேறு நெருங்கிய வனங்கள் எங்கும்
இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென வெருக்கொண்
டெய்திப்
புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த
மனத்தினும் கடிது வந்தம் மருந்துகள் பிழிந்து வார்த்தார்."

*நினைத்தவர்* - அவ்வாறு எண்ணியவராகிய திண்ணனார். வேறு வேறு - வேறுவேறாக. நெருங்கிய - அடர்ந்து பரவியுள்ள. வனங்கள் - காடுகள். எங்கும் - எல்லாவற்றிலும். இனத்திடை - தன்னுடைய சாதியிலிருந்து. ப்: சந்தி. பிரிந்த - பிரிந்து வந்த. செம் - சிவந்த. கண் - கண்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். ஏறு - காளை மாடு. என - என்று கூறுமாறு; இடைக்குறை. வெரு - அச்சத்தை. க்: சந்தி. கொண்டு - மேற்கொண்டு. எய்தி - அடைந்து. ப்: சந்தி. புனத்திடை - தினைக் கொல்லையில்; 'அந்தக் காடுகளில்' எனலும் ஆம்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பறித்து - பல பச்சிலைகளைப் பறித்து. க்: சந்தி. கொண்டு - அவற்றை எடுத்துக் கொண்டு. பூத நாயகன் பால் - எல்லா உயிர்களுக்கும் தலைவனாகிய காளத்தி நாதனிடம். பூத: ஒருமை பன்மை மயக்கம். 'பல பூதங்களுக்குத் தலைவன்' எனலும் ஆம். வைத்த - வைத்துள்ள. மனத்தினும் - தம்முடைய திருவுள்ளத்தைக் காட்டிலும். கடிது - வேகமாக. 'வாயு வேகம் மனோ வேகம்' என்பது வழக்கு. வந்து - காளத்தி மலைக்கு வந்து. அம்மருந்துகள் - தாம் பறித்துக் கொண்டு வந்திருந்த மருந்துகளாகிய பச்சிலைகளை. பிழிந்து - காளத்தி நாதருடைய கண்ணில் பிழிந்து. வார்த்தார் - சொரிந்தார்.

அடுத்து வரும் 177-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திண்ணனார் பிழிந்து சொரிந்த பச்சிலைகளாகிய மருந்தால் அழகிய காளத்தி மலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அரசராகிய காளத்தி நாதருடைய கண்ணிலிருந்து வழிந்த புண்ணின் இரத்தம் குறையாமல் வழிவதைப் பார்த்ததும், "இன்றைக்கு உள்ள இந்த நிலையை மாற்றுவதற்கு இனிமேல் அடியேன் செய்யத் தக்க பரிகாரம் எதுவோ?" என்று எண்ணிப் பார்ப்பவராய், "வந்த இந்த நோயைப் போக்குவது மாமிசத்துக்கு மாமிசமே" என்னும் வார்த்தையை முன்னால் தெரிந்து கொண்டார்.' பாடல் வருமாறு:

"மற்றவர் பிழிந்து வார்த்த மருந்தினால் திருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடா திழியக் கண்டும்
'இற்றையின் நிலைமைக் கென்னோ இனிச்செயல்?' என்று பார்ப்பார்
'உற்றநோய் தீர்ப்ப தூனுக் கூன்'எனும் உரைமுன் கண்டார்."

மற்று: அசை நிலை. அவர் - அந்தத் திண்ணனார். பிழிந்து - தம்முடைய கைகளாற் பிழிந்து. வார்த்த - சொரிந்த. மருந்தினால் - பச்சிலைகளாகிய மருந்தால். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். கொற்றவர் - அரசராகிய காளத்தி நாதருடைய. கண்ணில் - கண்ணிலிருந்து வழிந்த; உருபு மயக்கம். புண் நீர் - கண்ணின் இரத்தம். குறை படாது - சிறிதும் குறையாமல். இழிய - வழிய. க்: சந்தி. கண்டும் - அதைப் பார்த்தும். இற்றையின் - இன்றையினுடைய. நிலைமைக்கு - இந்த நிலையை மாற்றுவதற்கு. இனி - இனிமேல். ச்: சந்தி. செயல் - அடியேன் செய்யத்தக்க பரிகாரம். என் - எது. ஓ: அசை

நிலை. என்று - என எண்ணி. பார்ப்பார் - பார்ப்பவராகிய; முற்றெச்சம். உற்ற - வந்த. நோய் - இந்தப் பிணியை. தீர்ப்பது - போக்குவது. ஊனுக்கு - மாமிசத்துக்கு. ஊன் - மாமிசமே. எனும் - என்னும்; இடைக்குறை. உரை - வார்த்தையை. முன் - முன்னால். கண்டார் - அவர் தெரிந்து கொண்டார்.

*பிறகு உள்ள 178-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

'''இந்த நோயைப் போக்குவதற்கு இனிமேல் அடியேனுடைய கண்ணை ஓர் அம்பினால் தோண்டிக் காளத்தி நாதருடைய கண்ணில் அப்பினால் அடியேனுடைய தந்தையாரைப் போன்றவராகிய இந்தக் காளத்தியப்பருடைய கண்ணாகிய அதனுக்கு இந்தக் கண் மருந்தாகிப் புண்ணிலிருந்து வழியும் இரத்தம் நின்று விடவும் கூடும்'' என எண்ணி, மதமதப்போடு எழும் திருவுள்ளத்துடன் மகிழ்ச்சியை அடைந்து காளத்தி நாதருக்கு முன்னால் அமர்ந்து கொண்டு தம்முடைய விழியை முதலில் எடுத்த அம்பைக் கொண்டு தோண்டி எடுத்து முதல்வராகிய காளத்தீசுவரருடைய விழியில் அப்ப.' பாடல் வருமாறு:

"'இதற்கினி என்கண் அம்பால் இடந்தப்பின் எந்தை யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவும் அடுக்கும்' என்று
மதர்த்தெழும் உள்ளத் தோடு மகிழ்ந்துமுன் இருந்து தம்கண்
முதற்சரம் மடுத்து வாங்கி முதல்வர்தம் கண்ணில் அப்ப."

இந்தப் பாடல் குளகம். இதற்கு - இந்த நோயைப் போக்குவதற்கு. இனி - இனிமேல். என் - அடியேனுடைய. கண் - விழியை. அம்பால் - ஓர் அம்பினால். இடந்து - தோண்டி. அப்பின் - காளத்தி நாதருடைய கண்ணில் அப்பினால். எந்தையார் - அடியேனுடைய தந்தையாரைப் போன்றவராகிய இந்தக் காளத்தி அப்பருடைய. கண் - விழியாகிய. அதற்கு - அதனுக்கு. இது - அடியேனுடைய

இந்தக் கண். மருந்தாய் - மருந்தாகி. ப்: சந்தி. புண் - புண்ணிலிருந்து வழியும். நீர் - இரத்தம். நிற்கவும் - வழியாமல் நின்றுவிடவும். அடுக்கும் - கூடும். என்று - எனத் திண்ணனார் எண்ணி. மதர்த்து - மதமதப்போடு அமைந்து. எழும் - எழுந்திருக்கும். உள்ளத்தோடு - திருவுள்ளத்துடன். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. முன் - காளத்தி நாதருக்கு முன்னால். இருந்து - அமர்ந்து கொண்டு. தம் - தம்முடைய. கண் - விழியை. முதல் - முதலில் அம்புப் புட்டிலிலிருந்து எடுத்த. சரம் - அம்பை. மடுத்து - கொண்டு. வாங்கி - தோண்டி எடுத்து. முதல்வர் தம் - எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய காளத்தி நாதருடைய. தம்: அசை நிலை. கண்ணில் அப்ப - விழியில் அப்பவே.

அடுத்து உள்ள 179-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அவ்வாறு காளத்திநாதருடைய கண்ணில் தம்முடைய கண்ணைத் தோண்டி எடுத்து அப்பவே, வழிவது நின்று போன சிறந்த இரத்தத்தைப் பார்த்தார்; தரையிலிருந்து மேலே குதித்துக் கொண்டு தாவினார்; மலைகள் என்று சொல்லும்படி வளர்ச்சியைப் பெற்றிருந்த தம்முடைய தோள்களைத் தட்டிக் கொண்டார்; திண்ணனார் ஆனந்த நடனமும் ஆடி, "அடியேன் புரிந்த இந்தப் புத்திசாலித் தனமான செயல் நல்லது." என்று எண்ணவே, சிரிப்பும் உண்டாக சேர்ந்த ஆனந்தத்தினால் பைத்தியக்காரரைப் போல மிகுதியான இன்பத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"நின்றசெங் குருதி கண்டார்; நிலத்தினின் றேறப் பாய்ந்தார்
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார்; கூத்தும் ஆடி
'நன்றுநான் செய்த இந்த மதி'என நகையும் தோன்ற
ஒன்றிய களிப்பி னாலே உன்மத்தர் போல மிக்கார்."

நின்ற - அவ்வாறு காளத்தி நாதருடைய கண்ணில் தம்முடைய கண்ணைத் தோண்டி எடுத்து அப்பவே வழிவது நின்று போன. செம் - சிவந்த. குருதி - இரத்தத்தை. கண்டார் - திண்ணனார் பார்த்தார். இரத்தம் வழியாமல் நின்று விட்டதைப் பார்த்தார் என்பது கருத்து. நிலத்தினின்று - தரையிலிருந்து. ஏற - மேலே. ப்: சந்தி. பாய்ந்தார் - குதித்துக் குதித்துத் தாவினார். குன்று - மலைகள்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று கூறுமாறு; இடைக்குறை. வளர்ந்த - வளர்ச்சியைப் பெற்றிருந்த. தோள்கள் - தம்முடைய தோள்களை. கொட்டினார் - தட்டிக் கொண்டார். கூத்தும் ஆடி - ஆனந்த நடனமும் ஆடி. நான் - அடியேன். செய்த - புரிந்த. இந்த மதி - இந்தப் புத்திசாலித்தனமான செயல்; ஆகுபெயர். நன்று - நல்லது. என - என்று எண்ணவே; இடைக்குறை. நகையும் - சிரிப்பும். தோன்ற - உண்டாக. ஒன்றிய - சேர்ந்த. களிப்பினால் - ஆனந்தத்தால். ஏ: அசை நிலை. உன்மத்தர் போல - பைத்தியக்காரரைப் போல. மிக்கார் - மிகுதியான இன்பத்தை அடைந்தார்.

தோளுக்கு மலை உவமை: இதை முன்பே வேறோர் இடத்தில் கூறினோம். ஆண்டுக் கண்டுணர்க.

பின்பு வரும் 180-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய அழகிய வலக்கண்ணில் தம்முடைய கண்ணைப் பிடுங்கி அப்பிய வள்ளலாராகிய திண்ணனாருடைய நல்ல பண்பைப் பிறகும் எடுத்துக் காட்டும் பொருட்டுத் தலைவராகிய காளத்தி நாதர் மற்றக் கண்ணாகிய இடக்கண்ணில் நீங்குதல் இல்லாத சிவந்த இரத்தம் வழிந்து தரையில் ஓட, அதை இந்த உலகத்தில் வேடர்களுடைய சாதியினர் முன்பிறப்பில் புரிந்த தவத்தின் பயனால் திருவவதாரம் செய்தருளித் தம்முடைய

கொள்கையினால் தேவர்களுக்கும் மேற்பட்டவராகிய திண்ணனார் பார்த்தார்.' பாடல் வருமாறு:

"வலத்திருக் கண்ணில் தம்கண் அப்பிய வள்ள லார்தம்
நலத்தினைப் பின்னும் காட்ட நாயனார் மற்றைக் கண்ணில்
உலப்பில்செங் குருதி பாயக் கண்டனர் உலகில் வேடர்
குலப்பெரும் தவத்தால் வந்து கொள்கையின் உம்பர் மேலார்."

வலத்திருக் கண்ணில் - தம்முடைய அழகிய வலப் பக்கத்து விழியில். தம் - தம்முடைய. கண் - விழியைப் பிடுங்கி. அப்பிய - தம்முடைய கண்ணில் அப்பிய. வள்ளலார்தம் - வள்ளலாராகிய திண்ணனா ருடைய. தம்: அசை நிலை. நலத்தினை - நல்ல பண்பை. ப்: சந்தி. பின்னும் - பிறகும்; மேலும். காட்ட - சிவகோசரியாருக்கு எடுத்துக் காட்டும் பொருட்டு. நாயனார் - தலைவராகிய காளத்திநாதர். மற்றைக் கண்ணில் - மற்றக்கண்ணாகிய இடப் பக்கத்து விழியில். உலப்பு - நீங்குதல். இல் - இல்லாத; கடைக்குறை. செம் - சிவந்த. குருதி - இரத்தம். பாய - வழிந்து தரையில் ஓட. உலகில் - இந்த உலகத்தில் வாழும். வேடர் - வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். குல - சாதியினர்; திணை மயக்கம். ப்: சந்தி. பெரும் தவத்தால் - தாங்கள் முன்பிறவியில் புரிந்த பெரிய தவத்தின் பயனால்; ஆகுபெயர். வந்து - உடுப்பூரில் திருவவதாரம் செய்தருளி. கொள்கையின் - தம்முடைய கொள்கையினால். உம்பர் - தேவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மேலார் - மேற்பட்டவராகிய திண்ணனார். க்: சந்தி. கண்டனர் - பார்த்தார்.

அடுத்து உள்ள 181-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு காளத்தி நாதருடைய இடப் பக்கத்துக் கண்ணிலிருந்து இரத்தம் வழிவதைப் பார்த்த திண்ணனார்

பிறகு, ''ஐயோ! எங்களுடைய காளத்தி நாதருடைய விழி ஒன்றில் புண்ணிலிருந்து வழியும் இரத்தம் நின்றுவிட, மற்றொரு விழியில் இரத்தம் பொங்கி மிகுதியாக வழியும் இந்த நிலைக்கு அடியேன் அச்சத்தை அடைய மாட்டேன்; மருந்தை அடியேன் கண்டு கொண்டேன்; இன்னும் அடியேனுக்கு ஒரு விழி இருக்கிறது; அந்த விழியைப் பிடுங்கி இவருடைய கண்ணில் அப்பி இரத்தம் வழிவதை நீக்குவேன்.'' என எண்ணி.' பாடல் வருமாறு:

''கண்டபின், 'கெட்டேன்! எங்கள் காளத்தி யார்கண் ஒன்று
புண்தரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டும்மற் றிதனுக் கஞ்சேன்; மருந்துகை கண்டேன்; இன்னும்
உண்டொருகண், அக்கண்ணை இடந் தப்பி ஒழிப்பேன்.' என்று.''

இந்தப் பாடல் குளகம். கண்ட - அவ்வாறு காளத்தி நாதருடைய இடப் பக்கத்துக் கண்ணிலிருந்து இரத்தம் வழிவதைப் பார்த்த திண்ணனார். பின் - பிறகு. கெட்டேன் - ஐயோ. எங்கள் - அடியேங்களுடைய; என்றது திண்ணனார் தம்மையும் மற்ற வேடர்களையும் சேர்த்துச் சொன்னது. காளத்தியார் - காளத்தி நாதருடைய. கண் - விழி. ஒன்று - ஒன்றில். புண் - புண்ணிலிருந்து. தரு - வழியும். குருதி - இரத்தம். நிற்க - வழியாமல் நின்றுவிட. மற்றைக்கண் - மற்றொரு விழியில். குருதி - இரத்தம். பொங்கி மண்டும் - பொங்கி மிகுதியாக வழியும். மற்று: அசை நிலை. இதனுக்கு - இந்த நிலைக்காக. அஞ்சேன் - அடியேன் அச்சத்தை அடைய மாட்டேன். மருந்து - இதை நீக்கும் மருந்தை. கை கண்டேன் - அடியேன் அநுபவத்தில் கண்டு கொண்டேன். இன்னும் - இனிமேலும். உண்டு ஒரு கண் - அடியேனுக்கு ஒரு விழி இருக்கிறது. அக்கண்ணை - அந்த விழியை. இடந்து - பிடுங்கி. அப்பி - இவருடைய கண்ணில்

அப்பி. ஒழிப்பேன் - இரத்தம் வழிவதைப் போக்குவேன். என்று - என எண்ணி.

*பிறகு உள்ள 182-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:*

'நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய காளத்தி நாதருடைய விழியில் தம்முடைய விழியைப் பிடுங்கி அப்பினால் அப்போது அந்த விழியைப் பார்க்கும் நிலையை எண்ணிப் பார்ப்பவராகி, தம்முடைய தலைவனாகிய காளத்தி நாதனுடைய அழகிய விழியில் தம்முடைய இடத்திருவடியை ஊன்றிக்கொண்டு தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பிய விருப்பத்தோடும் ஓர் ஒப்பற்ற அம்பைத் தம்முடைய அம்புப் புட்டிலிலிருந்து எடுத்துக் கொண்டு திண்ணனார் தம்முடைய விழியில் ஊன்றவே, அதைப் பார்த்துத் தேவ தேவராகிய காளத்தி நாதர் சகிக்கவில்லை.' பாடல் வருமாறு:

"கண்ணுதல் கண்ணில் தம்கண் இடந்தப்பிற் காணும் நேர்பா
டெண்ணுவார் தம்பி ரான்தன் திருக்கண்ணில் இடக்கால் ஊன்றி
உண்ணிறை விருப்பி னோடும் ஒரு தனிப் பகழிகொண்டு
திண்ணனார் கண்ணில் ஊன்றத் தரித்திலர் தேவ தேவர்."

கண்ணுதல் - தம்முடைய நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய காளத்தி நாதருடைய. கண்ணில் - விழியில். தம் - தம்முடைய. கண் - விழியை. இடந்து - பிடுங்கி. அப்பின் - அந்த நாதருடைய கண்ணில் அப்பினால். காணும் - அப்போது அந்த விழியைப் பார்க்கும். நேர்பாடு - நிலையை. எண்ணுவார் - எண்ணிப் பார்ப்பவராகி; முற்றெச்சம். தம் - தம்முடைய. பிரான்தன் - தலைவனாகிய காளத்தி நாதனுடைய. தன்: அசை நிலை. திரு - அழகிய. க்: சந்தி. கண்ணில் - விழியில். இடக்கால் - தம்முடைய இடத் திருவடியை. ஊன்றி - ஊன்றிக்

கொண்டு. உள் - தம்முடைய திருவுள்ளத்தில் நிறை - நிரம்பியுள்ள. விருப்பினோடும் - விருப்பத்தோடும். ஒரு தனி - ஓர் ஒப்பற்ற. ப்: சந்தி. பகழி - அம்பை. கொண்டு - தம்முடைய அம்புப் புட்டிலிலிருந்து எடுத்துக் கொண்டு. திண்ணனார் கண்ணில் - திண்ணனார் தம்முடைய விழியில். ஊன்ற - ஊன்றிய போது. த்: சந்தி. தேவதேவர் - தேவதேவராகிய காளத்தி நாதர். தரித்திலர் - அதைச் சகிக்கவில்லை.

தேவதேவர்: "தேவர்கள் தேவர் எம்பெருமானார்.", "தேவர்கள் தேவரோ சேயிழை வாடச் செய்வதே.", "தேவர்தேவர் திரிசூலத்தர்.", "தேவதேவன் மன்னும்ஊர் திருந்துகாழி." என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், "தேவர்கள் தேவர் போலும் திருப்பயற்றூரனாரே.", "தேவதேவன் திருநெறியாகிய பூவனூர்.", "தேவதேவன் சிவன்.", "தேவார்ந்த தேவர்க்கும் தேவே போற்றி.", "தேவார்ந்த தேவனை." என்று திருநாவுக்கரசு நாயனாரும், "தேவதேவன் திருப்பெயர் ஆகவும்.", "தேவர்கோ அறியாத தேவதேவன்.", "மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.", "சேட்டைத் தேவர்தம் தேவர்பிரானே.", "தேவர்தம் தேவே சிவ புரத்தரசே.", "தேவதேவன் மெய்ச் சேவகன்." என்று மாணிக்க வாசகரும், "தேவதேவனைத் திருமறு மார்பனை.", "தேவ தேவனைத் திகழ்சிவலோகனை." என்று நக்கீரதேவ நாயனாரும், "தேவதேவ திருவிடை மருத." என்று பட்டினத்துப் பிள்ளையாரும், "தேவ தேவேசனே.", "தேவதேவனும் அதுதிருவுளம் செய்து.", 'தேவர்கள்தம் பெருந்தேவர்.", "தேவர் தேவனைத் திருக்கபாலீச் சரத்தமுதை.", "தேவாதி தேவர் பிரான் திருத்தில்லை." என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

*பிறகு வரும் 183-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'சிவந்த கண்களைப் பெற்ற வெண்மை நிறத்தைக் கொண்ட இடப வாகனத்தை ஓட்டுபவராகிய காளத்தி நாதரும், திண்ணனாரை ஆட்கொண்ட அழகிய கண்களை உடையவரும், அழகிய காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அற்புதருமாகிய காளத்தி அப்பருடைய அழகிய திருக்கரம் தம்முடைய பக்தராகிய அந்தத் திண்ணனார் தம்முடைய விழியை முன்னால் பறிக்கும் கரத்தைத் தடுக்கும் பொருட்டு மூன்று முறை அடுத்து அடுத்து பாம்புகளாகிய கங்கணங்களைத் திருக்கரங்களில் அணிந்து கொண்டிருக்கும் அந்தக் காளத்தீசுவரர் அமுதத்தைப் போன்ற திருவாக்கு, ''கண்ணப்ப நிற்க, நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப.'' என.' பாடல் வருமாறு:*

"செங்கண் வெள்விடையின் பாகர், திண்ணனார் தம்மை ஆண்ட
அங்கணர், திருக்கா ளத்தி அற்புதர், திருக்கை அன்பர்
தம்கண்முன் இடக்கும் கையைத் தடுக்க மூன்றடுக்கு நாக
கங்கணர் அமுத வாக்குக், 'கண்ணப்ப நிற்க' என்றே."

*செம் - சிவந்த. கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வெள் - வெண்மை நிறத்தைக் கொண்ட. விடையின் பாகர் - இடப வாகனத்தை ஓட்டுபவராகிய காளத்தி நாதரும். திண்ணனார் தம்மை - திண்ணனாரை; தம்: அசை நிலை. ஆண்ட - ஆட்கொண்ட. அம் - அழகிய. கணர் - கண்களை உடையவரும். கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர்: இடைக்குறை. திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். அற்புதர் - அற்புதருமாகிய காளத்தியப்பருடைய. திரு - அழகிய. க்: சந்தி. கை - திருக்கரம். அன்பர் -*

தம்முடைய பக்தராகிய அந்தத் திண்ணனார். தம் - தம்முடைய. கண் - விழியை. முன் - தமக்கு முன்னால். இடக்கும் - பறிக்கும். கையை - கரத்தை. த்: சந்தி. தடுக்க - தடுக்கும் பொருட்டு. மூன்று - மூன்று முறைகள். அடுக்கு - அடுத்து வரும் முறையோடு. நாக - பாம்புகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். கங்கணர் - கங்கணங்களைத் தம்முடைய திருக்கரங்களில் அணிந்து கொண்டிருக்கும் அந்தக் காளத்தீசுவரர். கங்கணம்: ஒருமை பன்மை மயக்கம். அமுத - அமுதத்தைப் போன்ற இனிமையான. வாக்கு - திருவாக்கு. க்: சந்தி. கண்ணப்ப நிற்க - நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப. என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து. ஏ: ஈற்றசை நிலை.

அற்புதர்: ''அற்புதன் அயன் அறியா வகை நின்றவன்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''அற்புதனை அரநெறியில் அப்பன் தன்னை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அற்புதன் காண்க அநேகன் காண்க.'' என்று மாணிக்க வாசகரும், ''அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே.'' என்று கருவூர்த் தேவரும், ''கருணையே வடிவமாகி அற்புதக் கோலம் நீடி.'', ''அற்புதம் எய்தத் தோன்றி அழகினுக் கணியாய் நின்றான்.'', ''கறைக் கண்டர் அற்புதக் கூத்தாடுகின்ற அம்பலம்.'' என்று சேக்கிழாரும் பாடி அருளியவற்றைக் காண்க.

காளத்தி நாதர், 'நில்லு கண்ணப்ப' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ததை, ''மற்றைக் கண்ணினும் வடிக்கணை மடுத்தனன், மடுத்தலும், நில்லு கண்ணப்ப நில்லு கண்ணப்ப என், அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப என், றின்னுரைய தனொடும் எழிற்சிவலிங்கம்,

தன்னிடைப் பிறந்த தடமலர்க்கையால், அன்னவன் றன்கை அம்பொடும் அகப்படப்பிடித், தருளினன்.'' என்று நக்கீரதேவ நாயனாரும் அருளிச் செய்ததைக் காண்க.

பிறகு வரும் 184-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'காட்டில் வாழும் வேடர்களினுடைய பெருமகனாராகிய திண்ணனார் தம்முடைய கண்ணைப் பிடுங்கிக் காளத்தி நாதருடைய திருவிழியில் அப்பும் சமயத்திலும், மாமிசமாகிய திருவமுதை உகந்து ஏற்றுக் கொண்ட ஐயராகிய அந்தக் காளத்தீசுவரர் சார்ந்து முன்னால் அந்தக் கரத்தைப் பிடிக்கும் சமயத்திலும் சிவஞானத்தையும் பெருமையையும் பெற்ற அந்தணராகிய சிவகோசரியார் பார்த்தார்; நான்கு முகங்களைப் பெற்ற பிரமதேவன் முதலாக இருக்கிற தேவர்கள் கற்பக மரத்தில் வளரும் மலர்களை வேதங்கள் முழக்கத்தைச் செய்ய மழையாகச் சொரிந்தார்கள்.' பாடல் வருமாறு:

''கானவர் பெருமா னார்தம் கண்ணிடந் தப்பும் போதும்
ஊனமு துகந்த ஐயர் உற்றுமுன் பிடிக்கும் போதும்
ஞானமா முனிவர் கண்டார்; நான்முகன் முதலாய் உள்ள
வானவர் வளர்பூ மாரி பொழிந்தனர் மறைகள் ஆர்ப்ப.''

கானவர் - காட்டில் வாழும் வேடர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பெருமானார் - பெருமகனாராகிய திண்ணனார். தம் - தம்முடைய. கண் - விழியை. இடந்து - பிடுங்கி. அப்பும் - காளத்தி நாதருடைய திருவிழியில் அப்பும். போதும் - சமயத்திலும். ஊன் - மாமிசமாகிய. அமுது - திருவமுதை. உகந்த - திருவுள்ளம் உவந்து ஏற்றுக்கொண்ட. ஐயர் - ஐயராகிய அந்தக் காளத்தீசுவரர்.

உற்று - சார்ந்து. முன் - முன்னால். பிடிக்கும் - திண்ணனாருடைய அந்தக் கரத்தைப் பிடிக்கும். போதும் - சமயத்திலும். ஞான - சிவஞானத்தையும். மா - பெருமையையும் பெற்ற. முனிவர் - அந்தணராகிய சிவகோசரியார். கண்டார் - பார்த்தார். நான்முகன் - நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவன். முகம்: ஒருமை பன்மை மயக்கம். முதலாய் - முதலாகி. உள்ள - இருக்கின்ற. வானவர் - தேவலோகத்தில் வாழும் தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - கற்பக மரத்தில் வளரும். பூ - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். மாரி - மழையைப் போல. மறைகள் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களும். ஆர்ப்ப - முழக்கத்தைச் செய்ய. பொழிந்தனர் - சொரிந்தார்கள்.

அடுத்து வரும் 185-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பெற வேண்டிய பாக்கியம் இனிமேல் இதற்குமேல் ஒன்று இருக்கிறதா? தலைவனாகிய காளத்தி நாதனுடைய அழகிய திருவிழியிலிருந்து வந்த துன்பத்தால் வரும் இரத்தத்தைப் பார்த்து அச்சத்தை அடைந்து திண்ணனார் தம்முடைய விழியைப் பிடுங்கித் தம்முடைய விழியில் அப்புவதற்கு உதவி செய்யும் கரத்தை இடபமாகிய கொடியை உயர்த்திப் பிடித்தவராகிய அந்தக் காளத்தி நாதர் தம்முடைய திருக்கரத்தால் பற்றிக்கொண்டு, "திண்ணனே, நீ என்னுடைய வலப் பக்கத்தில், ஒப்பு இல்லாதவனே, நிற்பாயாக" என நிலைபெற்று விளங்கும் பெரிய திருவருளை விருப்பத்தோடு வழங்கினார்.' பாடல் வருமாறு:

"பேறினி இதன்மேல் உண்டோ? பிரான்திருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தம்கண் இடந்தப்ப உதவும் கையை
ஏறுயர்த் தவர்தம் கையால் பிடித்துக் கொண்,'டென்வலத்தில்
மாறிலாய், நிற்க' என்று மன்னுபேர் அருள்பு ரிந்தார்."

*பிரான் - தலைவனாகிய காளத்தி நாதனுடைய. திரு - அழகிய. க்: சந்தி. கண்ணில் - திருவிழியில். வந்த - வழிந்து வந்த. ஊறு - துன்பத்தால் வரும் இரத்தத்தை. கண்டு - பார்த்து. அஞ்சி - அச்சத்தை அடைந்து. த்: சந்தி. தம் - தம்முடைய; என்றது 'திண்ணனாருடைய' என்றபடி. கண் - விழியை. இடந்து - பிடுங்கி. அப்ப - தம்முடைய திருவிழியில் அப்புவதற்காக. உதவும் - உதவி புரியும். கையை - திண்ணனாருடைய திருக்கரத்தை. ஏறு - இடபத்தை. உயர்த்தவர் - துவசமாக உயர்த்திப் பிடித்தவராகிய அந்தக் காளத்தியப்பர். தம் - தம்முடைய. கையால் - திருக்கரத்தினால். பிடித்துக்கொண்டு - பற்றிக் கொண்டு. என் - என்னுடைய. வலத்தில் - வலப்பக்கத்தில். மாறு - ஒப்பு. இலா - இல்லாதவனாகிய திண்ணனே; இடைக்குறை. நிற்க - நீ நிற்பாயாக. என்று - எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து. மன்னு - நிலை பெற்று விளங்கும். பேர் - பெரிய. அருள் - தம்முடைய திருவருளை. புரிந்தார் - விரும்பி வழங்கினார். பேறு - பெறவேண்டிய பாக்கியம். இனி - இனிமேல். இதன் மேல் - இதற்கு மேல். உண்டோ - திண்ணனாருக்கு இருக்கிறதோ? இல்லை என்பது கருத்து.*

*இடபத் துவசத்தைப் பிடித்தவர்: "விடையார் கொடி உடையான்.", "விடையார் கொடியுடையவ்வண்ணல்.", "விடைசேர் கொடி அண்ணல்.", "விடையார் கொடி ஒன்றுடை எந்தை.", "அடலே றமரும் கொடி அண்ணல்.",*

''கொடிமேல தொர் பைங்கண் விடையான்.'', ''கொடி மேல் ஏறுகொண்டாய்.'', ''வெள்ளை ஏறார் கொடியார்.'', ''விடையார் கொடி எந்தை.'', ''செங்கண் ஏறணி வெல்கொடியான்.'', ''விடைபுல்கு கொடி ஏந்தி.'', ''சேவுயரும் திண்கொடியான்.'', ''வெள்ளேற்றின் கொடியானை.'', ''கொடிகொள் ஏற்றினர்.'', ''ஏறார்கொடி எம் இறை.'', ''செங்கண் வெள்ளேற்றின் கொடியான்.'', ''விடையார் கொடியான் மேவி உறையும் வெண்காட்டை.'', ''விடையார் கொடியார்.'', ''விடை நவிலும் கொடியானை.'', ''விடையமரும் கொடியாரும்.'', ''கொடிகாள் ஏற்றினர்.'', ''விடையுடைக்கொடி மல்கு வேதியனே.'', ''ஏறடை வெல் கொடி எந்தை.'', ''விடையுடை வெல் கொடி ஏந்தினானும்.'', ''கொடி உயர் மால்விடை.'', ''விடை யுடைக் கொடி வலன் ஏந்தி.'', ''விடையுடைக் கொடியர்.'', ''விடைமலி கொடி அண்ணல்.'', ''விடையமர் கொடியினான்.'', ''கொடி கொள் ஏற்றினர் கூற்றை உதைத்தனர்.'', ''விடைநவிலும் கொடியான் விரும்பும்மிடம் வேண்டுறையே.'', ''விடை உபர் வெல் கொடியான்.'' என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும், ''விடை தருகொடியும் வைத்தார்.'', ''விடை தருகொடியர் போலும்.'', ''ஏற்று வெல் கொடி ஈசன்.'', ''கொடியார் இடபத்தர்.'', ''விடையோடு கொடியும் தோன்றும்.'', ''ஏறணிந்த கொடியுடை எம் இறைவா.'', ''விடையேறு வெல் கொடி எம் விமலனாரும்.'', ''கொடியேறும் வெள்ளேற்றாய்.'', ''கொடியாரதன் மேல் இடபம் கண்டேன்.'', ''விடை வென்றிக் கொடியதனில் மேவக் கொண்டார்.'', ''ஏறுடைய கொடி உண்டோ.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''கொடிகொள் ஏற்றர்.'',

''விடைக் கொடி எம்பெருமான்.'', ''கொடிபடு முரிவெள்ளை எருதேற்றையும்.'', ''விடையாரும் கொடியாய்.'', ''ஏறுதாங்கிய கொடியரோ.'', ''விடை அரவக் கொடி ஏந்தும் விண்ணனவர்தம் கோனை.'', ''விடையார் கொடியன் வேத நாவன்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி.'', ''கோதிலா ஏறாம் கொடி.'' என்று மாணிக்கவாசகரும், ''ஏறணி கொடி எம் ஈசனே.'', ''சேவேந்து வெல் கொடியானே.'' என்று திருமாளிகைத் தேவரும், ''கொடி மேல் இடபமும்.'', ''கொடிக் கண்ணி மேல் நல்ல கொல்லேறுயர்த்த குணக் குன்றமே.'', ''ஏற்றுக் கொடியும் பதாகையும்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''வீரவெள்விடைக் கொடியும்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''விடைபடு கேதுக.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''விடை உயர்த்தார் திருத்தோணி.'', ''ஏறுயர்த்தார் திருப்பாற்றுறையும்.'', ''ஏறுயர்த்தார் சைவ நெறி.'', ''ஏறணிந்த வெல் கொடியார் இனி தமர்ந்த பதிபிறவும்.'' என்று சேக்கிழாரும் பாடியருளிவற்றைக் காண்க. ''ஊர்திவால் வெள்ளேறே சிறந்த, சீர்கெழு கொடியும் அவ்வேறென்ப.'' (புறநானூறு, 1:3-4) என்று பாரதம் பாடிய பெருந்தேவனாரும், ''ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை, மாற்றரும் கணிச்சி மணி மிடற்றோனும்.'' (புறநானூறு, 56: 1-2) என்று நக்கீரனாரும் பாடியவற்றையும் காண்க.

அடுத்து வரும் 186-ஆம் பாடல் இந்தக் கண்ணப்ப நாயனார் புராணத்தின் இறுதிப் பாடல். அதன் கருத்து வருமாறு:

'மேகங்கள் தவழும் அழகிய காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அரசராகிய காளத்தி நாதருடைய திருவிழியில் உண்டான புண்ணி லிருந்து வழிந்த இரத்தத்தைத் தம்முடைய விழியினால் மாற்றும் பேற்றைப் பெற்ற தலைவராகிய கண்ணப்ப நாயனாருடைய திருவடிகளை அடியேனுடைய தலையின் மேல் வைத்துக் கும்பிட்டு வணங்கி விட்டு, கங்கையாறு தங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அமிர்தகடேசுவரர் எழுந்தருளியிருக்கும் திருக் கடவூரில் திருவவதாரம் செய்தருளிய குங்குலியக் கலய நாயனாராகும் பொங்கி எழுந்த புகழை மிகுதியாகப் பெற்றவர் செய்த திருத்தொண்டினை இனிமேல் அடியேன் பாடத் தொடங்கினேன்.' பாடல் வருமாறு:

"மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனார் கண்ணிற் புண்ணீர்
தங்கணால் மாற்றப் பெற்ற தலைவர்தாள் தலைமேற் கொண்டே
கங்கைவாழ் சடையார் வாழும் கடவூரிற் கலய னாராம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகல லுற்றேன்."

இது சேக்கிழார் அடுத்து வரும் குங்குலியக் கலய நாயனார் புராணத்திற்குத் தோற்றுவாயாகப் பாடியது. மங்குல் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாழ் - தவழும். திரு - அழகிய. க்: சந்தி. காளத்தி - காளத்தி மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். மன்னனார் - அரசராகிய காளத்திநாதருடைய. கண்ணில் - திருவிழியில் உண்டான. புண் - புண்ணிலிருந்து வழிந்த. நீர் - இரத்தத்தை. தம் - தம்முடைய. கணால் - விழியைக் கொண்டு; இடைக்குறை. மாற்றப் பெற்ற - மாற்றும் பேற்றைப் பெற்ற. தலைவர் - தலைவராகிய கண்ணப்ப

நாயனாருடைய. தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல் - அடியேனுடைய சிரத்தின் மீது. கொண்டு - வைத்துக் கொண்டு கும்பிட்டு வணங்கிவிட்டு. ஏ: அசை நிலை. கங்கை - கங்கையாறு. வாழ் - தங்கும். சடையார் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அமிர்தகடேசுவரர். வாழும் - எழுந்தருளி யிருக்கும். கடவூரில் - திருக்கடவூரில் திருவவதாரம் செய்தருளிய. கலயனார் - குங்குலியக் கலய நாயனார். ஆம் - ஆகும். பொங்கிய - பொங்கி எழுந்த. புகழின் - புகழை; உருபு மயக்கம். மிக்கார் - மிகுதியாகப் பெற்றவர். திருத்தொண்டு - செய்த திருத்தொண்டினை. புகலலுற்றேன் - இனிமேல் பாடத் தொடங்கினேன்.

தம்முடைய கண்ணை இடந்து காளத்தி நாதருடைய திருவிழியில் அப்பியதால் திண்ணனார் கண்ணப்பர் என்ற திருநாமத்தைப் பெற்றார்.

மன்னனார்: ''மன்னானவன் உலகிற்கொரு மழையானவன்.'', ''நாகேச்சர நகரின் மன்னே.'', ''மன்னன் மூக்கீச்சரத்தடிகள்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''விமலர் கோனை.'', ''அதிகை மூதூர் அரசினை.'', ''நம்பனே எங்கள் கோவே.'', ''கோடிகா உடைய கோவே.'', ''புகலூர் அரசே.'', ''சிவனவன் மன்னவன்.'', ''திருக்கோளிலி மன்னனே.'', ''முத்தொடு போகமாம் மன்னவன்.'', ''மணஞ்சேரி எம்மன்னனார்.'', ''இளம்பிறை சூடிய மன்னன்.'', ''மன்னவன்காண் வானவர்கள் வணங்கி ஏத்தும் வலிவலத்தான்.'', ''மன்னுருவைவான் பவளக் கொழுந்தை.'', ''மன்னானாய் மன்னவர்க் கோரமுதம் ஆனாய்.'' என்று திருநாவுக்கரசு

நாயனாரும், ''மன்னே மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை.'', ''மன்னே மாமணியே.'', ''அழுந்தூர் அரசே.'', ''இமையோர் தொழு கோவே.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி.'', ''காக்கும் எம் காவலனே.'', ''கோவார் கோலம் கொண்ட கொள்கையும்.'', ''ஆடக மதுரை அரசே போற்றி.'', ''அரசே போற்றி அமுதே போற்றி.'', ''நரகிடை ஆழாமே அருள் அரசே போற்றி.'', ''ஆரூர் அமர்ந்த அரசே போற்றி.'', ''கோகழி மேவிய கோவே போற்றி.'', ''அத்திக்கருளிய அரசே போற்றி.'', ''குவைப்பதி மலிந்த கோவே போற்றி.'', ''மலை நாடுடைய மன்னே போற்றி.'', ''செழுமலர்ச் சிவபுரத்தரசே போற்றி.'', ''புத்தேளிர் கோமான்.'', ''கோனாகி.'', ''மூவர் கோனாய் நின்ற முதல்வன்.'', ''யாவர் கோன்.'', ''சிவலோகக் கோனை.'', ''தெனதில்லைக் கோனே.'', ''சிறியேன் பிழை பொறுக்கும் கோனே.'', ''மன்ன எம்பிரான் வருக.'', ''உத்தர கோச மங்கைக் கரசே.'', ''அவிர்சடை வானத் தடலரைசே.'', ''அரைசே அறியாச் சிறியேன்.'', ''மன்னவனே ஒன்று மாறறியாச் சிறியேன் மகிழ்ச்சி மின்னவனே.'', ''ஏனோர்க்கும் தம் கோனை.'', ''என்னானை என்னரையன்.'', ''எங்கோனும்.'', ''பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்.'', ''அங்கண் அரசை.'', ''எம்கோன் நல்குதியேல்.'', ''இனிய கோனவன்.'', ''பல்லுயிர்க்கும் கோனாகி.'', ''தித்திக்கவல்ல கோனை.'', ''கோன் என்னைக்கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.'', ''வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ.'', ''தேவர்கட்கும் கோனவனாய் நின்று.'', ''கோன் தங்கிடை மருது பாடி.'', ''மன்னன் பரிமிசை வந்த வள்ளல்.'', ''எங்கள் பெருந்துறைக்

கோன்.'', ''தூநீர்ப் பெருந்துறைக்கோன்.'', ''திருப்பெருந் துறை மன்னா.'', ''பொன்னம்பலத்தரைசே.'', ''அரைசே பொன்னம்பலத்தாடும் அமுதே.'', ''சீருடைச் சிவபுரத் தரைசே.'', ''அரைசனே அடியருக்கு.'', ''என் மனத்திடை மன்னிய மன்னே.'', ''ஐயனே அரசே அருட் பெருங்கடலே.'', ''யாரும்நின் மலரடி காணா மன்ன.'', ''ஐயாற்றரசே.'', ''ஆற்றகில்லேன் அடியேன் அரசே.'', ''சீரொடு பொலிவாய் சிவபுரத்தரசே.'', ''எம் பெருமானே சிவபுரத்தரசே.'', ''தேடிநீ ஆண்டாய் சிவபுரத்தரசே.'', ''தில்லை வாழ் கூத்தா சிவபுரத்தரசே.'', ''திண்ணமே ஆண்டாய் சிவபுரத்தரசே.'', ''செஞ்சேவே ஆண்டார் சிவபுரத்தரசே.'', ''திருவுயர் கோலச் சிவபுரத் தரசே.'', ''செந்தழல் போல்வாய் சிவபுரத்தரசே.'', ''தேவர்தம் தேவே சிவபுரத்தரசே.'', ''செழுமதி அணிந்தாய் சிவபுரத்தரசே.'', ''கொடி யேரிடையாள் கூறா எம் கோவே.'', ''ஏழை பங்கா எம் கோவே.'', ''கோனே கூவிக்கொள்ளும் நாள் என்று.'', ''மதுரையர் மன்னன்.'', ''உம்பர்கட்கரசே.'', ''விண்ணவர் கோவே.'', ''பெருந்திறல் அருந்தவர்க்கரசே.'', ''வேந்தனாய் வெளியே என்முன் நின்றதோர் அற்புதம்.'', ''அமரர் கோமான்.'', ''தென்பெருந் துறைக்கோன்.'', ''பூவார் சென்னி மன்னன்.'', ''கோமான் பண்டைத் தொண்டரொடும்.'', ''கோகழி எம்கோமாற்கு.'', ''கோகழிக் கரசை.'', ''கோவே அருள வேண்டாவோ.'' என்று மாணிக்கவாசகரும், ''உன்னைத் தந்த பொன்னம் பலத்தரசே.'', ''மேலை வானவர் கோவே.'', ''அம் பொன் செய் அம்பலத்தரசே.'', ''அரக்கன் அரட்டிருவரைக் கீழ் அடர்த்த பொன்னம்பலத் தரசே.'', ''மூவாயிரவர் தெய்வக் கோனே.'', ''விசயற் கருள் செய்த வேந்தே.'', ''புட்கரசுக் கரசே.'', ''மன்று பொலிய

நின்ற கோவே.'', ''தில்லை வேந்தனை.'' என்று திருமாளிகைத் தேவரும், ''இமையவர்க் கரசை.'', ''திருவீழிமிழலை வீற்றிருந்த கொற்றவன்.'', ''ஆவடுதுறை அன்பர்தம் கோனே.'' என்று சேந்தனாரும், ''கீழ்க்கோட்டூர் மன்னவன்.'', ''அண்ட வானவர் கோன்.'', ''மையலாம் கண்டத் தண்ட வானவர்கோன்.'', ''கருங்கண்டத் தண்டவானவர்கோன்.'' என்று கருவூர்த் தேவரும், ''என்னா ரமுதை எங்கள் கோவை.'', ''அரங்கேறி நின்ற கோவே.'', ''செம்பொனின் அம்பலத்துக் கோனை.'', ''அணி தில்லையம்பலத்துள் எம்போன்.'' என்று கண்டராதித்தரும், ''கானக்களிறு பிளந்த எம்கோனை.'', ''கோன் ஒரு கூறுடல் உள்நின்றுயிர்க்கின்றதான்.'', ''அப்பாலாம் கோன் எங்கும் நின்றகுறிபல பாரே.'', ''சதாசிவன் என்கின்ற மன்னை.'', ''கோன் நக்கன் தாயே.'', ''கோன் நந்தி எந்தை.'', ''கோன் அந்தம் இல்லாக் குணத்தருளாமே.'', ''கோன் அந்தம் வாய்க்கம்.'', ''கோ உணர்த்தும் சத்தியாலே.'', ''கோன் முன்னம் சென்னி குறி வழியே சென்று.'' என்று திருமூலரும், ''கொற்றவனே என்றும் கோவணத்தாய் என்றும்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''திருக்கயிலைக் கோனை.'', ''காளத்திப் புத்தேளிர் வேந்தே.'', ''வண்கயிலைக் கோனார்.'', ''காளத்தி மன்னவனே.'', ''மங்கைசேர் பாகத்துமன்.'', ''மன்னா கயிலாயா.'', ''கண்ணின்ற நெற்றிக் கயிலைக்கோன்.'', ''குன்றாத சீர்க் கயிலைக்கோ.'', ''வானவர் தம் கோமானே வா.'', ''காளத்திக் கொற்றவனே.'', ''காளத்திக் கோமான் வா.'', ''செந்நெற் கயிலைக் கோன்.'', ''வழுவில்சீர்க் காளத்தி மன்னன்.'', ''வசையில் சீர்க்காளத்தி மன்னன்.'', ''காளத்தி மன்னா தருவாய் வரம்.'', ''கழனிப் பழனத்

தரசை.'', ''அருமருந்தாம் ஆரூர்க்கோன்.'', ''அணிவயல் ஆரூர்க் கோன்.'', ''களந்தைக் கோன்.'' என்று கபிலதேவ நாயனாரும், ''அரூர்க்கோன் ஆனாயனாய அமுதமே ஆனாய்.'' என்று பரண தேவ நாயனாரும், ''அயன் நாரணன் எம்கோனே எனத்தில்லை அம்பலத்தே நின்று கூத்துகந்த தேனே.'', ''தொல்லெயில் உடுத்த தில்லை காவல.'', ''தில்லை மன்றைப் பொலிவித்த கோமானை.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''எம்கோன் எழில் தில்லைக்கூத்தன்.'', ''செம்பொன் அம்பலத்து வேந்தன்.'', ''மதில் தில்லை மன்னனை.'', ''புலீச்சரத்து மன்னவராய அரர்க்கு.'', ''அரசினை ஆரூர் அமரர் பிரானை.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''திருவாரூர் மன்னர் பாத நீழல்.'', ''திருவால வாயில் மேவு மன்னனே.'', ''திருவாரூர் மன்னவனார்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.



# குங்குலியக் கலய நாயனார் புராணம்

பெரிய புராணத்தில் கண்ணப்ப நாயனார் புராணத்திற்குப் பிறகு விளங்குவது குங்குலியக் கலய நாயனார் புராணம். அதில் வரும் முதற் பாடலின் கருத்து வருமாறு:

'தனக்கு வாய்ப்பாக அமைந்த நீர் வளத்தினால் உயர்ச்சியைப் பெற்று நிலைபெற்று விளங்கிய பொன்னியாகிய காவிரியாறு ஓடும் சோழ நாட்டில் பொருந்திய சீர்த்தியைப் பெற்ற வேதியர்கள் வாழும் திருமதிலைக் கொண்ட சிவத்தலம் அலைகள் வீசும் நீரைப் பெற்ற கங்கையாறு தங்கிய நீண்ட சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அமிர்தகடேசுவரர் பழங் காலத்தில் தம்முடைய திருத்தொண்டராகிய மார்க்கண்டேயர் மேல் அவருடைய உயிரைக் கொண்டுபோக வந்த யமனைச் சினந்து உதைத்த சிவந்த திருவடியை உடைய அந்த ஈசுவரர் நெடுங்காலமாகத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பதாகிய தலம் திருக்கடவூர் என்பதாகும்.' பாடல் வருமாறு:

"வாய்ந்தநீர் வளத்தால் ஓங்கி மன்னிய பொன்னி நாட்டின்
ஏய்ந்தசீர் மறையோர் வாழும் எயிற்பதி எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி இருப்பது கடவூர் ஆகும்."

வாய்ந்த - தனக்கு வாய்ப்பாக அமைந்த. நீர் வளத்தால் - நீர் வளத்தினால். ஓங்கி - உயர்ச்சியைப் பெற்று. மன்னிய - நிலைபெற்று விளங்கிய. பொன்னி - பொன் கொழிக்கும். காவிரியாறு பாயும்; "பொன்னி பொன் கொழிக்கும்" என வருதலைக் காண்க. நாட்டின் - சோழ வளநாட்டில். ஏய்ந்த - பொருந்திய. சீர் - சீர்த்தியைப் பெற்ற. மறையோர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாழும் - தங்களுடைய வாழ்க்கையை நடத்தும். எயில் - மதில் சூழ்ந்த. பதி - சிவத்தலம். எறி - அலைகள் வீசும். நீர் - புனலைப் பெற்ற. க்: சந்தி. கங்கை - கங்கையாறு. தோய்ந்த - தங்கிய. நீள் - நீளமான. சடையார் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அமிர்தகடேசுவரர். பண்டு - பழைய காலத்தில். தொண்டர் மேல் - தம்முடைய திருத்தொண்டராகிய மார்க்கண்டேயரின் மேல். வந்த - அவருடைய உயிரைக் கொண்டு போக வந்த. கூற்றை - யமனை. க்: சந்தி. காய்ந்த - சினந்து உதைத்த. சேவடியார் - செந்தாமரை மலரைப் போலச் சிவந்த திருவடியை உடைய அந்த ஈசுவரர். நீடி - நெடுங்காலமாக. இருப்பது - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பதாகிய தலம். கடவூர் - திருக்கடவூர். ஆகும் - என்பது ஆகும்.

திருக்கடவூர்: இது சோழ நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் அமிர்தகடேசுவரர்; 'அமுதீசர்' எனவும் இவர் திருநாமம் வழங்கும். அம்பிகை அபிராமி அம்மை. தீர்த்தங்கள்: சிவகங்கை, அமுத புஷ்கரிணி என்பவை.

இது சீகாழியிலிருந்து தென் கிழக்கில் 14 மைல் தூரத்தில் உள்ளது. மேற்குப் பார்த்த சந்நிதி. இது அட்ட வீரட்டங்களில் ஒன்று. மார்க்கண்டேயருக்காகக் கால சம்ஹாரமூர்த்தி யமனை உதைத் தலம். அந்த மூர்த்திக்குத் தனியே ஒரு சந்நிதி இந்தக் கோயிலில் இருக்கிறது. குங்குலியக் கலய நாயனாரும், காரிய நாயனாரும் வாழ்ந்து இறைவனை வழிபட்டு முத்தி பெற்ற தலமும் இதுவே. இங்கே எழுந்தருளியிருக்கும் விநாயகப் பெருமானுடைய திருநாமம் கள்ள வாரணப் பிள்ளையார் என்பது. இந்தத் திருக் கோயிலுக்குள் வில்வாரணியேசுவரர், பாபஹரேசு வரர், புண்ணியவர்த் தனேசுவரர் என்னும் சிவலிங்கப் பெருமான்கள் எழுந்தருளியிருக்கிறார்கள். இதைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

> ''சேலினே ரனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
> பாலும்நற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி என்றும்
> மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டர்க் காக அன்று
> காலனை உதைப்பர் போலும் கடவூர் வீரட்ட னாரே.''

இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தார பஞ்சமப் பண்ணில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

> ''சடையுடை யானும் நெய்யா லானும் சரிகோவண
> உடையுடை யானும் மையார்ந்த ஒண்கண் உமை கேள்வனும்
> கடையுடை நன்னெடு மாடம் ஓங்கும் கடவூர்தனுள்
> விடையுடை அண்ணலும் வீரட்டானத் தரனல்லனே.''

இந்தத் தலத்தைப் பற்றித் திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை என்னும் திருப்பதிகங்களைத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியுள்ளார். மேலே காட்டிய, ''சேலினேரனைய'' என்ற தொடக்கத்தை உடைய

திரு நேரிசை அந்த நாயனார் பாடியருளியதே. அவர் பாடியருளிய திருக்குறுந்தொகை ஒன்று வருமாறு:

"மலைக்கொ ளானை மயக்கிய வல்வினை
நிலைக்கொ ளானை நினைப்புறு நெஞ்சமே
கொலைக்கை யானையும் கொன்றிடு மாதலால்
சலைக்கை யானைகண் டீர்கட வூரரே."

சுந்தரமூர்த்தி நாயனார் நட்டராகப் பண்ணில் இந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"பொடியார் மேனியனே புரி நூல்ஒரு பாற்பொருந்த
வடியார் மூவிலைவேல் வளர் கங்கையின் மங்கையொடும்
கடியார் கொன்றையனே கடவூர்தனுள் வீரட்டத் தெம்
அடிகேள் என்அமுதே எனக் கார்துணை நீயலதே."

பிறகு வரும் 2-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'செழிப்பைப் பெற்ற திருக்கடவூரில் எல்லாக் காலத்திலும் வயல்கள் எல்லாவற்றிலும் விளைந்த சம்பா நெற் பயிர்கள் ஓங்கி நிற்கும்; வயல்களினுடைய வரப்புக்கள் எல்லாவற்றிலும் சங்குப் பூச்சிகள் உமிழ்ந்த முத்துக்கள் ஒளியை வீசும்; அந்த ஊரின் பக்கங்களில் எல்லாவற்றிலும் அந்தணர்கள் யாகம் புரியும் யாகசாலைகள் விளங்கும்; அணைகள் எல்லாவற்றிலும் செங்கழுநீர்ச் செடிகளின் தொகுதி காணப்படும்; பாக்கு மரங்கள் வளர்ந்து நிற்கும் காடுகளின்மேல் மேகங்கள் எல்லாம் தவழும்; அந்தப் பக்கங்களில் வாழும் மக்கள் எல்லோரும் அந்தத் திருக்கடவூரின் சீர்த்தியை வாழ்த்தும் வாழ்த்துக்கள் கேட்கும்; அந்தத் தலத்தில் வாழும் அந்தணர்கள் புரியும் செயல்கள் ஆகிய தொழில்கள், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறே ஆகும்.' பாடல் வருமாறு:

"வயலெலாம் விளைசெஞ் சாலி; வரம்பெலாம் வளையின் முத்தம்;
அயலெலாம் வேள்விச் சாலை; அணையெலாம் கழுநீர்க் கற்றை;
புயலெலாம் கமுகின் காடப் புறமெலாம் அதன்சீர் போற்றல்;
செயலெலாம் தொழில்கள் ஆறே, செழுந்திருக் கடவூர் என்றும்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. செழும் - செழிப்பைப் பெற்று விளங்கும். திருக்கடவூர் - திருக்கடவூரில். என்றும் - எல்லாக் காலத்திலும். வயல் - வயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. விளை - விளைந்த. செஞ்சாலி - சம்பா நெற்பயிர்கள் ஓங்கி நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். வரம்பு - வயல்களினுடைய வரப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. வளையின் - சங்குப் பூச்சிகள் உமிழ்ந்த; ஒருமை பன்மை மயக்கம். முத்தம் - முத்துக்கள்.ஒளியை வீசும்; ஒருமை பன்மை மயக்கம். அயல் - அந்த ஊரின் பக்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. வேள்வி - அந்தணர்கள் யாகம் புரியும். ச்: சந்தி. சாலை - சாலைகள் விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். அணை - அணைகள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. கழுநீர் - செங்கழு நீர்ச் செடிகளின்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கற்றை - தொகுதி காணப்படும். கமுகின் - பாக்கு மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். காடு - காடுகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். புயல் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாம் தவழும்; இடைக்குறை. அப்புறம் - அந்தப் பக்கங்களில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். புறம்: ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லோரும்; இடைக்குறை. அதன் - அந்த திருக்கடவூரினுடைய. சீர் -

சீர்த்தியை. போற்றல் - வாழ்த்தும் வாழ்த்துக்கள் கேட்கும்; ஒருமை பன்மை மயக்கம். செயல் - அந்தணர்கள் புரியும் செயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாம்; இடைக்குறை. தொழில்கள் - ஆகிய வேலைகள். ஆறே - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறே ஆகும்.

*பிறகு உள்ள 3-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'தங்களுடைய உள்ளங்கைகளைக் காட்டிலும் அகலமாக உள்ள மையுண்ட விழிகளைப் பெற்ற இழிகுணப் பெண்களாகிய பள்ளிகள் கூட்டமாகக் கூடிக்கொண்டு கூத்தாடும் இடங்களைப் பெற்ற வயல் ஒவ்வொன்றிலும் அவர்கள் பாடும் மருதப்பண் அமைந்த இசைப் பாடல்கள் எழுவனவாகிக் கேட்கும்; வடங்களை உடைய பூணூலை அணிந்த மார்புகளைப் பெற்ற வைதிக வேதியர்கள் செயல்களாகிய சடங்குகளை உடைய இடங்கள் ஒவ்வொன்றிலும் சாம வேதத்தைக் கானம் செய்யும் பாடல்கள் எழுந்து கேட்பவையாக விளங்கும்.' பாடல் வருமாறு:*

"குடங்கையில் அகன்ற உண்கட் கடைசியர் குழுமி ஆடும்
இடம்படு பண்ணை தோறும் எழுவன மருதம் பாடல்;
வடம்புரி முந்நூல் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை இடங்கள் தோறும் எழுவன சாமம் பாடல்."

*குடங்கையில் - தங்களுடைய உள்ளங்கைகளைக் காட்டிலும்; ஒருமை பன்மை மயக்கம். அகன்ற - அகலமாக உள்ள. உண் - மையுண்ட. கண் - விழிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். கடைசியர் - இழிகுலப் பெண்களாகிய பள்ளிகள். குழுமி - கூட்டமாகக் கூடிக்கொண்டு. ஆடும் - கூத்தாடும். இடம் - இடங்களை;*

ஒருமை பன்மை மயக்கம். படு - பெற்ற. பண்ணை - வயல். தோறும் - ஒவ்வொன்றிலும். எழுவன - எழுபவையாக. மருதம் - மருதப்பண் அமைந்த. பாடல் - இசைப் பாடல்கள் கேட்கும்; ஒருமை பன்மை மயக்கம். வடம் - வடங்களை; ஒருமை பன்மை மயக்கம். புரி - புரிகளாகப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். முந்நூல் - மூன்று நூல்களாகிய பூணூலை. நூல்: ஒருமை பன்மை மயக்கம். மார்பின் - அணிந்த மார்புகளை உடைய; ஒருமை பன்மை மயக்கம். வைதிக - வேதம் விதித்தபடி நடக்கும். மறையோர் - வேதியர்கள்; ஒருமை பன்மை மயக்கம். செய்கை - செயல்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சடங்கு - சடங்குகளை; ஒருமை பன்மை மயக்கம். உடை - உடைய. இடங்கள் தோறும் - இடங்கள் ஒவ்வொன்றிலும். சாமம் - சாம வேதத்தைக் கானம் செய்யும். பாடல் - பாடல்கள்; ஒருமை பன்மை மயக்கம். எழுவன - எழுந்து கேட்பவையாக விளங்கும்.

அடுத்து வரும் 4-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தூய்மையாகிய நீளமான கொம்புகளைப் பெற்ற எருமை மாடு முழுகித் தன்னுடைய பாலைப் பொழிந்த வாவியில் சிவந்த நிறத்தைக் கொண்ட கயல் மீன்கள் தாவிப் பாய்ந்து நறுமணத்தைப் பெற்ற செந்தாமரை மலரும், வெண்டாமரை மலரும் அந்த எருமை மாட்டின் இனிய சுவையைப் பெற்ற பாலினுடைய மணத்தை வீசும்; மேகங்கள் தவழும் மாடங்கள் உயர்ந்து நிற்கும் சாலையின் பக்கத்தில் சிறிது வந்து சேரும் மேகங்களும் அந்த இடத்தில் அந்த மேகங்கள் சொரிந்த மழை நீரும் அந்தணர்கள் வளர்க்கும் யாகாக்கினியில் சொரியும் நெய்யாகிய ஆகுதியினால் எழுந்த புகையினுடைய பகுதி நறுமணம் வீசும்.' பாடல் வருமாறு:

"துங்கநீள் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமும் தீம்பால் நாறும்;
மங்குல்தோய் மாடச் சாலை மருங்கிறை ஒதுங்கும் மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரும் ஆகுதிப் புகைப்பால் நாறும்."

*துங்க - தூய்மை உடைய. நீள் - நீளமான. மருப்பின் - கொம்புகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மேதி - எருமை மாடு. படிந்து - முழுகி. பால் - தன்னுடைய மடியிலிருந்து பாலை. சொரிந்த - பொழிந்த. வாவி - வாவியில். ச்: சந்தி. செம் - சிவந்த நிறத்தைக் கொண்ட. கயல் - கயல் மீன்கள்; ஒருமை பன்மை மயக்கம். பாய்ந்து - துள்ளிக் குதித்துத் தாவி. வாச - நறுமணம் கமழும். க்: சந்தி. கமலமும் - செந்தாமரை மலரும் வெண்டாமரை மலரும்; ஒருமை பன்மை மயக்கம். தீம்பால் - அந்த எருமை மாட்டின் இனிய சுவையைப் பெற்ற பாலினுடைய. நாறும் - நறுமணத்தை வீசும். மங்குல் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். தோய் - படிந்து தவழும். மாட - மாடங்கள் உயர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சாலை மருங்கு - சாலையின் பக்கத்தில். இறை - சிறிது நேரம். ஒதுங்கும் - வந்து சேரும். மஞ்சும் - மேகங்களும்; ஒருமை பன்மை மயக்கம். அங்கு - அந்த இடத்தில். அவை - அந்த மேகங்கள். பொழிந்த - சொரிந்த. நீரும் - மழை நீரும். ஆகுதி - அந்தணர்கள் வளர்க்கும் யாகாக்கினியில் சொரியும் நெய்யாகிய ஆகுதியினால் எழுந்த. ப்: சந்தி. புகை - புகையினுடைய. ப்: சந்தி. பால் - பகுதி. நாறும் - நறுமணம் கமழும்.*

பிறகு உள்ள 5-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பொருந்திய செல்வம் படைத்தவர்கள் வாழும் மிகுதியாக உள்ள நீர்வளம், நிலவளம், நன்மக்கள் வளம்

முதலிய வளங்களைப் பெற்ற சிவத்தலமாகிய அந்தத் திருக்கடவூரில் தம்முடைய இல்லற வாழ்க்கையை நடத்துபவர், பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர், மூன்று நூல்களைப் பெற்ற பூணூலை அணிந்த மார்பைக் கொண்ட வேதியராகிய குங்குலியக் கலய நாயனார் என்று கூறப்பெற்ற திருநாமத்தைக் கொண்டவர், பெருமையைப் பெற்ற கங்கையாற்றைப் புனையும் சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் கொண்ட தலைவனாகிய அமிர்தகடேசுவர னுடைய வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை விரும்பி ஒவ்வொரு நாளும் உருக்கத்தை அடைந்த பக்தி மிகுதியாக உண்டாகிய திருவுள்ளத்தைப் பெற்றவர், நல்லொழுக்கத்தில் மிக்க சிறப்பைக் கொண்டவர்.' பாடல் வருமாறு:

"மருவிய திருவின் மிக்க வளம்பதி அதனில் வாழ்வார்
அருமறை முந்நூல் மார்பின் அந்தணர் கலயர் என்பார்
பெருநதி அணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய அன்பு கூர்ந்த சிந்தையார் ஒழுக்கம் மிக்கார்."

மருவிய - பொருந்திய. திருவின் - செல்வம் படைத்த வர்கள் வாழ்வதும்; திணை மயக்கம்; வினையாலணையும் பெயர். மிக்க - மிகுதியாக உள்ள. வளம் - நீர்வளம், நில வளம், நன்மக்கள் வளம் முதலிய வளங்களைப் பெற்றதுமாகிய; ஒருமை பன்மை மயக்கம். பதி - சிவத்தலமாகிய. அதனில் - அந்தத் திருக்கடவூரில். வாழ்வார் - தம்முடைய இல்லற வாழ்க்கையை நடத்துபவர். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம்,

அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றியவர்; திணை மயக்கம். மறை: ஒருமை பன்மை மயக்கம். முந்நூல் - மூன்று நூல்களைப் பெற்ற பூணூலை. நூல்: ஒருமை பன்மை மயக்கம். மார்பின் - அணிந்த மார்பைக் கொண்ட. அந்தணர் - வேதியராகிய. கலயர் - குங்குலியக் கலய நாயனார். என்பார் - என்று கூறப் பெற்ற திருநாமத்தைக் கொண்டவர். பெரு - பெருமையைப் பெற்ற. நதி - கங்கையாற்றை. அணியும் - புனையும். வேணி - சடாபாரத்தைத் தம்முடைய தலையிற் கொண்ட. ப்: சந்தி. பிரான் - தலைவனாகிய அமிர்தகடேசுவர னுடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகு பெயர். பேணி - விரும்பி. நாளும் - ஒவ்வொரு நாளும். உருகிய - உருக்கத்தை அடைந்த. அன்பு - பக்தி. கூர்ந்த - மிகுதியாக உண்டாகிய. சிந்தையார் - திருவுள்ளத்தைப் பெற்றவர். ஒழுக்கம் - நல்ல ஒழுக்கத்தில். மிக்கார் - மிக்க சிறப்பைக் கொண்டவர்.

அடுத்து வரும் 6-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இளைஞனாக விளங்கும் வேதியனாகிய மார்க் கண்டேயன் தம்மைப் பிடித்துக் கொள்ள அவனுடைய அச்சத்தைப் போக்கித் தம்முடைய திருவருளை வழங்கும் வழியினால் திருமாலும் நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவனும் பன்றியின் உருவத்தை எடுத்து நிலத்தைத் தோண்டிப் பார்த்தும், அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்து மேலே பறந்து சென்று தேடிப் பார்த்தும் தெரிந்து கொள்ள முடியாத திருவடிகளையும் திருமுடியையும் கொண்ட திருக்கோலத்தை எடுத்துக் கொண்டு அந்த மார்க்கண்டேயனுக்கு எதிரில் எழுந்தருளி யமனுடைய அருமையான உயிரைப் போக்கியவராகிய அமிர்தகடேசு

வரருக்கு நறுமணம் வீசிய குங்குலியத் தூபத்தைத் தூப முட்டியில் மிகுதியாகவே நிரம்பித் ததும்புமாறு இடுகின்ற திருப்பணியில் தலை சிறந்து நின்றிருப்பவர் அந்தக் குங்குலியக் கலய நாயனார்.' பாடல் வருமாறு:

"பாலனாம் மறையோன் பற்றப் பயம்கெடுத் தருளும் ஆற்றால்
மாலும்நான் முகனும் காணா வடிவுகொண் டெதிரே வந்து
காலனார் உயிர்செற் றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம இடும்பணி தலைநின் றுள்ளார்."

பாலன் ஆம் - இளைஞனாக விளங்கும். மறையோன் - வேதியனாகிய மார்க்கண்டேயன். பற்ற - தம்மைப் பிடித்துக் கொள்ள. ப்: சந்தி. பயம் - அவனுடைய அச்சத்தை. கெடுத்து - போக்கி. அருளும் - தம்முடைய திருவருளை வழங்கும். ஆற்றால் - வழியினால். மாலும் - திருமாலும். நான்முகனும் - நான்கு முகங்களைப் படைத்த பிரமதேவனும். முகம்: ஒருமை பன்மை மயக்கம். காணா - பன்றியின் உருவத்தை எடுத்துத் தரையைத் தோண்டிப் பார்த்தும், அன்னப் பறவையின் வடிவத்தை எடுத்து மேலே பறந்து சென்று தேடிப் பார்த்தும் தெரிந்து கொள்ள முடியாத. வடிவு - திருவடிகளையும் திரு முடியையும் கொண்ட திருக்கோலத்தை. கொண்டு - எடுத்துக் கொண்டு. எதிர் - அந்த மார்க்கண்டேயனுக்கு எதிரில். ஏ: அசைநிலை. வந்து - எழுந்தருளி. காலன் - யமனுடைய. ஆர் உயிர் - அருமையான உயிரை. செற்றார்க்கு - போக்கியவராகிய அமிர்தகடேசுவரருக்கு. க்: சந்தி. கமழ்ந்த - நறுமணம் வீசிய. குங்குலியத் தூபம் - குங்குலியத் தூபத்தை. குங்குலியம் - சாம்பிராணி. சால - மிகுதியாக. ஏ: அசை நிலை. நிறைந்து - தூப முட்டியில் நிரம்பி. விம்ம - ததும்புமாறு. இடும்பணி - இடுகின்ற திருப்பணியில். தலை நின்று - தலைசிறந்து

நின்று. உள்ளார் - இருப்பவர் அந்தக் குங்குலியக் கலய நாயனார்; தோன்றா எழுவாய்.

பின்பு உள்ள 7-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'கங்கையாற்றினுடைய புனல் ஒலிக்கும் தலையைப் பெற்றவனும், நெற்றியில் ஒற்றைக் கண்ணைக் கொண்டவனும், அடியேங்களுடைய தலைவனும் ஆகிய அமிர்தகடேசுவரனுக்குத் ததும்புகின்ற குங்குலியத் தூபத்தை விளக்கம் உண்டாகும் வண்ணம் விரும்பி எடுத்துத் தம்முடைய வாழ்க்கையை நடத்திக் கொண்டு போக அந்தத் திருக்கடவூரில் அந்த அமிர்தகடேசுவரர் வழங்கிய திருவருளினால் குங்குலியக் கலய நாயனாருக்குத் தரித்திரம் வந்து சேர்ந்த பிறகும் தங்களுடைய தலைவராகிய அந்த அமிர்தகடேசுவரருக்குத் தாம் முன்பு புரிந்து வரும் திருப்பணியைத் தவறாமல் அந்த நாயனார் செலுத்தி வந்தார்.' பாடல் வருமாறு:

"கங்கைநீர் கலிக்கும் சென்னிக் கண்ணுதல் எம்பி ராற்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
அங்கவர் அருளி னாலே வறுமைவந் தடைந்த பின்னும்
தங்கள்நா யகர்க்குத் தாம்முன் செய்பணி தவாமை உய்த்தார்."

கங்கை - கங்கையாற்றினுடைய. நீர் - தூய புனல். கலிக்கும் - ஒலிக்கும். சென்னி - தலையைப் பெற்றவனும்; திணை மயக்கம். க்: சந்தி. கண்நுதல் - நெற்றியில் ஒற்றைக் கண்ணைக் கொண்டவனும்; திணை மயக்கம். எம் - அடியேங்களுடைய; இது சேக்கிழார் தம்மையும் குங்குலியக் கலய நாயனாரையும் சேர்த்துச் சொன்னது. பிராற்கு - தலைவனும் ஆகிய அமிர்தகடேசுவரனுக்கு. ப்: சந்தி. பொங்கு - ததும்புகின்ற. குங்குலியத் தூபம் - குங்குலியத்

தூபத்தை. பொலிவு - விளக்கம். உற - உண்டாகும் வண்ணம். ப்: சந்தி. போற்றி - விரும்பி எடுத்து. ச்: சந்தி. செல்ல - தம்முடைய வாழ்க்கையை நடத்திக்கொண்டு போக. அங்கு - அந்தத் திருக்கடவூரில். அவர் - அந்த அமிர்தகடேசுவரர். அருளினால் - வழங்கிய திருவருளினால். ஏ: அசை நிலை. வறுமை - தரித்திரம். வந்து - குங்குலியக் கலய நாயனாருக்கு வந்து. அடைந்த - சேர்ந்த. பின்னும் - பிறகும். தங்கள் - தங்களுடைய. நாயகர்க்கு - தலைவராகிய அந்த அமிர்தகடேசுவரருக்கு. த்: சந்தி. 'தாம்' என்றது குங்குலியக் கலய நாயனாரை. முன் - முன்பு. செய் - புரிந்து வரும். பணி - திருப்பணியை. தவாமை - தவறாமல். உய்த்தார் - அந்த நாயனார் செலுத்தி வந்தார்.

பிறகு வரும் 8-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இத்தகைய வழியில் குங்குலியக் கலய நாயனார் நடந்து வரும் காலத்தில் அவருக்கு உண்டான வறுமை நெடுங்காலம் இருந்து வந்ததனால் அந்த நாயனார் தம்முடைய நல்ல வயல்கள் முழுவதையும் விற்பனை செய்தும், விரும்பிய வேலைக்காரரை விற்பனை புரிந்தும், நெடுங்காலமாக இருந்த பல செல்வங்கள் ஒழியத் தாம் வாழ்ந்து பழகிய இல்லற வாழ்க்கையில் நிலைபெற்று விளங்கிய அவருடைய உறவினர்களோடு புதல்வர்களும் வருத்தத்தை அடைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"இந்நெறி ஒழுகும் நாளில் இலம்பாடு நீடு செல்ல
நன்னிலம் முற்றும் விற்றும் நாடிய அடிமை விற்றும்
பன்னெடும் தனங்கள் மாளப் பயில்மனை வாழ்க்கை தன்னில்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள்."

இந்நெறி - இத்தகைய வழியில். ஒழுகும் - குங்குலியக் கலய நாயனார் நடந்து வரும். நாளில் -

காலத்தில். இலம் பாடு - அவருக்கு உண்டான வறுமை. நீடு - நெடுங்காலம். செல்ல - இருந்து வந்ததனால். நல் - அந்த நாயனார் தம்முடைய நல்ல. நிலம் - வயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். முற்றும் - முழுவதையும். விற்றும் - விற்பனை செய்தும். நாடிய - விரும்பிய. அடிமை - வேலைக்காரரை. விற்றும் - விற்பனை புரிந்தும். பல் நெடும் - நெடுங் காலமாக இருந்த பல. தனங்கள் - செல்வங்கள். மாள - ஒழிய. ப்: சந்தி. பயில் - தாம் வாழ்ந்து பழகிய. மனை வாழ்க்கை தன்னில் - இல்லற வாழ்க்கையில். தன்: அசை நிலை. மன்னிய - நிலை பெற்று விளங்கிய. சுற்றத்தோடு - உறவினர்களோடு. மக்களும் - அவருடைய புதல்வர்களும். வருந்தினார்கள் - வருத்தத்தை அடைந்தார்கள்.

பின்பு வரும் 9-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'எந்த வகையான பண்டம் ஒன்றுகூட இல்லையாகி இரண்டு தினங்கள் தாம் உண்ணும் உணவுகள் இல்லாமற் போய் மயக்கத்தை அடையும் தம்முடைய புதல்வர்களோடும் பெருகி உள்ள உறவினர்களைப் பார்த்துக் காதலைப் புரியும் அவருடைய பத்தினியார் தம்முடைய கணவராகிய குங்குலியக் கலய நாயனாருடைய கையில் குற்றம் இல்லாத மங்கலத்தைப் பெற்ற நூலில் கோத்திருக்கும் தங்கத் தாலியை அளித்து, "இதை விற்று நெற்களை வாங்கிக் கொண்டு வாருங்கள்." என்று கூறினார்.' பாடல் வருமாறு:

"யாதொன்றும் இல்லை யாகி இருபகல் உணவு மாறிப்
பேதுறும் மைந்த ரோடும் பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தம் கணவனார் கலய னார்கைக்
கோதில்மங் கலநூல் தாலி கொடுத்து,'நெற் கொள்ளும்' என்றார்."

யாது - எந்த வகையான. ஒன்றும் - பண்டம் ஒன்றுகூட. இல்லைஆகி - இல்லாமற் போவதாகி. இரு -

இரண்டு. பகல் - தினங்கள்; ஒருமை பன்மை மயக்கம். உணவு - தாம் உண்ணும் உண்வுகள்; ஒருமை பன்மை மயக்கம். மாறி - இல்லாமற் போய். ப்: சந்தி. பேது - மயக்கத்தை. உறும் - அடையும். மைந்தரோடும் - புதல்வர்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். பெருகு - பெருகி உள்ள. சுற்றத்தை - உறவினர்களை. நோக்கி - பார்த்து விட்டு. க்: சந்தி. காதல் செய் - காதலைப் புரியும். மனைவியார் - அவருடைய பத்தினியார். தம் - தம்முடைய. கணவனார் - கணவராகிய. கலயனார் - குங்குலியக் கலய நாயனாருடைய. கை - கையில். க்: சந்தி. கோது - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. மங்கல - மங்கலத்தைப் பெற்ற. நூல் - நூலில் கோத்திருக்கும். தாலி - தங்கத் தாலியை. கொடுத்து - அளித்து. நெல் - இதை விற்று வந்த பணத்தைக் கொண்டு நெற்களை; ஒருமை பன்மை மயக்கம். கொள்ளும் - வாங்கிக் கொண்டு வாருங்கள். என்றார் - என்று கூறினார்.

பிறகு வரும் 10-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தச் சமயத்தில் தம்முடைய பத்தினியார் கழற்றிக் கொடுத்த அந்தத் தங்கத் தாலியை எடுத்துக் கொண்டு நெற்களை விலைக்கு வாங்கும் பொருட்டு அந்தக் குங்குலியக் கலய நாயனாரும் செல்ல ஒப்பு இல்லாத குங்குலியத்தை எடுத்துக் கொண்டு ஒரு வியாபாரியும் அவருக்கு எதிரில் வந்து சேர்ந்தான்; அவனைப் பார்த்து, ''இந்த மூட்டை என்ன?'' என்று கேட்ட குங்குலியக் கலய நாயனாருக்கு அந்த வியாபாரி உள்ள வண்ணம் கூற அதனைக் கேட்டு மூன்று புரிகளைக் கொண்ட வெள்ளையான பூணூலை அணிந்த மார்பைப் பெற்ற அந்தக் குங்குலியக் கலய நாயனார் தம்முடைய வதனம் மலர்ச்சியை

அடைந்து பின்வரும் இந்த வார்த்தைகளைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வான் அவரும் போக
ஒப்பில்குங் குலியம் கொண்டோர் வணிகனும் எதிர்வந் துற்றான்;
'இப்பொதி என்கொல்?' என்றார்க் குள்ளவா றியம்பக் கேட்டு
முப்புரி வெண்ணூல் மார்பர் முகம்மலர்ந் திதனைச் சொன்னார்."

அப்பொழுது - அந்தச் சமயத்தில். அதனை - தம்முடைய பத்தினியார் கழற்றிக் கொடுத்த அந்தத் தங்கத் தாலியை. க்: சந்தி. கொண்டு - எடுத்துக் கொண்டு. நெல் - நெற்களை; ஒருமை பன்மை மயக்கம். கொள்வான் - விலைக்கு வாங்கும் பொருட்டு. அவரும் - அந்தக் குங்குலியக் கலய நாயனாரும். போக - தம்முடைய திருமாளிகையிலிருந்து எழுந்தருள. ஒப்பு - நிகர். இல் - இல்லாத; கடைக்குறை. குங்குலியம் - குங்குலியத்தை. கொண்டு - ஒரு மாட்டின் மேல் வைத்துக் கொண்டு. ஓர் - ஒரு. வணிகனும் - வியாபாரியும். எதிர் - அந்த நாயனாருக்கு எதிரில். வந்து உற்றான் - வந்து சேர்ந்தான். இப்பொதி - அவனைப் பார்த்து இந்த மூட்டை. என்கொல் - என்ன. கொல்: அசை நிலை. என்றார்க்கு - என்று கேட்ட குங்குலியக் கலய நாயனாருக்கு. உள்ளவாறு - அந்த வியாபாரி உள்ள வண்ணம். இயம்ப - கூற. க்: சந்தி. கேட்டு - அதைக் கேட்டு. முப்புரி - மூன்று புரிகளைக் கொண்ட. புரி: ஒருமை பன்மை மயக்கம். வெண் - வெண்மையான. நூல் - பூணூலை அணிந்த. மார்பர் - மார்பைக் கொண்ட அந்த நாயனார். முகம் - தம்முடைய வதனம். மலர்ந்து - மலர்ச்சியை அடைந்து. இதனை - பின்வரும் இந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சொன்னார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

*அடுத்து உள்ள 11-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'''கங்கை யாற்றைத் தம்முடைய தலையின் மேல் உள்ள சிவந்த சடாபாரத்தின் மேல் தங்க வைத்த அழகிய கண்களைப் பெற்றவராகிய அமிர்தகடேசுவரருடைய பூசைக்கு உரியதான நறுமணம் கமழும் குங்குலியம் இது ஆனால் அடியேன் இன்றைக்கு இதைப் பெறும் பாக்கியத்தை அடைந்தேன்; நல்லதாகிய பாக்கியம் இதற்கு மேல் ஒன்று இருக்கிறதோ? பெறுவதற்கு அரிய பாக்கியத்தை அடைந்து வைத்துக் கொண்டு வேறாக இனிமேல் பெற்றுக் கொள்ளும் பண்டம் என்ன இருக்கிறது?'' என்று அந்தக் குங்குலியக் கலய நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டுத் தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்த விருப்பத்தோடு சிறந்து விளங்கினார்.' பாடல் வருமாறு:*

'''ஆறுசெஞ் சடைமேல் வைத்த அங்கணர் பூசைக் கான
நாறுகுங் குலியம் ஈதேல் நான்இன்று பெற்றேன்; நல்ல
பேறுமற் றிதன்மேல் உண்டோ? பெறாப்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வ தென்?'என் றுரைத்தெழும் விருப்பின் மிக்கார்."

ஆறு - கங்கையாற்றை. செம் - தம்முடைய தலையின் மேல் உள்ள சிவந்த. சடைமேல் - சடாபாரத்தின்மேல். வைத்த - தங்க வைத்த. அங்கணர் - அழகிய கண்களைப் பெற்றவராகிய அமிர்தகடேசுவரருடைய. கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர்: இடைக்குறை. பூசைக்கு ஆன - பூசைக்கு உரியதான. நாறு - நறுமணம் கமழும். குங்குலியம் - சாம்பிராணி. ஈதேல் - இதுவானால். நான் - அடியேன். இன்று - இன்றைக்கு. பெற்றேன் - இதைப் பெறும் பாக்கியத்தை அடைந்தேன். நல்ல - நல்லதாகிய. பேறு - பாக்கியம். மற்று - வேறாக. இதன்மேல் - இதற்குமேல்.

உண்டோ - ஒன்று இருக்கிறதோ. பெறா - பெறுவதற்கு அரிய. ப்: சந்தி. பேறு - பாக்கியத்தை. பெற்று - அடைந்து. வைத்து - வைத்துக்கொண்டு. வேறு - வேறாக. இனி - இனிமேல். க்: சந்தி. கொள்வது - பெற்றுக் கொள்ளும் பண்டம். என் - என்ன இருக்கிறது. என்று - என. உரைத்து - அந்தக் குங்குலியக் கலய நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு. எழும் - தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்த. விருப்பின் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். மிக்கார் - சிறந்து விளங்கினார்.

அடுத்து உள்ள 12-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'குங்குலியக் கலய நாயனார், ''நான் தங்கத்தை அளிக்க நீர் குங்குலியத்தைக் கொடுங்கள்'' என அந்த வியாபாரியிடம் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய அந்த வியாபாரியும், ''எந்தப் பொருளைக் கொடுக்க நீர் இசைந்திருக்கிறீர்?'' என்று அந்த நாயனாரைக் கேட்க, தம்முடைய பத்தினியார் கழற்றி அளித்த தங்கத் தாலியைக் குங்குலியக் கலய நாயனார் அந்த வியாபாரியிடம் கொடுத்தார்; அன்றைக்கு அந்த வியாபாரி அந்தத் தங்கத் தாலியைப் பெற்றுக் கொண்டு அந்தக் குங்குலிய மூட்டையை அளிக்க அதை வாங்கிக் கொண்டு அங்கே நின்று கொண்டிராதவராகிய வேகத்தோடு தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பி எழுந்த மகிழ்ச்சியோடும் போனார்.' பாடல் வருமாறு:

"'பொன்தரத் தாரும்' என்று புகன்றிட வணிகன் தானும்
'என்தர இசைந்த' தென்னத் தாலியைக் கலயர் ஈந்தார்;
அன்றவன் அதனை வாங்கி அப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலர் விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பி னோடும்."

பொன் - குங்குலியக் கலய நாயனார் நான் தங்கத்தை. தர - உம்மிடம் கொடுக்க. த்: சந்தி. தாரும் - நீர் குங்குலியத்தைக் கொடுப்பீராக. என்று - என. புகன்றிட - அந்த நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. வணிகன் தானும் - அந்த வியாபாரியும். தான்: அசை நிலை. என் - நீர் என்ன. தர - என்னிடம் கொடுக்க. இசைந்தது - சம்மதித்தது. என்ன - என்று அந்த வியாபாரி கேட்க. த்: சந்தி. தாலியை - தம்முடைய பத்தினியார் கழற்றிக் கொடுத்த தங்கத் தாலியை. க்: சந்தி. கலயர் - குங்குலியக் கலய நாயனார். ஈந்தார் - அந்த வியாபாரியிடம் அளித்தார். அன்று - அன்றைக்கு. அவன் - அந்த வியாபாரி. அதனை - அந்தத் தங்கத் தாலியை. வாங்கி - பெற்றுக் கொண்டு. அப்பொதி - அந்தக் குங்குலிய மூட்டையை. கொடுப்ப - தம்மிடம் அளிக்க. க்: சந்தி. கொண்டு - அதை அந்த நாயனார் வாங்கிக் கொண்டு. நின்றிலர் - அந்த இடத்தில் நில்லாதவராகி; முற்றெச்சம். விரைந்து - வேகத்தோடு. நிறைந்து - தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பி. எழு - எழுந்த. களிப்பினோடும் - மகிழ்ச்சியோடும். சென்றார் - அந்த இடத்தைவிட்டு எழுந்தருளினார்.

அடுத்து உள்ள 13-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தமக்குச் சமானமாக வேறு யாரும் இல்லாதவராகிய குங்குலியக் கலய நாயனார் இடப வாகனத்தை ஓட்டுபவராகிய வீரட்டானேசுவரர் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கடவூர் வீரட்டானம் என்னும் ஆலயத்திற்கு வேகத்தோடு எழுந்தருளி அந்தத் திருக் கோயிலை அடைந்து, அடியேனை ஆளாக உடையவரும் அடியேங்களை ஆட்கொள்ளும் ஒப்பற்றவராகிய அமிர்தகடேசுவரருடைய ஆலயத்தில் உள்ள கருவூலத்தில்

சேரும்படி இந்தக் குங்குலிய மூட்டையை வைத்து விட்டு எல்லா உறுப்புக்களும் சோர்வை அடைந்து எழும் பக்தி பொங்கி எழத் தம்முடைய தலையில் சடாபாரத்தை உடையவராகிய அமிர்தகடேசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை வாழ்த்தி வணங்கிக் கொண்டு அங்கேயே தங்கியிருந்தார்.' பாடல் வருமாறு:

"விடையவர் வீரட் டானம் விரைந்து சென் றெய்தி என்னை
உடையவர் எம்மை ஆளும் ஒருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற ஒடுக்கி எல்லாம் அயர்த்தெழும் அன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி இருந்தனர் தமக்கொப்
பில்லார்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்திருக்கிறது. தமக்கு ஒப்பு இல்லார் - தமக்கு நிகராக வேறு யாரும் இல்லாதவராகிய குங்குலியக் கலய நாயனார். விடையவர் - இடப வாகனத்தை ஓட்டு பவராகிய வீரட்டானேசுவரர் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். வீரட்டானம் - திருக்கடவூர் வீரட்டானம் என்னும் ஆலயத்திற்கு. விரைந்து - வேகத்தோடு. சென்று - எழுந்தருளி. எய்தி - அந்தத் திருக்கோயிலை அடைந்து. என்னை - அடியேனை; இது சேக்கிழார் தம்மைக் குறித்துச் சொன்னது. உடையவர் - ஆளாக உடையவரும். எம்மை - அடியேங்களை; என்றது சேக்கிழார் தம்மையும் குங்குலியக் கலய நாயனாரைம் சேர்த்துச் சொன்னது. ஆளும் - ஆட்கொள்ளும். ஒருவர்தம் - ஒப்பற்றவராகிய அமிர்த கடேசுவரருடைய. தம்: அசைநிலை. பண்டாரத்தில் - ஆலயத்தில் உள்ள கருவூலத்தில். அடைவுற - சேரும்படி. ஒடுக்கி - இந்தக் குங்குலிய மூட்டையை வைத்து விட்டு. எல்லாம் - தம்முடைய எல்லா உறுப்புக்களும். அயர்த்து - சோர்வை அடைந்து. எழும் - மேலெழும். அன்பு - பக்தி.

பொங்க - பொங்கி எழ. ச்: சந்தி. சடையவர் - தம்முடைய தலையில் சடாபாரத்தை உடையவராகிய அமிர்தகடேசுவரருடைய. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். போற்றி - வாழ்த்தி வணங்கிக் கொண்டு. இருந்தனர் - அங்கேயே அந்த நாயனார் தங்கியிருந்தார்.

பின்பு உள்ள 14-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வீரட்டானேசுவரருடைய பக்தராகிய குங்குலியக் கலய நாயனார் அந்தக் கோயிலிலுள்ள கருவூலத்தில் தங்கிக் கொண்டு இருக்கத் தம்முடைய பக்தர்களுக்குப் பலவகையான நம்பிக்கைகளை உண்டாக்கும் வீரட்டானேசுவரர் வழங்கிய திருவருளால் அளகாபுரிக்கு அரசனாகிய குபேரன் தன்னுடைய பெரிய நிதியத்தை எடுத்து உலகத்தின்மேல் நெருங்குமாறு எந்த இடத்திலும் தங்கம் குவிந்திருக்கும் குவியலையும், நெற் குவியலையும் ஒப்பு இல்லாத வேறு பல வளங்களையும் பொங்கி எழும் வண்ணம் நிலைபெற்று விளங்கும் பெரிய செல்வத்தை உண்டாக்கிக் குங்குலியக் கலயனாருடைய திருமாளிகை யில் நெடுக இருக்குமாறு வைத்தான்.' பாடல் வருமாறு:

"அன்பர்அங் கிருப்ப நம்பர் அருளினால் அளகை வேந்தன்
தன்பெரு நிதியம் தூர்த்துத் தரணிமேல் நெருங்க எங்கும்
பொன்பயில் குவையும் நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மன்பெரும் செல்வம் ஆக்கி வைத்தனன் மனையில் நீட."

அன்பர் - வீரட்டானேசுவரருடைய பக்தராகிய குங்குலியக் கலய நாயனார். அங்கு - அந்தக் கோயிலில் உள்ள கருவூலத்தில். இருப்ப - தங்கிக் கொண்டிருக்க. நம்பர்

- தம்முடைய பக்தர்களுக்கு, 'இவரை வணங்கினால் நமக்குச் செல்வம் சேரும்; நல்ல திருமாளிகை கிடைக்கும்; நம்முடைய பெண்ணுக்கு அழகும் அறிவும் உள்ள வரன் கிடைப்பான்; நம்முடைய புதல்வனுக்கு அழகும் கற்பும் உடைய கன்னிகை கிடைப்பாள்; நமக்கு நல்ல வயல்கள் கிடைக்கும்; நல்ல நண்பர்கள் சேர்வார்கள்' என்பவற்றைப் போன்ற நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய வீரட்டானேசுவரர். அருளினால் - வழங்கிய திருவருளால். அளகை - அளகாபுரிக்கு. வேந்தன் - அரசனாகிய குபேரன். தன் - தன்னுடைய. பெரு - பெரிய. நிதியம் - நிதியை. தூர்த்து - தன்னுடைய கருவூலத்திலிருந்து எடுத்து வந்து. த்: சந்தி. தரணி மேல் - இந்த உலகத்தின்மேல். நெருங்க - நெருங்கி இருக்குமாறு. எங்கும் - எந்த இடத்திலும். பொன் - தங்கம். பயில் - குவிந்திருக்கும். குவையும் - குவியலையும். நெல்லும் - நெற் குவியலையும். பொரு - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. பல் - வேறு பல. வளனும் - வளங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: ஆடைகள், பாத்திரங்கள், ஆசனங்கள், நவமணிகள் முதலியவை. பொங்க - பொங்கி எழும் வண்ணம். மன் - நிலை பெற்று விளங்கும். பெரும் - பெரிய. செல்வம் - செல்வத்தை. ஆக்கி - உண்டாக்கி. மனையில் - குங்குலியக் கலய நாயனாருடைய திருமாளிகையில். நீட - நெடுக இருக்குமாறு. வைத்தனன் - வைத்தான்.

அடுத்து வரும் 15-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தக் குங்குலியக் கலய நாயனாருடைய பத்தினியாரும் புதல்வர்களும் பசியினால் வாட்டத்தை அடைந்து அன்றைத் தினத்தில் இராத்திரியில் அயர்ச்சி உண்டாக உறங்கும் சமயத்தில் நல்ல தவத்தைப் புரிந்த பூங்கொடியைப் போன்றவராகிய அந்த மாதரசியாருக்குச்

சொப்பனத்தில் தலைவனாகிய வீரட்டானேசுவரன் திருவருளை வழங்க, விரைவில் உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து தம்முடைய திருமாளிகையில் வந்து குவிந்திருந்த செல்வத்தைப் பார்த்த பிறகு எண்ணுவாரானார்.' பாடல் வருமாறு:

''மற்றவர் மனைவி யாரும் மக்களும் பசியால் வாடி
அற்றைநாள் இரவு தன்னில் அயர்வுறத் துயிலும் போதில்
நற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாதன் நல்கத்
தெற்றென உணர்ந்து செல்வம் கண்டபின் சிந்தை செய்வார்.''

மற்று: அசை நிலை. அவர் - அந்தக் குங்குலியக் கலய நாயனாருடைய. மனைவியாரும் - பத்தினியாரும். மக்களும் - அந்த நாயனாருடைய புதல்வர்களும். பசியால் - பசியினால். வாடி - வாட்டத்தை அடைந்து. அற்றை நாள் - அன்றைத் தினத்தில். இரவு தன்னில் - இராத்திரியில். தன்: அசை நிலை. அயர்வு - அயர்ச்சி. உற - உண்டாக. த்: சந்தி. துயிலும் - உறங்கும். போதில் - சமயத்தில். நல் - நல்ல. தவ - தவத்தைப் புரிந்த. க்: சந்தி. கொடி - பூங்கொடியை. அனார்க்கு - போன்றவராகிய அந்த மாதரசியாருக்கு; இடைக்குறை. க்: சந்தி. கனவிடை - சொப்பனத்தில். நாதன் - தலைவனாகிய வீரட்டானேசுவரன். நல்க - திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. த்: சந்தி. தெற்றென - விரைவாக. என: இடைக்குறை. உணர்ந்து - உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து. செல்வம் - தம்முடைய திருமாளிகையில் வந்து குவிந்திருந்த செல்வத்தை. கண்ட - பார்த்த. பின் - பிறகு. சிந்தை செய்வார் - அந்தப் பெண்மணியார் எண்ணுவாரானார்.

அடுத்து உள்ள 16-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பூங்கொம்பைப் போன்றவராகிய அந்த மாதரசியார் தம்முடைய திருமாளிகையில் எல்லா இடங்களிலும் குறைவு

இல்லாத நிறைவோடு பார்க்கும் அழகிய தங்கத்தின் குவியலும், நெற் குவியலும், அரிசிக் குவியலும் முதலாக இருக்கிற யாவும் எம்பெருமானாகிய வீரட்டானேசுவரன் வழங்கிய திருவருளால் வந்தன ஆகும் என்று எண்ணித் தம்முடைய இரண்டு கைகளையும் தலையின்மேற் குவித்துக் கும்பிட்டு அந்த ஈசுவரனை வாழ்த்தி வணங்கி விட்டுத் தம்முடைய பெருமையைப் பெற்ற கணவராகிய குங்குலியக் கலய நாயனாருக்குத் திருவமுதைச் சமைப்பதற்காகச் சமையலறையை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"கொம்பனார் இல்லம் எங்கும் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையும் நெல்லும் அரிசியும் முதலா யுள்ள
எம்பிரான் அருளாம் என்றே இருகரம் குவித்துப் போற்றித்
தம்பெரும் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார்."

கொம்பு - பூங்கொம்பை. அனார் - போன்றவராகிய அந்த மாதரசியார்; இடைக்குறை. இல்லம் - தம்முடைய திருமாளிகையில். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். குறைவு இலா - குறைவு இல்லாத. இலா: இடைக்குறை. நிறைவில் - நிறைவோடு; உருபு மயக்கம். காணும் - தாம் பார்க்கும். அம் - அழகிய. பொனின் - தங்கத்தின்; இடைக்குறை. குவையும் - குவியலும். நெல்லும் - நெற் குவியலும். அரிசியும் - அரிசிக் குவியலும். முதலாய் - முதலாகி. உள்ள - இருக்கிற பண்டங்களும். அவையாவன: காய்கறிகள், பாத்திரங்கள், மஞ்சட்பொடி, மிளகாய், மிளகு, சீரகம், வெந்தயம், ஏலம், கிராம்பு, வெல்லம், கற்கண்டு, பால், தயிர், இலைகள் முதலியவை. எம் - அடியேங்களுடைய, என்றது அந்த மாதரசியார் தம்மையும் தம்முடைய கணவராகிய குங்குலியக் கலய நாயனாரையும் சேர்த்துச் சொன்னது. பிரான் - தலைவனாகிய

வீரட்டானேசுவரன். அருள் - வழங்கிய திருவருளால். ஆம் - வந்தவை ஆகும். என்று - என எண்ணி. ஏ: அசை நிலை. இரு - தம்முடைய இரண்டு. கரம் - கைகளையும்; ஒருமை பன்மை மயக்கம். குவித்து - தம்முடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டு வணங்கி. ப்: சந்தி. போற்றி - அந்த ஈசுவரரை வாழ்த்தி விட்டு. த்: சந்தி. தம் - தம்முடைய. பெரும் - பெருமையைப் பெற்ற. கணவனார்க்கு - கணவராகிய குங்குலியக் கலய நாயனார் உண்ணும் பொருட்டு. த்: சந்தி. திருவமுது - ஆறு சுவைகளைப் பெற்ற திருவமுதை. அந்தச் சுவைகளாவன: தித்திப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளி, கைப்பு, காரம் என்பன. அமைக்க - சமைப்பதற்காக. ச்: சந்தி. சார்ந்தார் - சமையலறையை அடைந்தார்.

பெண்மணிக்குப் பூங்கொடி உவமை: ''வல்லி நுண்ணிடையாள் உமையவள்.'', ''வல்லிய நுண்ணிடையாள் உமையான் விருப்பன்.'', ''கொடிபுல்கு மென்சாயல் உமை.'', ''கொடியிலங்கும் இடையா ளொடும்.'', ''கொடியன சாயலாளோடு.'', ''பூங்கொடி மடவாள் உமை.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''இமவான்பெற்ற பெண் கொடி.'', ''எழுது கொடியிடையார் ஏழை.'', ''கொடி மருங்குல் உமையாட்கு.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''கொடி கொள் பூநுண் இடையாள்.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''கொடியேரிடையாள் கூறா.'' என்று மாணிக்கவாசகரும், ''கொவ்வை வாய்க் கொடியே ரிடையீர்.'' என்று திருவாவியமுதனாரும், ''வாணுதற் கொடி.'', ''கொடியைக் கோமளச் சாதியை.'', ''என்மடக் கொடியையே.'' என்று சேதிராயரும், ''குயில் மொழிக் கொடியே.'', ''கொடியோர் நுடங்கிடையாள்.'', ''மடக்கொடி மாதர்க்கு.'', ''வஞ்சிக்கொடி

நுடங்கும் நுண்ணிடையாள்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின் மடவரல் வள்ளியொடு.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''கொடியின் வடிவினார்.'', ''வல்லியிடையாள்.'', ''மரகதவல்லி போல ஒருகூ றியமச் செல்வி பிரியாது விளங்க.'', ''வருமுலை தாங்கும் திருமார்பு வல்லி.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''பொங்கு திருவருளுடைய போதவல்லி.'' என்று உமாபதி சிவமும், ''பவளவல்லிக் கானிளங் கொடியோ.'', ''விற்குவளை பவளமலர் மதிபூத்திவிரைக் கொடியோ.'', ''இன்றொண்டைச் செங்கனிவாய் இளங்கொடி.'', ''வல்லியின் ஒல்கி.'', ''மின்னாரும் கொடிமருங்குற் பரவையெனும் மெல்லியல்.'', ''மலைக்குலக் கொடி பரிவுறு பயத்தால்.'', ''பொன்மலைக் கொடியுடன் அமர் வெள்ளியம் பொருப்பில்.'', ''வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்.'', ''அற்புதப் பொற்கொடி நுடங்கி ஆடுவபோல் ஆடினார்.'', ''காமர்பூங் கொடியனாரும்.'', ''பெருமலை பயந்த கொடி.'', ''கன்னியிளங் கொடி உணர்வு கழிந்து.'', ''செம்பொன் மலைக்கொடி தழுவக் குழைந்தருளும் திருமேனிக் கம்பரை.'', ''அம்பொன் மலைக்கொடி முலைப்பால் குழைத்த ஞானத் தமுதுண்ட பிள்ளையார்.'', ''பூங்கொடிக் கழகின் மாரி பொழிந்திட.'', ''வாமமேகலை சூழ் வல்லி மருங்கின்மேல் உரோம வல்லி.'', ''பூவலர் நறுமென் கூந்தற் பொற்கொடி.'' என்று சேக்கிழாரும், ''வீழ்பூங்கொடியின் விரைந்து செல்வோரும்.'', ''பொற்றார் வேந்தன் பூங்கொடிப் பாவையை.'', ''தளர் பூங்கொடியின் நடுங்கி.'' (பெருங்கதை, *1.44:40, 53: 155, 2.17: 87-8*) என்று கொங்கு வேளிரும், ''வள்ளி நுடங்கிடை மாதர்.'' என்று

பெரியாழ்வாரும், "அன்றாயர் குலக்கொடியோ டணிமா மலர் மங்கை யொடன்பளவி.", "என்கொடி இவளுக்கு கென்னினைத் திருந்தாய்.", "ஆயர் பூங்கொடிக் கினவிடை பொருதவன்.", "மின்னின் நுண்ணிடை மடக்கொடி காரணம்.", "நெடுமால் துணையாய் போயின பூங்கொடியாள்.", "அரக்கர் குலக்கொடியை.", "வல்லியும் வென்ற நுண்ணேரிடை வம்புண் குழலார்.", "வல்லி இடையாள் பொருட்டாக மதிள்நீர் இலங்கையார் கோவை அல்லல் செய்து.", "மலர்வைகு கொடிபுல்கு தடவரை அகலமதுடையவர்.", "வல்லிச் சிறுநுண்ணிடையார்." என்று திருமங்கையாழ் வாரும், "வல்லிசேர் நுண்ணிடை ஆய்ச்சியர்.", "உரைக்கின்ற என்கோமள ஒண்கொடிக்கே.", "கொடியேரிடைக் கோகனகத்தவள் கேள்வன்." என்று நம்மாழ்வாரும், "இன்னிள வஞ்சிக்கொடி ஒன்று நின்றது." என்று திருமங்கையாழ்வாரும், "கொடியிடைத் தளர வெண் கோவை சூழ்வன." (நகரப் படலம், 37), "ஒரு மடக்கொடி ஆகிவந்து." (அகலிகைப் படலம், 51), "மேகலை தாங்கும் கொடியன்னார்." (மிதிலைக் காட்சிப் படலம், 31), "கொடியுலாம் மருங்குல் நல்லார்." (நீர் விளையாட்டுப் படலம், 13), "வல்லியை உயிர்த்த நிலமங்கை.", "வல்லிபொரு சிற்றிடை மடந்தை." (கோலம் காண் படலம், 24, 40), "பாற்கடற்படு பவளவல்லியே போற்கடைக் கண்ணளி பொழிய." (மந்தரை சூழ்ச்சிப் படலம், 42), "பூங்கொடி ஒதுங்குவபோல் ஒதுங்கினர்." (நகர் நீங்கு படலம், 196), "கொடியினொ டிளவாசக் கொம்பர்கள் குயிலாய் உன் துடிபுரை இடைநாணித் துவள்வன." (வனம்புகு படலம், 16), "செப்போர் கொம்பர் தாங்கிள தெனப் பொலிவன முலைக்கொடியே."

(சித்திரகூடப் படலம், 26), ''கன்றுபிரிகாராவின் துயருடைய கொடி.'' (குகப் படலம், 66), ''கழையெனும் அக்கொடி பயந்தாள் கொடியுடனே செடி முதலாக் கண்ட எல்லாம்.'', ''அருட்டை எனும் வல்லி தந்தாள்.'' (சடாயு காண் படலம், 27, 28), ''வல்லிகள் நுடங்கக் கண்டான் மங்கை தன் மருங்குல் நோக்க.'', ''கற்பகம் உயிர்த்த கதிர்வல்லி மேனி நனிபெற்று விளை காமநெறி வாசத் தேனின் மொழி யுற்றினிய செவ்விநனி பெற்றோர் மானின் விழிபெற்று மயில் வந்ததென வந்தாள்.'', ''காமவல்லியாம் கன்னி என்றாள்.'' (சூர்ப் பணகைப் படலம், 6, 33, 39), ''வள்ளிநுண் மருங்குலன்ன வானவர் மகளிர்.'' (ஊர்தேடு படலம், 38), ''பெண் தவத்தினோர் பெண்கொடி எம்முழைப் பிறந்தாள்.'' (கும்பகருணன் வதைப் படலம், 234), ''அனல் வீழ்ந்த கொடித்தான் என்ன மெய் சுருண்டாள்.'' (பிராட்டி களம் காண் படலம், 8) என்று கம்பர் பாடியருளியவற்றையும், ''புனமயிலோ பொற்கொடியோ.'' (திக்கு விசயப் படலம், 156) என்று உத்தரகாண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

பிறகு வரும் 17-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'யமனைச் சினந்து உதைத்த செந்தாமரை மலரைப் போலச் சிவந்த திருவடியைப் பெற்றவராகிய அமிர்தகடேசுவரர் குங்குலியக் கலய நாயனாராகும் தொடரும் பக்தியை உடைய திருவுள்ளத்தைப் பெற்ற அடியவர் தெரிந்து கொள்ளும் வழியினால், ''குங்குலியக் கலயனே, நீ மிகவும் பசியோடு இருக்கிறாய்; உன்னுடைய விசாலமாகிய உயர்ந்த திருமாளிகைக்குச் சென்று பாலோடு கூடிய இனிய சுவையைக் கொண்ட உணவை உண்டு உன்னுடைய துன்பத்தைப் போக்கிக் கொள்வாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"காலனைக் காய்ந்த செய்ய காலனார் கலயனா ராம்
ஆலும்அன் புடைய சிந்தை அடியவர் அறியும் ஆற்றால்
'சாலநீ பசித்தாய்; உன்றன் தடநெடு மனையில் நண்ணிப்
பாலின்இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக' என்றார்."

காலனை - யமனை. க்: சந்தி. காய்ந்த - சினந்து உதைத்த. செய்ய - செந்தாமரை மலரைப் போலச் சிவந்த. காலனார் - திருவடியை உடைய அமிர்தகடேசுவரர். கலயனாராம் - குங்குலியக் கலய நாயனாராகும். ஆலும் - தொடரும். 'சிறந்து விளங்கும்' எனலும் ஆம். அன்பு - பக்தியை. உடைய - பெற்ற. சிந்தை - திருவுள்ளத்தைக் கொண்ட. அடியவர் - அடியாராகிய அந்த நாயனார். அறியும் - தெரிந்து கொள்ளும். ஆற்றால் - வழியினால். சால - மிகவும். நீ பசித்தாய் - நீ பசியோடு இருக்கிறாய். உன்றன் - உன்னுடைய. தன்: அசைநிலை. தட - விசாலமாகிய. நெடு - உயரமாக உள்ள. மனையில் - திருமாளிகைக்கு; உருபு மயக்கம். நண்ணி - சென்று. ப்: சந்தி. பாலின் - பாலோடு கலந்த. இன் - இனிய சுவையைப் பெற்ற. அடிசில் உண்டு - உணவை உண்டு. பருவரல் - உன்னுடைய துன்பத்தை. ஒழிக - போக்கிக் கொள்வாயாக. என்றார் - என்று குங்குலியக் கலய நாயனாரிடம் அந்த ஈசுவரர் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து வரும் 18-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'குங்குலியக் கலய நாயனார் அமிர்தகடேசுவரர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த அந்த வார்த்தைகளைக் கேட்டுத் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து அந்த ஈசுவரரை வணங்கிக் கங்கை யாற்றினுடைய அலைகள் வீசும் நீரைத் தங்க வைத்த தலையை உடையவராகிய அமிர்தகடேசுவரர் திருவாய் மலர்ந்தருளிய வார்த்தைகளை

மறுத்துத் தங்குவதற்கு அச்சத்தை அடைந்து தம்முடைய தலையின்மேல் அவர் இட்ட பணியை ஏற்றுக்கொண்டு சங்கரனாகிய அந்த ஈசுவரனுடைய ஆலயத்திலிருந்து வெற்பை ஒத்து உயர்ந்து நிற்கும் மாடங்களைப் பெற்ற தெருவுக்குப் பக்கத்தில் உள்ள தம்முடைய திருமாளிகையை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"கலைய்ணார் அதனைக் கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்தம் அருள்மறுத் திருக்க அஞ்சித்
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயில் நின்று
மலைநிகர் மாட வீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார்."

கலையனார் - குங்குலியக் கலய நாயனார். அதனை - அமிர்தகடேசுவரர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த அந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கேளா - கேட்டு. க்: சந்தி. கை - தம்முடைய கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டு. இறைஞ்சி - பிறகு தரையில் விழுந்து அந்த ஈசுவரரை வணங்கி. க்: சந்தி. கங்கை - கங்கையாற்றினுடைய. அலை - அலைகளில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். புனல் - நீரை. சென்னியார் தம் - தம்முடைய தலையில் வைத்துக் கொண்ட அந்த ஈசுவரருடைய. தம்: அசை நிலை. அருள் - திருவாய் மலர்ந்தருளிச் செய்த வார்தைகளை; வினையாலணையும் பெயர். மறுத்து இருக்க - மறுத்துவிட்டு இருப்பதற்கு. அஞ்சி - அச்சத்தை அடைந்து. த்: சந்தி. தலைமிசை - தம்முடைய தலையின்மேல். ப்: சந்தி. பணி - அந்த ஈசுவரர் இட்ட திருப்பணியை. மேற்கொண்டு - ஏற்றுக் கொண்டு. சங்கரன் - சுகத்தைச் செய்பவனாகிய அமிர்தகடேசுவர னுடைய. கோயில் நின்று - ஆலயத்திலிருந்து. மலை - மலைகளை; ஒருமை பன்மை மயக்கம். நிகர் - ஒத்து

விளங்கும். மாட - மாடங்கள் ஓங்கி நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். வீதி - திருக்கடவூரில் உள்ள ஒரு தெருவின். மருங்கு - பக்கத்தில் உள்ள. தம் - தம்முடைய. மனையை - திருமாளிகையை. ச்: சந்தி. சார்ந்தார் - அடைந்தார்.

பிறகு வரும் 19-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளி அதற்குள் நுழைந்தவராகிய குங்குலியக் கலய நாயனார் குபேரன் கொண்டு வந்து வைத்திருந்த பெரிய செல்வத்தின் குவியல்கள் நிரம்பியிருந்த நிதியைப் பார்த்துத் திகைத்து நின்று தம்முடைய அழகிய பத்தினியாரைப் பார்த்து, ''வில்லைப் போன்ற நெற்றியைப் பெற்ற பெண்மணியே, இங்கே உள்ள இந்த விளைவுகள் யாவும் எவ்வாறு வந்தன?'' என்று கேட்க, ''இருட்டைப் போன்ற திருக்கழுத்தை உடையவனாகிய எம்பெருமான் வீரட்டானேசுவரன் திருவருள் வழங்க வந்தவை இவை.'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''இல்லத்திற் சென்று புக்கார் இருநிதிக் குவைகள் ஆர்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி
'வில்லொத்த நுதலாய், இந்த விளைவெலாம் என்கொல்?' என்ன
'அல்லொத்த கண்டன் எம்மான் அருள்தர வந்த' தென்றார்.''

இல்லத்தில் - அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு; உருபு மயக்கம். சென்று - எழுந்தருளி. புக்கார் - நுழைந்தவராகிய குங்குலியக் கலய நாயனார். இரு - குபேரன் கொண்டு வந்து வைத்திருந்த பெரிய. நிதி - நிதியினுடைய. க்: சந்தி. குவைகள் - குவியல்கள். ஆர்ந்த - நிரம்பியிருந்த. செல்வத்தை - நிதியத்தை. க்: சந்தி. கண்டு - பார்த்து. நின்று - திகைத்து நின்று. திரு - தம்முடைய

அழகிய. மனையாரை - பத்தினியாரை. நோக்கி - பார்த்து. வில் - வில்லை. ஒத்த - போன்ற. நுதலாய் - நெற்றியை உடைய பெண்மணியே. இந்த விளைவு - நம்முடைய திருமாளிகையில் காணப்படும் இந்த விளைவுகள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - யாவும்; இடைக்குறை. என்கொல் - எவ்வாறு வந்தன. கொல்: அசைநிலை. என்ன - என்று அந்த நாயனார் கேட்க. அல் - இரவை. ஒத்த - போன்ற. கண்டன் - திருக்கழுத்தைப் பெற்றவனும். எம்மான் - எம் பெருமானுமாகிய வீரட்டே சுவரன். அருள் - திருவருள். தர - வழங்க. வந்தது - வந்தவை இவை; ஒருமை பன்மை மயக்கம். என்றார் - என்று அந்தப் பெண்மணியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பெண்களின் நெற்றிக்கு வில் உவமை: ''வில்லை யன்ன வாணுதல் வெள்ளையொர் பாகமாம்.'', ''விற்பொலி நுதற் கொடியிடைக் கணிகைமார்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''சிலையொத்த வாள்நுதல்.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''விற்புரை நுதலின் வேற் கண் விளங்கிழை.'' என்று சேக்கிழாரும், ''வில்லேர் நுதல் வேல் நெடுங் கண்ணியும்.'' என்று திருமங்கையாழ்வாரும், ''விற்கொள் வாணுதல் விளங்கிழை இளந்தளிர்க் கொழுந்தே.'' (சித்திர கூடப் படலம், 17), ''வில்லொக்கும் நுதல் என்றாலும்.'' (மாரீசன் வதைப் படலம், 74), ''சிலைநுதல் அன்னப் போக்கின்... மாதர்.'' (கிட்கிந்தைப் படலம், 77), ''விற்கூடு நுதல் திரு.'' (உருக்காட்டு படலம், 94), ''விற்கடந்த நுதற் சிலர் வீடினார்.'' (இலங்கை எரியூட்டு படலம், 18) என்று கம்பர் பாடியவற்றையும் காண்க. ''விற்கொண்ட வாணுதலாள் வேவி.'' என்று அவர் பாடிய தனிப் பாடலில் வருவதையும் காண்க.

அடுத்து வரும் 20-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மின்னலைப் போன்ற இடுப்பைப் பெற்றவளாகிய தம்முடைய மடப்பத்தைப் பெற்ற பத்தினியார் அவ்வாறு சொல்ல மிகுதியாக உள்ள சீர்த்தியைப் பெற்ற குங்குலியக் கலய நாயனார் தம்முடைய திருமாளிகையில் வந்து நிலை பெற்று விளங்கிய பெரிய செல்வத்தினுடைய வளப்பம் மிகுதியாக உள்ள சிறந்த நிலையைப் பார்த்து, "அடியேனை யும் ஆளாகக் கொள்ளும் இயல்பை உடையது அடியேனுடைய தந்தையைப் போன்றவனும் எம் பெருமானும் பரமேசுவரனும் ஆகிய வீரட்டானேசுவரன் வழங்கிய திருவருள் இருந்தவாறு என்னே!" என எண்ணி அந்த நாயனார் தம்முடைய திருக்கரங்களைத் தம்முடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டு அந்த ஈசுவரனைத் தரையில் விழுந்து வணங்கினார்.' பாடல் வருமாறு:

"மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தாம்
மன்னிய பெரும்செல் வத்து வளம்மலி சிறப்பை நோக்கி
'என்னையும் ஆளும் தன்மைத் தெந்தைஎம் பெருமான் ஈசன்
தன்னருள் இருந்த வண்ணம்!' என்றுகை தலைமேற்
கொண்டார்."

மின் - மின்னலைப் போன்ற. இடை - இடுப்பைப் பெற்ற. மடவார் - மடப்பத்தைக் கொண்ட பெண் மணியாராகிய தம்முடைய பத்தினியார். கூற - அவ்வாறு சொல்ல. மிக்க - மிகுதியாக உள்ள. சீர் - சீர்த்தியைப் பெற்ற. க்: சந்தி. கலயனார் தாம் - குங்குலியக் கலய நாயனார். தாம்: அசை நிலை. மன்னிய - தம்முடைய திருமாளிகையில் வந்து நிலைபெற்று விளங்கிய. பெரும் - பெரியதாகக் குவிந்திருக்கும். செல்வத்து - செல்வத்தினுடைய. வளம் - வளப்பம். மலி - மிகுதியாக உள்ள. சிறப்பை - சிறந்த நிலையை. நோக்கி - பார்த்து. என்னையும் - ஒன்றுக்கும் பற்றாத அடியேனையும். ஆளும் - ஆளாகக் கொள்ளும்.

தன்மைத்து - இயல்பை உடையது. எந்தை - அடியேனுடைய தந்தையைப் போன்றவனும்; உவம ஆகு பெயர். எம்பெருமான் - எம்பெருமானும். ஈசன்தன் - பரமேசுவரனுமாகிய வீரட்டானேசுவரன். தன்: அசை நிலை. அருள் - வழங்கிய திருவருள். இருந்தவண்ணம் - இருந்தவாறு என்ன ஆச்சரியம்! என்று - என அந்த நாயனார் எண்ணி. கை - தம்முடைய திருக்கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல் - தம்முடைய சிரத்தின்மேல். கொண்டார் - வைத்துக் கும்பிட்டு அந்த ஈசுவரனை தரையில் விழுந்து வணங்கினார்.

பெண்களின் இடுப்புக்கு மின்னல் உவமை: ''மின்னியர் நுண்ணிடையார் மிழலை.'', ''மின்னா ரிடையா ளொடும் கூடிய வேடம்.'', ''மின்னாரிடையாள் உமையா ளோடு.'', ''மின்திரண்டன்ன நுண்ணிடை அரிவை.'', ''மின்போல் மருங்குல் மடவாளொடு.'', ''மின்னாரிடை யாளொரு பாகமாய்.'', ''மின்னியலும் நுண்ணிடை நன்மங்கையர்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''மின்னிறம் மிக்க இடையுமை நங்கை.'', ''மின்னின் நேரிடையாள் உமை பங்கனை.'', ''மின்நலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்.'', ''மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்.'', ''மின்னிடையாள் பாகன்.'', ''மின்நலத்த நுண்ணிடையாள் பாகத்தான் காண்.'', ''மின்னேரிடை பங்கன் நீயே.'', ''மின்னுருவ நுண்ணிடையாள் பாகத்தான்.'', ''மின்னிலங்கு நுண்ணிடை யாள் பாகத்தாரும்.'', ''மின்காட்டும் கொடி மருங்குல் உமையாட் கென்றும் விருப்பவன்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மின்செய்த நுண்ணிடையாள் பரவை.'', ''மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''மின்னிடைச் செந்துவர் வாய்க்

கருங்கண் வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்.'', ''மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்.'', ''மின்கணினார் நுடங்கும் இடையார்.'', ''மின்னியல் நுண்ணிடையார்கள்.'' என்று மாணிக்கவாசகரும், ''மின்னின் இடையாள் உமையாள் காணவிகிர்தன் ஆடுமே.'' என்று திருவாவியமுதனாரும், ''மின்னிடையா ளும் மின்னாளனும் கூட்டத்து.'' என்று திருமூலரும், ''இடைக்கு மின்தோற்றம்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''மின்தயங்கு நுண்ணிடையாள்.'', ''மின்னாரும் கொடி மருங்குற் பரவை.'', ''மின்னிடையாளுடன் கூடி.'', ''மின்னிடை மடவார் சூழ.'', ''மின்னிடையார் சிறுமுறுவலுடன் விளம்ப.'', ''மின்னிடை மடவாய் நம்பி வர இங்கு வேண்டும்.'', ''மின்னிடையார் பால் அன்பரை உய்க்கும்.'' என்று சேக்கிழாரும், ''மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல் மேல் நுழைந்த வண்டு.'', ''மின்னிடைச் சீதை பொருட்டா.'', ''மின்னேர் நுண்ணிடை வஞ்ச மகள்.'', ''மின்போல் நுண்ணிடையாள் ஒரு கன்னியை.'', ''மின்னொத்த நுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம்.'' என்று பெரியாழ்வாரும், ''மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்.'', ''மின்னொத்த நுண்ணிடையாளைக் கொண்டு.'', ''மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியல்.'' என்று குலசேகர ஆழ்வாரும், ''மின்குலாம் மருங்குல் சுருங்க.'', ''மின்னின் நுண்ணிடை மடக்கொடி.'', ''மின்டனில் மன்னு நுடங்கிடை மடவார்.'', ''மின்னையும் வஞ்சியையும் வென்றிலங்கும் இடையாள்.'', ''மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா.'', ''மின்னின் அன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா.'', ''மின்னேரிடையார் வேட்கையை மாற்றி.'', ''மின்னொத்த நுண்மருங்குல் மெல்லியலை.'', ''மின்னிடையார் வேட்கை

நோய்.'', ''மின்னும் மா வல்லியும் வஞ்சியும் வென்ற நுண்ணிடை.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார்.'' என்று நம்மாழ்வாரும், ''மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார்.'', ''மின்னிடையா ரோடும் விளையாடி.'', ''மின்னிடைமேல் கைவைத் திருந்து.'', ''மின்னனைய நுண் மருங்குல் வேகவதி.'', ''மின்னிடையாள் நாயகனை.'', ''மின்னிடையார் சேரியிலும்.'', ''மின்னிடை ஆய்ச்சியர்தம் சேரி.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''மின்னேர் நுடங்கிடை.'' (பெருங்கதை, 519: 104) என்று கொங்கு வேளிரும், ''மின்னுருக்குறும் இடை மெலிய.'', ''மின்னணங் குறுமிடை.'' (சீவக சிந்தாமணி, 185, 1006) என்று திருத்தக்க தேவரும், ''மின்னொத்த இடையினாரும்.'' (நீர் விளையாட்டுப் படலம், 6), ''மின்னென நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி.'' (உண்டாட்டுப் படலம், 16), ''மின்னேபுரை இடையா ளொடும் இனிதேகினன் வீரன்.'' (பரசுராமப் படலம், 4), ''மின்னையே யிடை நுடங்கிட விரைந்து தொடர்வாள்.'' (விராதன் வதைப் படலம், 40), ''மின்னைப் போல் இடையாளோடும் மேவுமெய்யுடைய னல்லன்.'' (சூர்ப்பணகைப் படலம், 62), ''மின்னிடைச் சனகியை.'' (கலன் காண் படலம், 18), ''மின்னிடைச் செவ்வாய்க் குவிமுலை.'' (நிந்தனைப் படலம், 122) என்று கம்பர் பாடியவற்றையும், ''மின்னிடை தன்கருத்தறிந்து.'', ''மின்னேரிடையாள் தன்வயிற்றில் விளங்கும் புகழ்வீடணன் பிறந்தான்.'', ''மின்னிடையாள் சரபை.'' (இராவணன் பிறப்புப் படலம், 10, 16, 65), ''மின்னிடையினார் தம்மை வெல்ல வரிந்து.'' (திக்குவிசயப் படலம், 172), ''மின்னார் மருங்குல்திரு.'' (அனுமப் படலம், 44), ''மின்னேரில்லாத இடை மெல்லியலையும்.'' (சீதை வனம்புகு படலம், 71),

''மின்னிடை மடவாய்.'', ''மின்னிடையாளைக் கண்டு மெய்யுருகி.'' (இலவணன் வதைப் படலம், 21, 23), ''மின்னியல் நுண்ணிடை மிதிலைவல்லி.'' (அசுவமேத யாகப் படலம், 134) என்று உத்தரகாண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

பிறகு வரும் 21-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'செந்தாமரை மலரின் மேல் வீற்றிருக்கும் நல்ல திருமகளைக் காட்டிலும் மிக்க அழகைப் பெற்றவரும், குங்குலியக் கலய நாயனாருடைய பத்தினியாரும் ஆகிய பெண் மணியார் உண்பதற்கு உரிய பாத்திரமாகிய நுனி வாழை இலையை அறுத்துக் கொண்டு வந்து விரைவாகத் தம்முடைய கணவராகிய குங்குலியக் கலய நாயனாரை தமது நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய அமிர்தகடேசுவரருடைய பக்தரோடும் விதித்த முறைப்படி திருவிளக்கைத் தம்முடைய கையில் ஏந்திக் கொண்டு வந்து பொருந்தியிருக்கும் இனிய ஆறுசுவைகளைக் கொண்ட உணவை உண்ணுமாறு பரிமாற, அந்த உணவை உண்டு பொருள் தெரிவதற்கு அருமையாக உள்ள இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் முறையாக அத்தியயனம் செய்து நிறைவேற்றிய குங்குலியக் கலய நாயனார் இன்பத்தை நிறையப் பெற்றார்.' பாடல் வருமாறு:

''பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலம் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீபம் ஏந்தி மேவும்இன் அடிசில் ஊட்ட
அதுநுகர்ந் தின்பம் ஆர்ந்தார் அருமறைக் கலய னார்தாம்.''

பதும - செந்தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும். நல் - நல்ல. திருவின் - திருமகளைக் காட்டிலும். மிக்கார் - மிக்க

அழகைப் பெற்றவரும் குங்குலியக் கலய நாயனாருடைய பத்தினியாருமாகிய பெண்மணியார். பரிகலம் - உண்பதற்குரிய பாத்திரமாகிய நுனி வாழை இலையை. திருத்தி - அறுத்து. க்: சந்தி. கொண்டு - கொண்டு வந்து. கதுமென - விரைவாக. என: இடைக்குறை. க்: சந்தி. கணவனாரை - தம்முடைய கணவராகிய குங்குலியக் கலய நாயனாரை. க்: சந்தி. கண்ணுதற்கு - நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய அமிர்தகடேசுவரருடைய; உருபு மயக்கம். அன்பரோடும் - பக்தராகிய ஒருவரோடும். விதி - விதித்த. முறை - முறைப்படி. தீபம் - திருவிளக்கை. ஏந்தி - தம்முடைய கையில் எடுத்துக் கொண்டு வந்து. மேவும் - பொருந்தியிருக்கும். இன் - இனிப்பு, காரம், கைப்பு, உப்பு, புளிப்பு, துவர்ப்பு என்னும் இனிய ஆறுசுவைகளைப் பெற்ற. அடிசில் - உணவை. ஊட்ட - உண்ணுமாறு பரிமாற. அது - அந்த உணவை. நுகர்ந்து - உண்டு. அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் அத்தியயனம் செய்து நிறைவேற்றிய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கலயனார் - குங்குலியக் கலய நாயனார். தாம்: ஈற்றசை நிலை. இன்பம் - இன்பத்தை. ஆர்ந்தார் - நிறையப் பெற்றார்.

அழகிய பெண்மணிக்குத் திருமகள் உவமை: ''திருத்திகழ் மலைச் சிறுமி.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''பெருந் திரு இமவான் பெற்ற பெண் கொடி.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''திருவனார் பணிந்தேத்தும் திகழ் திருவாஞ்சியத் துறையும் ஒருவனார்.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''மலையரையன்

பொற்பாவை வாணுதலாள் பெண்திருவை.'' என்று மாணிக்கவாசகரும், ''திருவின் கருக்குழி.'', ''திருவின் வயிற்றினுள்.'', ''ஆரே திருவின் திருவடி காண்பர்கள்.'' என்று திருமூலரும், ''திகைத்து நின்றனள் திருவினும் பெரியாள்.'', ''திருமகள் என்ன நின்ற தேவியர்.'', ''திருமகட்கு மேல் விளங்கும்... ஒருமகளை.'', ''திருவனைய திலகவதியார்.'', ''திருமடந்தை அவதரித்தாள் என வந்து பொங்கிய பேரழகுமிகப் புனிதவதியார் பிறந்தார்.'', ''வாசமலர்த் திருவனையார் தமை நோக்கி.'', ''தாமரைத் தவிசில் வைகும் தகைத் திரு என்ன ஏற்றி.'', ''அம்புய மலராள் போல்வார்.'', 'செங்கமலர் திருமடந்தை கன்னி நாடாள்.'' என்று சேக்கிழாரும், ''திருமகள் போல வளர்த்தேன்.'' என்று பெரியாழ்வாரும், ''கடிமாமலர்ப் பாவை ஒப்பாள்.'', ''கமலப்பாவை கதிர்முத்த வெண்ணகை யாள் கருங்கண் ஆய்ச்சி.'', ''சுரிகுழற்கனிவாய்த் திருவினைப் பிரித்த.'', ''திருவிற் பொலிந்த எழிலார் ஆயர் தம் பிள்ளைகளோடு.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''திருமகள் போலக் கோமகள்போதும் குறிப்பு.'', ''திருமகள் தன் வயின் தெரிந்தனை.'', ''திருமகள் போலச் சேயோன் மார்பிற் செல்வம் எய்தற்கு, நோற்ற பாவாய்.'', ''திருமகள் போல ஒருமையின் ஒட்டி.'', ''இயற்கைத் திருமகள் இவளென எண்ணி.'', ''காவலன் மடமகள், பெருமகன் மார்பிற் பிரியா துறையுமோர், திருமகள் உள்ள.'', ''திருமகட் பரவும் ஒருமகன் போல உரிமைத் தேவி உள்ளகம் நெகிழும், வழிமொழிக் கட்டளை வழிவழி அளைஇ.'', ''திருமகட் பேரும் ஒருமையிற் போந்து.'', ''தாமரைத் தாதகத்துறையும், தீதுதீர் சிறப்பிற்றிரு மகளாயினும், உருவினும் உணர்வினும் ஒப்புமை ஆற்றாத்; தெரியிழை அல்குற்றே மொழிக் குறுமகள்.'' (பெருங் கதை, 1.42:58-9 47:136, 2 1:36-8,

*41:22,15:116, 16:43-5, 3. 1:131, 5.70-73)* என்று கொங்கு வேளிரும், ''மகளிருள் திருவினாளை.'' *(சீவகசிந்தாமணி, 840)* என்று திருத்தக்க தேவரும், ''போதினார் திருவினாள் புகழுடை வடிவு.'' *(சிலப்பதிகாரம்)* என்று இளங்கோ வடிகளும், ''மையறு மலரின் நீங்கி யான் செய்மா தவத்தின் வந்து, செய்யவள் இருந்தாள் என்று.'', ''சீதையைத் தருதலாலே திருமகள் இருந்த செய்ய, போதெனப் பொலிந்து தோன்றும் பொன் மதில்மிதிலை.'' *(மிதிலைக் காட்சிப் படலம் 1, 5)*, ''அத்திருவை அமரர்குலம் ஆதரித்தாரென அறிஞ இத்திருவை நிலவேந்தர் எல்லாரும் காதலித்தார்.'' *(கார் முகப் படலம், 19)*, ''தெண்டிரைப் பரவைத்திரு அன்னவர்.'' *(எழுச்சிப் படலம், 47)*, ''அம்புயத் தணங்கீனன்னார்.'', ''பொன்னே தேனே பூமகளே.'' *(பூக்கொய் படலம், 8, 31)*, ''வெற்றித் திருவெனத் தோன்றுவாரும்.'' *(நீர்விளையாட்டுப் படலம், 4)*, ''திருவினுக்குவமை சால்வாள் ஒருத்தி.'' *(உண்டாட்டுப் படலம், 58)*, ''அவ்வல்லி மலர் புல்லும் மங்கை இவளாம்.'', ''போதினை வெறுத் தரசர் பொன்மனை புகுந்தார்.'' *(கோலம் காண் படலம், 32, 35)*, ''திருவே அனையாள்.'', ''அலர் மிசை உறைவாளும்.'', ''பூ மகளும் பொருளும்மென நீ என் மாமகள் தன்னொடு மன்னுதி.'', ''மலர்த்திரு அன்னவர்.'' *(கோலம் காண் படலம், 32, 35)*, ''புவியெனும் திருவும்.'', ''மலர் மகள் கலைமகள் கலையூர், பெண்ணினும் நல்லள் பெரும் புகழ்ச்சனகி.'' *(மந்திரப் படலம், 38, 40)*, ''சனகியாம் கடிகமழ் கமலத் தவ்வை.'' *(மந்தரை சூழ்ச்சிப் படலம், 88)*, ''மகளிரெல்லாம் சீதையை ஒத்தார் அன்னாள் திருவினை ஒத்தாள்.'', ''அற்புதன் திருவைச் சேரும் அருமணம்.'' *(கைகேசி சூழ் வினைப்படலம், 66, 73)*, ''சீலம் இன்னதென் றருந்ததிக்

கருளிய திருவே.'', ''தெரிவை மார்க்கொரு கட்டளை எனச்செய்த திருவே.'' (சித்திர கூடப் படலம், 16, 32), ''திருவான நிலமகளை.'' (விராதன் வதைப்படலம், 58), ''செம்மா மலராள் நிகர் தேவியொடும்.'' (சரபங்கர் பிறப்பு நீங்கு படலம், 6), ''தீதில் வரவாக திருநின் வரவு.'', ''திருவிங்கு வருவாள் கொப்பலோ.'', ''மலர்மாமகள் ஈண்டிருக்கும் நல்லாள்.'', ''தாமரை உறையும் நங்கை இவரென நெருநல் நடந்தவரோ தாம்.'' (சூர்ப்பணகைப் படலம், 38, 59, 88, 119), ''தாமரை தவிரப் போந்தாள் மின்வயின் மருங்குல் கொண்டாள்.'', ''செந்திரு ஒப்பார் எத்தனையோர் நின்திரு உண்பார்.'' (மாரீசன் வதைப் படலம், 67, 181), ''சேயிதழ்த் தாமரைச் சேக்கை தீர்த்திவண், மேயவள்.'' (சடாயு உயிர்நீத்த படலம், 29), ''திருமகள் அனைய அத் தெய்வக் கற்பினாள்.'' (கலன் காண் படலம், 13), ''தாமரை மறந்த தையல் உருவினைக் காட்டி.'' (கார்காலப் படலம், 6), ''இலங்கையில் அத்திருவைக் கண்டனன்.'' (ஊர்தேடு படலம், 232), ''திருமகள் இருந்த திசையறிந்து.'' (நிந்தனைப் படலம், 19), ''முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன்.'' (திருவடி தொழுத படலம், 55), ''திருமகளைத் தேவர்க்கும் தெரிவரிய தெய்வக் கற்பின், பேர் மகளை.'' (இராவணன் வதைப் படலம், 226), ''திருவினை அல்குற்கேற்ப மேகலை தழுவச்சேர்த்தார்.'', ''திருவினை நிலத்தேடேந்தித் தென்றிசை இலங்கை புக்கான்.'' (மீட்சிப் படலம், 2, 84), ''பூ மலர்த்தவிசை நீத்துப் பொன்மதில் மிதிலை பூத்த, தேமொழித் திருவை.'' (விடை கொடுத்த படலம், 22) என்று கம்பரும் பாடியருளியவற்றையும், ''புண்டரிகமாதோ புனமயிலோ பொற்கொடியோ.'', ''கோகனக மாதனைய கொம்பு.'' (திக்கு விசயப் படலம், 151, 169), ''கஞ்ச மலராளனைய

காமினி.'', ''சீதை என்னுமத் திருவை.'' (அசுவமேத யாகப் படலம், 65, 222) என்று உத்தர காண்டத்தில் வருவன வற்றையும் காண்க.

பிறகு வரும் 22-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'ஒவ்வோர் ஊரிலும் பிச்சையை வாங்கித் தன்னுடைய வாழ்க்கையை நடத்தும் ஒப்பற்றவனாகிய அமிர்தகடேசு வரன் வழங்கிய திருவருளினால் இந்த உலகத்தில் நிரம்பிய செல்வத்தைப் பெற்றவராக விளங்கும் நல்ல குணத்தோடு குங்குலியக் கலய நாயனார் நெடுங்காலம் வாழ்ந்து சீர்த்தியைப் பெற்ற உணவையும், நல்ல சுவையைப் பெற்ற செழிப்பான கறிகளையும், தயிரையும், நெய்யையும், பாலையும் ஆகிய இவற்றால் நிரம்பி உண்டாகிய விருப்பம் மிகுதியாக அமைய சிவபெருமானுடைய அடியவர்களுக்கு உதவி வரும் காலத்தில்.' பாடல் வருமாறு:

''ஊர்தொறும் பலிகொண் டுய்க்கும் ஒருவன தருளி னாலே
பாரினில் ஆர்ந்த செல்வம் உடையராம் பண்பில் நீடிச்
சீருடை அடிசில் நல்ல செழுங்கறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர அடியவர்க் குதவும் நாளில்.''

இந்தப் பாடல் குளகம். ஊர்தொறும் - ஒவ்வோர் ஊரிலும். பலி - பிச்சையை. கொண்டு - வாங்கிக் கொண்டு. உய்க்கும் - தன்னுடைய வாழ்க்கையை நடத்தும். ஒருவனது - ஒப்பற்றவனாகிய அமிர்தகடேசுவரனுடைய. அருளினால் - திருவருளால். ஏ: அசை நிலை. பாரினில் - இந்தப் பூ மண்டலத்தில். ஆர்ந்த - நிரம்பி அமைந்த. செல்வம் - செல்வத்தை. உடையர் - பெற்றவர். ஆம் - ஆகும். பண்பில் - நல்ல குணத்தோடு; உருபு மயக்கம். நீடி - குங்குலியக் கலய நாயனார் நெடுங் காலம் வாழ்ந்து. ச்: சந்தி. சீர் - சீர்த்தியை. உடை - பெற்ற. அடிசில் - உணவு. நல்ல - இனிய

சுவையைப் பெற்ற நல்ல. செழும் - செழிப்புள்ள. கறி - கறிகள். தயிர் - தயிரோடு. நெய் - புத்துருக்கு நெய். பாலால் - பசும்மாட்டினுடைய பாலோடு; உருபு மயக்கம். ஆர்தரு - நிரம்பியுள்ள. காதல் - விருப்பம். கூர - மிகுதியாக அமைய. அடியவர்க்கு - சிவபெருமா னுடைய அடியவர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். உதவும் - வழங்கி வரும். நாளில் - காலத்தில்.

அடுத்து வரும் 23-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'சிவந்த கண்களைப் பெற்ற வெள்ளை நிறத்தைக் கொண்ட இடப வாகனத்தை ஓட்டுபவனும், திருப்பனந்தாள் என்னும் தலத்தில் விரும்பி எழுந்தருளி யிருப்பவனும், அழகிய கண்களை உடையவனுமாகிய அருணஜடேசுவர னென்னும் சிவலிங்கப் பெருமான் நேராக நிமிர்ந்து நிற்கும் நிலைமையைத் தரிசித்துக் கும்பிட்டு வணங்குவதற்கு அந்தக் காலத்தில் சோழ மண்டலத்தை ஆட்சி புரிந்த சோழ மன்னன் பேராவல் பொங்கி எழுந்து தன்னுடைய யானைகள் எல்லாவற்றையும் கொண்டு அந்தச் சிவலிங்கப் பெருமானை நிமிர்த்தச் செய்தும் அந்தப் பெருமான் நேராக நில்லாமையால் இரவிலும் பகலிலும் தீராத மனக் கவலையை அடைந்து வருத்தத்தைப் பெற்றுக் காலத்தைக் கடத்த.' பாடல் வருமாறு:

''செங்கண்வெள் ளேற்றின் பாகர் திருப்பனந் தாளில் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழம் எல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலும் தீராக் கவலையுற் றமுங்கிச் செல்ல.''

இந்தப் பாடலும் குளகம். செம் - சிவந்த. கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வெள் - வெள்ளை நிறத்தைக் கொண்ட. ஏற்றின் - இடப

வாகனத்தை. பாகர் - ஓட்டுபவரும். திருப்பனந்தாளில் - திருப்பனந்தாள் என்னும் தலத்தில். மேவும் - விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். அம் - அழகிய. கணன் - கண்களைப் பெற்றவனும் ஆகிய அருணஜடேசுவரன் என்னும் திருநாமத்தைக் கொண்ட சிவலிங்கப் பெருமானுடைய. கண்: ஒருமை பன்மை மயக்கம். கணன்: இடைக்குறை. செம்மை - நேராக நிற்கும் நிலைமையை. கண்டு - தரிசித்து. கும்பிட - கும்பிட்டு வணங்க. அரசன் - அந்தக் காலத்தில் சோழ மண்டலத்தை ஆட்சி புரிந்த சோழ மன்னன். ஆர்வம் - பேராவல். பொங்கி - பொங்கி எழுந்து. த்: சந்தி. தன் - தன்னுடைய. வேழம் - யானைகள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றையும். பூட்டவும் - அவற்றின் துதிக்கைகளில் சங்கிலிகளைக் கொடுத்து அவற்றை அந்தச் சிவலிங்கப் பெருமானைச் சுற்றிக் கட்டி இழுக்கச் செய்தும். நேர் - நேராக. நில்லாமை - நில்லாமையினால். க்: சந்தி. கங்குலும் - இரவிலும். பகலும் - பகலிலும். தீரா - தீராத. க்: சந்தி - கவலை - மனக்கவலையை. உற்று - அடைந்து. அழுங்கி - வருந்தி. ச்: சந்தி. செல்ல - காலத்தைக் கடத்த; 'தன்னுடைய இராசதானி நகருக்குப் போக' எனலும் ஆம்.

திருப்பனந்தாள்: இந்தத் தலம் சோழ நாட்டில் உள்ளது. இங்குக் கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் அருணஜடேசுவரர், செஞ்சடையப்பர் என்பவை. அம்பிகை பெரிய நாயகியம்மை. இது கும்பகோணத்துக்கு வடகிழக்கில் பத்து மைல் தூரத்தில் உள்ளது. இங்கே உள்ள ஆலயத்தின் திருநாமம் தாடகேச்சுரம் என்பது. இந்த ஆலயத்தின் பூசகராகிய சிவாசாரியார் வெளியூருக்குப் போக வேண்டி யிருந்ததனாலும், அவருக்கு ஆண் குழந்தை இல்லாமையா லும் தம்முடைய

புதல்வியாகிய தாடகை என்பவளைப் பூசை செய்யுமாறு கூறிவிட்டுச் சென்றார். அந்தச் சிறுமி அவ்வாறே பூசைக்கு உரிய பண்டங்களை எடுத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்று பூசை புரியலானாள். அபிடேகம் செய்த பிறகு சிவலிங்கப் பெருமானுக்கு மாலையைச் சாத்த எண்ணினாள். சிவலிங்கப் பெருமான் உயரமான பீடத்தில் எழுந்தருளி யிருந்தமையால் அவள் நிமிர்ந்து அந்த மாலையைச் சாத்த முயன்றபோது அவளுடைய இடுப்பிலிருந்த பாவாடை நழுவியது. அதை இரண்டு கைகளாலும் இடுக்கிக் கொண்டு மாலையைச் சாத்த முயன்றும் முடியவில்லை. அவளுடைய திருவுள்ளக் கலக்கத்தைக் கண்ட சிவலிங்கப் பெருமான் வளைந்தார். உடனே தாடகை மாலையைச் சாத்தினாள். அவள் தன்னுடைய திருமாளிகைக்குச் சென்று விட்டாள். வளைந்த சிவலிங்கப் பெருமான் நிமிராமல் வளைந்தபடியே இருந்தார். மறுநாள் கோயில் பூசகர் வந்து பார்த்து அஞ்சி நிமிர்த்த முயன்றார்; முடியவில்லை. வேறு அந்தணர்களோடு சேர்ந்து நிமிர்த்திப் பார்த்தார். அப்போதும் சிவலிங்கப் பெருமான் நிமிரவில்லை. இந்தச் செய்தியை அறிந்த சோழ மன்னன் தன்னுடைய யானைகளை அழைத்துக் கொண்டு திருப்பனந்தாளுக்கு வந்து, அந்த யானைகளினுடைய துதிக்கைகளில் சங்கிலிகளைக் கொடுத்து ஆடைகளைச் சுற்றியிருந்த சிவலிங்கப் பெருமானை அந்தச் சங்கிலிகளால் இழுக்கச் செய்தான். அப்பொழுதும் சிவலிங்கப் பெருமான் நிமிரவில்லை. இந்தச் செய்தியைத் திருக்கடவூரில் வாழ்ந்திருந்த குங்குலியக் கலய நாயனார் அறிந்து திருப்பனந்தாளுக்கு எழுந்தருளி வந்தார். சங்கிலிகளை அகற்றிவிட்டு ஒரு மணிக்கயிற்றைச் சிவலிங்கப் பெருமானைச் சுற்றிக் கட்டி அதன் மற்றொரு தலைப்பைத் தம்முடைய கழுத்தில் குட்டிக் கொண்டு,

"அடியேன் இழுக்கப் போகிறேன். ஒன்று தேவரீர் நிமிர வேண்டும்; அல்லது அடியேனுடைய உயிர் போக வேண்டும்" என்று விண்ணப்பித்து இழுக்கத் தொடங்கினார். சிவலிங்கப் பெருமான் உடனே நிமிர்ந்து நின்றார். தாடகை என்னும் சிறுமி பூசித்ததனால் இந்த ஆலயத்திற்குத் தாடகேச்சுரம் என்னும் திருநாமம் உண்டாயிற்று. திருக்கோயிலில் இரண்டு ஆண் பனமரங்கள் உள்ளன. இந்தத் தலத்தைப் பற்றிய பாசுரம் ஒன்று வருமாறு:

"சூழ்தரு வல்வினையும் உடல்தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிகஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல்பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் திருத்தாடகை யீச்சரமே."

இந்தப் பாசுரம் பஞ்சமப் பண்ணில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பாடியருளிய திருப்பதிகத்தில் 4-ஆவதாக உள்ளது. அந்தத் திருப்பதிகத்தில் வரும் மற்றொரு பாசுரம் வருமாறு:

"கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலோர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூர்
தண்பொழில் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே."

இந்த வரலாற்றை ஒரு புலவர் பின்வரும் வெண்பாவில் அமைத்துப் பாடியுள்ளார்.

"தாடகைதன் அன்புகண்டு தாமே தலை வளைந்தார்;
நாடுகல யர்க்கா நனி நிமிர்ந்தார்; - நீடிப்
பயிலறிவோ ரன்றியார் பண்பறிவார் நீளத்
தியுரியார் செய்த செயல்."

அடுத்து வரும் 24-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு சோழவந்தன் வருந்திய வருத்தத்தைக் கேள்வியுற்று குற்றம் அற்ற புகழினால் மிக்க சிறப்பைப் பெற்றவரும், நல்ல வழியில் ஒழுகுபவரும் ஆகிய குங்குலியக் கலய நாயனார் தலைவனாகிய அருணஜடேசு வரனை நேராகத் தரிசிக்கும் அந்த வழியில் தலை சிறந்து நின்றான் என்று தெரிந்து அந்தச் சோழ மன்னனிடம் விருப்பத்தை அடைந்து தாமும் மின்னல் வீசினாற் போன்ற சடாபாரத்தைத் தன்னுடைய தலையின் மேற்பெற்ற விகிர்தனாகிய செஞ்சடையப்பனைப் பணியும் பொருட்டுத் திருப்பனந்தாளுக்கு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

''மன்னவன் வருத்தம் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றான்என் றரசனை விரும்பித் தாமும்
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார்.''

மன்னவன் - அவ்வாறு சோழவேந்தன். வருத்தம் - வருந்திய வருத்தத்தை. கேட்டு - கேள்வியுற்று. மாசு - ஒரு குற்றமும். அறு - அற்ற. புகழின் - புகழினால். மிக்க - மிக்க சிறப்பைப் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். நல் - நல்ல. நெறி - வழியில் ஒழுகுபவரும்; திணை மயக்கம். க்: சந்தி. கலயனார் - ஆகிய குங்குலியக் கலய நாயனார். 'தாம்' என்றது அந்த நாயனாரை. நாதனை - தம்முடைய தலைவனாகிய அருணஜடேசுவரனை. நேர் - நேராக. ஏ: அசை நிலை. காணும் - தரிசிக்கும். அந்நெறி - அந்த வழியில். தலை நின்றான் - தலை சிறந்து நின்றான். என்று - என்று அறிந்து. அரசனை - அந்தச் சோழ மன்னனிடம்; உருபு மயக்கம். விரும்பி - விருப்பத்தை அடைந்து. த்: சந்தி. 'தாமும்' என்றது குங்குலியக் கலய நாயனாரை. மின் - மின்னல். எறித்தனைய - ஒளியை வீசினாற் போன்ற. 'எறிந்தாலனைய' என்பது 'எறித்தனைய' என் நின்றது;

தொகுத்தல் விகாரம். வேணி - சடாபாரத்தைத் தன்னுடைய தலையின் மேற்பெற்ற. விகிர்தனை - வேறு வேறு உருவங்களைப் பெற்றவனாகிய செஞ்சடையப்பனை. வணங்க - பணியும் பொருட்டு. வந்தார் - திருப்பனந்தாளுக்கு எழுந்தருளினார்.

பின்பு உள்ள 25-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மழு என்னும் ஆயுதத்தை ஏந்திய செந்தாமரை மலரைப் போலச் சிவந்த திருக்கரத்தைப் பெற்றவராகிய சிவபெருமானார் எழுந்தருளியிருக்கும் ஆலயங்களின் பக்கங்களுக்கு எழுந்தருளிக் குங்குலியக் கலய நாயனார் அந்தத் திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள சிவபெரு மான்களை வணங்கி விட்டு மீண்டு வந்து பக்தியோடும் பழைய வேதநெறி தவறாத வண்ணம் உலகம் முழுவதையும் பாதுகாப்பதற்காக ஆகவனீயம், காருகபத்தியம், தாட்சிணாக்கினி என்னும் மூன்று நெருப்புக்களையும் பாதுகாப்பவர்களாகிய அந்தணர்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்தும் செழுமையான மலர்கள் மலர்ந்த பலவகை மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம்பொழில் எல்லையாக அமைந்த திருப்பனந்தாளை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடும் தொல்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரப்போர் வாழும்
செழுமலர்ச் சோலை வேலித் திருபனந் தாளிற் சேர்ந்தார்."

மழு - மழு என்னும் ஆயுதத்தை. உடை - ஏந்திய. ச்: சந்தி. செய்ய - செந்தாமரை மலரைப் போலச் சிவந்த. கையர் - திருக கரத்தைப் பெற்றவராகிய சிவபெருமானார். கோயில்கள் - எழுந்தருளியிருக்கும் ஆலயங்களினுடைய.

மருங்கு - பக்கங்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். சென்று - எழுந்தருளி. தொழுது - குங்குலியக் கலய நாயனார் அந்தத் திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்களை வணங்கிவிட்டு. போந்து - மீண்டு வந்து. அன்பினோடும் - பக்தியோடும். தொல் - பழைய. மறைநெறி - வேதநெறி; "வேதநெறி தழைத்தோங்க" என்று பெரிய புராணத்தில் வருவதைக் காண்க. வழாமை - தவறாத வண்ணம். முழுது உலகினையும் - உலகம் முழுவதிலும் வாழும் மக்களையும்; இட ஆகுபெயர். போற்ற - பாதுகாப்பதற்காக. மூன்று எரி - ஆகவனீயம். காருகபத்தியம், தாட்சிணாக்கினி என்னும் மூன்று நெருப்புக்களையும். எரி: ஒருமை பன்மை மயக்கம். புரப் போர் - பாதுகாப்பவர்களாகிய அந்தணர்கள்; ஒருமை பன்மை மயக்கம். வாழும் - தங்களுடைய வாழ்க்கையை நடத்தும். செழு - செழுமையான. மலர் - மலர்கள் மலர்ந்த பலவகை மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மரங்களாவன: வாகை மரம், வேங்கை மரம், தேக்க மரம், கடப்ப மரம், மருத மரம், வேப்ப மரம், புளிய மரம், வில்வ மரம், விளா மரம், கொறுக்கைச்சி மரம், நுணா மரம், மகிழ மரம், பவளமல்லிகை மரம், பூவரச மரம் முதலியவை. ச்: சந்தி. சோலை - பூம்பொழில். வேலி - எல்லையாக அமைந்த. த்: சந்தி. திருப்பனந்தாளில் - திருப்பனந்தாளை; உருபு மயக்கம். சேர்ந்தார் - அடைந்தார்.

பிறகு உள்ள 26-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அருணஜடேசுவரரை நேராகத் தரிசிக்கும் விருப்பத்தினால் சோழ மன்னன் அடைந்த மன வருத்தத்தையும், தன்னுடைய ஆண் யானைகளோடும் தீங்கு இல்லாத படைவீரர்கள் புரியும் திருப்பணியினால் அந்தச் சிவலிங்கப் பெருமானார் நேராக நிமிராமையால் தரையின்

மேல் களைத்துப் போய் விழுந்து சோர்வை அடைவதையும் பார்த்துப் பெரிய தவத்தைப் புரிந்த குங்குலியக் கலய நாயனார் தாமும் தம்முடைய திருவுள்ளத்தில் வருத்தத்தை அடைந்து.' பாடல் வருமாறு:

''காதலால் அரசன் உற்ற வருத்தமும் களிற்றி னோடும்
தீதிலாச் சேனை செய்யும் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே எய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக் கலயர் தாமும் மனத்தினில் வருத்தம் எய்தி.''

இந்தப் பாடல் குளகம். காதலால் - அருணஜடேசுவரரை நேராக நிமிர்த்திக் தரிசிக்கும் விருப்பத்தினால். அரசன் - சோழ மன்னன். உற்ற - அடைந்த. வருத்தமும் - மனவருத்தத்தையும். களிற்றினோடும் - தன்னுடைய ஆண்யானை களினோடும்; ஒருமை பன்மை மயக்கம். தீது - ஒரு தீய குணமும். இலா - இல்லாத; இடைக்குறை. ச்: சந்தி. சேனை - படைவீரர்கள்; திணை மயக்கம். செய்யும் - புரியும் திருப்பணி - சிவலிங்கப் பெருமானை நிமிர்த்தச் செய்யும் திருப்பணிகளால்; ஒருமை பன்மை மயக்கம். நேர்படாமை - சிவலிங்கப் பெருமான் நேராக நில்லாமையினால். மேதினி மிசை - தரையின் மேல். ஏ: அசை நிலை. எய்த்து - செயலற்று. வீழ்ந்து - விழுந்து. இளைப்பதுவும் - களைப்பை அடைவதையும். நோக்கி - பார்த்து. மா - பெரிய. தவ - தவத்தைப் புரிந்த. க்: சந்தி. கலயர் தாமும் - குங்குலியக் கலய நாயனாரும். தாம்: அசை நிலை. மனத்தினில் - தம்முடைய திருவுள்ளத்தில். வருத்தம் - வருத்தத்தை. எய்தி - அடைந்து.

அடுத்து வரும் 27-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்தப் படை வீரர்களும் ஆண் யானைகளைக் கட்டிய தொகுதியும் களைத்துப் போய்த் தரையில் விழுந்து

தரையிலிருந்து எழாமல் இருந்த தன்மையைக் குங்குலியக் கலய நாயனார் பார்த்து, ''அடியேனும் இந்தக் களைப்பை அடைந்து செயலற்றுப் போகும் இந்த நிலையை அடைய வேண்டும்'' என எண்ணி தேன் மலர்ந்த கொன்றை மலர் மாலையை அணிந்த அருணஜடேசுவரருடைய திருமேனி யில் பூத்தொழில் அமைந்த ஆடையோடு பொருந்திய பெரிய வன்மையான கயிற்றைத் தம்முடைய கழுத்தில் கட்டிக் கொண்டு இழுத்து வருத்தத்தை அடையலானார்.' பாடல் வருமாறு:

"சேனையும் ஆணை பூண்ட திரளும்எய்த் தெழாமை நோக்கி
'யானும்இவ் விளைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டும்' என்று
தேனலர் கொன்றை யார்தம் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார்."

சேனையும் - சோது மன்னனுடைய அந்தப் படை வீரர்களும்; திணை - மயக்கம். ஆணை - அண் யானைகளை; ஒருமை பன்மை மயக்கம். பூண்ட - கட்டிய. திரளும் - கூட்டமும். எய்த்து - களைப்பை அடைந்து தரையில் விழுந்து. எழாமை - தரையிலிருந்து எழாமல் இருந்த தன்மையை. நோக்கி - குங்குலியக் கலய நாயனார் பார்த்து. யானும் - அடியேனும். இவ்விளைப்பு - இந்தக் களைப்பை. உற்று - அடைந்து. எய்க்கும் - செயலற்றுப் போகும். இது - இந்த நிலையை. பெற வேண்டும் - அடைய வேண்டும். என்று - என எண்ணி. தேன்அவர் - தேன் மலரும். கொன்றையார் தம் - கொன்றை மலர் மாலையை அணிந்த அருணஜடேசுவரருடைய. தம்: அசை நிலை. திருமேனி - திருமேனியில். ப்: சந்தி பூங்கச்சு - பூத் தொழில் அமைந்த ஆடையோடு. ஏய்ந்த - பொருந்தி. மான - பெரிய. வன் - வலிமையைப் பெற்ற. கயிறு - கயிற்றைப் பூண்டு.

கழுத்தினால் - தம்முடைய கழுத்தில் கட்டிக் கொண்டு அந்தக் கழுத்தினால் இழுத்து. வருத்தலுற்றார் - வருத்தத்தை அடையலானார்.

பின்பு உள்ள 28-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'தம்மிடம் பொருந்திய ஒன்றையே நினைக்கும் ஒருமைப்பாட்டை உடைய பக்தியாகிய அன்பு அமைந்த கயிற்றினால் மன உறுதியைப் பெற்ற திருத்தொண்டராகிய குங்குலியக் கலய நாயனார் தம்முடைய கழுத்தில் கட்டிக் கொண்டு இழுத்துக் களைத்துப் போன பிறகு மாறுபட்டு நிற்க அருணஜடேசுவரரால் முடியுமோ? குங்குலியக் கலய நாயனாருடைய ஒருமைப்பாட்டைப் பார்த்த சமயத்திலேயே தலைவராகிய செஞ்சடையப்பர் நேராக நிமிர்ந்து நின்றருளினார்; தேவர்களும் ஆகாயத்தில் இருந்துகொண்டு மகிழ்ச்சியினால் ஆரவாரம் செய்தார்கள்.' பாடல் வருமாறு:

"நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இளைத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ? கலய னார்தம் ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார்; அமரரும் விசும்பில் ஆர்த்தார்."

நண்ணிய - தம்மியடம் பொருந்தியுள்ள. ஒருமை - ஒன்றையே நினைக்கும் ஒருமைப்பாட்டை உடைய. அன்பின் - பக்தியாகிய. நார் - அன்பு. உறு - அமைந்த. பாசத்தால் - கயிற்றினால். ஏ: அசை நிலை. திண்ணிய - மன உறுதியைப் பெற்ற. தொண்டர் - திருத்தொண்டராகிய குங்குலியக் கலய நாயனார். பூட்டி - தம்முடைய கழுத்தில் கட்டிக் கொண்டு அந்தக் கழுத்தினால் இழுத்து. இளைத்த - களைத்துப் போன. பின் - பிறகு. திறம்பி - மாறுபட்டு. நிற்க - அருணஜடேசுவரரால் நிற்க. ஒண்ணுமோ - முடியுமோ; முடியாது என்பது கருத்து. கலயனார்தம் - குங்குலியக் கலய

நாயனாருடைய. தம்: அசை நிலை. ஒருப்பாடு - ஒருமைப் பாட்டை. கண்ட - பார்த்த. போதே - சமயத்திலேயே. அண்ணலார் - தலைவராகிய செஞ்சடையப்பர். நேர் - நேராக நிமிர்ந்து. ஏ: அசைநிலை. நின்றார் - நின்றருளினார். அமரரும் - தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். விசும்பில். ஆகாத்தில் இருந்து கொண்டு. ஆர்த்தார் - மகிழ்ச்சியினால் ஆரவாரம் செய்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 29-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தரையின்மேல் செறியுமாறு எல்லா இடங்களிலும் திருக்கடவூரில் வாழும் மக்கள் மேவிய மலர் மழையைப் பரவலாக விழும்வண்ணம் செய்தார்கள்; தேரையும் மிக்க சேனையையும் பெற்ற சோழ அரசனுடைய படை வீரர்களும் ஆண் யானைகளும் ஆகிய யாவும் மேகத்தின் மழையைப் பெற்ற காட்டைப் போல மகிழ்ச்சியை அடைந்தன. தன்னுடைய கைகளைத் தன்னுடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டு நீண்ட வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை உடைய அந்தச் சோழ மன்னன் திருத்தொண்டராகிய குங்குலியக் கலிய நாயனாருடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளைத் தன்னுடைய தலையின்மேல் வைத்துக் கொண்டு கும்பிட்டு.' பாடல் வருமாறு:

''பார்மிசை நெருங்க எங்கும் பரப்பினர் பயில்பூ மாரி;
தேர்மலி தானை மன்னன் சேனையும் களிறும் எல்லாம்
கார்பெறு கானம் போலக் களித்தன; கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து.''

இந்தப் பாடல் குளகம். பார்மிசை - தரையின் மேல். நெருங்க - செரியுமாறு. எங்கும் - எல்லா இடங்களிலும்;

ஒருமை பன்மை மயக்கம். பயில் - மேவிய. பூமாரி - மலர் மழையை. பரப்பினர் - திருக்கடவூரில் வாழும் மக்கள் பரவலாக விழும் வண்ணம் செய்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம். தேர் - தேரையும். மலி - மிக்க. தானை - சேனையையும் பெற்ற. மன்னன் - சோது அரசனுடைய. சேனையும் - படைவீரர்களும்; திணை மயக்கம். களிறும் - ஆண் யானைகளும்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - ஆகிய யாவும். கார் - மேகம் பொழியும் மழையை; ஆகு பெயர். பெறு - பெற்ற. கானம் போல - காட்டைப் போல. க்: சந்தி. களித்தன - மகிழ்ச்சியை அடைந்தன. கைகள் - தன்னுடைய கரங்களை. கூப்பி - தன்னுடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டு. வார் - நீண்ட. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை உடைய; ஆகு பெயர். வேந்தன் - சோழ மன்னன். தொண்டர் திருத்தொண்டராகிய குங்குலியக் கலய நாயனாருடைய. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். அடி - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தலைமேல் - தன்னுடைய தலையின் மேல். வைத்து - வைத்துக் கொண்டு கும்பிட்டு.

பிறகு உள்ள 30-ஆவது பாடல் சோழ மன்னன் கூறியதைச் சொலவ்து. அதன் உள்ளுறை வருமாறு:

'ஆகாயத்தில் பறந்த மூன்ற புரங்களாகிய பறக்கும் கோட்டைகளை எரியும் வண்ணம் வேதமாகிய இரத்தத்தில் மேருமலையாகிய உறுதியான வில் வளைய நின்றவராகிய அருணஜடேசுவரர் நேராக நிற்கும் நிலையை யாவரும் தரிசிக்குமாறு தாங்கள் புரிந்தீர்கள்; மண்ணுலகத்தை அகழ்ந்து பார்த்த திருமாலும் தேடியும் பார்க்க முடியாத செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகள்

இரண்டையும் வேறு யார் நற்குணங்களைப் பெற்ற சிவ பெருமானுடைய அடியவர்கள் அல்லாமல் அன்பு கொண்டு நேராக நிற்குமாறு செய்ய வல்லவர்?' பாடல் வருமாறு:

"விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரில் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்;
மண்பகிர்ந் தவனும் காணா மலரடி இரண்டும் யாரே
பண்புடை அடியார் அல்லால் பரிந்துநேர் காண வல்லார்."

விண் - ஆகாயத்தில். பயில் - பறந்த. புரங்கள் - மூன்று புரங்களாகிய பறக்கும் கோட்டைகளை. வேவ - எரியும் வண்ணம். வைதிகத்தேரில் - வேதமாகிய இரத்தத்தில். மேரு - மேருமலையாகிய. த்: சந்தி. திண் - உறுதியான. சிலை - வில். குனிய - வளைய. நின்றார் - நின்றவராகிய அருணஜடேசுவரர். செந்நிலை - நேராக நிமிர்ந்து நிற்கும் நிலையை. காண - யாவரும் தரிசிக்குமாறு. ச்: சந்தி. செய்தீர் - தாங்கள் புரிந்தீர்கள். மண் - மண்ணுலகத்தை. பகிர்ந்தவனும் - தோண்டிப் பார்த்த திருமாலும். காணா - தேடியும் பார்க்க முடியாத. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை ம்யக்கம். அடி - திருவடிகள்; ஒருமை பன்மை மயக்கம். இரண்டும் - இரண்டையும். யார் - வேறு எவர். ஏ: அசை நிலை. பண்பு - நல்ல - குணங்களை; ஒருமை பன்மை மயக்கம். அல்லால் - அல்லாமல். பரிந்து - அன்பு கொண்டு. நேர்காண - நேராக நிற்குமாறு செய்ய. வல்லார் - வல்லவர்.

அடுத்து வரும் 31-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'என இவ்வாறு உண்மையான திருத்தொண்டராகிய குங்குலியக் கலய நாயனாரைத் துதித்துவிட்டு அந்தத் திருப்பனந்தாளில் அடியேங்களுடைய தலைவனாகிய அருணஜடேசுவரனுக்குப் பொருந்திய திருப்பணிகளையும்

வேறாக இருப்பவற்றையும் புரிந்து நிலைத்து நின்ற வெண்கொன்றக் குடையை ஏந்திய சோழ அரசன் திருப்பனந்தாளை விட்டு அகன்று செல்லவும் ஒப்பு இல்லாத பக்தராகிய குங்குலியக் கலய நாயனார் சிதம்பரம் ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் வெற்றிக் கழலைப் பூண்ட செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை வாழ்த்திக் கொண்டு அந்தச் சிதம்பரத்தில் தங்கிக் கொண்டு.' பாடல் வருமாறு:

"என்றுமெய்த் தொண்டர் தம்மை ஏத்தியங் கெம்பி ரானுக்
கொன்றிய பணிகள் மற்றும் உள்ளன பலவும் செய்து
நின்றவெண் கவிகை மன்னன் நீங்கவும் நிகரில் அன்பர்
மன்றிடை ஆடல் செய்யும் மலர்க்கழல் வாழ்த்திவைகி."

இந்தப் பாடல் குளகம். என்று - என இவ்வாறு: மெய் - உண்மையான. த்: சந்தி. தொண்டர் தம்மை - திருத்தொண்டராகிய குங்குலியக் கலய நாயனாரை, தம்: அசை நிலை. ஏத்தி - துதித்துவிட்டு. அங்கு - அந்தத் திருப்பந்தாளில். எம்பிரானுக்கு - அடியேங்களுடைய தலைவனாகிய அருணஜடேசுவரனுக்கு. இது சேக்கிழார் தம்மையும் குங்குலியக் கலய நாயனாரையும் சேர்த்துச் சொன்னது. ஒன்றிய - பொருத்தமாக உள்ள. பணிகள் - திருப்பணிகளையும். மற்றும் - வேறாக உள்ளவையாகும். பலவும் - பல செயல்களையும். செய்து - புரிந்து என்றது இறையிலி நிலம் விடுதல், பூசைக்ரிய அடிக்கும் மணி, தூபக்கால், கற்பூரத்தட்ட, பொற்குடம், திருவிளக்குக்கள் முதலியவற்றை. நின்ற - நிலைபெற்று விளங்கிய. வெண்கவிகை - வெண்கொற்றக் குடையைப் பிடித்த. மன்னன் - சோழ அரசன். நீங்கவும் - திருப்பனந்தாளை விட்டு அகன்று செல்லவும். நிகர் - தமக்கு ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. அன்பர் - பக்தராகிய குங்குலியக்

கலய நாயனார். மன்றிடை - சிதம்பரம் ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில். ஆடல் - திருநடனத்தை. செய்யும் - புரிந்தருளும். மலர்க்கழல் - வெற்றிக்கழலைப் பூண்ட செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை; ஆகுபெயர். மலர்: ஒருமை பன்மை மயக்கம். வாழ்த்தி - வாழ்த்திக் கொண்டு. வைகி - அந்தச் சிதம்பரத்தில் தங்கியிருந்து.

பிறகு உள்ள 32-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சில தினங்கள் போன பிறகு திருக்கடவூரை அடைந்து குங்குலியக் கலய நாயனார் நிலைபெற்ற தம்முடைய திருப்பணிகளைச் செய்து கொண்டு அந்தத் தலத்தில் தங்கியிருந்து வாழ்ந்து கொண்டிருக்கும் காலத்தில் தமக்கு ஒப்பு வேறு யாரும் இல்லாதவரும், சீர்காழியில் திருவவதாரம் செய்தருளிய தலைவராகும் திருஞான சம்பந்தப் பிள்ளையாரும், தாண்டகச்சதுரராக விளங்கும் மலர்ந்த புகழைப் பெற்ற திருநாவுக்கரசு நாயனாரும் சேர அந்தத் திருக்கடவூருக்கு எழுந்தருளி வந்ததைப் பார்த்து.' பாடல் வருமாறு:

"சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் பணியில் தங்கி நிகழும்நாள் நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாரும் தாண்டகச் சதுர ராகும்
அலர்புகழ் அரசும் கூட அங்கெழுந் தருளக் கண்டு."

இந்தப் பாடல் குளகம்: சிலபகல் - சில தினங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கழிந்த - போன. பின்பு - பிறகு. திருக்கடவூரில் - திருக்கடவூரை; உருபு மயக்கம். நண்ணி - குங்குலியக் கலய நாயனார் அடைந்து. நிலவு - நிலைபெற்ற. தம் - தம்முடைய. பணியில் - திருப்பணிகளைச் செய்து கொண்டு. பணி: ஒருமை பன்மை மயக்கம். தங்கி - அந்தத்

தலத்தில் தங்கியிருந்து. நிகழும் - வாழ்ந்து கொண்டிருக்கும் . நாள் - காலத்தில் நிகர் - தமக்கு ஒப்பு வேறு யாரும். இல் - இல்லாத; கடைக்குறை. காழி - சீர்காழியில் திருவவதாரம் செய்தருளிய. த்: சந்தி. தலைவராம் - தலைவராக விளங்கும். பிள்ளை யாரும் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாராகிய பிள்ளை யாரும். தாண்டகச் சதுரராகும் - திருத்தாண்டகம் பாடுவதில் வல்லவராக விளங்கும். அலர் - மலர்ந்த. புகழ் - புகழைப் பெற்ற. அரசும் - திருநாவுக்கரசு நாயனாரும்; திணை மயக்கம். கூட - ஒன்றாகச் சேர. அங்கு - அந்தத் திருக்கடவூருக்கு. எழுந்தருள - எழுந்தருளி வர. க்: சந்தி. கண்டு - பார்த்து.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரைப் பிள்ளையார் என்று கூறுதல்: ''பிள்ளையார் திருவவதாரம் செய்த பெரும்புகலி.'', ''அம்மை முலைப்பாலுண்ட பிள்ளை யார்க்கு.'', ''பிள்ளையார் கழல் வணங்கப் பெற்றேன்.'', ''அந்நாளில் ஆளுடைய பிள்ளையார்.'', ''பெருஞான சம்பந்தப் பிள்ளையார்.'', ''பிள்ளையார் எழுந்தருள.'', ''காழி ஞானப் பிள்ளையை.'', ''பிள்ளையார் தமக்கும் நாவுக்கரசினுக்கும்.'', ''பிள்ளையார் உரை செய்தருள.'', ''பிள்ளையார் பாடித் தொழுது.'', ''ஆண்ட காதம் பிள்ளையாருடனே அங்கண் இனிதமர்ந்து.'', ''பிள்ளையார் அதுகேளா.'', ''சிவம் பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்.'', ''பெரும் புகலிப் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்.'', 'பெரும் புகலிப் பிள்ளையார்.'', ''பின்சென்ற பிள்ளையார் தமை நோக்கி.'', ''பிள்ளையார் தமைக்கறையில் வைத்து.'', ''அழுகின்ற பிள்ளையார் தமை நோக்கி.'', ''ஆளுடைய பிள்ளையாராய்.'', ''பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார்.'', ''பிள்ளையார் கழல் வணங்க.'', ''பிள்ளையார் எதிர் கொள்ள.'', ''ஆய புகழ்

பிள்ளையார்.'', ''பிள்ளையார் அருள் பெற்ற பெரும்பாணர்.'', ''பிள்ளையார் மனம் மகிழ்வுற்று.'', ''பிள்ளையார் அருள் செய்ய.'', ''தவம் தழைப்ப வந்தருளிய பிள்ளையார்.'', ''உடைய பிள்ளையார் வரும் எல்லை.'', ''பிள்ளையார் பான்மையில் வரும் பதி.'', ''பிள்ளையார் காமரும் பதியில் வந்தருள.'', ''பிள்ளையார் எழுந்தருளக் கேட்ட செல்வப் பிரமபுரத் தருமறையோர்.'', ''சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும்போது.'', 'அத்தகைமை பிள்ளை யார் அருளிச் செய்ய.'', ''ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளி.'', ''பிள்ளையார் எழுந்தருளப் பெற்றேன்.'', ''நின்ற அருமறைப் பிள்ளையாரும்.'', ''பிள்ளையார் அமர்ந்துறை யும் நாளின்கண்.'', ''மெய்ஞ்ஞானப் பிள்ளையார்.'', ''அந்நிலைமை ஆளுடைய பிள்ளையார்க் கவர்களெலாம் முன்னறிவித்து.'', ''கோயிலைப் பிள்ளையார் வலம்வரும் பொழுதினில்.'', ''சண்பைவரும் பிள்ளையார்.'', ''பெருந்துழனி எண்டிசையும் நிறைந்தோங்க எழுந்தருளும் பிள்ளையார்.'', ''அப்பதியில் அமர்கின்ற ஆளுடைய பிள்ளையார்.'', ''பிள்ளையார் அருளிச் செய்த அருமையுடைப் பதிகம்.'', ''பிள்ளையார் கழலிணை வீழ்ந்தெழுந்து.'', ''ஆளுடைய பிள்ளையார் தம் துணை மலர்ச் சேவடி பணிந்து.'', ''பிள்ளையார் திருத்தாளம் கொடு பாட.'', ''அங்கிருந்தார் பெரும்புகலிப் பிள்ளையார்.'', ''காழிப் பிள்ளையார் அடியில் வீழ்ந்த நங்கை.'', ''பாடியின் ஞானம் உண்டருளிய பிள்ளையை.'', ''காழியார் வாழவந் தருள் செயும் கவுணியப் பிள்ளையார்.'', ''பிள்ளையாருடன் நாவினுக்கரசரும்.'', ''என்று பிள்ளையார் மொழிந்தருள் செய்திட.'', ''பிள்ளையார் பாதம் பணிந்து பூண்டே.'', ''திருஞான சம்பந்தப் பிள்ளையாரைக் காணும் விருப்பில்.'', ''ஈறில் சிவஞானப் பிள்ளையாரும்.'', ''என்று கவுணியப் பிள்ளையார் தாமியம்ப.'', ''பிள்ளையார் தாம் அபிமுகத்துப்

பீடிகைமேற் காசு கண்டார்.'', ''சேவுகைத்தார் அருள் பெற்ற பிள்ளையார்.'', ''பின்னணைய எழுந்தருளும் பிள்ளையார்.'', ''சொல்லரசருடன் கூடப் பிள்ளையார்.'', ''அருமறைப் பிள்ளையாரும்.'', ''சண்பை நாடுடைய பிள்ளை.'', ''பிள்ளையாரும் வாகீச முனிவருடன் கூடச் சென்று.'', ''சிரபுரத்துப் பிள்ளையார் அருளிச் செய்த திருப்பதிகம்.'', ''பிள்ளையார் எழுந்தருளி முன் புகுதும் அப்பொழுது.'', ''மந்திரியார் பிள்ளையார் கழல் வணங்கி.'', ''தொண்டர்கள் ''பிள்ளையார் மருங்கணைந் திறைஞ்சி.'', ''பிள்ளையார் அமர்ந்த துங்கமாமடம்.'', ''பெற்றனம் பிள்ளையாரிங் கணைந்திடப் பெறும்பேறு.'', ''சிரபுரப் பிள்ளையாரை.'', ''காழி நாடுடைய பிள்ளை.'', ''பிள்ளையார் செம்பொன்மணிப் பீடத்தில் இருந்த பொழுது.'', ''சமண் கையர் பிள்ளையார் தமைச் சூழ்வார்.'', ''பிள்ளையார் அது கேளா.'', ''இன்னருட் பிள்ளையார்.'', ''பெற்றியால் அருளிச் செய்த பிள்ளையார்.'', ''பெருமறை துதிக்கு மாற்றாற் பிள்ளையார் போற்றி.'', ''பிள்ளையாரும் உங்கள் வாய்மை பேசுமின்கள் என்றலும்.'', ''பிள்ளையார் நன்றுநீர் உரைத்தவாறு.'', ''பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தின் இழிந்து போந்து.'', ''பிள்ளையார் பெருகும் செல்வம் மன்னிய மதுரை மூதூர் மறுகில் வந்தருளக் கண்டு.'', ''பைம்பொற் சிவிகைமேற் பிள்ளையார்தாம் வரும் அழகென்னே.'', ''பிள்ளையார்க் கெதிரோ என்பார்.'', ''நிறைமதிப் பிள்ளையாரும்.'', ''தேசுடைப் பிள்ளையார்.'', ''என்றனர் பிள்ளையார்தாம்.'', ''திருவுடைப் பிள்ளையார்.'', ''பிள்ளையார் வன்னி என்றெடுத்துப்பாட.'', ''மற்றவர் பிள்ளையார் தம் மலரடி வணங்கி.'', ''போற்று சீர்ப்பிள்ளையார்.'', ''புண்ணியப் பள்ளையாரை.'', ''இன்னருட் பிள்ளையாரை.'', ''சீருடைப் பிள்ளையாரும்.'', ''ஒப்பில் புகழ்ப் பிள்ளையார்.'', ''ஞாலம் உய்ய வந்தருளும் பிள்ளையாரை.'', ''ஞானம்

உண்ட பிள்ளையார்.'', ''பிள்ளையார் முன் வருசின்னப் பெருகொலியும்.'', ''செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார்.'', ''பிள்ளையார் தமைச் சூழ்ந்த நெருக்கினிடை.'', ''பிள்ளையார் மருவாரும் மலரடிகள் வணங்கி.'', ''பிள்ளையார் தாமும் அவர் முன்தொழுது.'', ''பிள்ளையார் ஏற்றெழுவார்.'', ''திருவக்கரை பிள்ளையார் அணைவுற்றார்.'', 'பிள்ளையார் தம் திருவாக்கிற் பிறத்தலால்.'', ''ஞாலம் உய்ய வந்த பிள்ளையார்.'', ''திருப்பதிகத் தொடை புனைந்தார் பிள்ளையார்.'', ''அம்பொன்மலைக் கொடி முலைப்பால் குழைத்த ஞானத் தமுதுண்ட பிள்ளையார்.'', ''உடைய பிள்ளையார்க்கென இவன்தனை உரைத்து.'', ''பிள்ளையார் அணிமலரடியில் வீழ்ந்தரற்ற.'', ''பரமர் கோயிலினுள் ளெழுந்தருளினார் உடைய பிள்ளையார்.'', ''சீருடைய பிள்ளையார்க்கு.'', ''பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார்.'', ''என்றன் அருநிதிப் பாவையாரைப் பிள்ளையார்க் களித்தேன் என்றார்.'', ''ஒருப்படும் உடைய பிள்ளையார்.'', ''பிள்ளையார் எழுந்தருளிப் புகக்தற்பின்.'' என்று சேக்கிழாரம் பாடியவற்றைக் காண்க. நம்பியாண்டார் நம்பி திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரைப் பற்றிப் பாடிய பிரபந்தங்களுக்கு, 'ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி.'', ''ஆளுடைய பிள்ளையார் திருச்சணியை விருத்தம்.'', 'ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை.', 'ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை.', 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்.', 'ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை.' என்ற பெயர்களை வைத்திருப்பதையும், ''பதிகம் பலபாடி நீடிய பிள்ளை.'', ''பெருகும் வயற்காழிப் பிள்ளை.'', பிள்ளை நீ.'', ''பெருவார்த்தை தானுடைய பிள்ளை.'' என்று அவர் பாடியருளியவற்றையும் கரண்க.

பிறகு வரும் 33-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஒப்பு இல்லாத களிப்புப் பொங்கி எழ திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரையும் திருநாவுக்கரசு நாயனாரையும் குங்குலிக் கலய நாயனார் அவர்களுடைய எதிரில் சென்று வரவேற்று வஅர்களை அழைத்துக் கொண்டு தம்முடைய திருமாளிகையை அடைந்து முடிவு இல்லாத பக்தியில் சிறந்து நிற்பவர்களாகிய அந்த இரண்டு நாயன்மார்களுக்கும் இனிய உணவைத் தக்கதாக விளங்கும் வழியோடு நல்ல ஆறு சுவைகள் சிறந்து அமையப் படைத்து அந்த இரண்டு நாயன்மார்களும் வழங்கிய திருவருளை அல்லாமல் நறுமணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்த சடாபாரத்தைக் கொண்ட நம்பராகிய அமிர்ந்தகடேசு வருடைய திருவருளையும் பெறும் பாக்கியத்தைக் குங்குலியக் கலய நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"மாறிலா மகிழ்ச்சி பொங்க எதிர்கொண்டு மனையில் எய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க் பின்னமு தேற்கும் ஆற்றால்
ஆறுநற் சுவைகள் ஓங்க அமைத்தவர் அருளே அன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்தம் அருளும் பெற்றார்."

மாறு - ஒப்பு. இலா - இல்லாத; இடைக்குறை. மகிழ்ச்சி - களிப்பு. பொங்க - பொங்கி எழ. எதிர்கொண்டு - திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரையும் திருநாவுக்கரசு நாயனாரையும் குங்குலியக் கலய நாயனார் அவர்களுடைய எதிரிற் சென்று வரவேற்று அவர்களை அழைத்துக் கொண்டு. மனையில் - தம்முடைய திருமாளிகையை; உருபு மயக்கம். எய்தி - அடைந்து. ஈறு - முடிவு. இலா - இல்லாத; இடைக்குறை. அன்பில் - பக்தியில். மிக்கார்க்கு - சிறந்து நிற்பவர்களாகிய அந்த இரண்டு நாயன்மார்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். இன் - இனிய. அமுது - திருவமுதை. ஏற்கும் - தக்கதாக விளங்கும். ஆற்றால் வழியோடு; உருபு மயக்கம். ஆறு நற்சுவைகள் - இனிப்பு,

புளிப்பு - காரம், உப்பு, துவர்ப்பு, கசப்பு என்று ஆறு நல்ல சுவைகள். ஓங்கு - சிறந்து அமைய. அமைத்து - படைத்து. அவர் - அந்த இரண்டு நாயன்மார்களும் வழங்கிய; ஒருமை பன்மை மயக்கம். அருள் - திருவருளை. ஏ: அசை நிலை. அன்றி - அல்லாமல். நாறு - நறுமணம் கமழும். பூங்கொன்றை - மலர் மாலையை அணிந்த; ஆகு பெயர். வேணி - சடாபாரத்தைக் கொண்ட நம்பர்தம் - தம்முடைய அடியவர் களுக்குப் பலவகையான நம்பிக்கைகளை உண்டாக்கு பவராகிய அமிர்தகடேசுவரருடைய. தம்: அசை நிலை. அந்த நம்பிக்கைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. அருளும் - திருவருளை யும். பெற்றார் - பெறும் பாக்கியத்தைக் குங்குலியக் கலய நாயனார் அடைந்தார்.

*அடுத்து உள்ள 34-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

*'கரும்பு வில்லை ஏந்திய காமனையும், யமனையும் சினந்து தண்டித்தவராகிய அமிர்தகடேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கடவூரில் குங்குலியக் கலய நாயனார் நிலைபெற்றுப் பல காலம் வாழ்ந்திருந்து விருப்பத்தை அடையும் பக்தி மேலும் மேலும் மிகுதியாகப் பொங்கி எழும் விருப்பம் மிகுதியாக உண்டாக ஒருமைப் பாட்டைப் பெற்று விளங்கும் திருவுள்ளப் பான்மை இருந்தமையினால் தமக்கு அமைந்த திருப்பணிகள் பலவற்றையும் புரிந்து இறுதியில் சிவபெருமானுடைய திருவடிகளின் நிழலை அடைந்தார்.' பாடல் வருமாறு:*

''கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவர் கடவூர் மன்னி
விருப்புறும் அன்பு மேன்மேல் மிக்கெழும் வேட்கை கூர
ஒருப்படும் உள்ளத் தன்மை உண்மையால் தமக்கு நேர்ந்த
திருப்பணி பலவும் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார்.''

கருப்பு வில்லோனை - கரும்புவில்லை ஏந்திய காமனையும். க்: சந்தி. கூற்றை - யமனையும். க்: சந்தி. காய்ந்தவர் - எரித்தவரும் தம்முடைய திருவடியால் உதைத்தவரும் ஆகிய அமிர்தகடேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். கடவூர் - திருக்கடவூரில். மன்னி - குங்குலியக் கலய நாயனார் நிலைபெற்றுப் பல காலம் வாழ்ந்திருந்து. விருப்பு - விருப்பத்தை. உறும் - அடையும். அன்பு - பக்தி. மேன்மேல் - மேலும் மேலும். மிக்கு எழும் - மிகுதியாகப் பொங்கி எழும். வேட்கை - விருப்பம். கூர - மிகுதியாக உண்டாக. ஒருப்படும் - ஒருமைப் பாட்டைப் பெற்று விளங்கும். ஒருமைப்பாடு - இறைவனை அல்லாமல் வேறு யாரையும் வணங்காத இயல்பு. உள்ள - திருவுள்ளத்தில் அமைந்த. த்: சந்தி. தன்மை - பான்மை. உண்மையால் - இருந்தமையினால். தமக்கு நேர்ந்த - தமக்கு அமைந்த. திருப்பணி - திருப்பணிகள்; ஒருமை பன்மை மயக்கம். பலவும் - பலவற்றையும். செய்து - புரிந்து. அவையாவன: சிவனடியார்களை வரவேற்று உபசரித்து உணவு வழங்குதல், ஆடை முதலியவற்றை அளித்தல் முதலியன. சிவ - இறுதியில் சிவபெருமானுடைய. பத - திருவடிகளின்; ஒருமை பன்மை மயக்கம். நிழலில் - நிழலை; உருபு மயக்கம். சேர்ந்தார் - அடைந்தார்.

கருப்பு வில்லோனைக் காய்ந்தவர்: ''காமன் எரிப்பிழம்பாக நோக்கி.'', ''காய்ந்தானைக் காமனையும்.'', ''காமனைக் கனலாகச் சீறி.'', ''காய்ந்ததுவும் அன்று காமனை நெற்றிக் கண்ணினால்.'', ''வேள்பட விழி செய்து.'', ''கருப்பு நல் வார்சிலைக் காமன் வேவக் கடைக் கண்டானும்.'', ''காமனை அழல் கொள விழி செய்து.'', ''கரும்பள வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவினழித்த... பிரான்.'', ''கரும்பமர் வில்லியைக் காய்ந்து.'', ''காமனைக்

காய்ந்தவர்.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நானாரும், ''விழித்தனர் காமனை வீழ்த்தர.'', ''அஞ்சு கொலாமலர் காயப்பட்டான் கணை.'', ''காமனைக் காய்ந்த கண்ணார்.'', ''காமனை அன்று கண்ணாற் கனலெரியாக நோக்கி.'', ''காமனைக் காய்ந்த கண்ணார் காஞ்சிமா நகரம் தன்னுள்ளால் ஏமநின்றாடும் எந்தை.'', ''அஞ்சணை கணையினானை ஏமநின்றாடும் எந்தை.'', ''அஞ்சணை கணையினானை அழலுற அன்று நோக்கி.'', ''கண்ணினாற் காம்வேளைக் கனலெழ விழிப்பார்.'', ''சுட்டது காமனைக் கண்ணதனாலே.'', ''காய்ந்ததாய் அனங்கன் உடலம் கண்ணதனாலே.'', ''காய்ந்தாய் அனங்கள் உடலம் பொடிபட.'', ''கரும்பு பிடித்தவர் காயப்பட்டார்.'', ''கருப்பு வெஞ்சிலைக் காமனைக் காய்ந்தவன்.'', ''காமனையும் கரியாகக் காய்ந்தார்.'', ''விற்பயிலும் மதனழிய விழித்தான்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''மாரனார் உடல் நீறெழச் செற்று.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''காமன் உடல்... தூய்மைகள் செய்தவா.'' என்று மாணிக்கவாசகரும், ''வேள் இவர் மிகை செகுத்தோன்.'' என்று சேந்தனாரும், ''மன்மதனைச் செற்றவனே.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''கோத்த மலர்வாளி கொண்டனங்கன் காளத்திக், கூத்தன் மேல் அன்று குறித் தெய்யப் - பார்த்தலுமே, பண்பொழியாக் கோபத்தீச் சுற்றுதலும் பற்றற்று, வெண்பொடியாய் வீழ்ந்திலனோ வெந்து.'', ''தீங்கருப்பு வில்லிக்குக் கூற்றானான்.'', ''ஐங்கணை யவனொடு காலனை அடர்த்தனை.'', ''கடிபடு பூங்கணைக் காமனார் உடல் பொடிபட விழித்தும்.'', ''மலர்க் கணையேன் றொட்டிய அக்காமன் அழகழித்த கண் போற்றி.'' என்று நக்கீரதேவ நாயனாரும், ''கருப்புச் சிலை அனங்கன் கட்டழுழ சுட்ட, நெருப்புத் திருநெற்றி நாட்டம்.'' என்று கபிலதேவ நாயனாரும், ''கண் திறந்து காய்

எரியின் வீழ்ந்து கடிதோடிக், கண்டிறந்து காமன் பொடியாக.'' என்று பரணதேவ நாயனாரும், ''பூமென் கரும்பொடு பொடிபட நிலத்துக் காமனைப் பார்த்த கண்ணுதல் போற்றி.'', ''நெற்றியிற் சிறந்த ஒற்றை நாட்டத்துக், காமனை விழித்த மாமுது தலைவ.'', ''நோக்கிற்றுக் காமன் உடல் பொடியாக.'', ''கண்ணாற் காமனைக் காய்ந்தனை.'', ''அஞ்சரத்தான் பொடியாய் விழத் தீ விழித்து.'', ''பூங்கணை வேளைப் பொடிபட விழித்ததும்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''மன்மதன் மெய்யுரைக்கில் இட்டம் கரியனல்லா னல்லன் அம்பலத் தெம்பரன்மேற் கட்டங்கியகணை எய்தலும் தன்னைப் பொன்னார் முடிமற் புட்டங்கினான் மகனாமென்று பார்க்கப் பொடிந்தனனே.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''தம் திருக்கண் எரிதழலிற்பட்டு வெந்தகாமன்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 35-ஆம் பாடல் இந்தப் புராணத்தின் இறுதிப் பாடலாக அமைந்துள்ளது. அதன் கருத்து வருமாறு

'தேன் ஒழுகும் மாலையை அணிந்த விருப்பம் மருவிய தம்முடைய பத்தினியார் கழற்றித் தந்த அழகிய நீளமான தங்கத் தாலியை விற்று விட்டு, வளைவைக் கொண்ட குளிர்ச்சியை உடைய பிறைச் சந்திரனைத் தம்முடைய தலையின்மேல் அணிந்தவராகிய அமிர்தகடேசு வரருக்குக் குங்குலியத்தை எடுத்துக் கொண்டு சென்று புகைத்த தன்மையைப் பெற்றவரும், திருவுள்ளத்தில் உறுதியைக் கொண்டவருமாகிய குங்குலியக் கலய நாயனாரை வணங்கி விட்டு அந்த நாயனாருடைய திருவருளினால் மானக் கஞ்சாற நாயனாருடைய மிகுதியாக அமைந்த வண்மையையும் புகழையும் துதித்துப் பாடத் தொடங்கினேன்.' பாடல் வருமாறு:

"தேன்நக்க கோதை மாதர் திருநெடும் தாலி மாறிக்
கூனற்றண் பிறையி னார்க்குக் குங்குலி யங்கொண் டுய்த்த
பான்மைத்திண் கலய னாரைப் பணிந்தவர் அருளி னாலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன்."

இது சேக்கிழார் அடுத்து வரும் மானக் கஞ்சாற நாயனார் புராணத்திற்குத் தோற்றுவாயாகப் பாடியருளிய பாடல். தேன் நக்க - தேன் ஒழுகும். கோதை - மாலையை அணிந்த. மாதர் - விருப்பம் மருவிய தம்முடைய பத்தினியார். திரு - கழற்றி அளித்த அழகிய. நெடும் - நீளமாக இருக்கும். தாலி - தங்கத் தாலியை. மாறி - விற்று விட்டு. க்: சந்தி. கூனல் - வளைவையும். தண் - குளிர்ச்சியையும் பெற்ற. பிறையினார்க்கு - பிறைச் சந்திரனைத் தம்முடைய தலையின் மேல் அணிந்தவராகிய அமிர்தகடேசுவரருக்கு. க்: சந்தி. குங்குலியம் - குங்குலியத்தை. கொண்டு - எடுத்துக் கொண்டு சென்று. உய்த்த - புகைத்த. பான்மை - தன்மையையும். த்: சந்தி. திண் - திருவுள்ளத்தில் உறுதியையும் கொண்ட. கலயனாரை - குங்குலியக் கலய நாயனாரை. ப்: சந்தி. பணிந்து - வணங்கி விட்டு. அவர் - அந்த நாயனாருடைய. அருளினால் - திருவருளால். ஏ: அசை நிலை. மானக் கஞ்சாறர் - மானக் கஞ்சாற நாயனாருடைய. மிக்க - மிகுதியாக அமைந்த. வண் - வண்மையையும். புகழ் - அதனால் பெற்ற புகழையும். வழுத்தலுற்றேன் - அடியேன் பாடத் தொடங்கினேன்.

★

# மானக் கஞ்சாற நாயனார் புராணம்

பெரிய புராணத்தில் 3-ஆவதாக விளங்கும் இலைமலிந்த சருக்கத்தில் ஐந்தாவதாக அமைந்திருப்பது மானக் கஞ்சாற நாயனார் புராணம். அதில் வரும் முதற் பாடலின் கருத்து வருமாறு:

'மேன்மையைப் பெற்ற கங்கையாற்றைத் தம்முடைய தலையில் உள்ள சிவந்த சடாபாரத்தின்மேல் தங்க வைத்தவராகிய சிவபெருமானார் தாம் விருப்பத்தை அடைந்து திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலம், சாத்திரங்கள் கூறும் வழியை நன்றாகத் தெரிந்து கொள்பவர்கள் தாங்கள் பாடும் சிறப்பைப் பெற்றது பூங்கொம்பின் வழியே தேன் சொரியக் கொழுமையான பல வகையான பழங்களிலிருந்து அவற்றின் சாறு ஒழுகுவதும், கால்வாய்களின் வழியே நீர் பாயும் வயல்களையும், கரும்புச் செடிகளையும் கொண்டு அவற்றின் சாறு நறுமணம் கமழும் விழாக்கள் நடைபெறும் திருத்தலம் கஞ்சாறூர் என்பது ஆகும்.' பாடல் வருமாறு:

"மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார் தாம்பாடும் நோன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகும்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்."

மேல் - மேன்மையைப் பெற்ற. ஆறு - கங்கையாற்றை. செம் - தம்முடைய தலையில் உள்ள சிவந்த. சடைமேல் - சடாபாரத்தின் மேல். வைத்தவர்தாம் - தங்க வைத்தவராகிய சிவபெருமானார் தாம். விரும்பியது - விருப்பத்தை அடைந்து திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலம். நூல் - சாத்திரங்கள் கூறும்; ஒருமை பன்மை மயக்கம். ஆறு - வழியை. நன்கு - நன்றாக. உணர்வார்தாம் - தெரிந்து கொள்பவர்களாகிய புலவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தாம்: அசை நிலை. பாடும் - பல பாடல்களைப் பாடி வருணிக்கும். நோன்மையது - சிறப்பைப் பெற்றது. கோல் - பூங் கொம்புகளின்; ஒருமை பன்மை மயக்கம். ஆறு - வழியே. தேன் பொழிய - தேன் சொரிய. க்: சந்தி. கொழும் - கொழுமையாக விளங்கும். கனியின் - பல வகையான பழங்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். அந்தப் பழங்களாவன: மாம் பழங்கள், விளாம் பழங்கள் முதலியவை. சாறு ஒழுகும் - சாறு வழிந்து தரையில் ஓடும். காலாறு - கால்வாய்களின் வழியே; ஒருமை பன்மை மயக்கம். வயல் - நீர் பாயும் வயல்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கரும்பின் - கரும்புச் செடிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். கமழ் - அவற்றின் சாறு நறுமணம் கமழும். சாறு - தேர் விழா, திருவாதிரை விழா முதலிய விழாக்கள் நடைபெறும்; ஒருமை பன்மை மயக்கம். ஊர் - திருத்தலம். கஞ்சாறூர் - கஞ்சாறூர் என்பது ஆகும்.

பிறகு வரும் 2-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'கருமையான கண்களைப் பெற்ற இழிகுலப் பெண்களாகிய பள்ளிகள் எடுக்கும் களைகளிலிருந்து தப்பிச் சென்று ஒதுங்கிப் போய் உள்ளே உண்டாகும் நீர்மையாகிய புணர்ச்சியில் ஊடலைக் கொண்டு மலர்களாகிய கண்கள் சிவக்கும் குளிர்ச்சியைக் கொண்ட மெல்லிய செங்கழுநீர் மலராகிய நாயகிக்கு விசாலமான செந்நெற் பயிராகிய நாயகன் தன்னுடைய தலையால் வணங்குகின்ற நிலத்தின் வளத்தால் இயல்பாகிய அழகு சிறப்பாக அமைந்த வளப்பத்தைக் கொண்ட வயல்கள் பக்கங்களில் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"கண்ணீலக் கடைசியர்கள் கடும்களையிற் பிழைத்தொதுங்கி
உண்ணீர்மைப் புணர்ச்சிக்கண் உறைத்துமலர்க் கண்சிவக்கும்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கும்
மண்ணீர்மை நலம்சிறந்த வளவயல்கள் உளஅயல்கள்."

கண் நீல - கருமையான கண்களைப் பெற்ற. கண்: ஒருமை பன்மை மயக்கம். கரிய நிறத்தையும் நீலம் என்பது வழக்கம்: ''நீல நிறக்காக்கை.'' என வருதலைக் காண்க. க்: சந்தி. கடைசியர்கள் - இழிகுலப் பெண்களாகிய பள்ளிகள். கடும் - பறிக்கும். களையில் - களையிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். பிழைத்து - தப்பிச் சென்று. ஒதுங்கி - ஒதுங்கிப் போய். உள் - உள்ளே உண்டாகும். நீர்மை - தன்மையாகிய. ப்: சந்தி. புணர்ச்சிக்கண் - புணர்ச்சியில். உறைத்து - ஊடலைக் கொண்டு. மலர் - மலர்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். க்:சந்தி. கண் - கண்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிவக்கும் - சிவந்த நிறத்தை அடையும். தண் - குளிர்ச்சியைக் கொண்ட. நீர் -

நீரில் இருக்கும். மென் - மென்மையான. கழுநீர்க்கு - செங்கழுநீர் மலராகிய நாயகிக்கு. த்: சந்தி. தடம் - விசாலமான. சாலி - சம்பா நெற் பயிராகிய நாயகன். தலை - தன்னுடைய தலையினால். வணங்கும் - பணியும். மண் - நிலத்தினுடைய. நீர்மை - இயல்பாகிய. நலம் - அழகு. சிறந்த - சிறப்பாக அமைந்த. வள - வளப்பத்தைக் கொண்ட. வயல்கள் - சம்பா நெல் வயல், குறுவை நெல் வயல், மணச் சத்தை நெல் வயல் முதலிய வயல்கள். அயல்கள் - அந்தக் கஞ்சாறூரின் பக்கங்களில். உள - இருக்கின்றன; இடைக்குறை.

அடுத்து வரும் 3-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'மேகங்களினுடைய கரிய நிறத்தைத் தோன்றச் செய்யும் கூந்தல்கள் தங்களுடைய சிறிய முதுகுகளில் தொங்கித் தோன்ற, காட்டில் வாழும் மயில்களினுடைய இயல்பைக் காட்டிக் கொண்டு தங்களுடைய இடுப்புக்கள் வளைய தங்களுடைய சாதிக்கு ஏற்ற பண்புகளைத் தோற்றச் செய்யும் உழவர்களுடைய பெண்கள் முயலாகிய கறையைக் காண்பிக்கும் சந்திரன் தோல்வியடையும் முகங்களைக் காண்பிக்க அவர்களுடைய கண்கள் வலிமையைப் பெற்ற கயல் மீன்களினுடைய தோற்றத்தைக் காட்டும் தடாகங்கள் பல அந்த ஊரில் விளங்கும்; விசாலமான வயல்கள் நெற்கதிர்களைக் காணச் செய்யும்.' பாடல் வருமாறு:

"புயல்காட்டும் கூந்தல்சிறு புறம்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி இடைஒதுங்க இனம்காட்டும் உழத்தியர்கள்
முயல்காட்டும் மதிதோற்கும் முகம்காட்டக் கண்மூரிக்
கயல்காட்டும் தடங்கள்பல கதிர்காட்டும் தடம்பணைகள்."

புயல் - மேகங்களினுடைய நிறத்தை; ஒருமை பன்மை மயக்கம்; ஆகு பெயர். காட்டும் - தோன்றச் செய்யும்; எடுத்துக் காட்டும். கூந்தல் - கூந்தல்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிறு - சிறிய. புறம் - முதுகுகளில்; ஒருமை பன்மை மயக்கம். காட்ட - தொங்கித் தோன்ற. ப்: சந்தி. புன - காட்டில் வாழும். மயிலின் - மயில்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். இயல் - இயல்பை. காட்டி - அவர்களினுடைய உடம்புகள் காட்டிக் கொண்டு இருக்க. இடை - தங்களுடைய இடுப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒதுங்க - வளைய. இனம் - தங்களுடைய சாதிக்கு ஏற்ற பண்புகளை; ஆகுபெயர். காட்டும் - எடுத்துக் காண்பிக்கும். உழத்தியர்கள் - உழவர்களினுடைய பெண்கள். முயல் - முயலாகிய கறையை. காட்டும் - காண்பிக்கும். மதி - சந்திரன். தோற்கும் - தோல்வியை அடையச் செய்யும். முகம் - முகங்களை; ஒருமை பன்மை மயக்கம். காட்ட - காண்பிக்க. க்: சந்தி. கண் - அவர்களுடைய கண்கள்; ஒருமை பன்மை மயக்கம். மூரி - வலிமையைப் பெற்ற. க்: சந்தி. கயல் - கயல் மீன்களினுடைய தோற்றத்தை; ஒருமை பன்மை மயக்கம்; ஆகுபெயர். காட்டும் - கோணச் செய்யும். தடங்கள் - தடாகங்கள். பல - பல அந்தக் கஞ்சாறூரில் விளங்கும். தடம் - விசாலமான. பணைகள் - வயல்கள். கதிர் - நெற்கதிர்களை; ஒருமை பன்மை மயக்கம். காட்டும் - காணுமாறு செய்யும்.

பிறகு வரும் 4-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'சேற்றைக் கொண்ட குளிர்ச்சியைப் பெற்ற வயல்களினுடைய இடத்தில் செழிப்புள்ள நெற்பயிற்களினுடைய கொழுமையான கதிர்கள் சென்று வேறாகப்

பக்கத்தில் நெருங்கியுள்ள வேலியைப் பெற்ற பசுமையான பாக்கு மரத்தினுடைய கழுத்தைத் தடவி மாறுகளோடு எழுந்துள்ள உறுதியான குலைகளை வளையுமாறு செய்ய வண்டுகள் அலையும் சோலையில் உழவர்கள் தாறுகளை அறுக்கும் நீண்டதும் வளைந்ததும் ஆகிய அரிவாளைப் போன்றனவாகிய தனியான இடங்கள் அந்தக் கஞ்சாறூரில் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"சேறணிதண் பழனவயல் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலைதண் டலைஉழவர்
தாறரியும் நெடுங்கொடுவாள் அனையஉள தனிஇடங்கள்."

சேறு அணி - சேற்றைக் கொண்ட. தண் - குளிர்ச்சியை உடைய. பழன - வயல்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். அயல் - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். செழு - செழிப்பாக வளர்ந்திருக்கும். நெல்லின் - நெற்பயிர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். கொழும் - கொழுமையாக விளங்கும். கதிர் - கதிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போய் - சென்று. வேறு - வேறாக. அருகு - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். மிடை - செறிந்த. வேலி - வேலிக்கு உள்ளே. ப்: சந்தி. பைம் - பசுமையாகிய. கமுகின் - பாக்கு மரத்தினுடைய. மிடறு - கழுத்தை. உரிஞ்சி - தடவி. மாறு - மாறுகள்; ஒருமை பன்மை மயக்கம்; மிலாறுகள். எழு - எழுந்த. திண் - உறுதியாகிய. குலை - காய்களின் குலைகளை; ஒருமை பன்மை மயக்கம். வளைப்ப - வளையுமாறு செய்ய. வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். அலை - தேனை நாடி அலைகின்ற. தண்டலை - சோலையில். உழவர் - உழுதொழிலைச் செய்யும்

வேளாளர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தாறு - தாறுகளை; ஒருமை பன்மை மயக்கம். அரியும் - அறுக்கும். நெடும் - நீளமாக இருக்கும். கொடு - வளைந்த. வாள் - அரிவாளை. அனைய - போன்றவை. தனி - தனியாக உள்ள. இடங்கள் உள - இடங்கள் கஞ்சாறூரில் இருக்கின்றன. உள: இடைக்குறை.

பிறகு உள்ள 5-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பக்கங்களில் மாணிக்கங்கள் வீசும் பலவாகிய வெயிலைப் போன்ற ஒளியும், மேவிய திருமதிலும் உள்ளவை அந்தக் கஞ்சாறூரில் இருக்கிற மாடங்கள்; அவற்றின் பக்கத்தில் கட்டப்பட்ட மெல்லிய ஆடைகளால் அமைந்த துவசங்களும், கொங்கைகளைப் பெற்ற பூங்கொடிகளைப் போன்ற பெண்மணிகள் இருப்பவை அரங்கங்கள்; உயரமாக ஓங்கி விளங்கும் நிலையைப் பெற்ற தோரணங்களும், பூரண கும்பங்களும், மன்மதன் தன்னுடைய மலர்களாகிய அம்புகளை எய்யும் தெருக்களில் அடையும் மக்களுடைய ஐம்புலன்களும் துன்பத்தை அடையும் சில வீதிகள் அந்தக் கஞ்சாறூரில் இருக்கின்றன.' பாடல் வருமாறு:

"பாங்குமணிப் பலவெயிலும் சுலவெயிலும் உளமாடம்;
ஞாங்கர்அணி துகிற்கொடியும் நகிற்கொடியும் உளஅரங்கம்;
ஓங்குநிலைத் தோரணமும் பூரணகும் பமும்உளவால்
பூங்கணைவீ தியில்அணைவோர் புலம்மறுகும் சிலமறுகு."

பாங்கு - பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். மணி - மாணிக்கங்கள் வீசும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பல - பலவாகிய. வெயிலும் - ஒளிகளும்; ஒருமை பன்மை மயக்கம். சுலவு - சூழ்ந்துள்ள. எயிலும் -

மதில்களும்; ஒருமை பன்மை மயக்கம். மாடம் - மாடிகளில்; ஒருமை பன்மை மயக்கம். உள - இருக்கின்றன; இடைக்குறை. ஞாங்கர் - முன்பக்கத்தில். அணி - ஆடைகளால் அமைந்த. துகிற்கொடியும் - துவசங்களும்; ஒருமை பன்மை மயக்கம். நகில் - கொங்கைகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். கொடியும் - பூங்கொடிகளைப் போன்ற பெண்மணிகளும்; உவம ஆகுபெயர்; ஒருமை பன்மை மயக்கம். மகளிருக்குப் பூங்கொடியை உவமையாகக் கூறும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ஓங்கு - உயரமாக ஓங்கி விளங்கும். நிலை - நிலையைப் பெற்ற. த் : சந்தி. தோரணமும் - தோரணங்களும். பூரணகும்பமும் - பூரண கும்பங்களும். பூம் - மன்மதன் தன்னுடைய மலர்களாகிய. கணை - அம்புகளை எய்யும். ''நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணர் வும் நீக்கும் அசோகு நுனித் துணரின், முல்லை இடை காட்டும் முழுநீலம் மாதே, கொல்லும் மதன் அம்பின் குணம்.'' என வருவதைக் காண்க. வீதியில் - கஞ்சாறூரில் உள்ள தெருவில். அணைவோர் - சேர்ந்து நடக்கும் மக்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். புலம் - ஐம்புலன்கள்; ஒருமை பன்மை மயக்கம். புலம் - அறிவு எனலும் ஆம். மறுகும் - மயங்கும். சில மறுகு - சில வீதிகளில்; ஒருமை பன்மை மயக்கம். உள - இருக்கின்றன; இடைக்குறை. ஆல்: அசை நிலை. தோரணங்களும் பூரண கும்பங்களும் சில வீதிகளில் இருக்கின்றன என்பது கருத்து.

அடுத்து வரும் 6-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தங்களுடைய திருமாளிகைகளில் அமைந்திருக்கும் நிலையைப் பெற்ற இல்லறத்தின் வழியில் தாங்கள் ஈட்டிக்

கொண்டுவந்து சேர்த்த செல்வத்தின் வளம் பெருகி விளங்கும் தொழிலாக அமையும் உழவாகிய தொழிலில் மிகுதியான சிறப்பைப் பெற்ற பெருமையைக் கொண்ட குடும்பங்கள் சேர்ந்து தாங்கள் பெற்ற சாயல் மயிலைப் போல விளங்கும் பெண்மணிகள் நடனத்தைச் செய்ய அப்போது அடிக்கப்படும் மத்தளம் ஒலிக்கும் திருவிழாச் செறிந்திருக்கும் தெருக்களை உடையதாக அந்தக் கஞ்சாறூர் விளக்கத்தைப் பெற்றது.' பாடல் வருமாறு:

''மனைசாலும் நிலைஅறத்தின் வழிவந்த வளம்பெருகும்
வினைசாலும் உழவுதொழில் மிக்கபெரும் குடிதுவன்றிப்
புனைசாயல் மயிலனையார் நடம்புரியப் புகல்முழவம்
கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால்.''

மனை - தங்களுடைய திருமாளிகைகளில்; ஒருமை பன்மை மயக்கம். சாலும் - அமைந்திருக்கும். நிலை - நிலையைப் பெற்ற. அறத்தின் - இல்லறத்தின். வழி - வழியில். வந்த - தாங்கள் ஈட்டிக் கொண்டுவந்து சேர்த்த. வளம் - செல்வத்தின் வளம். பெருகும் - பெருகி விளங்கும். வினை - தொழிலாக. சாலும் - அமையும். உழவு தொழில் - உழவாகிய தொழிலில். மிக்க - மிகுதியான சிறப்பைப் பெற்ற. பெரும் - பெருமையைக் கொண்டிருக்கும். குடி - குடும்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். 'குடிமக்கள்' எனலும் ஆம். துவன்றி - சேர்ந்து. ப்: சந்தி. புனை - தாங்கள் அலங்காரமாகப் பெற்ற. சாயல் மயில் அனையார் - சாயல் மயில்களைப் போல அமைந்த பெண்மணிகள். மயில்: ஒருமை பன்மை மயக்கம். அனையார்: ஒருமை பன்மை மயக்கம். நடம் - நடனத்தை. புரிய - செய்ய. ப்: சந்தி. புகல் - அப்போது அடிக்கப்படும். முழவம் - மத்தளம். கனை -

ஒலிக்கும். சாறு - திருவிழா. மிடை - செறிந்திருக்கும். வீதி - தெருக்களை உடையதாக; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கஞ்சாறு - அந்தக் கஞ்சாறூர். விளங்கியது - விளக்கத்தைப் பெற்றது. ஆல்: ஈற்றசை நிலை.

பிறகு உள்ள 7-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தக் கஞ்சாறூரில் தம்முடைய சாதியினுடைய தலைவராகவும், மன்னருடைய படைகளின் தளபதியாக வும், சொல்லுவதற்கு அருமையாக இருக்கும் தம்முடைய குடும்பம் விளக்கத்தை அடையும் வண்ணம் உண்மையான பரம்பொருளைத் தெரிந்து கொண்டு சிவஞானத்தைப் பெற்ற வரும், மேம்பாட்டைக் கொண்ட வேளாளர்களினுடைய குடும்பங்களினுடைய த்ன்மையில் சேமித்த நிதியைப் போன்ற மேம்பாட்டைப் பெற்றவராகிய மானக் கஞ்சாற நாயனார் திருவவதாரம் செய்தருளினார்.' பாடல் வருமாறு:

"அப்பதியில் குலப்பதியாய் அரசர்சே னாபதியாம்
செப்பவரும் குடிவிளங்கத் திருவவதா ரம்செய்தார்
மெய்ப்பொருளை அறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக் கஞ்சாறனார்."

அப்பதியில் - அந்தக் கஞ்சாறூரில். குல - தமது சாதியினுடைய. ப்: சந்தி. பதியாய் - தலைவராகவும். அரசர் - மன்னருடைய. சேனாபதியாம் - படைகளின் தளபதியாகவும். செப்ப - சொல்லுவதற்கு. அரும் - அருமையாக இருக்கும். குடி - தம்முடைய குடும்பம். விளங்க - விளக்கத்தை அடையும் வண்ணம். த்: சந்தி. மெய் - உண்மையான. ப்: சந்தி. பொருளை - பரம்பொருளை. அறிந்து - தெரிந்து கொண்டு. உணர்ந்தார் - சிவஞானத்தைப்

பெற்றவரும். விழுமிய - மேம்பாட்டைக் கொண்ட. வேளாண் - வேளாளர்களினுடைய; திணை மயக்கம். குடிமை - குடும்பங்களினுடைய தன்மையில். வைப்பு - சேமநிதியை. அனைய - போன்ற. மேன்மையினார் - மேம்பாட்டைப் பெற்றவராகிய. மானக்கஞ்சாறனார் - மானக் கஞ்சாற நாயனார். திருவவதாரம் செய்தார் - திருவவதாரம் புரிந்தருளினார்.

அடுத்து வரும் 8-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பணிவைப் பெற்ற திருமேனி வடிவத்தைப் பெற்றவர்; பாம்புகளோடும் குளிர்ச்சியைப் பெற்ற பிறைச்சந்திரனாகிய அணிகலனைப் பெற்ற சடாபாரத்தைக் கொண்ட திருமுடியை உடையவராகிய சிவபெருமானா ருக்கு ஆளாக விளங்கும் பதவியை அடைந்த குறைதல் இல்லாத பெருமையைப் பெற்றிருக்கும் பாக்கியத்தைப் பெற்றவர்; தம்முடைய தலைவராகிய சிவபெருமா னுடைய வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளைச் சேர்ந்து விளங்கும் துணிவைப் பெற்ற திருத்தொண்டர்களுக்கே அவர்கள் இட்ட ஏவல்களைப் புரியும் திருப்பணியை மேற்கொண்டவர் அந்த மானக் கஞ்சாற நாயனார்.' பாடல் வருமாறு:

"பணிவுடைய வடிவுடையார்; பணியினொடும் பனிமதியின்
அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
தணிவில்பெரும் பேறுடையார்; தம்பெருமான் கழல்சார்ந்த
துணிவுடைய தொண்டர்க்கே ஏவல்செயும் தொழில்பூண்டார்."

பணிவு - பணிவை. உடைய - பெற்ற. வடிவு - திருமேனி வடிவத்தை. உடையார் - பெற்றவர்.

பணியினொடும் - பாம்புகளோடும்; ஒருமை பன்மை மயக்கம். பனி - குளிர்ச்சியைப் பெற்ற. மதியின் - பிறைச் சந்திரனாகிய. அணிவு - அணிகலனை. உடைய - பெற்ற. சடை - சடாபாரத்தைக் கொண்ட. முடியார்க்கு - திருமுடியை உடையவராகிய சிவபெருமானாருக்கு. ஆளாகும் - ஆளாக விளங்கும். ஆள் - அடியவர். பதம் - பதவியை. பெற்ற - அடைந்த. தணிவு - குறைதல். இல் - இல்லாத; கடைக்குறை. பெரும் - பெருமையைப் பெற்றிருக்கும். பேறு - பாக்கியத்தை. உடையார் - பெற்றவர். தம் - தம்முடைய. பெருமான் - தலைவனாகிய சிவபெருமா னுடைய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடிகளை; ஆகு பெயர். சார்ந்த - இடைவிடாமல் தியானம் செய்த. துணிவு - உறுதியை. உடைய - பெற்ற. தொண்டர்க்கே - திருத்தொண்டர்களுக்கே; ஒருமை பன்மை மயக்கம். ஏவல் - அவர்கள் இட்ட ஏவல்களை; ஒருமை பன்மை மயக்கம். செயும் - புரியும்; இடைக்குறை. தொழில் - திருப்பணியை. பூண்டார் - மேற்கொண்டவர் அந்த மானக் கஞ்சாற நாயனார்; தோன்றா எழுவாய்.

பிறகு வரும் 9-வது பாடலின் கருத்து வருமாறு:

'ஒப்பு இல்லாத பெரிய செல்வத்தினுடைய வளம் பெருகி உண்டாக அந்த வளம் எல்லாம் கங்கையாறு தங்கும் சடாபாரத் தொகுதியைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற அந்தணராகிய சிவபெருமானாருடைய அடியவர்கள் ஆக விளங்கும் முடிவு இல்லாத பெருமையைப் பெற்ற செல்வத்தைப் பெற்றவர்கள் உடையவர்கள் என எண்ணி அந்தச் செல்வம் எல்லாவற்றையுமே அந்த அடியார்கள் சொல்லுவதற்கு முன்பே அவர்களுடைய குறிப்பைத்

தெரிந்து கொண்டு வழங்கியிருப்பவர் அந்த மானக் கஞ்சாற நாயனார்.' பாடல் வருமாறு:

"மாறில்பெரும் செல்வத்தின் வளம்பெருக மற்றதெலாம்
ஆறுலவும் சடைக்கற்றை அந்தணர்தம் அடியாராம்
ஈறில்பெரும் திருவுடையார் உடையாரென் றியாவையுமே
கூறுவதன் முன்அவர்தம் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்."

மாறு - ஒப்பு. இல் - இல்லாத; கடைக்குறை. பெரும் - பெருமையைப் பெற்றிருக்கும். செல்வத்தின் - செல்வத்தினுடைய. வளம் பெருக - வளம் பெருகி உண்டாக. மற்று: அசை நிலை. அது - அந்த வளம். எலாம் - எல்லாம்; இடைக்குறை. ஆறு - கங்கையாறு. உலவும் - தங்கும். சடை - சடாபாரத்தினுடைய. க்: சந்தி. கற்றை - தொகுதியைத் தம்முடைய தலையின் மேற்பெற்ற. அந்தணர்தம் - அந்தணராகிய சிவபெருமானாருடைய. தம்: அசைநிலை. அடியார் - அடியவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆம் - ஆக விளங்கும். ஈறு - முடிவு. இல் - இல்லாத; கடைக்குறை. பெரும் - பெருமையைப் பெற்றிருக்கும். திரு - செல்வத்தை. உடையார் - பெற்றவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். உடையார் - உடையவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். என்று - என எண்ணி. இ: குற்றியலிகரம். யாவையுமே - எல்லாவற்றையுமே. கூறுவதன் - அந்த அடியார்கள் சொல்லுவதற்கு. முன் - முன்பே. அவர்தம் - அவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. குறிப்பு - குறித்த எண்ணத்தை. அறிந்து - தெரிந்து கொண்டு. கொடுத்து - வழங்கி. உள்ளார் - இருப்பவர் அந்த மானக் கஞ்சாற நாயனார்.

பின்பு உள்ள 10-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'பரவியுள்ள சமுத்திரம் சுற்றியிருக்கும் இந்த மண்ணுலகத்தை விளக்கத்தை அடையுமாறு புரிந்தருளிய இத்தகைய பான்மையை உடையவராகும் பெருமையைப் பெற்றவராகிய மானக் கஞ்சாற நாயனாருக்கு முன்பு சில தினங்கள் குழந்தையைப் பெறும் பாக்கியம் இல்லாமை யினால் அரியாகிய திருமால் பன்றி உருவெடுத்துத் தேடியும் காண முடியாத வெற்றிக் கழல்களைப் பூண்ட செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளைத் தெரிந்து கொள்ளாத தன்மையை அறியாதவராகிய அந்த நாயனார் தமக்கு உண்டாகும் குழந்தையைப் பெறுவதற்காகத் தம்முடைய திருவுள்ளத்தில் கொண்ட சிவபெருமானுடைய திருவருளால் அந்தப் பெருமானைத் துதித்து வணங்கினார்.' பாடல் வருமாறு:

"விரிகடல்சூழ் மண்ணுலகை விளக்கியஇத் தன்மையராம்
பெரியவர்க்கு முன்சிலநாட் பிள்ளைப்பே றின்மையினால்
அரியறியா மலர்க்கழல்கள் அறியாமை அறியாதார்
வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினார்."

விரி - பரவியுள்ள. கடல் - சமுத்திரம். சூழ் - சுற்றியிருக்கும். மண் உலகை - இந்த மண்ணுலகத்தை. விளக்கிய - விளக்கத்தை அடையுமாறு புரிந்தருளிய. இத்தன்மையராம் - இத்தகைய பான்மையை உடையவராகும். பெரியவர்க்கு - பெருமையைப் பெற்றவராகிய மானக் கஞ்சாற நாயனாருக்கு. முன் - முன்பு. சில நாள் - சில தினங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பிள்ளைப் பேறு - குழந்தையைப் பெறும் பாக்கியம். இன்மையினால் - இல்லாமையால். அரி - ஹரியாகிய திருமால். அறியா - பன்றி உரு எடுத்துத் தேடியும் காண முடியாத.

*மலர்க்கழல்கள் - வெற்றிக் கழல்களைப் பூண்ட செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை; ஆகு பெயர். மலர்: ஒருமை பன்மை மயக்கம். அறியாமை - தெரிந்து கொள்ளாத தன்மையை. அறியாதார் - அறியாதவராகிய அந்த நாயனார். வரு - தமக்கு உண்டாகும். மகவு - குழந்தையை. பெறற் பொருட்டு - பெறுவதற்காக. மனத்து - தம்முடைய திருவுள்ளத்தில் கொண்ட. அருளால் - சிவபெருமானுடைய திருவருளால். வழுத்தினார் - அந்தப் பெருமானைத் துதித்து வணங்கினார்.*

*பிறகு உள்ள 11-ஆம் பாடலின் கருத்து வருமாறு:*

*'சங்கக் குழைகளோடு அசையும் தாழ்ந்த திருச் செவிகளைக் கொண்டவராகிய சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளினால் மழையை வருவிப்பதற்கு உதவும் பெருமையைக் கொண்ட கற்பையுடைய மானக் கஞ்சாற நாயனாருடைய இல்லக்கிழத்தியாரிடத்தில் முன்பிறவியில் செய்திருக்கும் பாவங்களினுடைய பிரயோசனம் சேர்ந்திருக்கும் இந்த மனிதப் பிறவியில் உண்டாகும் கொடுமையாகிய நிலையிலிருந்து விடுபடும் வழியைத் தமக்கு உதவும் பொருட்டுப் பூங்கொடியைப் போன்ற ஒரு பெண் குழந்தையைப் பெற்று எடுத்து வளர்த்தார்.' பாடல் வருமாறு:*

"குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனார் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த இப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்கும்நெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்."

குழைக்கு - சங்கக் குழைகளோடு; உருபு மயக்கம்; ஒருமை பன்மை மயக்கம். அலையும் - அசையும். வடி - தாழ்ந்த. காதில் - திருச்செவிகளைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். கூத்தனார் - சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் நடராஜப் பெருமானார். அருளால் - வழங்கிய திருவருளினால். ஏ: அசைநிலை. மழைக்கு உதவும் - மழையை வருவிப்பதற்கு உதவும். பெரும் - பெருமையைக் கொண்டிருக்கும். கற்பின் - கற்பை உடைய. மனைக் கிழத்தியார் தம்பால் - இல்லக் கிழத்தியாரிடத்தில். தம்: அசை நிலை. இழைக்கும் - முன்பிறவியில் செய்திருக்கும். வினை - பாவங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பயன் - பிரயோசனம். சூழ்ந்து - சேர்ந்துள்ள. இப்பிறவி - இந்த மனிதப் பிறவியில் உண்டாகும். க்: சந்தி. கொடும் - கொடுமையாகிய. சூழல் - நிலையிலிருந்து. பிழைக்கும் - விடுபடும். நெறி - வழியை. 'தமக்கு' என்றது மானக் கஞ்சாற நாயனாருக்கு என்றபடி. உதவ - உதவும் பொருட்டு. ப்: சந்தி. பெண் கொடியை - பூங்கொடியைப் போன்ற ஒரு பெண் குழந்தையை. கொடி: உவம ஆகுபெயர். பெண்களுக்குப் பூங்கொடியை உவமையாகச் சொல்லும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ப்: சந்தி. பெற்றெடுத்தார் - பெற்றெடுத்து வளர்த்தார்.

மழைக்குதவும் கற்பு: ''தெய்வம் தொழா அள்கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை.'' (திருக்குறள், 55) என்று திருவள்ளுவரும், ''வறனோடின் வையகத்து வான்தரும் கற்பினாள்.'', ''அரு

மழை தரல் வேண்டின் தருகிற்கும் பெருமையளே.'' (கலித்தொகை 16: 20, 39:6) என்றும், ''கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி... இவர் மூவர் பெய்யெனப் பெய்யும் மழை.'', ''பெண்பால், கொழுநன் வழிச் செலவும் இம்மூன்றும், திங்கள் மும்மாரிக்கு வித்து.'' (திரிகடுகம், 96, 98) என்று வேறு புலவர்களும், ''வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது, நீணில் வேந்தர் கொற்றம் குறையாது, பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு.'', ''பத்தினி மகளிர் பெய்யெனப் பெய்யும் மழை என்பதூஉம்.'' (சிலப்பதிகாரம், 15: 147-7, பதிகம், 89, அரும்பதவுரை) என்று இளங்கோவடிகளும், ''வான் தருகற்பின் மனையுறை மகளிர்.'', ''புண்ணியம் முட்டாள் பொழிமழை தரூஉம், அரும்பெறல் மகளிர் பத்தினிப் பெண்டிரும்.'', ''மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம், பெண்டிர்.'', ''ஓங்கிரு வானத்து மழையும்நின் மொழியது.'' (மணிமேகலை, 15: 77, 16: 49-50, 22: 45-6, 99) என்று சீத்தலைச் சாத்தனாரும், ''நாடு ஊரும் நனிபுகழ்ந் தேத்தலும், பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலும், கூடலாற்றவர் நல்லது கூறுங்கால், பாடு சான்மிகு பத்தினிக் காவதே.'' (வளையாபதி) என்று வேறு புலவரும், ''மாதரார், கற்பின் நின்றன் அறங்கள் அன்னவர், கற்பின நின்றன காலமாரியே.'' (நாட்டுப் படலம், 59) என்று கம்பரும், ''தெய்வம் தொழா அள் கெழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற அப், பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்.'' (மணிமேகலை, 22: 59-61) என்று அதே சீத்தலைச் சாத்தனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு வரும் 12-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தப் பெண் குழந்தை பிறந்ததனால் உண்டான பெரிய களிப்பினால் பெருமையைப் பெற்ற பழைய ஊராகிய கஞ்சாறூரில் வாழும் மக்கள் மகிழ்ச்சி தங்களுக்குச் சிறப்பாக உண்டாக, சிறப்பை உடைய நிறைந்த மங்கல வாத்தியங்கள் முழக்கத்தைச் செய்ய எல்லாத் தேவர் களினுடைய தலைவனாகிய சிவபெருமானுடைய திருவருளினால் தருமங்களில் தலை சிறந்து நின்ற மக்கள் எல்லாருக்கும் அளவு இல்லாத செல்வ வளமாகிய திருவருளைப் பெருகச் செய்து தம்மைப் பாதுகாக்கும் உறவினர்கள் வாழ்த்துக்களை இயம்பிப் பாராட்டுமாறு அந்தத் தங்கக் கொடியைப் போன்ற பெண் குழந்தையை வளர்க்கிறவர் ஆனார் அந்த நாயனார்.' பாடல் வருமாறு:

"பிறந்தபெரு மகிழ்ச்சியினால் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியம்முழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லாம் அளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப் பொற்கொடியை வளர்க்கின்றார்."

பிறந்த - அந்தப் பெண் குழந்தை பிறந்ததனால் உண்டான. பெரு - பெரிய. மகிழ்ச்சியினால் - களிப்பினால். பெரு - பெருமையைப் பெற்ற. மூதூர் - பழைய ஊராகிய கஞ்சாறூரில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். களி - மகிழ்ச்சி. சிறப்ப - தங்களுக்குச் சிறப்பாக உண்டாக. ச்: சந்தி. சிறந்த - சிறப்பு அமைந்த. நிறை - நிறைந்த. மங்கல தூரியம் - மங்கல வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், முரசு, பேரிகை, வீணை, யாழ், சல்லரி, களற்றயிர்த் தூம்பு, சதங்கை முதலியன. முழங்க - முழக்கத்தை எழுப்ப. த்: சந்தி. தேவர் - எல்லாத் தேவர்களினுடைய; ஒருமை பன்மை

மயக்கம். பிரான் - தலைவனாகிய சிவபெருமானுடைய திருவருளால்; ஆகு பெயர். அறம் - முப்பத்திரண்டு தருமங்களைப் புரிவதில்; ஒருமை பன்மை மயக்கம். அவை இன்னவென்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. தலைநின்றவர்க்கெல்லாம் - தலை சிறந்து நின்ற மக்கள் எல்லோருக்கும்.. நின்றவர்: ஒருமை பன்மை மயக்கம். அளவுஇல் - அளவு இல்லாத; கடைக்குறை. வளத்து - செல்வ வளமாகிய. அருள் - திருவருளை. பெருக்கி - பெருகச் செய்து. ப்: சந்தி. புறந்தருவார் - தம்மைப் பாதுகாக்கும் உறவினர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்று - வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இசைப்ப - இயம்பிப் பாராட்டுமாறு. ப்: சந்தி. பொற்கொடியை - அந்தத் தங்கக் கொடியைப் போன்ற பெண் குழந்தையை; அன்மொழித் தொகை. வளர்க்கின்றார் - வளர்த்து வருகிறவரானார் அந்த மானக் கஞ்சாற நாயனார்.

அடுத்து வரும் 13-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தப் பெண் குழந்தை காப்புக்களை அணிகின்ற இளைய குழந்தைப் பருவம் கடந்து நறுமணம் வீசுவதும், வண்டுகள் மொய்க்கும் மலர்களை அணிவதும், சுருள் சுருளாக இருப்பதும் ஆகிய கூந்தலும், தன்னுடைய காதுகளில் தங்கத்தால் செய்த குழைகளும் சேர்ந்து தொங்க கட்டுதலைப் பெற்ற மெல்லிய சிறிய மாணிக்கங்களைப் பதித்த மேகலையை மேலே அணிந்த சிற்றாடையோடு கோத்தல் அமைந்த கிண்கிணிகள் ஆடி ஒலியை எழுப்புமாறு சிறிய தளிர்களைப் போன்ற மென்மையான திருவடிகளால் நடந்து.' பாடல் வருமாறு:

"காப்பணியும் இளம்குழவிப் பதம்நீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலும் சுருட்குழலும் பொலங்குழையும் உடன்தாழ
யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் றாடையுடன்
கோப்பமைகிண் கிணிஅசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி."

இந்தப் பாடல் குளகம். காப்பு - அந்தப் பெண் குழந்தை கைக் காப்புக்களையும் காற் காப்புக்களையும்; ஒருமை பன்மை மயக்கம். அணியும் - அணிந்து கெள்ளும். இளம் - இளமையான. குழவிப்பதம் - குழந்தைப் பருவத்தை. நீங்கி - கடந்து. க்: சந்தி. கமழ் - நறுமணம் வீசுவதும்; வினையாலணையும் பெயர். சுரும்பின் - வண்டுகள் மொய்க்கும்; ஒருமை பன்மை மயக்கம். பூ - மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பயிலும் - அணிவதும்; வினையாலணையும் பெயர். சுருள் - சுருளாக இருப்பதும் ஆகிய. குழலும் - கூந்தலும். பொலம் - பொன்னாற் செய்யப் பெற்ற. குழையும் - தன்னுடைய காதுகளில் அணிந்த குழைகளும்; ஒருமை பன்மை மயக்கம். உடன் - சேர்ந்து. தாழ - தொங்க. யாப்பு - கட்டுதலை. உறு - பெற்ற. மென் - மென்மையான. சிறு - சிறிய. மணி - மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். மேகலை - மேகலையை. அணி - மேலே அணிந்த. சிற்றாடையுடன் - சிற்றாடையோடு. கோப்பு - கோத்தல். அமை - அமைந்த. கிண்கிணி - கிணிகிணிகள்; ஒருமை பன்மை மயக்கம். அசைய - ஆடி ஒலியை எழுப்புமாறு. க்: சந்தி. குறும் - சிறியவையாக இருக்கும். தளிர் - தளிர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். மெல் - மென்மையான. அடி - திருவடிகளால்; ஒருமை பன்மை மயக்கம். ஒதுங்கி - நடந்து.

அடிக்குத் தளிர் உவமை: ''தளிர்போல் மெல்லடியாள் தனை ஆகத்தமர்ந்தருளி.'' என்று சுந்தர மூர்த்தி நாயனாரும், ''அம்தளிர்போற் சேவடியும்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''தளிர் தயங்கும்மே அடியே.'' என்று இளம்பெருமான் அடிகளும், ''கற்பகப் பூந்தளிரடி.'' என்று சேக்கிழாரும், ''பல்லவம் அனுங்கச் செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடியளாகி.'' (சூர்ப்பணகைப் படலம், 31) என்று கம்பர் பாடியவற்றையும் காண்க.

பிறகு வரும் 14-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த அமுதத்தைப் போன்ற பெண்மணி அழகை உடைய செந்தாமரை மலர்களைப் போன்ற மென்மையான தன்னுடைய கைகளால் தன்னை வாழ்த்திய தாதியர்களுக்கு நடுவில் தன்னுடைய திருமாளிகையில் உள்ள அழகிய முற்றத்தில் மணலால் சிற்றில்லைக் கட்டி மாணிக்கங்களைப் பதித்த ஒலியை எழுப்பும் சிலம்புகள் தன்னுடைய திருவடிகளில் அசைந்து ஒலியை உண்டாக்க, கழற்கோடி ஆடுதல் முதலாக விளையாட்டுக்களைச் செய்து பழகிக் கொங்கைகள் அரும்புகளைப் போல முகங்களைக் காட்டும் முதலாகிய பருவத்தை அடைந்தாள்.' பாடல் வருமாறு:

''புனைமலர்மென் கரங்களினாற் போற்றியதா தியர்நடுவண்
மனையகத்து மணிமுன்றில் மணற்சிற்றில் இழைத்துமணிக்
கனைகுரல்நூ புரம்அலையக் கழல்முதலாப் பயின்றுமுலை
நனைமுகம்செய் முதற்பருவம் நண்ணினள்அப் பெண்ணமுதம்.''

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. அப்பெண் அமுதம் - மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வியாகிய அமுதத்தைப் போன்ற அந்தப் பெண்மணி. புனை - அழகை உடைய; 'வளைகளை

அணிந்த' எனலும் ஆம். மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையான. கரங்களினால் - தன்னுடைய கைகளால். போற்றிய - தன்னை வாழ்த்திய; 'தன்னைப் பாதுகாத்த' எனலும் ஆம். தாதியர் - வேலைக்காரிகளினுடைய. நடுவண் - நடுவில். மனையகத்து - தன்னுடைய திருமாளிகையில் உள்ள. மணி - அழகைப் பெற்ற. முன்றில் - முற்றத்தில். முன்றில் - இல்முன்; பின் முன்னாகத் தொக்க தொகை. மணல் - மணலால். சிற்றில் - சிற்றில்லை. இழைத்து - கட்டி. மணி - மாணிக்கங்களைப் பதித்த; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கனை குரல் - ஒலியை எழுப்பும். நூபுரம் - சிலம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். அலைய - அசைந்து ஒலியை உண்டாக்க. க்: சந்தி. கழல் - கழற்கோடி ஆடுதல்; ஆகு பெயர். முதலா - முதலாக. ப்: சந்தி. பயின்று - விளையாட்டுக்களைச் செய்து பழகி. முலை - கொங்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். நனை - அரும்புகளைப் போல; ஒருமை பன்மை மயக்கம். முகம் - முகங்களை; ஒருமை பன்மை மயக்கம். செய் - காட்டும். முதற் பருவம் - முதற் பருவமாகிய பேதைப் பருவத்துக்கு அடுத்த பெதும்பைப் பருவத்தை; இசை எச்சம். நண்ணினள் - அடைந்தாள்.

கொங்கைகளுக்கு அரும்புகள் உவமை: ''அரும்பும் குரும்பையும் அலைத்தமென் கொங்கை.'', ''அருப்பினார் முலை மங்கை பங்கினன்.'', ''அரும்பமர் கொங்கை ஓர்பால் மகிழ்ந்த அற்புதம்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''அருப்புப்போல் முலையார் அல்லல் வாழ்க்கைமேல் விருப்புச்சேர்நிலை விட்டு.'', ''அருப் போட்டு முலைமடவாள் பாகம் தோன்றும்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அரும்பொத்த மென்முலை

ஆயிழையார்க்கு.'' என்று திருமூலரும், ''தாமரை மொட்டும் கொங்கையும் வாண்முகமுமாக் கொண்டாள்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''குவிமுகிழ் இளமுலை.'' என்று நக்கீரரும், ''பொற்றாமரையின் முற்றா முகிழெனை, உலகே ழீன்றும் நிலையில் தளரா, முலையுடன்.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''கொங்கை கோங்கரும்பை வீழ்ப்ப அருப்பு மென் முலையினார் தம் அணி மலர்க்கைப் பிடித்து.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றையும், ''கமலப் பொதியினை நகுவன புணர்முலை.'' (நாட்டுப் படலம், 44), ''அருப்பு மென்முலையாளங் கொருயிழை.'' (உலாவியற் படலம், 22) என்று கம்பர் பாடியவற்றையும் காண்க.

பெண்மணிகளுக்கு அமுதம் உவமை: ''கடல்பட்ட இன்னமுதம் அன்னாள்.'', ''ஆரா அமுதம் அவயவம் பெற்றனைய சீரார் தெரிவைப் பிராயத்தாள்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''வேட்ட மின்னிடை இன்ன முதத்தினை.'', ''கோதிலா அமுதம் அனையவள்.'', ''பெண்ண முதனையாள்.'' என்று சேக்கிழாரும், ''ஆவியே அமுதே என நினைந்துருகி அவரவர் பணைமுலை துணையா.'' என்று திருமங்கை ஆழ்வாரும், ''அன்னே தேனே ஆரமிர்தே.'' (மிதிலைக் காட்சிப் படலம், 30), ''அமிழ்தினைச் சுவை செய்தென்ன அழகினுக் கழகு செய்தார்.'', ''ஆரமிழ்தும் நாண மன்னவை இருந்த மணி மண்டபம் அடைந்தாள்.'', ''கன்னி அமிழ்தத்தை எதிர்கண்ட கடல் வண்ணன்.'' (கோலம் காண் படலம், 3, 28, 30), ''பெண்ணின் இன்னமுதம் அன்னவள்.'' (மந்திரப் படலம், 50), ''அமிழ்தினும் இனியாளே.'' (வனம் புகு படலம், 8), ''உவரிவாயன்றிப்பாற் கடல் உதவிய அமுதே.'' (சித்திர

கூடப் படலம், 5), ''ஆயிடை அமுதின் வந்த அருந்ததிக்கற்பின் அஞ்சொல் வேயிடைத் தோளினாளும்.'' (சூர்ப்பணகைப் படலம், 65), ''ஆயிடைத் தாரையென் றமிழ்திற் றோன்றிய வேயிடைத் தோளினாள்.'', ''அமிழ்தின் வந்த தேவியை.'' (வாலி வதைப் படலம், 13, 78) என்று கம்பர் பாடியவற்றையும், ''அண்டர் கடைந்த அமிழ்தோ.'' (திக்கு விசயப் படலம், 158), ''தெள்ளமிழ்தம் புரை சீதை.'' (அசுவமேத யாகப் படலம், 172) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும் காண்க.

அடுத்து வரும் 15-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வி பெற்ற அழகு அவளுடைய திருமேனிக்கு வெளியே விட்டு விளங்க, தெரியாமல், மறைந்திருந்த அவளுடைய கொங்கைகள் தம்முடைய பாரத்தால் வருத்தத்தை உண்டாக்க, புன்னகை வெளியில் மலர்ச்சியைப் பெறாத அரும்புகளையும், முத்துக்களையும் போலப் பற்கள் என்னும் நறுமணம் கமழும் அரும்புகளையும், மென்மையான பூங்கொடியைப் போன்ற இடையையும், குளிர்ச்சியைப் பெற்ற சுருள் சுருளான கூந்தலையும், அழகிய தளிர்களைப் போன்ற சிவந்த கைகளையும், பெற்று விளங்கிய குற்றம் இல்லாத குடும்பத்தில் பிறந்த கொழுந்தைப் போன்ற அந்தப் பெண்மணிக்குத் திருமணம் புரிவதற்குரிய பருவம் வந்து சேர.' பாடல் வருமாறு:

"உறுகவின்மெய்ப் புறம்பொலிய ஒளிநுசுப்பை முலைவருத்த
முறுவல்புறம் மலராத முகிழ்முத்த நகையென்னும்
நறுமுகைமென் கொடிமருங்குல் நளிர்ச்சுருள்அம் தளிர்ச்செங்கை
மறுவில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய."

இந்தப் பாடல் குளகம். உறு - மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வி பெற்ற. கவின் - அழகு. மெய் - அவளுடைய திருமேனிக்கு. ப்: சந்தி. புறம் - வெளியே. பொலிய - விட்டு விளங்க. ஒளி - தெரியாமல் மறைந்திருந்த. நுசுப்பை - அவளுடைய இடையை. முலை - அவளுடைய கொங்கைகள்; ஒருமை பன்மை மயக்கம். வருத்த - தம்முடைய பாரத்தால் வருத்தத்தை உண்டாக்க. முறுவல் - அவள் செய்யும் புன்னகை. புறம் - வெளியில். மலராத - மலர்ச்சியைப் பெறாத. முகிழ் - முல்லை அரும்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். முத்து - முத்துக்களையும் போல; ஒருமை பன்மை மயக்கம். நகை என்னும் - பற்கள் என்னும். நறு - நறுமணம் கமழும். முகை - அரும்புகளையும்; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையான. கொடி - பூங்கொடியைப் போன்ற. மருங்குல் - இடையும். நளிர் - குளிர்ச்சியைப் பெற்ற. ச்: சந்தி. சுருள் - சுருள் சுருளான கூந்தலையும்; ஆகு பெயர். அம் - அழகிய. தளிர் - தளிர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செம் - சிவந்த. கை - கைகளையும் பெற்று விளங்கிய; ஒருமை பன்மை மயக்கம். மறு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. குல - குடும்பத்தில் பிறந்த. க்: சந்தி. கொழுந்தினுக்கு - கொழுந்தைப் போன்ற அந்தப் பெண்மணிக்கு. மணப் பருவம் - திருமணம் புரிவதற்குரிய பருவம். வந்து அணைய - வந்து சேர.

பிறகு உள்ள 16- ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இலக்குமி தேவிக்கு மேலாக அழகைப் பெற்றுத் திகழ்பவளும், சிவந்த மாணிக்கத் தீபம் என்று சொல்லும் ஒப்பற்ற தம்முடைய புதல்வியை இந்த மண்ணுலகத்தில்

உயர்ச்சியைப் பெற்று விளங்கும் குடும்பத்தின் பரம்பரையைச் சேர்ந்தவராய் ஆலகால விடத்தினால் கரியதாகிய திருக்கழுத்தைப் பெற்ற வேதியராகிய சிவபெருமானாருடைய அடியவராக விளங்கி வெற்றிக் கழலைப் பூண்ட திருவடியை உடைய ஏயர் குலப் பெருமகனுக்குத் திருமணத்துக்குரிய பெண்ணாகப் பேசும் பொருட்டு பெருமையைப் பெற்ற முதியவர்கள் வந்து மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகையை அடைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"திருமகட்கு மேல்விளங்கும் செம்மணியின் தீபம்எனும்
ஒருமகளை மண்ணுலகில் ஓங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனார் தமராய கழல்ஏயர்
பெருமகற்கு மகட்பேச வந்தணைந்தார் பெருமுதியோர்."

திருமகட்கு - இலக்குமி தேவிக்கு. மேல் விளங்கும் - மேலாகத் திகழ்பவளும்; வினையாலணையும் பெயர். செம் - சிவந்த. மணியின் தீபம் - மாணிக்கத் திருவிளக்கு. எனும் - என்று சொல்லும்; இடைக்குறை. ஒரு - ஒப்பற்ற. மகளை - தம்முடைய புதல்வியை. மண் உலகில் - இந்த மண் உலகத்தில். ஓங்கு - உயர்ச்சியைப் பெற்று விளங்கும். குல - குடும்பத்தின். மரபினராய் - பரம்பரையைச் சேர்ந்தவராய். க்: சந்தி. கருமிடற்று - ஆலகால விடத்தினால் கரியதாகிய திருக்கழுத்தைப் பெற்ற. மறையவனார் - வேதியராகிய சிவபெருமானாருடைய. தமராய - அடியவராக விளங்கிய. கழல் - வெற்றிக் கழலைப் பூண்ட திருவடியை உடைய; ஆகுபெயர். ஏயர் - ஏயர்கோன் கலிக்காம நாயனாராகிய. பெருமகற்கு - பெருமையைப் பெற்ற ஆடவனுக்கு. மகட்பேச - திருமணத்திற்குரிய பெண்ணாகப் பேசும்

பொருட்டு. பெரு - பெருமையைப் பெற்ற. முதியோர் - முதியவர்கள். வந்து - மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகைக்கு வந்து. அணைந்தார் - சேர்ந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பெண்மணிக்கு விளக்கு உவமை: ''மங்கையர்க்கு விளக்கன்ன மானையும்.'' (கங்கைப் படலம், 16), ''வில்லி வாங்கிய சிலையெனப் பொலி நுதல் விளக்கே.'' (சித்திர கூடப் படலம், 63), ''பெண்ணியில் தீபம் அன்ன பேரெழிலாட்டி.'' (அயோமுகிப் படலம், 5), ''செந்தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்கை.'' (இரணியன் வதைப் படலம், 161), ''விளக்கொரு விளக்கம் தாங்கி மின்னணி அரவிற் சுற்றி, இளைப்புறு மருங்குல் நோவ முலை சுமந்தியங்கும் என்னா, முளைப் பிறைநெற்றி வான மடந்தையர் முன்னும் பின்னும் வளைத்தனர்.'' (மாயா சனகப் படலம், 7), ''விளக்கையும் விளக்கும் மேனி.'' (களியாட்டுப் படலம், 5) என்று கம்பர் பாடியவற்றையும், ''மண்ணிற் பிறந்த மணிவிளக்கோ.'' (சம்புவன் வதைப் படலம், 58) என்று உத்தர காண்டத்தில் வருவனவற்றையும், ''கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே.'' என்று ஆண்டாளும், ''மனைக்கு விளக்காகிய வாணுதல்.'' (புறநானூறு, 314:1) என்று ஐயூர் முடவனாரும், ''மனைக்கு விளக்கம் மடவாள்.'' (நான்மணிக்கடிகை, 104) என்று வேறு ஒரு புலவரும், ''திகழ்ந்தெரி விளக்கெனத் திலகம் ஆயினார்.'' (சீவக சிந்தாமணி, 2640) என்று திருத்தக்க தேவரும் பாடியவற்றைக் காண்க.

பிறகு வரும் 17-அம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு வந்த முதிய அறிஞர்களை மானக் கஞ்சாற நாயனார் முன்புள்ள தம்முடைய குடும்பத்தின் முறைமைப்படி விருப்பத்தை அடைந்து வரவேற்று அவர்கள் கூறிய திருமணத்தைப் பற்றிய திறத்தைக் கேட்டு, "எங்களுடைய பரம்பரைக்குத் தகுதியாக இருக்கும் இயல்பினால் பொருந்தும்" என்று தம்முடைய திருவுள்ளம் மகிழ்ச்சியைப் பெறும் வண்ணம் திருவாய் மலர்ந்தருளிச் செய்து அந்தத் திருமணத்துக்குத் தம்முடைய சம்மதத்தைத் தெரிவித்து அந்த முதியவர்களைப் போகுமாறு அனுப்பினார்.' பாடல் வருமாறு:

"வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனார்
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
'எந்தமது மரபினுக்குத் தகும்பரிசால் ஏயும்'எனச்
சிந்தைமகிழ் வுறஉரைத்து மணம்நேர்ந்து செலவிட்டார்."

வந்த - அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு வந்து சேர்ந்த. மூதறிவோரை - முதிய அறிஞர்களை; ஒருமை பன்மை மயக்கம். மானக் கஞ்சாறனார் - மானக் கஞ்சாற நாயனார். முந்தை - முன்புள்ள. முறைமையின் - தம்முடைய குடும்பத்தின் முறைப்படி. விரும்பி - விருப்பத்தை அடைந்து வரவேற்று. மொழிந்த - அவர்கள் கூறிய. மண - திருமணத்தைப் பற்றிய. த்: சந்தி. திறம் - திறத்தை; முறையை. கேட்டே - கேட்டு. ஏ: அசை நிலை. எந்தமது - எங்களுடைய. மரபினுக்கு - பரம்பரைக்கு. த்: சந்தி. தகும் - தகுதியாக இருக்கும். பரிசால் - இயல்பினால். ஏயும் - இந்தத் திருமணம் பொருந்தும். என - என்று; இடைக்குறை. ச்: சந்தி. சிந்தை - தம்முடைய திருவுள்ளம். 'அவர்களுடைய உள்ளம்' எனலும் ஆம். மகிழ்வு - மகிழ்ச்சியை. உற - அடையும்

வண்ணம். உரைத்து - திருவாய் மலர்ந்தருளிச் செய்து. மணம் - திருமணத்துக்கு. நேர்ந்து - தம்முடைய சம்மதத்தைத் தெரிவித்து. செல - அந்த முதியவர்களைப் போகுமாறு; இடைக்குறை. விட்டார் - அனுப்பினார்.

*பிறகு உள்ள 18-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:*

'அவ்வாறு போன முதியவர்களும் மானக் கஞ்சாற நாயனார் திருமணத்துக்குச் சம்மதித்த வண்ணத்தைக் கூற மலைகளைப் போன்ற தோள்களைப் பெற்ற ஏயர்களின் அரசரும் மிகவும் விருப்பத்தை அடைந்து நின்ற நிலையில் இரண்டு வீட்டினர்களுக்கும் சம்மதமாகிய திருமணமாகிய மங்கலச் செயலுக்கு ஒரு முகூர்த்த நாளை அறிவுற்ற சோதிட நூலில் வல்லமை பெற்ற சோதிடர் ஒருவர் அமைத்துக் கொடுத்தார்.' பாடல் வருமாறு:

"சென்றவரும் கஞ்சாறர் மணம்இசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனாரும் மிகவிரும்பி
நின்றநிலை மையின்இரண்டு திறத்தார்க்கும் நேர்வாய
மன்றல்வினை மங்கலநாள் மதிநூல்வல் லவர்வகுத்தார்."

சென்றவரும் - அவ்வாறு போன முதியவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். கஞ்சாறர் - மானக் கஞ்சாற நாயனார். மணம் - திருமணத்துக்கு. இசைந்தபடி - சம்மதித்த வண்ணத்தை. செப்ப - கூற. க்: சந்தி. குன்று - மலைகளை; ஒருமை பன்மை மயக்கம். அனைய - போன்ற. புயத்து - தோள்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். ஆடவர்களின் தோளுக்கு மலையை உவமையாகச் சொன்ன இடங்களை முன்பே கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. ஏயர் கோனாரும் - ஏயர்கோன் கலிக்காம நாயனாரும். மிக - மிகுதியாக. விரும்பி - விருப்பத்தை அடைந்து. நின்ற

நிலைமையின் - நின்ற நிலையினால். இரண்டு திறத்தார்க்கும் - மணமகன், மணமகள் என்னும் இரண்டு பேர்களினுடைய வீட்டில் உள்ளவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். நேர்வாய - சம்மதமாகிய. மன்றல் - திருமணமாகிய. வினை மங்கல - மங்கலமான சடங்குக்கு. நாள் - ஒரு முகூர்த்த நாளை. மதி - அறிவைப் பெற்ற. நூல் - சோதிட நூலில். வல்லவர் - வல்லமையைப் பெற்றவராகிய சோதிடர் ஒருவர். வகுத்தார் - அமைத்துக் கொடுத்தார்.

அடுத்து வரும் 19-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'மங்கலமாக விளங்கும் காரியத்தில் விருப்பத்தை அடைந்து புதல்வியைப் பெற்றெடுத்த வள்ளலாராகிய மானக் கஞ்சாற நாயனார் தம்முடைய சாதியில் உள்ள புகழ் நீண்ட உறவினர்கள் எல்லாரும் விளங்கும் பெரிய மகிழ்ச்சி தங்களுக்குச் சிறப்பாக உண்டாகப் பொங்கி எழுந்த வெள்ளையாகிய நெல் முளைகள் முதலியவற்றைப் பாலிகைகளில் முளைக்கச் செய்து பொன்னால் ஆகிய அணிகலன்கள் தம்முடைய திருமாளிகையாகிய இடத்தில் நெருங்கி அமையுமாறு தேன் நிரம்பிய மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும் குளிர்ச்சியைப் பெற்ற பூஞ் சோலையைக் கொண்ட தம்முடைய பழைய ஊராகிய கஞ்சாறூரில் திருமணத்துக்கு முன்னால் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்து அமைத்தார்.' பாடல் வருமாறு:

"மங்கலமாம் செயல்விரும்பி மகட்பயந்த வள்ளலார்
தம்குலம்நீள் சுற்றமெலாம் தயங்குபெரும் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்து பொலங்கலங்கள் இடைநெருங்கக்
கொங்கலர்தண் பொழில்மூதூர் வதுவைமுகம் கோடித்தார்."

மங்கலம் ஆம் - மங்கலமாக விளங்கும். செயல் - காரியத்தில். விரும்பி - விருப்பத்தை அடைந்து. மகள் - புதல்வியை. பயந்த - பெற்றெடுத்த. வள்ளலார் - வள்ளலாராகிய மானக் கஞ்சாற நாயனார். வள்ளலார் - தம்மிடம் உள்ள எதைக் கேட்டாலும் மறுக்காமல் கொடுக்கிறவர். தம் - தம்முடைய. குலம் - சாதியில் உள்ள. நீள் - புகழ் நீண்ட. சுற்றம் - உறவினர்கள்; திணை மயக்கம். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. தயங்கு - விளங்கும். பெரும் - பெரியதாக இருக்கும். களி - மகிழ்ச்சி. சிறப்ப - தங்களுக்குச் சிறப்பாக உண்டாக. ப்: சந்தி. பொங்கிய - பொங்கி எழுந்த. வெண் - வெள்ளையாகிய. முளை - நவதானியங்களின் முளைகளை; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பெய்து - பாலிகைகளில் முளைக்கச் செய்து. பொலங்கலங்கள் - தங்கத்தால் ஆகிய அணிகலன்களை. இடை - தம்முடைய திருமாளிகையாகிய இடத்தில். நெருங்க - நெருங்கி அமையுமாறு. க்: சந்தி. கொங்கு - தேன் நிரம்பிய. அலர் - மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். தண் - குளிர்ச்சியை உடைய. பொழில் - பூஞ்சோலையைப் பெற்ற. மூதூர் - தம்முடைய பழைய ஊராகிய கஞ்சாறூரில். வதுவை - திருமணத்துக்கு. முகம் - முன்பு செய்ய வேண்டிய காரியங்களை; ஒருமை பன்மை மயக்கம். கோடித்தார் - செய்து அமைத்தார்.

பிறகு உள்ள 20-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'மானக் கஞ்சாற நாயனார் தம்முடைய புதல்வியை மணம் செய்து அளிக்க அவளைக் கைப்பிடிக்க வருகின்ற குறையாத புகழையும் பெருமையையும் பெற்ற ஏயர் சாதியிற்

பிறந்த பெருமகனும் தம்முடைய சான்றாண்மை நிறைந்த உறவினர்கள் தம்முடைய திருமாளிகையாகிய இடத்திற்கு நிறைந்து வந்து சேர முரசு முழங்க மேகங்கள் தவழும் மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம் பொழிலைப் பெற்ற கஞ்சாறூரின் பக்கத்தை அடைய.' பாடல் வருமாறு:

"கஞ்சாறர் மகட்கொடுப்பக் கைப்பிடிக்க வருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை ஏயர்குலப் பெருமானும்
தம்சால்பு நிறைசுற்றம் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாலும் மலர்ச்சோலைக் கஞ்சாற்றின் மருங்கணைய."

இந்தப் பாடல் குளகம். கஞ்சாறர் - மானக் கஞ்சாற நாயனார். மகள் - தம்முடைய புதல்வியை. கொடுப்ப - திருமணம் செய்து அளிக்க. க்: சந்தி. கைப்பிடிக்க - அவளைக் கையிற் பிடித்துத் திருமணம் புரிந்து கொள்ளும் பொருட்டு. வருகின்ற - மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகைக்கு வருகின்ற. எஞ்சாத - குறையாத. புகழ் - புகழையும். ப்: சந்தி. பெருமை - பெருமையையும் பெற்ற. ஏயர்குல - ஏயர் சாதியிற் பிறந்த. ப்: சந்தி. பெருமானும் - பெருமகனும்; என்றது ஏயர்குலக் கலிக்காம நாயனாரை. தம் - தம்முடைய. சால்பு - சான்றாண்மை. நிறை - நிறைந்த. சுற்றம் - உறவினர்கள்; திணை மயக்கம். தலை - தம்முடைய திருமாளிகையாகிய இடத்திற்கு. நிறைய - நிறைந்து வந்து சேர. முரசு - முரசம். இயம்ப - முழங்க. மஞ்சு - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆலும் - தவழும். மலர் - மலர்கள் மலர்ந்த மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. சோலை - பூம் பொழிலைப் பெற்ற. க்: சந்தி. கஞ்சாற்றின் - கஞ்சாறூரின். மருங்கு - பக்கத்தை. அணைய - அடைய.

பின்பு உள்ள 21-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வள்ளலாராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனாருடைய திருமணம் அந்தக் கஞ்சாறூரின் பக்கத்தில் அடையாத முன்பே செந்தாமரை மலர்களைப் போன்ற கண்களையும், ஒளியை வீசும் அணிகலன்களையும் அணிந்த அந்தப் பெண்மணியைப் பெற்றவர்களாகிய மானக் கஞ்சாற நாயனார், அவருடைய பத்தினியார் ஆகிய இருவரும் வாழும் அழகிய திருமாளிகையில் ஒரு வழியாகத் தெளிவாக உள்ள கடல் அலைகளின் நீர் சூழ்ந்த இந்த உலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் அந்த மானக் கஞ்சாற நாயனாருடைய திருவுள்ளத்தில் நிலை பேற்றை உடைய பரம்பொருளாகிய தேவர்களினுடைய தலைவராகிய சிவ பெருமானார் அடைவாரானார்.' பாடல் வருமாறு:

"வள்ளலார் மணம்அவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தம் திருமனையில் ஒருவழியே
தெள்ளுதிரை நீருலகம் உய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய உம்பர்பிரான் தாம்அணைவார்."

வள்ளலார் - வள்ளலாராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனாருடைய. மணம் - திருமணம். அவ்வூர் - அந்தக் கஞ்சாறூரினுடைய. மருங்கு - பக்கத்தை. அணையா - அடையாத. முன் - முன்பே. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். 'நீலோற் பல மலர்களைப் போன்ற' எனலும் ஆம். க்: சந்தி. கண் - கண்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஒள் - ஒளியை வீசும். இழையை - அணிகலன்களையும் அணிந்த அந்தப் பெண்மணியை. ஒள் இழை: அன்மொழித் தொகை. இழை:

ஒருமை பன்மை மயக்கம். அவையாவன: தலையணியாகிய சீதேவி, அராக் கொடி, புல்லாக்கு, தோடுகள், வங்கி, காசு மாலை, முத்து மாலை, நவரத்தின மாலை, ஒட்டியாணம், காற் காப்புக்கள், சிலம்புகள், பாத சரங்கள் முதலியவை. ப்: சந்தி. பயந்தார்தம் - பெற்றவர்களாகிய மானக் கஞ்சாற நாயனார், அவருடைய பத்தினியார் ஆகிய இருவரும் வாழும்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. திருமனையில் - அழகிய திருமாளிகையில். ஒருவழி - ஒருவழியாக. ஏ: அசை நிலை. தெள்ளு - தெளிவாக உள்ள. திரை - கடல் அலைகளின்; ஒருமை பன்மை மயக்கம். நீர் - நீர் சூழ்ந்த. உலகம் - இந்த உலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகு பெயர். உய்வதற்கு - உஜ்ஜீவனத்தை அடையும் பொருட்டு. மற்று: அசை நிலை. அவர்தம் - அந்த மானக் கஞ்சாற நாயனாருடைய. தம்: அசை நிலை. உள்ள - திருவுள்ளத்தில். நிலை - நிலை பேற்றை உடைய. ப்: சந்தி. பொருள் - பரம்பொருள். ஆய - ஆகிய. உம்பர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான்தாம் - தலைவராகிய சிவபெருமானார். தாம்: அசை நிலை. அணைவார் - அடைவாரானார்.

பிறகு உள்ள 22-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திரிபுண்டரமாக அணிந்த திருநீறு நிறைந்த தம்முடைய திருநுதலுக்குமேல் முண்டனம் செய்த அழகிய தலையில் வைத்துக் கொண்ட குடுமியின் உச்சியில் கோவையாகக் கோத்து அணிந்து கொண்டிருந்த எலும்பு மணிகளும் பழைய காலத்தில் ஒப்பற்றவனாகிய திருமாலினுடைய திருமேனியில் உள்ள எலும்புகளைத் தரித்துக் கொண்ட காலத்தில் அந்த எலும்புகளைக் கடைந்து

எடுத்த வெண் முத்துக்களைப் போலத் தம்முடைய திருச்செவிகளின் மேல் ஆடுகின்ற குண்டலங்களும்.' பாடல் வருமாறு:

"முண்டநிறை நெற்றியின்மேல் முண்டித்த திருமுடியில்
கொண்டசிகை முச்சியின்கண் கோத்தணிந்த எற்புமணி
பண்டொருவன் உடல்அங்கம் பரித்தநாள் அதுகடைந்த
வெண்டரளம் எனக்காதின் மிசைஅசையும் குண்டலமும்."

இந்தப் பாடல் குளகம். முண்டம் - திரிபுண்டரமாக அணிந்த திருநீறு. நிறை - நிறைந்த. நெற்றியின் மேல் - தம்முடைய திருநுதலுக்கு மேல். முண்டித்த - க்ஷவரம் செய்து கொண்ட. திரு - அழகிய. முடியில் - தலையில். கொண்ட - வைத்துக்கொண்ட. சிகை - குடுமியின். முச்சியின் கண் - உச்சியில். கோத்து அணிந்த - கோவையாகக் கோத்து அணிந்து கொண்டிருந்த. எற்பு - எலும்பு. மணி - மணிகளும்; ஒருமை பன்மை மயக்கம். பண்டு - பழைய காலத்தில். ஒருவன் - ஒப்பற்றவனாகிய திருமாலினுடைய. உடல் - திருமேனியில் உள்ள. அங்கம் - எலும்புகளை; ஒருமை பன்மை மயக்கம். பரித்த - தரித்துக் கொண்ட. நாள் - காலத்தில். அது - அந்த எலும்புகளை; ஒருமை பன்மை மயக்கம். கடைந்த - கடைந்து எடுத்த. வெண் - வெண்மை யான. தரளம் - முத்துக்கள்; ஒருமை பன்மை மயக்கம். என - என்று கூறும் வண்ணம்; இடைக்குறை. க்: சந்தி. காதின் - தம்முடைய திருச்செவிகளின்; ஒருமை பன்மை மயக்கம். மிசை - மேல். அசையும் - ஆடும். குண்டலமும் - குண்டலங்களும்; ஒருமை பன்மை மயக்கம்.

அடுத்து வரும் 23-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'அந்த எலும்புகளினுடைய ஒளியை வீசும் மணிகளைக் கோவையாகக் கோத்து அணிந்து கொண்ட அழகிய தொங்கும் வடமும், படத்தை உடைய வலிமையைக் கொண்ட பெரிய பாம்பு இல்லாமல் இருக்கத் தம்முடைய தோளில் அணியும் யோகப் பட்டையும், மையைப் போல் அமைந்த நிறத்தைக் கொண்ட மயிரால் வடமாகச் செய்யப் பெற்ற பூணூலும் திருவுள்ளம் செம்மையாக உள்ள பக்தர்களின் பிறப்பைப் போக்கும் திருநீற்றுப்பையும்.' பாடல் வருமாறு:

"அவ்வென்பின் ஒளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பே ரரவொழியத் தோளில்இடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலும்மனச்
செவ்வன்பர் பவம்மாற்றும் திருநீற்றுப் பொக்கணமும்."

இந்தப் பாடலும் குளகம். அவ்வென்பின் - அந்த எலும்புகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ஒளி - ஒளியை வீசும். மணி - மணிகளை; ஒருமை பன்மை மயக்கம். கோத்து - கோவையாகக் கோத்து. அணிந்த - அணிந்து கொண்ட. திரு - அழகிய. த்: சந்தி. தாழ்வடமும் - தொங்கும் வடமும். பை - படங்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். வன் - வலிமையைப் பெற்ற. பேர் - பெரிய. அரவு - பாம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். ஒழிய - இல்லாமல் தவிர்ந்திருக்க. த்: சந்தி. தோளில் - தம்முடைய தோளில். இடும் - அணியும். பட்டிகையும் - யோகப் பட்டையும். மை - மையைப் போல. வந்த - அமைந்த. நிற - நிறத்தைக் கொண்ட. க்: சந்தி. கேச - மயிரால். வட - வடமாகச் செய்யப் பெற்ற. ப்:சந்தி. பூணுநூலும் - பூணூலும். மனம் - தம்முடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை

மயக்கம். செவ் அன்பர் - செம்மையாக உள்ள பக்தர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பவம் - பிறப்பை. மாற்றும் - போக்கும். திருநீற்றுப் பொக்கணமும் - விபூதிப் பையும்.

பிறகு உள்ள 24-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'ஒப்பற்ற தம்முடைய திருக்கரத்தின் முன்பு தனியான மாணிக்கத்தைக் கோவையாகக் கோத்து அணிந்துள்ள ஒளியை வீசும் கயிறும், பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள வேதமாகிய சாத்திர மென்னும் கௌபீனத்தின்மேல் அசைகின்ற அழகிய ஆடையும் பெரிய தரையின் மேற்படிந்த எழுதுவதற்கு அருமையாக உள்ள திருவடிகளும் அந்தத் திருவடிகளில் அழகிய பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டம் என்னும் ஐந்து முத்திரைகளும் பொலிந்து விளங்க.' பாடல் வருமாறு:

"ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தஒளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசைஅசையும் திருவுடையும்
இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
திருவடியில் திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க."

இந்தப் பாடலும் குளகம். ஒரு - ஒப்பற்ற. முன்கை - திருக்கரத்தின் முன்பு. த்:சந்தி. தனி - தனியான. மணி - மாணிக்கத்தை. கோத்து - கோவையாகக் கோத்து. அணிந்த - அணிந்துள்ள. ஒளிர் - ஒளியை வீசும். சூத்திரமும் - கயிறும். அரு - பொருள் தெரிந்து கொள்வதற்கு அருமையாக உள்ள. மறை - வேதமாகிய. நூல் - சாத்திரம் என்னும். கோவணத்தின் - கௌபீனத்தின். மிசை - மேல். அசையும் - அசைந்து கொண்டிருக்கும். திரு - அழகிய.

உடையும் - ஆடையும். இரு - பெரிய. நிலத்தின் - தரையின். மிசை - மேல். தோய்ந்த - படிந்த. எழுதரிய - எழுதுவதற்கு அருமையாக உள்ள. திருவடியும் - திருவடிகளும்; ஒருமை பன்மை மயக்கம். திருவடியில் - அந்தத் திருவடிகளில்; ஒருமை பன்மை மயக்கம். திரு - அழகிய. ப்: சந்தி. பஞ்சமுத்திரையும் - பதுமம், சங்கம், மகரம், சக்கரம், தண்டம் என்னும் ஐந்து முத்திரைகளும். முத்திரையும்: ஒருமை பன்மை மயக்கம். திகழ்ந்து - தோற்றப் பொலிவைப் பெற்று. இலங்க - விளங்க.

பிறகு உள்ள 25-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த மாவிரத முனிவர் சாம்பல் மூடியுள்ள நெருப்பு என்று கூறுமாறு தம்முடைய திருமேனியில் விளங்கிய உருவம் நீளமாக உள்ள விபூதியின் பரவலை அணிந்துள்ள தன்மையை உடையவராய், துவசங்கள் உயரமாகப் பறக்கும் மாளிகைகள் ஓங்கி நிற்கும் தெருவை அடைந்து தம்முடைய குளிர்ச்சியைப் பெற்ற செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை நெடுங்காலமாக வணங்கும் திருவுள்ளத்தைப் பெற்ற பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகையின் உள்ளே நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"பொடிமூடு தழல்என்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடும் மனத்தன்பர் தம்மனையின் அகம்புகுந்தார்."

பொடி - அந்த மாவிரத முனிவர் சாம்பல். மூடு - மூடியுள்ள. தழல் - நெருப்பு. என்ன - என்று கூறுமாறு. த்: சந்தி. திருமேனிதனில் - தம்முடைய திருமேனியில். தன்: அசை நிலை. பொலிந்த - விளங்கிய. படி - உருவம். நீடு -

நீளமாக உள்ள. திருநீற்றின் - விபூதியின். பரப்பு - பரவலை. அணிந்த - பூசியுள்ள. பான்மையராய் - தன்மையை உடையவராய். க்: சந்தி. கொடி - துவசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நீடு - உயரமாகப் பறக்கும் திருமாளிகைகள் ஓங்கி நிற்கும். மறுகு - ஒரு தெருவை. அணைந்து - அடைந்து. 'தம்முடைய' என்றது 'அந்த மாவிரத முனிவருடைய' என்பதை. குளிர் - குளிர்ச்சியைப் பெற்ற. கமலத்து - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். அடி - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். நீடும் - நெடுங்காலமாக வணங்கும். மனத்து - திருவுள்ளத்தைப் பெற்ற. அன்பர்தம் - பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாருடைய. தம்: அசை நிலை. மனையின் - திருமாளிகைக்கு. அகம் - உள்ளே. புகுந்தார் - நுழைந்தார்.

பிறகு உள்ள 26-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளி வந்து சேர்ந்த மாவிரத முனிவரைப் பார்த்து அவருக்கு எதிரில் எழுந்து சென்று தம்முடைய திருவுள்ளத்தில் களிப்பை மிகுதியாக அடைந்து மகிழ்ச்சியில் சிறந்து விளங்கிய பெருமையைப் பெற்ற திருத் தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனார், ''அடியேனுடைய தந்தையைப் போன்ற தலைவராகிய தேவரீர் அடியேன் முற்பிறப்பில் செய்த தவத்தின் பயனாகத் தேவரீர் நினைத்த இந்த இடத்திற்கு எழுந்தருளியதனால் அடியேன் உஜ்ஜீவனத்தை அடைந்து அடியேனுடைய பாவங்களிலிருந்து நீங்கப் பெற்றேன்'' என உருக்கத்தை அடைந்த பக்தியோடு அந்த முனிவரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரெழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனார்
'எந்தைபிரான் புரிதவத்தோர் இவ்விடத்தே எழுந்தருள
உய்ந்தொழிந்தேன் அடியேன்.'என் றுருகியஅன் பொடு
பணிந்தார்."

வந்து - அவ்வாறு தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளி வந்து. அணைந்த - சேர்ந்த. மாவிரதமுனிவரை - அந்த மாவிரத முனிவரை. க்: சந்தி. கண்டு - பார்த்து. எதிர் - அவருக்கு எதிரில். எழுந்து - எழுந்து சென்று. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில். களி - களிப்பை. கூர்ந்து - மிகுதியாக அடைந்து. மகிழ் - மகிழ்ச்சியில்; முதல் நிலைத் தொழிற் பெயர். சிறந்த - சிறந்து விளங்கிய. பெரும் - பெருமையைப் பெற்ற. தொண்டனார் - திருத் தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனார். எந்தை - அடியேனுடைய தந்தையைப் போன்ற. பிரான் - தலைவராகிய தேவரீர்; ஒருமை பன்மை மயக்கம். புரி - அடியேன் முற்பிறப்பில் செய்த. தவத்து - தவத்தின் பயனாக; ஆகுபெயர். ஓர் - தேவரீர் நினைத்த. இவ்விடத்து - இந்த இடத்திற்கு. ஏ: அசை நிலை. எழுந்தருள - எழுந்தருளியத னால். அடியேன் உய்ந்து - அடியேன் உஜ்ஜீவனத்தை அடைந்து. ஒழிந்தேன் - அடியேனுடைய பாவங்களிலிருந்து நீங்கப் பெற்றேன். என்று - என. உருகிய - உருக்கத்தை அடைந்த. அன்பொடு - பக்தியோடு. பணிந்தார் - அந்த முனிவரை மானக் கஞ்சாற நாயனார் வணங்கினார்.

பின்பு உள்ள 27-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நல்ல தவசியாராகும் பெருமகனாராகிய அந்த மாவிரத முனிவர் நல்ல பண்புகள் மிகுதியாக அமைந்திருக்கும்

பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாரைப் பார்த்து, "உண்டான ஒரு மங்கல காரியம் உன்னுடைய இந்தத் திருமாளிகையில் நடப்பது என்ன?" என்று கேட்க, "அடியேன் பெற்றெடுத்த ஒப்பற்ற பூங்கொடியைப் போன்ற புதல்வியினுடைய திருமணம்" என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய, பெருமையைப் பெற்ற அந்தத் தவசியாரும், "உமக்குச் சோபனம் உண்டாகுக!" எனத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

"நற்றவராம் பெருமகனார் நலம்மிகும்அன் பரைநோக்கி
'உற்றசெயல் மங்கலம்இங் கொழுகுவதென்?' என'அடியேன்
பெற்றதொரு பெண்கொடிதன் வதுவை'எனப் பெருந்தவரும்
'மற்றுமக்குச் சோபனம்ஆ குவ'தென்று வாய்மொழிந்தார்."

நல் - நல்ல. தவராம் - தவசியாராக விளங்கும். பெருமகனார் - பெருமகனாராகிய அந்த மாவிரத முனிவர். நலம் - நல்ல பண்புகள்; ஒருமை பன்மை மயக்கம். மிகும் - மிகுதியாக அமைந்திருக்கும். அன்பரை - பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாரை. நோக்கி - பார்த்து. உற்ற - உண்டாகிய. செயல் மங்கலம் - ஒரு மங்கல காரியம். இங்கு - உன்னுடைய இந்தத் திருமாளிகையில். ஒழுகுவது - நடப்பது. என் - என்ன. என - என்று கேட்க; இடைக்குறை. அடியேன் பெற்றது ஒரு - அடியேன் பெற்றேடுத்தவளாகிய ஒப்பற்ற. பெற்றது: திணை மயக்கம். பெண்கொடி தன் - பூங்கொடியைப் போன்ற புதல்வியினுடைய. கொடி: உவம ஆகு பெயர். மகளிருக்குப் பூங்கொடியை உவமையாகக் கூறும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. தன்: அசை நிலை. வதுவை - திருமணம். என - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்ய; இடைக்குறை. ப்:

சந்தி. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தவரும் - அந்தத் தவசியாரும். மற்று: அசை நிலை. உமக்கு - உங்களுக்கு. ச்:சந்தி. சோபனம் ஆகுவது - சோபனம் உண்டாகுக. என்று - என. வாய்மொழிந்தார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 28-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'சிவஞானத்தைப் பெற்ற செம்மையை உடைய தவசியாராகிய அந்த மாவிரத முனிவருடைய திருவடிகளின் மேல் விழுந்து அவரை வணங்கி விட்டுத் தம்முடைய திரு மாளிகைக்கு உள்ளே சென்று அந்த மானக் கஞ்சாற நாயனார் திருமணக் கோலத்தைப் பூண்டு கொண்டிருந்த தேன் விளங்கிய மலர்களை அணிந்த கூந்தலைப் பெற்ற தம்முடைய அழகிய புதல்வியை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்து நீலோற்பல மலரைப் போன்ற திருக்கழுத்தை மறைத்துக் கொண்டு எழுந்தருளி வரும் அந்த மாவிரத முனிவரை வணங்கச் செய்தார்.' பாடல் வருமாறு:

"ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகம்நண்ணி
மானக்கஞ் சாறனார் மணக்கோலம் புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தல் திருமகளைக் கொண்டணைந்து
பானற்கந் தரம்மறைத்து வருமவரைப் பணிவித்தார்."

ஞான - சிவஞானத்தைப் பெற்ற. ச்: சந்தி. செய் - செம்மையை உடைய. தவர் - தவசியாராகிய அந்த மாவிரத முனிவருடைய. அடிமேல் - திருவடிகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். பணிந்து - விழுந்து அவரை வணங்கி விட்டு. மனை - தம்முடைய திருமாளிகைக்கு. அகம் - உள்ளே. நண்ணி - சென்று. மானக் கஞ்சாறனார் - அந்த மானக் கஞ்சாற நாயனார். மணக்கோலம் - திருமணக் கோலத்தை.

புனைந்திருந்த - பூண்டு கொண்டிருந்த. தேன்நக்க - தேன் நிரம்பி விளங்கிய மலர்களை அணிந்திருந்த; ஒருமை பன்மை மயக்கம். அந்த மலர்களாவன: மல்லிகை மலர், முல்லை மலர், இருவாட்சி மலர், தாழம் பூ, மகிழ மலர், வெள்ளைச் செவ்வந்தி மலர், மஞ்சட் செவ்வந்தி மலர், கதம்பம் முதலியவை. க்: சந்தி. கூந்தல் - கூந்தலைப் பெற்ற. திரு அழகிய. மகளை - தம்முடைய புதல்வியை. க்: சந்தி. கொண்டு - அழைத்துக் கொண்டு. அணைந்து - வந்து சேர்ந்து. பானல் - ஆலகால விடத்தை உண்டமையால் நீலோற்பல மலரைப் போன்ற. கந்தரம் - தம்முடைய திருக்கழுத்தை. மறைத்து - தெரியாதபடி மறைத்துக் கொண்டு. வரும் - எழுந்தருளி வரும். அவரை - அந்த மாவிரத முனிவரை. ப்: சந்தி. பணிவித்தார் - தம்முடைய புதல்வியை வணங்கச் செய்தார்.

பிறகு உள்ள 29-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த மாவிரத முனிவர் தம்முடைய திருவடிகளின் மேல் தரையில் விழுந்து வணங்கி எழுந்திருந்த மடப் பத்தையும் பூங்கொடியைப் போன்ற தோற்றப் பொலிவை யும் பெற்ற அந்தப் பெண்மணியினுடைய மேகம் தழைத்தாற் போல வளர்ந்துள்ளதும் மலர்களை அணிந்துள்ளதுமாகிய கூந்தலை வெளியில் பார்த்தருளி தம்முடைய கைகளைக் கூப்பி அஞ்சலி புரிந்து உண்மையான திருத்தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனாரை அந்த முனிவர் நோக்கி, ''தெய்வப் பெண்ணைப் போன்ற இவளுடைய கூந்தலில் அடர்ந்து வளர்ந்திருக்கும் மயிர்கள் எமக்குப் பஞ்சவடிக்கு ஆகும்' என்று தம்மைத் துதித்துப் புகழ அவ்வாறு புகழ்ந்த பக்தர்களுக்குத் தம்முடைய திருவடிகளாகிய புகலிடத்தை

வழங்குபவராகிய சிவபெருமானார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''தம்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தெனவளர்ந்த மலர்க்கூந்தல் புறம்நோக்கி
அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த், 'தணங்கிவள்தன் மயிர்நமக்குப்
பஞ்சவடிக் காம்.'என்றார் பரவஅடித் தலம்கொடுப்பார்.''

தம் - அந்த மாவிரத முனிவர் தம்முடைய. சரணத்திடை - திருவடிகளின் மேல்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பணிந்து - தரையில் விழுந்து. தாழ்ந்து - வணங்கி. எழுந்த - எழுந்திருந்த. மடக்கொடிதன் - மடப்பத்தையும் பூங்கொடியைப் போன்ற தோற்றப் பொலிவையும் பெற்ற அந்தப் பெண்மணியினுடைய. கொடி: உவம ஆகு பெயர். தன்: அசை நிலை. மஞ்சு - மேகம். தழைத்தென - தழைத்தாற் போல. என: இடைக்குறை. வளர்ந்த - வளர்ந்துள்ளதும்; வினையாலணையும் பெயர். மலர் - மலர்களை அணிந்துள்ளதுமாகிய; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கூந்தல் - கூந்தலை. புறம் - வெளியில். நோக்கி - பார்த்தருளி. அஞ்சலி - தம்முடைய கைகளைக் கூப்பி அஞ்சலி புரிந்த. மெய் - உண்மையான. த்: சந்தி. தொண்டரை - திருத்தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனாரை. ப்: சந்தி. பார்த்து - அந்த முனிவர் நோக்கி. அணங்கு - தெய்வப் பெண்ணைப் போன்ற. இவள் தன் - இவளுடைய; தன்: அசை நிலை. மயிர் - கூந்தலில் அடர்ந்து வளர்ந்திருக்கும் மயிர்கள்; ஒருமை பன்மை மயக்கம். நமக்கு - எமக்கு. ப்: சந்தி. பஞ்சவடிக்கு - மயிரால் அகலமாகச் செய்யப் பெற்று மார்பில் பூணூலாக அணியும் வடத்திற்கு. பஞ்சம் - விரிவு; அகலம். வடி - வடம். ஆம் - ஆகும். பரவ - தம்மைத் துதித்துப்

புகழ. அடித்தலம் - அவ்வாறு புகழ்ந்த பக்தர்களுக்குத் தம்முடைய திருவடிகளாகிய புகலிடத்தை. அடி: ஒருமை பன்மை மயக்கம். கொடுப்பார் - வழங்கியருள்பவராகிய சிவபெருமானார். என்றார் - என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு உள்ள 30-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அந்த மாவிரதமுனிவர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த வார்த்தைகளை மானக் கஞ்சாற நாயனார் கேட்டுத் தம்முடைய வலிமையைப் பெற்ற உடைவாளை இடையிலிருந்து உருவி எடுத்து, "செல்வத்தை ஈட்டினோம் என்று கூறுமாறு ஒரு பாக்கியத்தை அடியேன் பெற்றேன்" என்று தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணிக்கொண்டு மலர்க்கொடியைப் போன்ற தம்முடைய புதல்வியின் இருட்டைப்போல கருமையை உண்டாக்கிய கூந்தலை அதனுடைய அடியோடு அறுத்து எடுத்துத் தம்முடைய எதிரில் நின்று கொண்டிருந்த மயக்கத்தை உண்டாக்கிய இந்த மனிதப் பிறவியைப் போக்குபவராகிய அந்த முனிவருடைய செந்தாமரை மலரைப் போன்ற வலக்கரத்தில் அளிக்க.' பாடல் வருமாறு:

"அருள்செய்த மொழிகேளா அடற்சுரிகை தனைஉருவிப்
'பொருள்செய்தாம் எனப்பெற்றேன்' எனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட."

இந்தப் பாடல் குளகம். அருள் செய்த - அவ்வாறு அந்த மாவிரத முனிவர் திருவாய் மலர்ந்தருளிச் செய்த. மொழி - வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேளா - மானக் கஞ்சாற நாயனார் கேட்டருளி. அடல் - தம்முடைய

வலிமையைப் பெற்ற; 'கொல்லுதலை உடைய' எனலும் ஆம். சுரிகைதனை - உடைவாளை; தன்: அசை நிலை. உருவி - தம்முடைய இடையிலிருந்து உருவி எடுத்து. ப்: சந்தி. பொருள் - செல்வத்தை. செய்தாம் - ஈட்டினோம். என - என்று கூறுமாறு; இடைக்குறை. ப்: சந்தி. பெற்றேன் - ஒரு பாக்கியத்தை அடியேன் அடைந்தேன். என - என்று; இடைக்குறை. க்: சந்தி. கொண்டு - தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணிக் கொண்டு. பூங்கொடிதன் - மலர்க் கொடியைப் போன்ற தம்முடைய புதல்வியின். தன்: அசை நிலை. இருள் செய்தகரும் - இருட்டைப் போலக் கருமையை உண்டாக்கி. கூந்தல் - கூந்தலை. அடியில் - அதனுடைய அடியோடு; உருபு மயக்கம். அரிந்து - எடுத்து. எதிர் - தம்முடைய எதிரில். நின்ற - நின்று கொண்டிருந்த. மருள் - மயக்கத்தை. செய்த - உண்டாக்கிய. பிறப்பு - இந்த மனிதப் பிறவியை. அறுப்பார் - போக்குபவராகிய அந்த முனிவருடைய. மலர் - செந்தாமரை மலரைப் போன்ற. க்: சந்தி. கரத்தினிடை - வலக் கரத்தில். நீட்ட - அளிக்க.

அடுத்து வரும் 31-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு மானக் கஞ்சாற நாயனார் தம்முடைய புதல்வியின் கூந்தலை அறுத்துத் தந்த மயிர்களை வாங்கிக் கொள்பவரைப் போல அங்கே நின்று கொண்டிருந்த வேதங்களின் அர்த்தமாகும் அந்த மாவிரத முனிவர் மறைந்தருளித் தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளி யிருக்கும் இமாசல அரசனுடைய புதல்வியாகிய பூங் கொடியைப் போன்ற பார்வதி தேவியோடு பழமையாகிய இளமையைப் பெற்ற இடப வாகனத்தின் மேல் ஏறிக்கொண்டு உயரமாக உள்ள வானத்தின் மேல்

எழுந்தருளி வந்தார்; ஒளியை வீசும் வானத்திலிருந்து தரையில் நெருங்கும் வண்ணம் தேவர்கள் கற்பக மரத்திலிருந்து கொய்த பொன் மலரின் மழை பொழிந்தது; திருத்தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனார் அவ்வாறு காட்சி அளித்த சிவபெருமானாரை வணங்கி அவருடைய எதிரில் தரையில் விழுந்தார்.' பாடல் வருமாறு:

"வாங்குவார் போல்நின்ற மறைப்பொருளாம் அவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடைஏறி
ஓங்கியவிண் மிசைவந்தார்; ஒளிவிசும்பின் நிலன்நெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி; தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார்."

வாங்குவார் போல் - அவ்வாறு மானக் கஞ்சாற நாயனார் தம்முடைய புதல்வியின் கூந்தலை அறுத்துத் தந்த மயிர்களை வாங்கிக் கொள்பவரைப் போல. நின்ற - அங்கே நின்று கொண்டிருந்த. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்ற நான்கு வேதங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொருளாம் - அர்த்தமாக விளங்கும். அவர் - அந்த மாவிரத முனிவராக எழுந்தருளி வந்த சிவபெருமானார். சிவபெருமானார் வேதங்களின் பொருளாக விளங்குகிறவர் என்ற கருத்தைப் புலப்படுத்தும் இடங்களை வேறோரிடத்தில் கூறினோம். ஆண்டுக் கண்டுணர்க. மறைந்து. மறைந்தருளி - பாங்கின் - தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளியிருக்கும். மலை வல்லியுடன் - இமாசல அரசனுடைய புதல்வியாகிய பூங்கொடியைப் போன்ற பார்வதி தேவியோடு. மலை: திணை மயக்கம். வல்லி: உவம ஆகுபெயர். பழைய - பழமையாகிய. மழ - இளமையைப் பெற்ற. விடை - இடப வாகனத்தின் மேல். ஏறி - ஏறிக் கொண்டு. ஓங்கிய - உயரமாக உள்ள. விண்மிசை

- வானத்தின் மேல். வந்தார் - எழுந்தருளி வந்தார். ஒளி - ஒளியை வீசும். விசும்பின் - வானத்தி லிருந்து. நிலன் - தரையில். நெருங்க - நெருங்கிப் பரவும் வண்ணம். த்: சந்தி. பொன்மலர் மாரி - தேவர்கள் கற்பக மரத்திலிருந்து கொய்த தங்க மலர்களின் மழைகள். மலர்: ஒருமை பன்மை மயக்கம். மாரி: ஒருமை பன்மை மயக்கம். தூங்கிய - பொழிந்தன. தொழும்பர் - திருத் தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனார். தொழுது - அவ்வாறு காட்சி அளித்த சிவபெருமானாரை வணங்கி. எதிர் - அவருடைய எதிரில் விழுந்தார் - தரையில் விழுந்தார்.

அடுத்துள்ள 32-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு தரையில் விழுந்து பிறகு தரையிலிருந்து நின்று கொண்டு தம்முடைய திருமேனியை மறந்து போன உண்மையான பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாருக்குத் தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில் பிறைச் சந்திரனுடைய கொழுந்து அசையவும், அங்கே தங்கும் கங்கையாறு குதித்துக் கொண்டு திருநடனம் புரியவும், சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம் பலத்தில் திருநடனம் புரிந்தருளும் நடராஜப் பெருமானார், ''உன்னுடைய உள்ளத்தில் எழுந்த பக்தி நம்மிடம் உனக்கு இருந்த இயல்பை இந்தச் செழுமையைப் பெற்ற உலகங்களில் ஏறிப் பரவுமாறு புரிந்தோம்.'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழும்கங்கை குதித்தசடைக் கூத்தனார்,
'எழும்பரிவு நம்பக்கல் உனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களில்ஏறச் செய்தோம்.'என் றருள்செய்தார்.''

விழுந்து - அவ்வாறு தரையில் விழுந்து. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. மெய் - தம்முடைய திருமேனியை. ம்: சந்தி. மறந்த - மறந்து போன. மெய் - உண்மையான. அன்பர் தமக்கு - பக்தராகிய மானக் கஞ்சாற நாயனாருக்கு. தம்: அசை நிலை. மதிக்கொழுந்து - தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில் பிறைச் சந்திரனுடைய கொழுந்து. அலைய - அசையவும். விழும் - ஆகாயத்திலிருந்து விழுந்த; கால மயக்கம். கங்கை - கங்கையாறு. குதித்த - குதித்துக் கொண்டு திருநடனம் புரிந்த. சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்ற. க்: சந்தி. கூத்தனார் - சிதம்பரத்தில் உள்ள ஆலயத்தில் விளங்கும் திருச்சிற்றம்பலத்தில் திருநடனம் புரிந்தருளும் நடராஜப் பெருமானார். எழும்பரிவு - உள்ளத்தில் எழுகின்ற. நம் பக்கல் - எம்மிடத்தில். உனக்கு இருந்த பரிசு - உனக்கு அமைந்திருந்த பக்தியின் இயல்பை. இந்தச் செழும் - இந்தச் செழுமையைப் பெற்ற. புவனங்களில் - உலகங்களில். ஏற - ஏறிப் பரவுமாறு. ச்: சந்தி. செய்தோம் - யாம் புரிந்தோம். என்று - என. அருள் செய்தார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 33-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்முடைய பக்கத்தில் பெருமையைப் பெற்று விளங்கும் சிவகணத் தலைவர்கள் வாழ்த்துக்களை எடுத்துக் கூறவும், தேவர்கள் தம்மோடு நெருங்கிவர இடப வாகனத்தின் மேல் ஏறிக் கொண்டு வானத்தில் நின்று கொண்டிருந்த நடராஜப் பெருமானாருடைய முன்னிலை யில் நின்று கொண்டிருந்தவராகிய மானக் கஞ்சாற நாயனார் ஒருமைப்பாடு பொருந்திய திருவுள்ளத்தோடு தம்முடைய

திருக்கரங்களைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு ஐயராகிய நடராஜப் பெருமானாருடைய பெருமையைப் பெற்ற கருணையின் விதத்தை வாழ்த்தும் பெரிய பாக்கியத்தை நேரில் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"மருங்குபெரும் கணநாதர் போற்றிசைப்ப வானவர்கள்
நெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்முன் நின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்கள் உச்சியின்மேற் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றார்."

மருங்கு - தம்முடைய பக்கத்தில். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். கண - சிவகணங் களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாதர் - தலைவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். போற்று - வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம். இசைப்ப - எடுத்துக் கூறவும். வானவர்கள் - தேவலோகத்தில் வாழும் தேவர்கள். நெருங்க - தம்மோடு நெருங்கி வர. விடைமேல் - இடப வாகனத்தின் மேல். கொண்டு - ஏறிக்கொண்டு. நின்றவர் - நின்று கொண்டிருந்தவராகிய நடராஜப் பெருமானாருடைய. முன் - முன்னிலையில். நின்றவர்தாம் - நின்று கொண்டிருந்த வராகிய மானக் கஞ்சாற நாயனார். தாம்: அசை நிலை. ஒருங்கிய - ஒருமைப்பாடு பொருந்திய. நெஞ்சொடு - திருவுள்ளத்தோடு. கரங்கள் - தம்முடைய திருக்கரங்களை. உச்சியின் மேல் - தம்முடைய தலையின் மேல். குவித்து - வைத்துக் கூப்பிக் கும்பிட்டு. ஐயர் - ஐயராகிய நடராஜப் பெருமானாருடைய. 'ஐயர்' என்பதைக் காட்டும் இடங்களை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. பெரும் - பெருமையைப் பெற்றிருக்கும். கருணை - கருணையின். த்: சந்தி. திறம் - விதத்தை.

போற்றும் - வாழ்த்தும். பெரும் - பெரியதாக இருக்கும். பேறு - பாக்கியத்தை. நேர் - நேரில். பெற்றார் - அடைந்தார்.

அடுத்து உள்ள 34-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருத்தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனாருக்குத் தம்முடைய திருவருளை வழங்கி விட்டுத் தம்மைச் சுற்றிக் கொண்டு தேவர்கள் தோத்திரங்களைப் புரிய இண்டை மலரைச் சூடிய நீண்ட சடாபாரத்தைப் பெற்ற திருமுடியைக் கொண்ட நடராஜப் பெருமானார் அந்த இடத்திலிருந்து எழுந்தருளிச் சென்றார்; வண்டுகள் மொய்க்கும் மலர்களை அணிந்த நீண்ட கூந்தலைப் பெற்ற பூங்கொடி போன்ற மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வியைக் கையிற் பற்றிக்கொள்ள மேற்கொண்ட திருமணக் கோலத்தைப் பார்த்த மக்களுடைய கண்கள் மகிழ்ச்சியை அடையுமாறு ஏயர்கோன் கலிக்காம நாயனார் மானக் கஞ்சாற நாயனாருடைய் திருமாளிகைக்குள் நுழைந்தார்.' பாடல் வருமாறு:

"தொண்டனார் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியார் எழுந்தருளிப் போயினார்;
வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க மணக்கோலம்
கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னார்புகுந்தார்."

தொண்டனார் தமக்கு - திருத்தொண்டராகிய மானக் கஞ்சாற நாயனாருக்கு. தம்: அசை நிலை. அருளி - தம்முடைய திருவருளை வழங்கி விட்டு. ச்: சந்தி. சூழ்ந்து - தம்மைச் சுற்றிக் கொண்டு. இமையோர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இமையோர் - இமைகளில் கொட்டாமையாகிய சிறப்பை உடையவர்கள். துதி - தோத்திரங்களை; ஒருமை பன்மை மயக்கம். செய்ய - புரிய.

இண்டை - இண்டை மலரைச் சூடிய; ஆகு பெயர். வார் - நீளமான. சடை - சடாபாரத்தைப் பெற்ற. முடியார் - திருமுடியைக் கொண்ட நடராஜப் பெருமானார். எழுந்தருளி - அந்த இடத்திலிருந்து எழுந்தருளி. ப்: சந்தி. போயினார் - சென்றார். வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். வார் - மொய்க்கும் மலர்களை அணிந்த நீண்ட. குழல் - கூந்தலைப் பெற்ற. கொடியை - பூங்கொடியைப் போன்றவரும் மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வியும் ஆகிய பெண்மணியை; உவம ஆகுபெயர். க்: சந்தி. கைப் பிடிக்க - கையிற் பற்றிக் கொள்ளும் பொருட்டு மேற்கொண்ட. மணக்கோலம் - திருமணக் கோலத்தை. கண்டவர்கள் - பார்த்த மக்களுடைய. கண் - கண்களில்; ஒருமை பன்மை மயக்கம். களிப்ப - மகிழ்ச்சியை அடையுமாறு. க்: சந்தி. கலிக்காமனார் - ஏயர்கோன் கலிக்காம நாயனார். புகுந்தார் - மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகைக்குள் நுழைந்தார்.

சிவபெருமான் இண்டை மலரைச் சூடியிருத்தல்: ''இண்டை கொண்ட செஞ்சடை முடிச்சிவன்.'', ''இண்டை சேர்க்கும் சடைஏடகத் தெந்தையே.'', ''இண்டை புனை வுண்ட சடை.'', ''இண்டை புனைந் தெருதேறி.'' என்று திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும், ''இண்டையைத் திகழ வைத்தார்.'', ''இண்டை கொண்டேற நோக்கி.'', ''இண்டை செஞ்சடை வைத்த இயல்பினான்.'', ''இண்டை மாலை புனைந்தும்.'', ''இண்டைச் செஞ்சடையன்.'', ''இண்டை வண்ணமும்.'', ''இண்டை கட்டி இணையடி ஏத்தியும்.'', ''இண்டைச் சடை முடியார்.'', ''இண்டைச் சடை முடியாய் என்றேன் நானே.'', ''இண்டைச் சடைசேர் முடியார் போலும்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''இண்டை

மலர் கொண்டு.", "இண்டை மாமலர்ச் செஞ்சடையானை.", "இண்டை கொண்டன்பிடை அறாத தொண்டர் பரவும்." என்று சுந்தரமூர்த்தி நாயனாரும் பாடியருளியவற்றைக் காண்க.

அடுத்து வரும் 35-ஆம் பாட்டின் கருத்து வருமாறு:

'அவ்வாறு மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகைக்கு வந்து சேர்ந்த ஏயர் குலத்தின் அரசராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனார் அந்தச் சிந்தையினால் நினைப்பதற்கு அருமையாக உள்ள செயலை அங்கே சேர்ந்தவர்களிடம் கேட்டருளித் தம்முடைய புத்தியில் மிகுதியாக மகிழ்ச்சியை அடைந்து பரிசுத்தராகிய நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளை வாழ்த்திவிட்டுத் தம்முடைய திருவுள்ளம் தளர்ச்சியை அடைந்து திருவாய் மலர்ந்தருளிச் செய்த திருவாக்கினுடைய திறத்தைக் கேட்டருளி.' பாடல் வருமாறு:

"வந்தணைந்த ஏயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்
புந்தியினில் மிகஉவந்து புனிதனார் அருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் திறம்கேட்டு."

இந்தப் பாடல் குளகம். வந்து - அவ்வாறு மானக் கஞ்சாற நாயனாருடைய திருமாளிகைக்கு வந்து. அணைந்த - வந்து சேர்ந்த. ஏயர் குல - ஏயர் குலத்தின். மன்னவனார் - அரசராகிய ஏயர்கோன் கலிக்காம நாயனார். மற்று: அசை நிலை. அந்தச் சிந்தை - அந்த உள்ளம். நினைவரிய - எண்ணுவதற்கு அருமையாக உள்ள. செயல் - செயலை. என்றது மானக் கஞ்சாற நாயனார் தம்முடைய புதல்வியின்

கூந்தலை அடியோடு அரிந்து மாவிரத முனிவருக்கு அளித்ததை. செறிந்தவர் பால் - அங்கே சேர்ந்திருந்தவர் களிடம்; ஒருமை பன்மை மயக்கம். கேட்டருளி - கேள்விப்பட்டருளி. ப்: சந்தி. புந்தியினில் - தம்முடைய புத்தியில். மிக - மிகுதியாக. உவந்து - மகிழ்ச்சியை அடைந்து. புனிதனார் - பரிசுத்தராகிய நடராஜப் பெருமானார். அருள் - வானிலிருந்து வழங்கிய திருவருளை. போற்றி - வாழ்த்தி. ச்: சந்தி. சிந்தை - தம்முடைய திருவுள்ளம். தளர்ந்து - தளர்ச்சியை அடைந்து. அருள்செய்த - திருவாய் மலர்ந்தருளிச் செய்த. திருவாக்கின் - நடராஜப் பெருமானாருடைய திருவாக்கினுடைய. திறம் - திறத்தை. கேட்டு - கேட்டருளி.

பிறகு உள்ள 36-ஆம் செய்யுளின் கருத்து வருமாறு:

'ஏயர்கோன் கலிக்காம நாயனார் தம்முடைய திருவுள்ளம் தளர்ச்சியை அடையும் துன்பத்திலிருந்து விடுபட்டுத் தேவலோகத்தில் வாழும் தேவர்களினுடைய தலைவராகிய நடராஜப் பெருமானார் வழங்கிய திருவருளால் அலங்கரித்த மலர்களை அணிந்த கூந்தலை மீண்டும் வளரப் பெற்ற மலர்க் கொடியைப் போன்றவளும், மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வியும் ஆகிய பெண்மணியைத் திருமணம் புரிந்து கொண்டு யாவருக்கும் செல்வத்தை மழையைப் போலப் பொழிந்து வழங்கிப் பெருமையைப் பெற்ற இந்தத் திருமணத்தை இந்த உலகத்தில் வாழும் மக்கள் எல்லோரும் தலைசிறந்ததென்று பாராட்டத் தம்முடைய சாதி பெருகுமாறு தம்முடைய திருமதிலை உடைய பழைய ஊராகிய பெருமங்கலத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

''மனம்தளரும் இடர்நீங்கி வானவர்நா யகர்அருளால்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து பெருவதுவை உலகெலாம் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய எயில்மூதூர் சென்றணைந்தார்.''

மனம் - ஏயர்கோன் கலிக்காம நாயனார் தம்முடைய திருவுள்ளம். தளரும் - தளர்ச்சியை அடையும். இடர் - துன்பத்திலிருந்து. நீங்கி - விடுபட்டு. வானவர் - தேவ லோகத்தில் வாழும் தேவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகர் - தலைவராகிய நடராஜப் பெருமானார். அருளால் - வழங்கிய திருவருளால். புனைந்த - அலங்காரம் செய்யப் பெற்ற. மலர் - மலர்களை அணிந்த; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. குழல் - தன்னுடைய கூந்தலை. பெற்ற - மீண்டும் வளரப் பெற்ற. பூங்கொடியை - மலர்க் கொடியைப் போன்றவளும் மானக் கஞ்சாற நாயனாருடைய புதல்வியும் ஆகிய பெண்மணியை. பூங்கொடி: அன்மொழித் தொகை. மணம் - திருமணம். புணர்ந்து - புரிந்து கொண்டு. தனம் - யாவருக்கும் செல்வத்தை. பொழிந்து - மழையைப் போலப் பொழிந்து வழங்கி. பெரு - பெருமையைப் பெற்ற. வதுவை - இந்தத் திருமணத்தை. உலகு - உலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகு பெயர். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. தலைசிறப்ப - தலை சிறந்தது என்று பாராட்ட. இனம் - தம்முடைய சாதி. பெருக - பெருகுமாறு. த்: சந்தி. தம்முடைய எயில் - தம்முடைய திருமதில் சூழ்ந்த. மூதூர் - பழைய ஊராகிய பெருமங் கலத்துக்கு. சென்று - போய். அணைந்தார் - சேர்ந்தார்.

அடுத்து வரும் 37-ஆம் பாடல் இந்த மானக் கஞ்சாற நாயனார் புராணத்தின் இறுதிச் செய்யுள். அதன் கருத்து வருமாறு:

'தம்முடைய ஒப்பற்ற புதல்வியினுடைய கூந்தலை அவளுடைய திருமண நாளில் ஒப்பற்றவராகிய மாவிரத முனிவருக்கு வழங்கிய பெருமையைப் பெற்றவராகிய மானக் கஞ்சாற நாயனாருடைய இயல்பை வாழ்த்தும் பெரிய பான்மை அடியேனுடைய அறிவின் அளவுக்குள் அகப்படுவதாகுமா? வயலில் இருந்த தரைப்பிளப்பில் விழுந்த மாவடுவைக் கடிக்கும் விடேல் என்ற ஒலியை உரிமையினால் கேட்க வல்லவராகிய அரிவாட்டாய நாயனாருடைய திருத்தொண்டின் வகையை இனிமேல் அடியேன் பாடலானேன்.' பாடல் வருமாறு:

"ஒருமகள் கூந்தல் தன்னை வதுவைநாள் ஒருவர்க் கீந்த
பெருமையார் தன்மை போற்றும் பெருமை என் அளவிற்றாமே?
மருவிய கமரிற் புக்க மாவடு விடேல் என்னோசை
உரிமையால் கேட்க வல்லார் திறம்இனி உரைக்க லுற்றேன்."

இது சேக்கிழார் அடுத்து வரும் அரிவாட்டாய நாயனார் புராணத்திற்குத் தோற்றுவாயாகப் பாடி அருளியது. ஒரு - தம்முடைய ஒப்பற்ற. மகள் - புதல்வியினுடைய. கூந்தல் தன்னை - கூந்தலை; தன்: அசை நிலை. வதுவை - அவளுடைய திருமணத்துக்குரிய. நாள் - தினத்தில். ஒருவர்க்கு - ஒப்பற்றவராகிய மாவிரத முனிவருக்கு. ஈந்த - வழங்கிய. பெருமையார் - பெருமையைப் பெற்றவராகிய மானக் கஞ்சாற நாயனாருடைய. தன்மை - இயல்பை. போற்றும் - வாழ்த்தும். பெருமை - பெரிய பான்மை. என் - அடியேனுடைய. அளவிற்று - அறிவின் அளவுக்குள் அகப்படுவது. ஆமே - ஆகுமா. மருவிய - வயலில் இருந்த. கமரில் - தரைப்பிளப்பில். புக்க - விழுந்த. மாவடு - மாவடுவைக் கடிக்கும். விடேல் என் - விடேல் என்று. ஓசை

- ஒலியை. உரிமையால் - பக்தர் என்ற உரிமையினால். கேட்க வல்லார் - கேட்பதற்கு வல்லவராகிய அரிவாட்டாய நாயனாருடைய. திறம் - திருத்தொண்டின் வகையை. இனி - இனிமேல். உரைக்கலுற்றேன் - அடியேன் பாடலானேன்.



